# பதஞ்சலி நாடி ஜோதிடம்

மணிமேகலைப் பிரசுரம்



பதஞ்சலி கதிர்
நல்லையா ராஜா

பாகம்-2

# பதஞ்சலி நாடி ஜோதிடம்

## பாகம் - 2



ஆசிரியர் :
**பதஞ்சலி கதிர் நல்லைய ராஜா**
ஸ்ரீ பதஞ்சலி பவனம்
27, சாமிக்கண்ணன் வீதி,
பெத்தானியாபுரம், மதுரை - 625 016.

*மணிமேகலைப் பிரசுரம்*
4, தணிகாசலம் சாலை,
தியாகராயநகர்,
சென்னை - 600 017
தொலைபேசி : 4342926
பேக்ஸ் : 044-4346082



# நூல் விவரம்


| | |
|---|---|
| நூல் தலைப்பு | ➢ பதஞ்சலி நாடி ஜோதிடம் பாகம்-2 |
| ஆசிரியர் | ➢ பதஞ்சலி கதிர் நல்லைய ராஜா |
| மொழி | ➢ தமிழ் |
| பதிப்பு ஆண்டு | ➢ 1989,1995,2001 |
| பதிப்பு விவரம் | ➢ மூன்றாம் பதிப்பு |
| உரிமை | ➢ மணிமேகலைப் பிரசுரம் |
| தாளின் தன்மை | ➢ 11.2 கி.கி. |
| நூலின் அளவு | ➢ கிரௌன் சைஸ் (12½ x 18½ செ.மீ.) |
| அச்சு எழுத்து அளவு | ➢ 10 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | ➢ **340** |
| நூலின் விலை | ➢ **ரூ.70.00** |
| அட்டைப்பட ஓவியம் | ➢ திரு.ராமு |
| லேசர் வடிவமைப்பு | ➢ *கிறீஸ்ட் டி.டி.பி. சென்டர்,* சென்னை - 24. |
| அச்சிட்டோர் | ➢ *ஸ்கிரிப்ட் ஆப்ஸெட்,* சென்னை - 94. |
| நூல் கட்டுமானம் | ➢ தையல் |
| வெளியிட்டோர் | ➢ **மணிமேகலைப் பிரசுரம்,** சென்னை - 17. |

# பொருளடக்கம்

# விற்பனையாகும் இதர நூல்கள்!

## முருகனைப்பற்றிய நூல்கள் - Books on Lord Muruga

| | |
|---|---|
| கந்தபுராணம் | 99.00 |
| திருமுருகன் திருத்தலங்கள் | 30.00 |
| Kandar Anubuti (Direct Congnition of Supreme Bliss | 20.00 |
| மன சரவணம் - கண்ணப்ப மனோகரன் | 53.00 |
| சரவண மாலை - ,, | 21.00 |
| நெஞ்சை உருக்கும் முருகன் பாடல்கள் | 18.00 |
| சக்தி வாய்ந்த சண்முகக் கவசம் | 11.00 |
| முருகன் திருக்கல்யாணப் பாடல்கள் - ஞானதேசிகன் | 45.00 |
| சரவணன் அலங்காரம் - ,, | 38.00 |
| ஆறுமுகன் ஆராதனை - ,, | 30.00 |
| முருகன் பல்சுவை பக்திப் பாடல்கள் | 32.00 |
| அறுபடை வீடுகளின் தத்துவங்கள் | 54.00 |
| திருவேரக முருகன் மும்மணிமாலை | 15.00 |
| குமாரக் கடவுள் | 24.00 |

## இசை - Music

| | |
|---|---|
| இசையியல் - ஓர் புதிய கண்ணோட்டம் பாகம்-1 | 55.00 |
| பாகம்-2 | 72.00 |
| இராக, தாள வகைகளைத் தெரிந்து கொள்ளுங்கள் | 40.00 |
| 1500 இராகங்களின் ஆரோகணம், அவரோகணங்கள் | 21.00 |
| 100 இராகங்களுக்கான எளிய ஆலாபனை | 34.00 |
| கர்நாடக இசையை முறைப்படி பாடக் கற்றுக்கொள்ளுங்கள் | 29.00 |
| குரல் வளம் பெறுங்கள் | 12.00 |
| தமிழிசைக்குத் தரமான பாடல்கள் | 46.00 |
| புகழ்பெற்ற கீர்த்தனைகள் | 39.00 |
| தமிழ் மும்மணிகளின் கீர்த்தனைகள் | 17.00 |
| சங்கீத மும்மூர்த்திகளின் கீர்த்தனைகள் | 25.00 |
| வில்லுப்பாட்டின் கதை | 8.00 |
| இசைத் துணைவன் (அரசுத் தேர்வு விதிமுறைத் திட்டத்திற்கேற்ப எழுதப்பட்டது) | 30.00 |
| Gana Priya | 18.00 |

# பதஞ்சலிநாடி ஜோதிடம்
# பாகம் - 2

# ஐந்தாம் பாவம்

## மேஷம்

மேஷ இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான சூரியன் புத்திர ஸ்தானம், அதன் வழியான சந்ததி, உங்கள் பூர்வ புண்ணியம் மற்றும் பிரபுத்வம், மந்திர சம்பந்தங்கள் போன்றவற்றின் பலன்களைத் தருவார். தன்னுடைய உறவுக் கிரகங்களான சந்திரன் செவ்வாயோடு கூடினால் நன்மையான பலன்களே செய்வார். சூரியனானவர் இராசிக்கு 8,12 ஆகிய இடங்களில் பகைக் கிரகங்களான சுக்கிரன், சனியோடு கூடினால் மத்திமமான பலன்களைக் கொடுப்பார்.

பொதுவாக 3,6,10,11 ஆம் இடங்களில் சூரியன் தனது மித்துருக்களோடு கூடினால் உங்களின் 5ஆம் பாவம் சிறந்து விளங்கும்.

''வெய்யோனும் மதிக்குத் தா னைந்தோனாகி
வலியதோர் சுங்கன் காரியொடு கூடாமல்
உய்யவரும் மூன்றாறு நற்பத்து பதினொன்றில்
உம்மையுமாய் மித்ருவோடு கூடினாலும்
ஐயமில்லை புத்திர பிராப்தியாகும்
அறிவான புத்திரிகளும் தானுண்டாம்
மெய்யான ஞானானந்த சித்தியுண்டாம்
மேன்மையுடன் பெருபலனு மடைவார் தானே''

மேஷ இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 5ஆம் இடத்திலேயே ஆட்சியாக இருந்தால் மந்திர சம்பந்தங்கள், ஆச்சார அனுஷ்டானங்கள் ஆகியன உயர்வு பெறும். சந்ததி பின்பு நன்கு தழைத்து வரும். புத்திரர்கள் முன்பு இடர் தருவர். பின்பு பலன் அளிப்பர். ஆண்

வாரிசுகளால் பின்பு நன்மை உண்டாகும். தாய்வழிச் சகோதரர் உயர்ந்த அந்தஸ்தில் இருக்கும் நிலை உண்டாகும். குலதெய்வம் ஆண் தெய்வமாகவும், மிகவும் துடியான தெய்வமாகவும் இருக்கும். சூரியனோடு சுக்கிரன், சனி முதலானவர்கள் சேர்ந்தால் புத்திர பிராப்தியும் தடைப்படும். முறையான பிரீதிகளால் நற்பலன்கள் யாவும் கிட்டும். சூரியனோடு குரு கூடினால் நன்மை உண்டாகும். ஆச்சார அனுஷ்டானங்களும் புகழும் பிரபுத்துவமும் ஏற்படும். 5ஆம் பாவம் சிறக்கும்.

சூரியனோடு துர்க்கிரகங்கள் கூடிநின்று பலனை மத்திமமாகச் செய்தால், சூரிய பிரீதிகள் செய்து பலனைத் தக்க வைக்கவும்.

சூரியன் இராசிக்கு 6ஆம் இடமான கன்னியில் தனித்து இருந்தாலும், பகைக் கிரகங்களோடு சேர்ந்து இருந்தாலும் பிள்ளைகள் சத்துருக்களைப் போல் உறவாடுவர். புத்திர சந்தானம் முதலில் இடரையும் பின்பு பலன்களையும் தரும். தாய்வழிச் சகோதரர்கள் வறிய நிலைகளோடு விவகாரமான ஆள்களாயிருப்பார்கள். குலதெய்வம் பெண் தெய்வமாயிருந்தால் சத்ருக்கள் ஜெயமும் அவர்கள் உபாதையும் நீங்கும். சூரியன் தனித்திருந்தாலும், செவ்வாயோடு கூடினாலும் சுப கிரகங்களோடு சேர்ந்திருந்தாலும் திடீர்ப் பணவரவுகளும் அதிர்ஷ்ட சேர்க்கையும் உண்டாகும். நீச வகை கிரகங்களுடன் சேர்ந்தால் மத்திமமான பலன்கள் நடக்கும். புத்திர பிராப்திகளுக்குத் தக்க பிரீதிகளும், சூரியனுக்கு எந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் மேன்மையான பலன்கள் உண்டு.

மேஷ இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான சூரியன், இராசிக்கு 7ஆம் இடமான துலாத்தில் நீசம் பெற்றிருந்தால், புத்திரதோஷங்கள் ஏற்பட்டுச் சந்தான பாக்கியங்கள் குறையும். பிரீதிகள் செய்தால் மிக்க பலனாகும். அதன் பின்பே சந்ததிகள் விருத்தியுண்டு. சூரியனோடு சனி உச்சமாகிக் கூடினால் நீசபங்க, ராஜயோகமும் அதன் பலன்களாக அதிர்ஷ்ட சேர்க்கைகளும் உருவாகும். அம்மான் வழியில் பலன் குறைவு. புகழுக்கும் பங்கமுண்டாம். மனைவிக்கும் தோஷம் இருக்க விதி உண்டாகும். ஆனால், புகழுக்குப் பஞ்சமில்லை. நீசம் பெற்ற சூரியனுடன் செவ்வாயோ சமமான அல்லது நட்புக் கிரகங்களோ கூடினால் ஓரளவு சுமுகமான பலனுண்டாகும். சுக்கிரன் சனியோடு கூடினால் முன் மத்திமமும், பின் சுமுகப் பலன்களையும் வழங்குவார். பிரீதிகள் செய்தால் நலம் பெறலாம்.

மேஷ இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி சூரியன் இராசிக்கு 8ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால் சந்தான தோஷம் உண்டாகும். பிரீதிகள் செய்தாலும், சூரியனுக்கு யந்திர, மந்திர, பூசைகள் செய்தாலும் நல்ல பலனை

அடையலாம். அதன் பின்பு சந்ததி விருத்தி உண்டாகும். தாய்மாமன் வழியில் பலன் குறைவு. தலைமைக்கும் பிரபுத்துவத்திற்கும் பங்கமுண்டாகும்.

சூரியனொடு செவ்வாய் கூடினால் நற்பலன்கள் உண்டாகும். குல தெய்வம் ஆண் தெய்வமாய் இருந்தால் உக்கிரமுண்டாகும். சத்துருக்களை வெல்லக் கூடியதாய் இருக்கும். பூர்வ புண்ணியத்திற்குப் பங்கமுண்டாகும்.

சூரியன் நட்புக் கிரகங்களுடன் சேர்ந்திருந்தாலும் தனித்திருந்தாலும் மத்திமமான பலன்களைக் கொடுப்பார். சத்துரு கிரகங்களுடன் சேர்ந்திருந்தால் அதம பலன்களும் உண்டாகும். பிரீதிகள் செய்து நற்பலனை அனுபவிக்க வேண்டும்.

மேஷ இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி சூரியன், இராசிக்கு 9ஆம் இடமான தனுசில் இருந்தால் புத்திர பிராப்திகள் உண்டு; குரு கூடினால் மேன்மை உண்டாகும். ஆச்சார அனுஷ்டானங்களும், மந்திர சம்பந்தங்களில் ஈடுபாடும் உண்டாம். குல தெய்வ அருள் பூரணமாக உண்டு. சந்ததிகளும் விருத்தியுண்டாம். தாய் வழிச் சகோதரர்கள் சில உதவிகளைச் செய்வர் பிரபுத்துவத்திற்குப் பங்கமில்லை. புத்திரரால் நன்மைகளே உண்டு. ஆண் வாரிசு பாக்கியங்களையும் பெறலாம். அதிர்ஷ்ட வரவுகளும் பூர்வ புண்ணிய நன்மைகளும் ஏற்படும்.

சூரியனுடன் பகைக்கிரகங்கள் கூடினால் 5ஆம் பாவ வழியில் சில பலன்கள் குறையும். சூரியன் தனித்தும் தன் மித்துரு கிரகங்களுடன் கூடி இருந்தாலும் 5ஆம் பாவம் சிறக்கும். துர்பலன்கள் ஏற்படும் காலத்தில் சூரியனுக்கும் குருவுக்கும் பிரீதிகள் செய்ய வேண்டும்.

மேஷ இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 10ஆம் இடமான மகரத்தில் இருந்தால் புத்திர விருத்திகளுண்டு; ஆனால், மந்தமாக இருப்பார்கள். சூரியனுடன் செவ்வாய் உச்சமாகிக் கூடினால் உயர்ந்த பலன்கள் உண்டாகும். சூரியனுடன் குரு நீசமாகிக் கூடினால் புத்திர விருத்திகளுக்குத் தடையுண்டாகும். மந்திர சம்பந்தங்கள், அனுஷ்டானங்கள் குறைவுபடும். குலதெய்வ பக்தி, அதன் அருள் போன்றவற்றிற்குப் பங்கமுண்டு. தன் பிள்ளைகள், செயலுக்கு முரணாக இருப்பார்கள். சந்ததிக்கும் இடருண்டாகும். தாய்மாமன் வகையில் பலன் குறைவு. சூரியனுடன் சனியோ, குரு நீசமாகவோ, சுக்கிரனோ சேர்ந்தால் புத்திர பலன்கள் குறைவு. அவர்களால் தொழில் இடர்களும் உண்டாகும். சூரியனுடன் செவ்வாய் உச்சமாகிக் கூடக் குலதெய்வப் பலன்கள் வாய்க்கும். மந்திர சம்பந்தங்களில் ஈடுபாடுண்டாகும். தைரிய வீரியங்களுடைய

புத்திரர்களையும் பெறலாம். அதிர்ஷ்ட சேர்க்கைகளும் தனப் பிராப்திகளும் உண்டாகும்.

மேஷ இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான சூரியன் ராசிக்கு 11ஆம் இடமான கும்பத்தில் இருக்கச் சூரியன் தனித்திருந்தாலும் நட்பு அல்லது சம கிரகங்களுடன் கூடி இருந்தாலும் சந்தான விருத்திகளும், அவர்களால் சந்தோஷமும் உண்டாகும்; ஆனால், மந்த நிலையும் அமைதியான நிலையும் உண்டாகும். புத்திர இலாபங்கள் பின்வாழ்க்கையில் உண்டு. மந்திர சம்பந்தங்களும் பூர்வ புண்ணிய இலாபங்களும் உண்டாகும். கௌரவமாகவும் வாழ விதியுண்டு. அதிர்ஷ்ட சேர்க்கைகளும் திடீர்த் தனப் பிராப்திகளும் மந்தமான நிலைக்குப் பின் உண்டாகும். சூரியனுடன் சனியோ, சுக்கிரனோ கூடினாலும் பலன் மத்திமமே. இராகுகேதுக்கள் கூடினால் கிரகணதோஷம் உண்டாகி புத்திரப் பீடையும் அவர்களால் அபகீர்த்தியும் ஏற்பட விதியுண்டு. சூரியனுக்கும் குருவுக்கும் பிரீதிகள் செய்தால் நல்ல பலன்களை அடையலாம்.

மேஷ இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான சூரியன், இராசிக்கு 12ஆம் இடமான மீனத்தில் இருக்கப் பலன் குறைவாம். அதுவும் சத்துருக்களான சுக்கிரன், சனியோடு கூடினாலும் புத்திர பீடைகளும், சந்தான தோஷங்களும், கர்ப்பச் சிதைவுகளும் உண்டாகும். புத்திரர்களினால் பண விரயமும் மனச்சஞ்சலங்களும் உண்டாகும். தாயின் சகோதரர் வழியில் பலன்கள் குறைவு. பூர்வ புண்ணியங்களில் விரயமும் மந்திர சம்பந்தங்களில் ஈடுபாடும் குறையும். சூரியன் குருவோடோ மற்ற நட்புக்கிரகங்களுடனோ கூடினால், சில விரயப் பலன்களைத் தடுக்கலாம். சந்தான பாக்கியங்களும் உண்டாகும். மந்திர சம்பந்தங்களும் பூர்வ புண்ணியங்களும் விரயத்தின் மேல் பலனும் உண்டாகும். பிரபுத்துவத்திற்கோ ஆளுமைக்கோ பங்கம் ஏற்பட்டுப் பின் நன்மை உண்டாகும். குலதெய்வம் ஆண் தெய்வமாய் இருந்தால் உயர்வான பலன்களுண்டு. அதன் வழியில் பலன்களையும் தேவதா சித்திகளையும் பெறலாம். அதிர்ஷ்ட சேர்க்கைகள் உண்டாகும். திடீர்ப் பணவரவும் உண்டாகும். குருவுக்கும் சூரியனுக்கும் பிரீதிகள் செய்ய மேன்மையான பலன்களை அடையலாம்.

மேஷ இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி சூரியன் இராசியிலேயே இருந்தால் உச்ச பலன்கள் உண்டாகும். அவர் திசை புத்திகளில் உயர்வைக் காட்டும். புத்திர விருத்திகள் உண்டு. ஆண் புத்திரரால் நன்மை ஏற்படும். அவர்கள் உயர்வான பலன்களைப் பெறுவார்கள். சூரியனுடன் செவ்வாய் ஆட்சியாகிச் சேர்ந்தால் இன்னும் உயர்வுண்டாம். அப்படியானால் சூரியன், சந்திரன்,

செவ்வாய் ஆகியோர் சேர்ந்திருக்கச் சந்திரமங்கள யோகமும் அமாவாசை யோகமும் ஏற்பட்டு, பூர்வ புண்ணிய பலன்களையும் மந்திர சம்பந்தங்களில் ஈடுபாட்டையும் அதன் பலனாகத் தேவதா சித்திகளையும் தீர்வாகப் பெறலாம். இதைவிட்டுச் சூரியனோடு சனி நீசமாகிக் கூடினாலும், சுக்கிரன் மற்றும் பகைக்கிரகங்கள் சூரியனுடன் கூடினாலும் புத்திர பிராப்திக்கு மந்த நிலைகளும், உறுப்பு அங்கஹீனங்களும் ஏற்பட விதியுண்டு. மந்திர சம்பந்தம், பூர்வ புண்ணியங்கள், அதிர்ஷ்ட சேர்க்கைகள், பிரபுத்துவங்கள், நல்லோரின் ஆசிகள், அரசாங்க உத்தியோகங்கள் போன்றவற்றில் பங்கமுண்டு. குருவுக்கும் சூரியனுக்கும் எந்திர மந்திர பிரீதிகள் செய்தால் புத்திர சந்தானப் பிராப்திகளும் அதனால் உயர்வும் பெறலாம் என்று அறியப்படுகிறது.

மேஷ இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 2ஆம் இடமான ரிஷபத்தில் பகை பெற்றிருந்தால் மத்திமமான பலன்களுண்டாகும். புத்திர பிராப்திகள் உண்டு. ஆனால், புத்திரர்களால் தனலாபம் இல்லை; மரியாதைக் குறைவு ஏற்படும். பெண் பிள்ளைகளால் நன்மையுண்டாம். பக்தி, மந்திர சம்பந்தங்கள் போன்றவற்றில் அளவோடு ஈடுபாடுண்டாகும். குல தெய்வம் பெண் தெய்வமாய் இருந்தால் உயர்வான பலன்களுண்டு. சூரியனோடு சுக்கிரன், சனி சேர்ந்தால் புத்திரர்கள் அலங்காரப் பிரியர்களாகவும், பெண் சிநேகம் உடையவர்களாகவும், செயல்களில் மந்தமானவர்களாகவும் இருப்பார்கள். சூரியனொடு செவ்வாய் கூடினாலும் மற்ற சமமான அல்லது நட்புடைய கிரகங்கள் கூடினாலும், பூர்வ புண்ணியத்தடங்கலும் மந்திர சம்பந்தங்களில் ஈடுபாடும் பூர்வ புண்ணியம் வாயிலாக திடீர்த் தனபிராப்திகளும் அதிர்ஷ்ட சேர்க்கைகளும் ஏற்படும். தாய்மாமன் வகையில் பிற்பலன்களே உண்டு. சூரியனுடன் இராகு கேதுக்கள் கூடக்கூடாது. கூடினால் கிரகணதோஷங்களும் புத்திர பங்கங்களும் பீடைகளும் உண்டாம். சூரியனுக்கும் குருவுக்கும் தக்க பிரீதிகள் செய்வதன் மூலம் உயர்வான பலனை அடையலாம்.

மேஷ இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 3ஆம் இடமான மிதுனத்திலிருந்தால் பலன்கள் உண்டு. ஆனால், சந்தானதோஷங்கள் உண்டென்று கூறப்படுகின்றது. ஆனால், பிரீதிகள் மூலம் நிவர்த்திக்கலாம். இதனால் பெண் பிள்ளைகள் அதிகமாகும் விதிகள் உண்டாகும். மந்திரங்கள், சாஸ்திர உபன்யாசங்களில் ஈடுபாடும் அவற்றிலேயே மன இலயிப்பும் உருவாகும். புத்திர புத்திரிகளினால் பிற்பலன்கள் உண்டு. தாய்மாமன் வகையில் சில பலன்களும் உறவு கொள்ள விதிகள் உண்டாகும். குழந்தைகள் கல்வியில் ஈடுபாடு கொண்டு

விளங்குவார்கள். சூரியனோடு புதனோ செவ்வாயோ கூடினால் 5ஆம் பாவ வழியிலும் மிகுந்த நன்மை உண்டாகும். பூர்வ புண்ணியங்களால் நன்மையும் அதனால் பேரும் புகழும் உண்டாகும். சூரியனோடு சுக்கிரனோ சனியோ கூடினாலும் மத்திம பலனுண்டாம். இராகுகேதுக்கள் கூடினால் கிரகணதோஷம் உருவாகும். சூரியனுக்கும் குருவுக்கும் பிரீதிகள் செய்வதாலும், திடீர்த்தனப் பிராப்திகளும் அதிர்ஷ்ட சேர்க்கைகளும், இளைய சகோதர புத்திரர்களால் நன்மையுமுண்டாம் என்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது.

மேஷ இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான சூரியன், இராசிக்கு 4ஆம் இடமான கடகத்தில் பகை பெற்றிருந்தாலும் நன்மை உண்டாகும். ஆனால், நீசம்பெற்ற செவ்வாயுடன் கூடினாலும், சனி, சுக்கிரன் போன்ற சத்துரு கிரகங்களுடன் கூடினாலும் இராகுகேதுக்களுடன் சேர்ந்தாலும் 5ஆம் பாவம் சிறவாது. சூரியன் தனித்திருந்தாலும் குருவோடு சேர்ந்திருந்தாலும் உயர்வான பலன்களுண்டாகும். புத்திர விருத்திக்குக் குறைவில்லை. குடும்ப கௌரவங்களும் உண்டு. புத்திர புத்திரிகளும் உண்டு. வண்டி, வாகனம், மனை யோகங்களுடன் கூடி இருப்பார்கள். சாஸ்திர உபன்யாசங்களில் நம்பிக்கையும், பூர்வ புண்ணியங்களாலும் அவற்றின்வழி மனைகளாலும் நன்மையுண்டு. தாய்மாமன் வழி உறவுகளும் ஏற்படும். பெரிய மனிதர்கள் சிநேகமும் தன்னை உயர்வாக வைத்திருத்தலும் உண்டாகும். குலதெய்வம் அம்பாள் ரூபமாகவும் சாந்தமாகவும் இருக்க விதியுண்டாகும். அப்படி இருக்கக் குலதெய்வப் பலன்களையும், அதன் மூலம் தேவதா சித்திகளையும் பெறுவதற்கு விதி ஏற்படும். சூரியனோடு இராகுகேதுக்கள் கூடினால் தோஷம் ஏற்பட்டு, அதன் பலனைக் கடுமையாக அனுபவிக்க வேண்டியிருக்கும். குருவுக்கும் சூரியனுக்கும் பிரீதிகள் செய்வதால் பொதுவாக நன்மையான பலன்களைப் பெறலாம் என்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது.

# ரிஷபம்

ஐந்தாம் இடத்து அதிபதியாகப் புதனைப் பெற்ற ரிஷப இராசி அன்பர்களே! 5ஆம் பாவம் என்பது புத்திரர், பூர்வபுண்ணியம், குலதெய்வம், தாய்மாமன், மந்திர சம்பந்தங்கள் போன்றவற்றைக் குறிப்பிடுவதாகும். உங்கள் இராசிக்கு

5ஆம் இடத்து அதிபதியான புதன் மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளிலும் ஒவ்வோர் இடத்திலும் இருந்தால் 5ஆம் பாவ பலன்களை எப்படிச் செய்வார் என்றும், அவரோடு சத்துரு, மித்துரு கிரகங்கள் கூடினால் என்னென்ன பலன்கள் விளையும் என்றும் நாடி வாயிலாக அறிந்து கூறப்படுகிறது. அன்பர்கள் தங்கள் இராசிக்குப் புதன் எத்தனையாவது இடத்தில் இருக்கிறார் என்று பார்த்து அதன் பலன்களைக் கண்டுகொள்ளவும்.

''புங்கனவர் மதிக்குத்தா னைந்தோனாக
  பாபியோடு கூடிடினும் பாபியாவார்!
மங்கமேல் துர்பலன்கள் சிலவுந்தானாய்
  மேலதனில் வந்துபோகும் அட்டியில்லை!
பங்கமில்லை சுபரோடு சேர்ந்தாலும்
  புண்ணியமே மறையா திருந்தாலே
அங்கமாய் புத்திரபிராப்தி யாகும்
  அனேகபலன் பஞ்சம வழிதா னுண்டே''

புதனானவர் ஆட்சியுச்சம் அடைந்தால் நல்ல பலன்களையும் 3,6,8,12 என்று இராசிக்கு மறைவிடங்களிலிருந்தாலும், பகை கிரகங்களுடனும், நீசக்கிரகங்களுடன் கூடினாலும் புத்திர பிராப்திகளைத் தடை செய்தும், 5ஆம் பாவ பலன்களைக் குறைத்துக் கொடுக்கவும் விதிகள் ஏற்படும். புதனுக்கு எந்திர மந்திர பிரீதிகள் செய்தாலும், மகாவிஷ்ணு ஆராதனை செய்தாலும் 5ஆம் பாவ வழியில் நல்ல பலன்களை அடையலாம் என்று கூறப்படுகிறது. குருவுக்குத் தனிப்பட்ட முறையில் பிரீதி செய்வதால் புத்திர பிராப்திகளும் மந்திர சம்பந்தங்களும் நிலைத்திருக்கும் என்று கூறப்படுகிறது.

ரிஷப இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 5ஆம் இடமான கன்னியிலே ஆட்சியாக இருந்தால் புத்திர பிராப்திகள் உண்டு. பெண் பிள்ளைகளால் மேன்மையுண்டாகும். பூர்வ புண்ணியங்கள் இலாபமாகவும், தனம் தரக்கூடியனவாகவும் இருக்கும். கரிசல் காட்டு வருமானம் மேன்மையளிக்கும். புதனுடன் சுக்கிரன் நீசமாகிச் சேர்ந்தால், நீசபங்க ராஜ யோகம் உண்டாகி அதிர்ஷ்ட சேர்க்கைகளும் பூர்வ புண்ணிய வழியில் திடீர்ப் பணச்சேர்க்கைகள் உண்டாகும். மகாவிஷ்ணு உபாசனைகளாலும் வழிபாட்டினாலும் மேன்மையுண்டு. குலதெய்வம் பெண் தெய்வமாய் இருக்க அதனால் சித்திகளையும் நல்ல பலன்களையும் அடையலாம். ஆளுமைக்கும், பிரபுத்துவத்திற்கும் பங்கமில்லை. தாய்மாமன் வழியில் உதவியும். ஆதரவும் உண்டு. தலைமைப் பதவியும் அனுபவிக்க விதியுண்டு. ரேஸ், லாட்டரி

போன்றவற்றால் திடீர்த் தன பிராப்தி உண்டு. புதனுடன் சூரியன் சேர்ந்தால் தாய்வழியில் உள்ள சொத்துகளை அனுபவிக்க வேண்டிவரும். இதற்குத் திருமாலுக்கு அர்ச்சனையும், புதனுக்கு எந்திர மந்திர பிரீதியும் செய்யவும்.

ரிஷப இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான புதன், இராசிக்கு 6ஆம் இடமான துலாத்தில் நட்புடன் இருந்தால் புத்திரகிலேசம் உண்டாகும். பூர்வ புண்ணியங்களைத் தங்களால் அனுபவிக்க முடியாமல் இருக்க நேரிடும். விவசாய நிலங்களைப் பொறுத்தவரை கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாத நிலை உருவாகும். சூரியன் நீசமாகியும் சனி உச்சமாகியும் சேர்ந்தால், நல்ல இராஜயோகம் கிட்டும், தாய்மாமன் வழியில் உதவிகள் கிட்டா. பெண் தெய்வங்கள் குலதெய்வமாய் இருக்கும். ஆளுமைகள் இரா. புதனுடன் பகைக்கிரகங்கள், சத்துரு கிரகங்கள் ஆகியன சேர்ந்தால் 5 ஆம் பாவ பலன்கள் சரிவர நடவா. பெண் தெய்வங்களின் அருள் பெற, பூஜைகள், மந்திரங்கள், ஜெபம் ஆகியவை செய்து குலதெய்வத்தின் அருளைப் பெறவேண்டும். பூர்வ புண்ணியத்தை அனுபவிக்க முடியாது. இதற்குத் திருமாலுக்கு அர்ச்சனையும் ஆராதனையும் புதனுக்கு யந்திர மந்திர பிரீதிகளும் செய்ய நற்பலன்கள் உண்டாகுமென்று சந்திர நாடி கூறுகிறது.

ரிஷப இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 7ஆம் இடத்தில் நட்புப் பெற்றால் மத்திமமான பலன்களே நடக்கும். புத்திர பிராப்திகள் உண்டு. பூர்வ புண்ணியச் சொத்துகள் மூலம் நற்பலன்கள் அடைய விதியுண்டு. குலதெய்வம் ஆண் தெய்வமாய் இருந்தால் பூரண அருள் பாக்கியம் கிட்டும். தாய்மாமன் வழியில் நல்ல உதவிகளும் நன்மையும் ஆதரவும் உண்டு. உக்கிரமான தெய்வங்களின் மந்திர சம்பந்தமான பூசைகள் செய்தால் குலதெய்வத்தின் அருள் கிட்டும். ஆளுமைகள், தலைமைப் பதவிகள் ஆகியன கிடைக்கும். புதனுடன் உச்ச, ஆட்சிக் கிரகங்கள் சேர்ந்தால் நல்ல பலன் கிட்டும். சத்துரு கிரகங்கள் புதனுடன் சேர்ந்தால் 5 ஆம் பாவ பலன்கள் மட்டுப்படும் என்று சந்திர நாடி கூறுகிறது. இதற்குத் திருமாலுக்கு அர்ச்சனை ஆராதனையும், புதனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் கிடைக்குமென்று ஸ்ரீபதஞ்சலி மகரிஷி கூறுகிறார்.

ரிஷப இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான சூரியன், இராசிக்கு 8ஆம் இடத்தில் தனுசில் நட்புடன் இருந்தால் மத்திமமான பலன்கள் நடக்கும். புத்திரப் பிராப்திகள் தடைப்படும். பூர்வ புண்ணியச் சொத்துகளை அடைய முடியாத நிலை உருவாகும். குலதெய்வம் ஆண் தெய்வமாக சௌமியமான தெய்வமாய் இருக்கும். தாய்மாமன் வழியில் நன்மைகளோ, உதவிகளோ கிட்டா. குலதெய்வத்திற்கு மந்திரங்கள் ஜெபித்து ஆராதித்தால் அருள்

கிடைக்கும். ஆளுமைகள், பதவிகள் கிடைப்பதற்குத் தடை ஏற்படும். புதனுடன் ஆட்சி உச்சக் கிரகங்கள் சேர்ந்தால் நன்மையான பலன்கள் கிடைக்கும். சத்துருக் கிரகங்கள் சேர்ந்தால் 5ஆம் பாவ பலன்களை முழுமையாக அடைய முடியாத சூழ்நிலை உருவாகும். இதற்குப் புத்திர பரிகாரமும், குருவுக்குப் பிரீதியும், திருமாலுக்கு அர்ச்சனை ஆராதனையும், புதனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நன்மையான பலன்கள் அடையலாம் என்று சந்திரநாடி கூறுகிறது.

ரிஷப இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான புதன், இராசிக்கு 9ஆம் இடமான மகரத்தில் நட்புடன் இருந்தால், நல்ல பலன்களைக் கொடுக்கும். புத்திர பிராப்தி உண்டாகும். நல்ல புத்திரர் அமைவார்கள். பூர்வ புண்ணியங்களை அனுபவிக்க விதியுண்டு. பிதுர் பாக்கியங்களையும் அனுபவிக்க நேரிடும். பெண் தெய்வங்கள் அல்லது கருப்பண்ணசாமியின் வகையில் குலதெய்வம் இருந்தால் நல்ல பலனுண்டு. காவல் தெய்வங்களின் அருளும் கிடைக்கும். ஆளுமைகள், தலைமைப்பதவிகள் ஆகியன கிடைப்பதற்கும் விதியுண்டு. மந்திர சம்பந்தம் சித்தியுறும். பிரபுத்துவம் கிடைக்கும். தாய்மாமன் வழி ஆதரவும் உதவியும் உண்டு. உச்சம், ஆட்சி பெற்ற செவ்வாய், சனி போன்ற கிரகங்கள் கூடினால் முழுப்பலனும் கிட்டும். நட்புக்கிரகங்கள் கூடினால் முக்கால் பலனும் கிடைக்கும். நீசம், பகை பெற்ற கிரகங்கள் கூடினால் பலன்கள் மட்டுப்படும். இதற்குத் திருமாலுக்கு அர்ச்சனையும் புதனுக்கு யந்திர மந்திர பூசையும் செய்தால் நல்ல பலன்கள் அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

ரிஷப இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான புதன், இராசிக்கு 10ஆம் இடமான கும்பத்தில் நட்புடன் இருந்தால் நல்ல உத்தமமான பலன்கள் கிடைக்கும். நல்ல புத்திர பிராப்தி கிடைக்க விதியுண்டு. தாய்மாமன் வழியில் நல்ல உதவிகளும் இலாபங்களும் கிடைக்கும். குலதெய்வம் கருப்புகளுள் ஏதாவது ஒன்றும் அல்லது காவல் தெய்வங்களுள் ஏதாவது ஒன்றுமிருந்தால் நல்ல அருளைப் பெற விதியுண்டு. பூர்வ புண்ணியச் சொத்துகள் தன் கைக்குக் கிடைக்கவும், அதன் மூலம் நல்ல இலாபம் கிடைக்கவும் வழியுண்டு. தலைமைப் பதவிகள், அரசியல் கட்சிக்குத் தலைமை ஏற்பது, ஆளுமை, நிர்வாகத்திறன் போன்றவை அமைய விதியுண்டு. புதனுடன் ஆட்சி, உச்சக் கிரகங்கள் கூடின் நற்பலனும், நீச, பகை கிரகங்கள் கூடின் மத்திம பலன்களும் கிடைக்கும் என்று சந்திர நாடி கூறுகிறது. இதற்குத் திருமாலுக்கு அர்ச்சனை ஆராதனையும், புதனுக்கு எந்திர மந்திரப் பிரீதிகளும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம் என்று அறியலாம்.

ரிஷப இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி புதன் இராசிக்கு 11ஆம் இடத்தில் நீசம் பெற்றால் அதம பலன்களே நடக்கும். புத்திர பிராப்தி மட்டுப்படும், புத்திர கிலேசமும், பூர்வபுண்ணிய அழிவும், தாய் மாமன் இருந்தும் இல்லாத நிலையும், குல தெய்வங்கள் அருளைப் பூரணமாகப் பெற முடியாத நிலையும் உண்டாகும். மந்திர ஸ்தானங்கள் சித்தி பெற முடியாத நிலை உருவாகும். சுக்கிரன் உச்சமாகியும், குரு ஆட்சி பெற்றும் கூடினால் இராஜயோகப் பலனை அடைய விதியுண்டு. பாவக் கிரகங்கள், பகைக் கிரகங்கள் கூடினால் நன்மையான பலன்கள் உண்டாகாது. இதற்குக் குல தெய்வத்தின் அருளைப் பெறக் குல தெய்வ உபாசனையும் திருமாலுக்கு அர்ச்சனையும், புதனுக்கு எந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்களைப் பெறலாம்.

ரிஷப இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான புதன் 12ஆம் இடத்தில் நட்புடன் அமர்ந்திருந்தால் சுமாரான பலன்களைப் பெறலாம். புத்திர கிலேசமும், புத்திர தோஷமும் உண்டாகும். பூர்வ புண்ணியங்களை அடைய முடியாது. தாய்மாமன் வழியில் நன்மை இராது. பதவி, புகழ், செல்வாக்கு எல்லாமே விரயமாகும் சூழ்நிலை உருவாகும். குலதெய்வ அருள் கடாட்சம் கிடைக்காத நிலை ஏற்படும். இதற்கு உச்சம் பெற்ற கிரகமான சூரியன் கூடினால் நல்ல இராஜயோகத்தைக் கொடுத்து 5ஆம் பாவ பலன்களை அடைய முடியும். பகைக் கிரகங்கள் சேர்ந்தால், மந்திர, தந்திர பூசைகள் பலனளிக்காமல் போகும். பிரபுத்துவம் இல்லாது போகும். பூர்வ புண்ணியங்களுக்கு அழிவும் ஏற்படும். இதற்குத் திருமாலுக்கு அர்ச்சனையும் ஆராதனையும் செய்து, எந்திர மந்திர பிரீதிகள் செய்தால் நற்பலன்கள் அடைய முடியும் என்று சந்திர நாடி கூறுகிறது.

ரிஷப இராசிக்குப் புதன் 5ஆம் இடத்து அதிபதியாகி இராசியிலேயே இருந்தால் நற்பலன்கள் உண்டு. புத்திர பிராப்தியும், புத்திர சம்பத்தும் உண்டு. பூர்வ புண்ணியங்கள் நல்ல நிலையில் உண்டு. அதன் மூலம் நல்ல இலாபம் கிடைக்க விதியுண்டு. குல தெய்வங்களின் அருள் கிடைக்கும். பெண் தெய்வங்களின் அருள் பூரணமாகக் கிடைக்க விதியுண்டு. தாய்மாமன் வழியில் நல்ல உதவியும் சௌகரியமும், செல்வாக்கும் உண்டாம். மந்திரங்கள் சித்தி பெற விதியுண்டு. தலைமைப் பதவிகள், நிருவாகத் திறமைகள் ஆகியவை உண்டு. பிரபுத்துவமும் உண்டு. ஆட்சி, உச்ச கிரகங்கள் சேர்ந்தால் நல்ல பலன்களையும், நீச, பகைக் கிரகங்கள் சேர்ந்தால் மத்திம பலன்களையும் அடையலாம். இதற்குத் திருமாலுக்கு அர்ச்சனையும், ஆராதனையும், புதனுக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நற்பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

ரிஷப இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 2ஆம் இடத்தில் ஆட்சி பெற்றால் நல்ல புத்திரர்களையும், அதனால் சந்தோஷத்தையும் அடைவார்கள். பூர்வ புண்ணியச் சொத்துகளால் குடும்ப நன்மை உண்டு. அந்தப் பூர்வ புண்ணியத்தைக் குடும்பமே அனுபவிக்க விதியுண்டு. நல்ல மனைவி, நன்மக்கள், நற்குடும்பம் என்று சிறப்புடன் வாழ்வார்கள். குல தெய்வ அருள் பூரணமாய்க் கிடைக்கும். தாய்மாமன் வகையில் உதவியும் நன்மையும் உண்டு, செல்வமும் செல்வாக்கும் அடைந்திருப்பார்கள். மந்திரங்கள் சித்தி பெறும். பதவிகள், நிர்வாக ஆளுமைகள், தலைமை ஏற்கும் பணிகள் ஆகியவற்றிற்குத் தகுதியுடையவராய் இருப்பீர்கள். பிரபுத்துவம் இருக்கும். புதனுடன் மித்துரு கிரகங்கள் கூடினால் நற்பலனும், பகைக் கிரகங்கள் கூடினால் மத்திம பலன்களை அடைய விதி. இதற்குத் திருமாலுக்கு அர்ச்சனையும், புதனுக்கு மந்திர, எந்திர பிரீதிகளும் செய்தால் நற் பலன்களை அடையலாம் என்று ஸ்ரீபதஞ்சலி மகரிஷி சந்திர நாடியின் வாயிலாகக் கூறலாம்.

ரிஷப இராசிக்கு 5ஆம் அதிபதியான புதன், இராசிக்கு 3ஆம் இடத்தில் கடகத்தில் நட்புப் பெற்றிருந்தால், புத்திர பிராப்தி உண்டு. பூர்வ புண்ணியத்தினால் எந்தப் பலனையும் அனுபவிக்க முடியாது. குலதெய்வத்தின் அருளைப் பூரணமாகப் பெற முடியாது. தாய்மாமன்களால் உதவி கிடையாது. இளைய சகோதரர் ஆதரவு உண்டு. மந்திரங்கள் சித்தி பெற இயலாது. குலதெய்வம் அம்பிகை, பராசக்தி போன்ற சக்தி தெய்வங்களானால் நன்மையான பலன்களுண்டாம். பிரபுத்துவம் குறையும். மதிப்பு, மரியாதை இராது. கடகத்தில் புதனுடன் உச்சம் பெற்ற குரு கூடினால், புத்திர மேன்மை, குலதெய்வ அருள், தாய்மாமன் ஆதரவு, மந்திர சித்தி, பிரபுத்துவம், செல்வாக்கு போன்றவை ஏற்பட விதியுண்டு. பகை கிரகங்கள் கூடினால் ஆதரவான பலன்கள் இரா. இதற்குத் திருமாலுக்கு அர்ச்சனையும், புதனுக்கு யந்திர, மந்திர பூசைகளும் செய்தால் நற் பலன்கள் கிடைக்கும் என்று சந்திர நாடி கூறுகிறது.

ரிஷப இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி புதன், இராசிக்கு 4ஆம் இடத்தில் இருந்தால் நல்ல பலன்களுண்டாகும். பூர்வ புண்ணியங்களால் நற்சுகமும், நல்ல இலாபமும் உண்டாகும். தாய்மாமன் வழியில் ஆதரவும், நன்மைகளும், உதவிகளும் உண்டாகும். புத்திர விருத்தியும் உண்டாகும். தலைமைப் பதவிகளும் அந்தப் பதவிகளினால் சுகமும் கிடைக்க விதியுண்டு. குலதெய்வங்கள் ஆண் தெய்வங்களாய் இருந்தால், நல்ல பூரண அருள் உண்டு. பிரபுத்துவம் உண்டு. நிர்வாகத் திறமைகளும், வாகன சுகமும், பெண்கள் சுகமும், தெய்விகம், பக்தி, நல்லொழுக்கம் போன்றனவும் ஏற்படும். மந்திரங்கள் சித்தி பெற விதியுண்டு. இவற்றுடன் ஆட்சி உச்சக் கிரகங்கள் இருந்தால் நற்பலனும், பகை, நீசக் கிரகங்கள் இருந்தால்

நீசப்பலனும் கிடைக்கும் என்று சந்திர நாடி கூறுகிறது. இதற்குத் திருமாலுக்கு அர்ச்சனையும், புதனுக்கு எந்திர, மந்திர பூசைகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம் என்று அறியப்படுகிறது.

# மிதுனம்

அசுர குருவான சுக்கிரனை 5ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற மிதுன இராசி அன்பர்களே !

5ஆம் பாவமென்பது புத்திர பிராப்திகளைப் பற்றியும் தாய்மாமன், பூர்வ புண்ணியம், மந்திரசம்பந்தம், குலதெய்வம் போன்ற பலன்களைப் பற்றியும் குறிப்பிடுவதாகும். அதன்படி உங்களின் 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன், மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளிலும் ஒவ்வோர் இடங்களிலும் இருந்தால் என்னென்ன பலன்களைச் செய்வார் என்று மகரிஷி பதஞ்சலி முனிவரின் நாடி நூல் வாயிலாக அறிந்து கூறுகின்றோம்.

அசுரகுருவாகிய சுக்கிரன் சூரிய சந்திரர்களோடும், குருவோடும் சேர்ந்தாலோ அவர்கள் வீட்டில் இருந்தாலோ மத்திமமான பலன்களைச் செய்வார். சனி, புதன் போன்ற மித்துரு கிரகங்களுடன் கூடினால் பெரும்பாலும் நற்பலன்கள் உண்டாகுமென்று கூறப்படுகின்றது.

''சுங்கரவர் செங்கண்மால், காரியொடு கூட
சுற்றங்கள் கூடியேதான் மித்துருவீ டேற
பங்கமில்லாப் பெருபலனு மேதான் செய்வார்
பகரவரும் வெய்யோனு மம்புலியோடு கூடிடினும்
சிங்கமேல் சத்ருவோடு சேர்ந்திடினும்
சாத்திரத்தோன் வேதனில் இருப்பினுமே
சுங்கரவர் பாபியாகிக் கொடுமை செய்வார்
சுருதிய்றிந்து பிருதிசெய்யப் பலனுந் தானே''

சுக்கிரன் தனுசு வீட்டில் இருந்தாலும், குருவோடு அங்கு கூடினாலும், பாபியாவார். அதனால் பலன்கள் குறையும். புத்திரக் குறைவும், புத்திரனில்லாமையும் உண்டு செய்யும். சுக்கிரன், சேராத கிரகங்களோடு சேர்ந்து பஞ்சம பலனைத் தடை செய்தால் அசுரகுருவாகிய சுக்கிரனுக்குத் தக்க பிரீதிகள் செய்தும், யந்திர, மந்திர பிரீதிகள் செய்தும் நல்ல பலனையடையலாம்.

மிதுன இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 5ஆம் இடமான துலாத்திலேயே ஆட்சியானால் புத்திரர்களுக்குக் குறைவில்லை.

பெண்மகவுகள் அதிகம் பிறக்க விதியுண்டாகும். பூர்வ புண்ணியங்கள் பலமுடன் இருக்கும். அதனால் பிற்பலன்கள் அதிகம் உண்டாகும். பெண் தேவதை சித்திகளும், தேவதா உபாசனைகளில் ஈடுபாடும் உண்டாகும். குலதெய்வம் பெண் தெய்வமாயிருந்தால் ஆற்றல் அதிகமாகவும், உக்கிரமாகவும் இருக்கும். தாய்மாமன் வகையில் உறவும் உண்டாகும்; ஆனால், தொடர்ந்து நிலைக்காது, சுக்கிரனுடன் சனி உச்சமாகிக் கூடினால் பூர்வ புண்ணிய பலன்கள் அதிகரிக்கும். ஆனால், மகவு சந்தான பலன்கள் மந்தமாகவும், அங்கங்கள் ஹீனமாகவும் பிறக்க விதியுண்டு. சுக்கிரனோடு சூரியன் நீசமாகிக் கூடினால் குழந்தை பாக்கியம் தடையாகி, பிரீதிகள் பின்பு பிறக்க விதியுண்டாகும். சுக்கிரன் தன் நட்பு, சம கிரகங்களுடன் கூடினால் உயர்வான பலன்கள் உண்டாகும். ஆனால், நீச, பகை கிரகங்களோடு கூட மத்திம பலனையும், உரிய பிராப்திகளையும், பணச் சேர்க்கைகளையும் தடைசெய்வார் என்று அறியப்படுகின்றது.

மிதுன இராசிக்கு ஐந்தாமிடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு ஆறாமிடமான விருச்சிகத்தில் இருந்தால் 5ஆம் பாவ பலன்களை மத்திமமாகச் செய்வார். செவ்வாய் சுக்கிரனோடு கூட யோகமுண்டாம். ஆனால், புத்திரத் தடைகளும், புத்திரர்கள் தமக்கு எதிரான செயலைச் செய்யும் நிலைகளும் உண்டாகும். பூர்வ புண்ணியாஸ்திகள் கடன் பேரில் இருக்கவும் குத்தகைக்கு விடப்பட்டிருக்கவும் விதி உண்டாகும். பூர்வ புண்ணியம் ஸ்திரமாய் இருந்தாலும் அவ்வளவு இலாபமில்லை. தாய்மாமன் வழி உறவுகள் தடைப்படும். வந்தாலும் ஒற்றுமையாக இராது. மத்திம பலனேயுண்டாம், விருச்சிகத்தில் சுக்கிரன் தனித்திருந்தாலும், பகைக் கிரகத்தோடு சேர்ந்திருந்தாலும் பலனில் குறைவுண்டாகும். திடீர்ப்பொருள் சேர்க்கைகள் குறையும். சுக்கிரனோடு செவ்வாய் சேர்ந்திருந்தால், குலதெய்வம் ஆண் தெய்வமாயிருக்க, சத்துரு உபாதைகளை அழிக்கும், தனக்கும் மிகுந்த ஆற்றலும் அதீத பலமும் உண்டாகும். மந்திர சம்பந்தங்களில் ஈடுபாடு குறைவாகக் காணப்பட்டாலும் சுப்பிரமணியர் ஆராதனைகளும், இலட்சுமி உபாசனைகளும் ஏற்படும். பிரபுத்துவத்திற்குப் பங்கம் உண்டாகும். சுக்கிரனுக்கு எந்திர மந்திர பிரீதிகள் செய்ய நற்பலனாகும்.

மிதுன இராசிக்கு 5ஆம் இடத்ததிபதி சுக்கிரன் இராசிக்கு ஏழாம் இடமான தனுசில் இருந்தால் சுக்கிரன் பாபியாவார். சுக்கிரனுடன் குரு கூட பலன் குறையும். மனைவி வகையில் புத்திர பிராப்திகள் தடைப்படும். ஆனால், மகவுக்குப் பஞ்சமில்லை. ஆண் மகவுப் பலன்களும், அவர்களால் இடரும் உண்டாகும். [illegible] சனி [illegible] சேர்ந்தால் சில உத்தம

பலன்கள் உண்டாகும். பூர்வ புண்ணிய ஆஸ்திகள் இருந்தாலும் பலன் குறைவாகும். ஆச்சார அனுட்டானங்கள், தேவதா உபாசனைகள் விட்டுவிட்டுத் தொடரும். ஆனால், பிடிவாத குணத்தோடு முடிக்கும் வல்லமைகள் ஏற்படும். மந்திர சித்தி பலிக்கும்; சாபம் விட்டாலும், துர்பலன்களைக் கூறினாலும் நடக்க விதி உண்டு. சுக்கிரனோடு சூரியனோ, குருவோ சேர்ந்தால் மத்திமமான பலன்கள் உண்டாகும். மகவுப் பலன்கள் தடைகாட்டி, அதன் பின்பு உண்டாகும். குலதெய்வம் பெண் தெய்வமாயிருக்க மத்திமம். ஆண் தெய்வம் சாந்தமாய் இருந்தால் இறையருள் கூடும். தாய்மாமன் வகையில் உறவுகள் இருந்தாலும் தடைப்படும். தொடர்புகள் சம்பந்தங்கள் செய்வது கடினமாய் இருக்கும். மதிப்புக்கு பங்கம் வந்து செல்லும். பிரீதிகள் செய்ய நற்பலண்கள் உண்டு.

மிதுன இராசிக்கு '5'ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு '8'ஆம் இடமான மகரத்தில் இருக்க மத்திம பலனாம். என்னதான் தன் மித்துரு வீட்டில் இருந்தாலும், புத்திர பலன்களைத் தடை செய்வார். அல்லது மந்தமான நிலைக்குப் பின் மகவுப் பலனை ஏற்படுத்துவார். குருவுக்கும், சுக்கிரனுக்கும் தக்க பிரீதிகள் செய்ய நற் பலன்கள் உண்டாகும். மந்திரசம்பந்த ஈடுபாடுகள் குறையும். பக்தியிருந்தாலும் வழிபாட்டில் குறைவுண்டாம். சுக்கிரனோடு செவ்வாய், சனி, புதன் மற்ற சம நட்புக் கிரகங்கள் கூடினால் தாய்மாமன் வகையில் உறவு இருந்தாலும் சம்பந்த உறவுகள் குறைவாகவே இருக்கும். குலதெய்வம் பெண் தெய்வமாயிருக்கத் துடியாயும், ஆங்காரமிக்கதாகவும் பந்தி, படையலுடன் கூடியதாகவும் இருக்கும். பூர்வபுண்ணியம் நிலங்களாகவும், காடு கரைகளாகவும் உண்டாகும். மந்த வருவாயையே ஏற்படுத்தும். சுக்கிரனுடன் குரு நீசமாகிக் கூடினாலும், சூரியன் சேர்ந்தாலும், சுக்கிரன் தனித்திருந்தாலும் உடல் நோய்களால் கர்ப்பம் கலையும்; சிதைவேற்படும் நிலையுண்டாம். குருவுக்கும், சுக்கிரனுக்கும் யந்திர மந்திரப் பிரீதிகளைத் தனிப்பட்டுச் செய்தால் உயர்பலனையும் மகவுப் பலனையும் அடையலாம் என்று கூறப்படுகின்றது.

மிதுன இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 9ஆம் இடமான கும்பத்தில் இருக்கப் புத்திரச் செல்வங்களுக்குத் தடையில்லை. ஆண் பெண்ணென்று கலந்தே காணப்படும். சுக்கிரன் இரண்டுக்கு மேற்பட்ட நட்புக் கிரகங்களுடன் கூடினால் பிறந்த குழந்தைகளினால் யோகமுண்டாகும். பூர்வ புண்ணியங்கள் ஸ்திரமாகவும், அவற்றின் பாக்கியத்தை அடைய விதிகளும் ஏற்படும். தாய்மாமன் உறவுகள் கணிசமான முறையில் இருந்துகொண்டிருக்கும். ஆனால், அவற்றினால் பலன்கள் குறைவாகும். குலதெய்வம் பெண் தெய்வமாயிருக்க உயர் பலன்களைக்

கொடுக்கும். நெடுங்காலம் விட்டுப் பின் வழிபாடு தொடர்ந்தால் தீய பலனைக் கொடுக்கும். பிரீதிகளுக்குப் பின்னே நன்மையுண்டாம். மந்திர சம்பந்த சித்திகள், ஈஸ்வர உபாசனைகள், சிவலிங்க வழிபாடுகள் போன்றவையிருக்கும். அவற்றின் வழியில் நிம்மதியும், அமைதியும் உண்டாகும். சுக்கிரனுடன் சூரியனோ மற்ற பகைக் கிரகங்களோ, இராகு கேதுக்களோ கூடினால் 5ஆம் பாவ வழியில் மத்திம பலன்களே ஏற்படும். புத்திரத்தடைகளும், அவர்களினால் தொல்லைகளும் ஏற்படும். சுக்கிரனுக்கு உரிய யந்திர மந்திர பிரீதிகள் மூலம் உயர் பலனையடைவீராக.

மிதுன இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 10ஆம் இடமான மீனத்தில் உச்சமானால் 5ஆம் பாவ பலன்கள் சிறக்கும். புத்திரச் செல்வங்களுக்குத் தடையில்லை. ஆண் புத்திரர்களால் உயர்வும், தொழில் அபிவிருத்திகளும் உண்டாகும். பெரியோர் ஆசிகளும், மகான்களின் தொடர்பும் ஏற்படும். பூர்வ புண்ணியங்கள் வழியாக உயர்பலன்கள் உண்டாகும். மந்திரங்கள், தெய்விக வழிபாடுகள் ஆகியன மிகுந்த அனுட்டானங்களோடும், தேவதை உபாசனைகளோடும் உண்டாகும். சுக்கிரனோடு குரு சேர சில நன்மைகள் உண்டாகும். தன் மந்திர தந்திர உச்சாடனங்களால் மற்ற வகையில் நல்ல பலனையும் தொழில் ரீதியாக நல்ல பலனையும் கொடுக்கும். சுக்கிரனுடன் புதன் நீசமாகிக் கூடினால் நீசபங்க ராஜயோகம் ஏற்பட்டு அதன் பலனைத் தொழில், தன் புத்திரர்கள், பூர்வபுண்ணிய மனைகள், தேவதா சித்திகள் ஆகியன மூலம் கிடைக்கச் செய்யும். அதிர்ஷ்ட சேர்க்கைகளும், திடீர்ப் பணவரவும் உண்டாகும். சுக்கிரனோடு இரண்டுக்கு மேற்பட்ட சுபகிரகங்கள் இருப்பின் நல்ல பலன்களாகும். தாய்மாமன் வகைத் தொடர்பும் சம்பந்தமும் உண்டாகும். கிரக பிரீதிகள் செய்ய நற்பலன்கள் மிகுதியாக உண்டாகும்.

மிதுன இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 11ஆம் இடமான மேஷத்தில் இருக்க மக்களுக்குக் குறைவில்லை. ஆண் புத்திரர்களினால் இலாப பலன்கள் உண்டாகும். சுக்கிரனுடன் சூரியன் உச்சமாகிக் கூடினால், புத்திரர்களினால் தொல்லையுண்டாகும்; அவர்களின் மமதைப் பேச்சைக் கேட்க நேரும். தாய்மாமன் வழி உறவுகள் தடைப்படும். சம்பந்தங்கள் நல்லுறவைத் தாரா. சுக்கிரனுடன் சனி நீசமாகிக் கூடினால் புத்திரர்கள் வழியில் அங்கஹீனத்தையும் மந்த நிலைகளையும் உண்டு செய்யும். சுக்கிரன் செவ்வாயோடும், புதனோடும் கூட யோகபலனையும், இலாப பலனையும் தருவார். பூர்வபுண்ணிய இலாபங்கள் ஏற்படும். முருகக் கடவுள் உபாசனையும், ஆண் தெய்வ வழிபாடும் ஏற்படும். குலதெய்வம் ஆண் தெய்வமாயிருக்க நல்ல பலனை அடையலாம். அது பந்தி தெய்வ

வகையில் உயர்ந்த தெய்வமாயிருக்கும். இதனால் சிவசம்பத்துகளும், தெய்விக உபாசனைகளும் கிட்டும். சுக்கிரன் தனித்திருந்தாலும், நட்புக்கிரகத்தோடு சேர்ந்திருந்தாலும் உயர்வான பலன்கள் உண்டாகும். 5ஆம் பாவ வழியில் இன்னமும் அதிக பலனைப் பெறச் சுக்கிர எந்திர மந்திர பிரீதிகளைக் கடைப்பிடிக்கலாம். உயர்வான பலன்களை அடையலாம்.

மிதுன இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 12ஆம் இடமான ரிஷபத்தில் இருந்தால், மறைவுப் பலனையும் தன் ஆட்சி விரய பலனையும் சேர்த்தே கொடுப்பார். புத்திரர்களால் இடர்கள் சில கால கட்டங்களில் உண்டாகும். சிசு கர்ப்பம் தரித்துப் பின்பு கரையும் நிலையுண்டாகும். கடுமையான கிரக பிரீதிகள் மூலம் புத்திர பலன்களை அடையலாம். பெண் மகவுகளால் விரய பலன் உண்டாகும். ஆக்கப் பலன் குறைவாம். பூர்வ புண்ணியாஸ்திகள் விரயமாகும். அது தன் கைக்கு எட்டா நிலையிலேயே இருக்கும். அதனால் பலன் குறைவாகும். சுக்கிரனுடன் செவ்வாயும், சனி, புதன் போன்ற கிரகங்களும் கூடினால் விரய பலன்களைத் தடுக்கலாம். மந்திர சித்திகளுக்கு எட்டி அதைத் தொடமுடியாத நிலைகளை உண்டு செய்யும். குலதெய்வம் பெண் தெய்வமாயிருந்தால் மேன்மையான பலன்களைச் செய்யும். தொடர்ந்து பலி படையல்கள் செய்யாவிட்டால் விரயபலனை உண்டு செய்யும். தாய் மாமன் வகையில் பலன் மத்திமமாகவே உண்டாகும். சம்பந்த நன்மைகள், புத்திர பிராப்திகள் குறையும். சுக்கிரனுக்கோ லட்சுமிக்கோ பிரீதிகள் செய்ய நற்பலனாகும்.

மிதுன இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் மிதுன இராசியிலே இருந்தால் புத்திர பிராப்திகள் உண்டாகும். பெண் மகவு மிகுதியாயிருக்க விதியுண்டாகும். தாய்மாமன் வழியில் உறவு ஏற்பட விதியுண்டாகும். தாய்மாமன் வழி சம்பந்தமும் நீடிக்கும். பூர்வ புண்ணிய பலன்கள் முன்பு மத்திமமாகவும், பின்பு உத்தமமாகவும் இருக்கும். மனை வகையில் நற் பலனும், தாங்கள் கற்ற கல்வி வகையில் உயர் யோக பலன்களும் உண்டாகும். பெரியோர்கள் மதிக்கும் நிலைகள் உண்டாகும். விஷ்ணு ஆராதனைகளும், சுதர்ஸன ஹோமங்களில் ஈடுபாடும், நாராயண லட்சுமி தேவி வழிபாடுகளும் கிட்டும். குலதெய்வம் பெண் தெய்வமாயிருக்க மெத்த பலனுண்டு. அதற்குச் சரியானபடி பந்தி படையல்களைச் செய்து உயர்பலனை அடையலாம். தன் கௌரவத்திற்குப் பெரும்பாலும் பங்கம் ஏற்படாது. சுக்கிரனுடன் சூரியன் சேர்ந்தாலும், சந்திரன் சேர்ந்தாலும் சில பங்கம் வர விதியுண்டாம். பெண் குழந்தைகள், பெண் தெய்வங்கள்.

பெண் தெய்வ வழிபாடு ஆகியவற்றால் நல்ல மேன்மையுண்டாம். சுக்கிரனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளையும், மற்றும் மஹாலட்சுமி ஆராதனைகளையும் செய்தால் 5ஆம் பாவ பலன்கள் சிறக்கும்.

மிதுன இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 2ஆம் இடமான கடகத்தில் பகை பெற்றிருக்கப் புத்திரருண்டாம்; புத்திரிகள் அதிகமாயிருப்பார்கள். அவர்களால் பலன்கள் குறைவாம். சுக்கிரன் தனித்திருந்தாலும், தன் மித்துரு கிரகங்களுடன் சேர்ந்திருந்தாலும் நல்ல பலனைக் கொடுப்பார். ஆனால், சுக்கிரனுடன் செவ்வாய் நீசமாகிக் கூடினால், மத்திமமான பலன்களே உண்டாகும். பூர்வ புண்ணிய வழியில் தனம் புரள விதிகள் குறைவாகவே ஏற்படும். தாய்மாமன் வழியில் தொடர்புகள் இருந்தாலும், மத்திம பலனே உண்டாகும். சம்பந்தங்கள் நீடிக்கா. சுக்கிரனுடன் குரு உச்சமாகிக் கூடினால் மந்திர சம்பந்தங்களில் உயர்பலன்களும் மந்திர எந்திர வழிபாடும், உயர்ந்த தேவதை சித்திகளும், வாக்குப் பலிதங்களும் உண்டாகும். குலதெய்வம் பெண் தெய்வமாய் இருக்க நற்பலன்கள் உண்டாகும். சுக்கிரன், பகைக் கிரகத்தோடு கூடினால் 5ஆம் பாவ பலன்கள் தடைப்படும். சுக்கிரனுக்கு யந்திர மந்திர பிரீதிகள் செய்தால் உயர்பலனுண்டு என்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது.

மிதுன இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன், இராசிக்கு 3ஆம் இடமான சிம்மத்தில் பகை பெற்றிருக்கப் புத்திரத் தடைகள் உண்டாகிப் பிரீதிகளுக்குப் பின்பு தடைகள் நீங்க, மகவுகள் பெறுவதற்கு விதிகள் உண்டாகும். ஆண் மகவுகளால் உயர்பலன்களும், பக்கபலமும் உண்டாகும். பூர்வபுண்ணியங்கள் தன் இளையசகோதரர் வசம் அதிகமாக சிக்க விதிகள் உண்டாம். ஆண் தெய்வ உபாசனைகளும், சிவ வழிபாடுகளும், சிதம்பர யந்திர, மந்திர வழிபாடுகளும் மேன்மையான பலன்களைத் தரும். குல தெய்வம் ஆண் தெய்வமாயிருக்கத் தைரியங்களும், ஆற்றலும் உண்டாகும். பெரும்பாலும் சுக்கிரன் தனித்திருந்தால் நன்மையுண்டு. சூரியனோடு சேர்ந்தால் பலன் குறைவாகும். தாய்மாமன் வழி உறவுகள் நீடிக்கா. ஆளுமைக்கும், அதிகாரத்திற்கும் அடிக்கடி பங்கம் வந்து விலக விதிகள் உண்டாகும். சிவசம்பத்துகள் முயற்சியின் மேல் பலனாகும். சுக்கிரன் 2க்கு மேற்பட்ட பகைக் கிரகங்களுடன் கூடினால் பஞ்சமபாவ வழியில் உயர்வான பலன்கள் கிடைப்பதற்கு விதியிருக்காது. யந்திர, மந்திர பிரீதிகளை மஹாலக்ஷ்மிக்கும், சுக்கிரனுக்கும் செய்தால் நல்ல பலன்கள் உண்டென்று கூறப்படுகின்றது.

மிதுன இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன், இராசிக்கு 4ஆம் இடமான கன்னியில் நீசமடைந்தால் துர்பலன்களாகும். கடினமாகப் புத்திரத் தடைகள் உண்டாகும். சுக்கிரனுக்கும் குருவுக்கும் செய்யப்படும் தனிப்பட்ட பிரீதிகள், பெண் மகவிற்கு வழிகாட்டும் என்று கூறப்படுகின்றது. பூர்வபுண்ணிய பலன்கள் குறைவாகவே உண்டாகும். தாய்மாமன் வகைத் தொடர்பும், சம்பந்தங்களும் குறைவாகக் காணப்படும். மிதமான பலனே உண்டாகும். சுக்கிரன் புதனோடும் சனியோடும் கூடினால் சில நீச பலன்களைத் தவிர்க்கலாம். குல தெய்வ வழிபாடுகள் குறைதலால் தொந்தரவும், சாபமும் உண்டாகும். பெண் தெய்வமாயிருந்தால் சதுர்கைகளுடனும் உக்கிரமாகவும் இருக்கும். மந்திர சம்பந்தங்களில் ஈடுபாடு இருந்தாலும் தேவதா சித்திகள் குறைவாகக் காணப்படும். சுக்கிரனுடன் புதன் கூடினால் நீச பங்க ராஜயோகம் ஏற்பட்டு அதன் பலனாகத் திடீர்த் தனபிராப்திகளும், பொருள் சேர்க்கையும் உண்டு செய்யும். சுக்கிரனுக்குக் கடுமையான யந்திர, மந்திர பிரீதிகள் மூலம் நல்ல பலனை அடையலாமென்று கூறப்படுகிறது.

# கடகம்

சுப்பிரமணிய தேவரை அதிபதியாகப் பெற்ற செவ்வாயை 5ஆம் அதிபதியாகவும் பெற்ற கடக இராசி அன்பர்களே! 5ஆம் பாவமென்பது புத்திரர்கள், பூர்வபுண்ணியம், குலதெய்வம், மந்திர சம்பந்தம், தாய்மாமன் போன்றவற்றின் பலன்களைக் குறிப்பிடுவதாகும். இந்தப் பலன்களை மகரிஷி பதஞ்சலி மகாமுனிவரின் திருவாக்கின்படி, மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளிலும் செவ்வாய் இருந்த பலனும் மற்ற கிரகங்களோடு கூடிய பலனும் உங்களின் 5ஆம் பாவ பலன்களாகக் கூறப்பட்டுள்ளன. அன்பர்கள் தங்கள் இராசிக்குச் செவ்வாய் எத்தனையாவது இடத்தில் இருக்கின்றார் என்று அறிந்து, தங்கள் பலனை அறிந்துகொள்ளுமாறு கேட்டுக்கொள்ளப்படுகின்றார்கள்.

"அப்பனே பூமியென்ற காரகனாம்
   ஆரலென்ற குசனவனு மதிக்குத்தான்
ஒப்பமேல் ஐந்தோனாய்த் தான்வரவே
   அட்டமமும் வியம்விட்டு மதிக்குத்தான்
தப்பியே சுபர்விடமும் கூடினாலும்

தகைசான்ற வேதனொடு, வெய்யம்புலி
செப்பமேல் கூடினாலும் உய்ர்பலனாய்ச்
சாற்றவரும் பஞ்சம கோளொடுதான்

தானதுவாய் குலதெய்வம் வழுத்து நிற்கும்
தனயனுக்குப் புத்திர பிராப்தி யுண்டாம்!
ஆனதொரு உச்சாடனம் யந்திர சித்தி
அறியமேல் குருமுகமாய்ப் பெறுவான் காணே''

இப்படிச் செவ்வாயானவர் இராசிக்கு 8,12ஆம் இடங்களில் மறையாமல் சுபகிரகங்களோடும், குரு, சூரியன், சந்திரன் போன்ற கிரகங்களுடன் கூடினால் ஐந்தாம் பாவ பலன்களை உயர்வாகச் செய்வார் என்று கூறப்படுகின்றது.

அதன்படி செவ்வாயானவர் இராசிக்கு 5ஆம் இடமான விருச்சிகத்தில் ஆட்சி பெற்றிருந்தால், முன் புத்திரத் தடைகளையும், பின் புத்திர பிராப்திகளையும் பெறுவார்கள். ஆண் புத்திரர்கள் அதிகமாக இருக்க விதியுண்டாம். அவர்கள் மிகவும் தைரியம், வீரியமுடையவர்களாய் இருப்பார்கள். அவர்களால் பூர்வபுண்ணிய ஆஸ்திகளும் வலுவடையும். குழந்தைகள் பெறுவதற்குமுன் பூர்வ புண்ணியாஸ்திகள் பெறுவதற்குத் தடையுண்டாகும். ஆண்வாரிசு தழைத்ததற்குப் பிறகு ஸ்திரமான பூர்வபுண்ணியத்தைப் பெறுவதற்கும் விதியேற்படும்.

குலதெய்வம் ஆண் தெய்வமானால் மூர்க்கமானதாகவும், பலி வாங்கும் தெய்வமாகவும், வழிபாடு தொடராவிட்டால் கொடுமைகள் செய்யவும் தயங்காத தெய்வமாகவும் இருக்கும். பெண் தெய்வத்தைவிட ஆண் தெய்வத்தால் பலனதிகம். தொடர்ந்து விடாமல் பூசைகள் மேற்கொள்ள நற்பலன்களாம்.

செவ்வாயுடன் ஐந்தில் இராகுவோ, கேதுவோ கூடினால் புத்திரதோஷம் உண்டாகும். கூடவே சூரியன் சேர்ந்தால் கிரகண தோஷமும் உண்டாகும். 5ஆம் பாவ வழியில் துர்பலனை ஏற்படுத்தும். கிரக பிரீதிகள் செய்வதன் மூலம் உயர்பலன்களை அடையலாமெனக் கூறப்படுகின்றது.

சுப்பிரமணியர் ஆராதனைகளையும் அவர் வழியான உபாசனைகளையும் மேற்கொண்டால் உயர்வான பலனையடையலாம். செவ்வாயுடன் குரு, சூரியன் போன்ற கிரகங்கள் கூடினால் தேவதா சித்திகள் உண்டாகும். ஆண் தெய்வ வழிபாடுகளினால் மிகுந்த பலன்கள் உண்டாகும்.

செவ்வாய் சுபகிரகத்தோடு சேர்ந்தாலே தாய்மாமன் வகையில் தொடர்பும் சம்பந்தங்களும் ஏற்படும். அது ஸ்திரமானதாகவும் இருக்கும். அவர்கள் கண்டுங் காணா நிலையுடனே இருப்பார்கள்.

செவ்வாய் தனித்திருந்தால் நல்ல பலனைச் செய்வார். துர்க் கிரகத்தோடு கூடிச் சில பலன்களைக் கடுமையாகச் செய்தால், செவ்வாயின் யந்திர, மந்திர பிரீதிகளைத் தொடர்ந்து செய்தால் உயர்வான பலனைப் பெறலாம்.

உங்கள் இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு 6ஆம் இடமான தனுசு இராசியில் பகை பெற்றால் மத்திமமான பலனை 5ஆம் பாவ வழியில் செய்வார் என்று கூறப்படுகின்றது. புத்திரர்களினால் தொல்லையுண்டாகும். தன்னைச் சத்துரு போல் பாவிப்பதில் குறியாய் இருப்பார்கள், பெண்ணைவிட ஆண் வாரிசுகள் அதிகமாய் இருக்க விதியுண்டாம்.

பூர்வ புண்ணியங்கள் வில்லங்கமாகவும் ஸ்திரமற்றவையாகவும் காணப்படும். கடன் மற்றும் குத்தகை வகைகளில் மாட்டிக்கொள்ள நேரும். திரும்ப மீள்வதற்குத் தடை காணப்படும். பெரும்பாலும் மனை மற்றும் உலோக வகைகளாய் இருக்கும் அமிசங்கள் உண்டாகும். செவ்வாயோடு குரு கூடினாலும், சூரியன் கூடினாலும் மேற்கண்ட தொல்லைகளில் இருந்து மீளும் விதிகள் உண்டாகும்.

குலதெய்வம் ஆண் தெய்வமாகவும், மிகத் துடியானதாகவும் இருக்கும்; ஆனால், பெரும்பாலும் சாந்த சொரூபமாக இருக்க விதி உண்டு. ஆறாமிடத்தில் செவ்வாயிருந்து குரு கூடினால் தன் குல தெய்வத்தினாலேயே பகையை வெல்லவும் துன்பங்களை அகற்றவும் விதியுண்டாகும். குலதெய்வத்திற்குக் கடுமையான பூசைகள் செய்தால் நல்ல பலனையடைலாம்.

மந்திர சம்பந்தங்கள், உச்சாடனங்கள் போன்றவற்றால் சிவ சம்பத்துகள் நிறைந்து காணப்படும். லிங்க பூசைகளும் சிவாலய வழிபாடுகளும் அதிகமாக ஏற்படும். வாழ்வின் முற்பகுதியில் நாத்திகத்தில் ஈடுபாடும், பிற்பகுதியில் ஆத்திகத்தில் ஈடுபாடும் உண்டாகுமென்று கூறப்படுகின்றது.

தாய்மாமன் வகையில் வில்லங்கமும், விவகாரமும், சம்பந்தங்களினால் தொல்லையும் உண்டாகும். விருப்பமில்லாமல் வெறுப்புடனே பழக வேண்டியது வரும். தாய்வழிச் சகோதரப் பலன்கள் குறைவாகவே காணப்படும்.

பொதுவாகச் செவ்வாய் கடக இராசிக்கு 6ஆம் இடத்தில் தனித்திருந்தாலும் தன் மித்துரு கிரகங்களான சூரியன், குரு முதலான கிரகத்தோடு கூடியிருந்தாலும் உயர்வான பலனுண்டாம்.

கிரக துர்பலனைத் தவிர்ப்பதற்குச் செவ்வாய்க்கும் சுப்பிரமணிய தேவருக்கும் பிரீதிகளும் கிரகார்ச்சனைகளும் செய்தால் மேன்மையான பலன்கள் உண்டாகுமெனக் கூறப்படுகின்றது.

5ஆம் பாவ பலன்களைக் கொடுக்கக்கூடிய செவ்வாயானவர் உங்கள் இராசிக்கு 7ஆம் இடமான மகரத்தில் உச்சம் பெற்றால் முன்கூறியபடி மிகவும் நல்ல பலனைச் செய்வார். புத்திரர்களுக்குக் குறைவில்லை, ஆனால், மந்தமான சூழ்நிலைக்குப் பின் குழந்தைகள் பிறக்க விதியுண்டாம். குழந்தைகள் நல்ல விரீயத்துடனும் திடகாத்திரத்துடனும் இருப்பார்கள். அதிகமாகப் பெண் பிள்ளைகளே பிறக்க விதியுண்டாம். செவ்வாயுடன் குரு நீசமாகிக் கூடினால் குழந்தைகள் பெறுவதில் தடையும் கர்ப்பச் சிதைவும் உண்டாகும். பிரீதிகள் மூலம் புத்திர சந்தானத்தைப் பெறலாம்.

பூர்வ புண்ணியங்களும் உழவு நிலங்களும் மந்தமான நிலைகளையுடையனவாய் இருக்கும். செவ்வாயுடன் சனி ஆட்சியாகிச் சேர்ந்திருந்தால் பூர்வபுண்ணியங்கள் கைமாறிப் போய் வரும் அமிசங்கள் ஏற்படும். செவ்வாயோடு குரு கூடினால் பூர்வ புண்ணிய சொத்துகள் தனக்குக் கிடைப்பதற்கு உசிதமில்லை.

குலதெய்வங்கள், ஐயனார் போன்ற பந்தி தலைமைத் தெய்வங்களாய் இருக்கும். ஆண் தெய்வமானால் மிக உக்கிரமானதாகவும், துஷ்டகாரியங்களையும் தடைகளையும் நீக்குவதாகவும் இருக்கும். பெண் தெய்வமாயிருந்தால் பந்தி தெய்வங்களுள் ஒரு வகையதாயிருக்கும். செவ்வாயோடு இராகு கேதுக்கள் கூடியிருந்தால் பாம்பை ஆபரணமாய்க் கொண்டதாயிருக்கும்.

பிரம்மச்சரிய தேவர்கள் உபாசனைகளும், சுப்பிரமணியர், முருகக்கடவுள் தெய்வ உபாசனைகளும், வழிபாடுகளும் ஏற்படும். அவற்றால் நன்மை உண்டாகும். தொடர்ந்து செய்ய மெத்த பலன்களாகும்.

தாய்மாமன் வழியில் பெண்ணெடுக்க விதியுண்டு. செவ்வாயோடு சனி சேர்ந்தால் அதற்குத் தடையுண்டாகும். குரு நீசமானாலும் தடையுண்டு. அதனால் மனக்கிலேச நிலையுண்டாகும்.

செவ்வாயுடன் குருகூடினால் நீசபங்க ராஜயோகமாகிச் சில யோகபலன்களையும், திடீர்ச்சேர்க்கைகளையும் உண்டு செய்யும்.

செவ்வாய்க்குக் கிரக பிரீதிகள் செய்தால் மேன்மையான பலனுண்டு என்று கூறப்படுகின்றது.

உங்கள் இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு 8ஆம் இடமான கும்பத்தில் இருக்கச் சந்திரனுக்கும் செவ்வாய்க்கும் சஷ்டாட்டமம் உண்டாகிப் பலன்களைத் தடை செய்யும். புத்திர பிராப்திகள் தடையாகிப் பின்பு நல்லபடியாக விளங்கும். இருந்தாலும் மந்தமான பலன்களே உண்டாகும். புத்திரர்களால் மேன்மையான பலன்கள் உண்டாகும் என்று சொல்வதற்கில்லை. பெண் பிள்ளைகளால் தொந்தரவும் உண்டாகும். செவ்வாயுடன் அதன் மித்துரு கிரகங்களான சூரியன், குரு போன்ற கிரகங்கள் கூடினால் சில துர்பலன்கள் தவிர்ந்துவிடும்.

பூர்வபுண்ணியம் இல்லாமல் போகலாம். இருந்தாலும் பெரும் பலனைத் தரும் நிலையிலிராது. அதை முன்னிட்டு மன வருத்தமே நிரம்பியிருக்கும்.

குலதெய்வம் குதிரைமேல் பவனி வரும் தெய்வமாகவும், மந்தமான லாகிரி மற்றும் குடிப்பழக்கமுள்ள தேவதையாகவும் இருக்க விதியுண்டாகும். ஆனால், அது சமயத்தில் ஆங்காரமாய்ச் செயல்படும் நிலை ஏற்படும். அதை வழிபடுவதை விட்டுவிட்டால் அது பலி வாங்கவும் தயங்காது.

மந்திர சம்பந்தங்களில் ஈடுபாடு குறையும். மூட நம்பிக்கையான பக்திகளிலும், குறி சொல்லும் வித்தைகளிலும், பலவித விகட விநோத வித்தைகள் போன்ற ஜாலங்களிலும் ஈடுபாடு உண்டாகும். உச்சிஸ்ட தெய்வ இலாபங்களும் உபாசனைகளும் குறைவாகவே காணப்படும்.

தாய்மாமன் வழியில் பலன் குறைவு; சம்பந்தம் செய்யவும் பிராப்திகள் குறைவாம். செவ்வாயோடு புதன் சேர்ந்தால் அதற்குப் பெருந்தடைகளும், தொடர்புக்கே பங்கமும் உண்டாகும்.

கிரகத்தின் சேர்க்கையால் செவ்வாயானவர் கடுமையான பலன்களைத் தர நேரிட்டால் யந்திர, மந்திர பிரீதிகள் செய்து நல்ல பலன்களைப் பெறலாமென்று அறியப்படுகின்றது.

கடக இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு 9ஆம் இடமான மீனத்தில் பகை பெற்றால் மத்திமமான பலனையே உண்டு செய்யும். ஆனால், புத்திர சந்தானங்களுக்குக் குறைவில்லை. ஆண் ஜெனனங்கள் அதிகம் உண்டாகும். ஆனால், தன்னை மதிக்கும் நிலை குறைவாகவே இருக்கும். தன்னைத் தொடர்ந்து பணிகளை மேற்கொள்ளுவார்கள்.

செவ்வாயுடன் குரு ஆட்சியாகிச் சூரியனும் சேர்ந்தால் பிதுர் ஆஸ்தியான பூர்வ புண்ணியச் சொத்துகள் கிடைக்க விதியுண்டாகும். அவை பொன்னாபரணமாகவோ விவசாய நிலங்களாகவோ இருக்கும். சுக்கிரன் உச்சமாகிக் கூடினால் யோகமாம். பூர்வபுண்ணியம் கிட்டும் விதிகள் எப்படியும் உண்டாகுமென்று கூறப்படுகின்றது.

குலதெய்வம் ஆண் தெய்வமாகவும், சாந்த சொரூபமாகவும், நான்கு கைகளை உடையதாகவும் இருப்பின் நல்ல பலன்களையும் ஆற்றல்களையும் கொடுக்க வல்லதாக இருக்கும். முறையான பந்திபடையல்கள், உபச்சாரங்கள் செய்து அதன் பலனைத் தக்க வைக்க வேண்டும்.

மந்திர சம்பந்தங்களில் ஈடுபாடும், சிவசம்பத்தும் அது சம்பந்தமான பாக்கியங்களும் கிட்ட விதியுண்டாகும். சாந்த சொருப தேவ உபாசனைகள், சிவானந்த தோத்திரங்கள், மந்திர உச்சாடனங்கள் ஆகியவற்றின் பலன் பெருகும். செவ்வாயோடு குரு ஆட்சியாகிக் கூடினால் சுப்பிரமணிய உபாசனைகள் உண்டாகும்.

தாய்மாமன் வழியில் பலன் குறைவு. செவ்வாயுடன் புதன் நீசமாகிக் கூடினால் முற்றிலும் பலன் குறைவாகும். அவர்கள் வழியிலான சம்பந்தங்களில் இடரும், அதனால் மனக்கிலேசங்களும் உண்டாகும்.

செவ்வாய் துர்கிரகங்களுடன் கூடி துர்பலன்கள் கொடுப்பின், தக்க யந்திர மந்திர பிரீதிகள் செய்து, நல்ல பலனை அடைய வேண்டுமென்று கூறப்படுகின்றது.

கடக இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான செவ்வாய், இராசிக்கு 10ஆம் இடமான மேஷத்தில் ஆட்சியானால் மிகுந்த நற்பலன்கள் உண்டாகும். புத்திர பிராப்திகளுக்குத் தடையில்லை. ஆண் சந்தானங்கள் அதிகமாயிருக்கும். செவ்வாயோடு சூரியன் உச்சமாகிக் கூடினால் ஆண் பிள்ளைகளின் வழியில் தொழில் பலன்களையும் கர்மபலன்களையும் பெறலாமென்று கூறப்படுகின்றது.

பூர்வ புண்ணியாஸ்திகள் தொழில் வழியாக வர விதி உண்டாகும். பூர்வ புண்ணிய பூமிகளும் கைமாறிப் பின் திரும்பவும் வர விதிகள் உண்டாகும். அவை பூமியாகவும் மனைகளாகவும் இருக்கும். செவ்வாயோடு சனி நீசமாகிக் கூடினால் அவற்றை விற்பதில் தடையும், பெறுவதிலும் தடையும் மந்தமான நிலைகளும் உண்டாகும். செவ்வாயும் சுக்கிரனும் சேர்ந்தால் யோகமுண்டாகும்.

குலதெய்வம் ஆண் தெய்வமாய் இருந்தால் பெரும்பலனைத் தரும்; சகல தொழில்களும் சித்தியாக வழி செய்யும். அந்தத் தெய்வம் சிவப்பு நிறமுள்ளதாகவும் உயிர்ப்பலிகள் வாங்கும் திறன் கொண்டதாகவும் இருக்கும். பலிகளை விடாமல் கொடுத்து உரிய பலன்களைப் பெற வேண்டும்.

மந்திர சம்பந்தமான சித்திகளாலும் சிதம்பர யந்திரங்களாலும் முருகன் நாற்பத்து முக்கோண சக்கரங்களாலும் சித்திகளும், பஞ்சாட்சர வகையில் நற்பலன்களும் உண்டாகும். தொடர்ந்து உபாசனைகள் செய்து வர மேன்மையுண்டாகும்.

தாய்மாமன் வகையில் தொடர்பும், சம்பந்தம் செய்ய விதியும் உண்டாகும். செவ்வாயோடு புதன் சேர்ந்திருந்தால் கட்டாய நிர்பந்தத்தினால் தொடர்புகளும் உண்டாகும். ஆனால், தாய்மாமன் வழிப்பலன்கள் குறைவு.

செவ்வாய்க்கு எந்திரமந்திர பிரீதிகள் செய்வதன் மூலமும் சுப்பிரமணியக் கடவுளுக்கு ஆராதனை செய்வதன் மூலமும் பெரும்பலனை அடையலாம்.

கடக இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு 11ஆம் இடமான ரிஷபத்தில் நட்புப் பலத்தோடு இருக்க, புத்திர சந்தானங்களுக்குக் குறைவில்லை, மேன்மையுண்டு. பெண் பிள்ளைகள் அதிகமாய் இருப்பார் கள். செவ்வாயுடன் சுக்கிரன் ஆட்சியாகிக் கூடினால் பெண்பிள்ளைகள் அறிவுக்குண யூகமுள்ளவராகவும் இலாபமுள்ளவராகவும் இருப்பார்கள். பெண் புத்திரிகளினால் இலாபமுண்டாகும்.

பொதுவாக, பூர்வபுண்ணிய இலாபங்கள் இருக்கும். செவ்வாயோடு சூரியன், குரு போன்ற மித்துரு கிரகங்கள் கூடினால், பூர்வ புண்ணிய இலாபங்கள் ஸ்திரமாய் இருக்க விதி உண்டாகும். செவ்வாய் தனித்திருந்தாலும் பகைக்கிரகங்களோடு சேர்ந்திருந்தாலும் பூர்வ புண்ணிய வழியில் மத்திமமான பலன்களேயுண்டாகும்.

குலதெய்வம், சாந்த இலட்சண சொரூபியாகவும் பெண் தெய்வமாகவும் இருந்தால், நல்ல பலன்களைத் தரும். மேன்மையான பலன்களைச் செய்வதில் திறனுள்ளதாகவும் தனக்குக் கீழ் பந்தி தெய்வங்களையுடையதாகவும் இருக்கும். தொடர்ந்து பூஜைகள் செய்துவர, நல்ல பலன்களைக் குறித்த காலத்தில் தொடர்ந்து செய்யும்.

மந்திர சம்பந்தங்களில் தேவி உபாசனைகளும், இலட்சுமி உபாசனைகளும் உண்டாகும். பெண் தெய்வ உபாசனைகளால் நல்ல

யோக பலன்களையும், தேவதா சித்திகளையும் அடையலாம். செவ்வாயுடன் சுக்கிரன் ஆட்சியாகிக் கூடினால் தேவதாசித்திகள் பெறக் கிரக வலிமை உதவியாய் இருக்கும்.

தாய்மாமன் வழியில் உறவும் பழக்கங்களும் உண்டாகும். பெண்ணெடுக்கவும் விதி ஏற்படும். செவ்வாயுடன் இராகுகேதுக்கள் கூடினால் தாய்மாமன் வழியில் சம்பந்தத் தகராறுகளும் செவ்வாயுடன் புதன் கூடினால் சண்டையும் ஏற்படும். இலாபமானதாய் அது இராது.

செவ்வாய்க்குத் தக்க பிரீதிகள் செய்தால் நல்ல பலனை அடையலாமென்று நாடி நூல் கூறுகின்றது.

கடக இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு 12ஆம் இடமான மிதுனத்தில் நட்புப் பலத்துடனிருந்தாலும் சில விரய பலன்களை 5ஆம் பாவ வழியில் செய்வார் என்று கூறப்படுகின்றது.

புத்திர பிராப்திகளைத் தடை செய்யும். கர்ப்பச்சிதைவுகள், காலம் தள்ளிப் போதல் போன்ற பலன்களும் ஏற்படும். குருவுக்கும், செவ்வாய்க்கும் தனித்தனியே பிரீதிகள் செய்தால் நல்ல பலன்களையடைலாம். செவ்வாயுடன் புதன் ஆட்சியாகிக் கூடினால் புத்திரர்கள் வகையில் மத்திமமான பலனையும், சில சோகங்களையும் அதன் வழி செய்வார் என்று கூறப்படுகின்றது.

பூர்வ புண்ணிய சொத்துகள் இருந்தாலும் அவை தீர்வுடன் பலன் தாரா. மனை மற்றும் இதர வகையில் விரயச் செலவுகளையும், வீணலைச்சலையும் ஏற்படுத்தும். பூர்வ புண்ணியாஸ்திகள் கிடைக்காமல் செய்ய விதிகளும் உண்டு.

குலதெய்வம் பெண் தெய்வமாயிருந்தால் நல்ல பலன்கள் உண்டாகும். சதுர் புஜத்தையுடையதாகவும் சாம்பல் வர்ணத்தில் பந்தி தெய்வ வகையில் இருக்கும். வழிபாடுகளை நிறுத்தினால் சில துர்பலன்கள் உண்டாகும். தொடர்ந்து பூஜைகள் செய்து வர நல்ல பலன்கள் உண்டாகும்.

விஷ்ணு ஆராதனைகளும், சுதர்ஸன ஹோமங்களும், சுப்பிரமணிய கடவுளுக்கு வழிபாடும் செய்ய நல்ல பலன்களுண்டாம். கடவுளின் சித்திகளை முதலில் கடினப்பட்டும், பின்பு சுமுகமாயும் அடையலாம். தெய்வ உபாசனைகள் மேன்மையையளிக்கும்.

தாய்மாமன் வகையில் மத்திம பலனேயுண்டாம். செவ்வாய் மிதுனத்தில் தனித்திருந்தாலோ மற்ற [illegible] புதனோடு

கூடினாலோ சம்பந்த வகையில் இடருண்டாகும். எனவே, மனக்கிலேசங்களும் ஏற்படும்.

செவ்வாயுடன் சூரியன், குரு முதலானவர் கூடினால் நல்ல பலன்கள் 5ஆம் பாவ வழியில் உண்டு; சில துர்பலனைத் தவிர்க்கப் பிரீதிகள் செய்யவும்.

கடக இராசிக்கு 5ஆம் இடத்ததிபதி செவ்வாய் கடக இராசியிலே நீசமாகிக் கூடினால், தன் மித்துரு வீட்டில் நீசமானதால் சில பலன்களைக் கூட்டிக் குறைத்துக் கொடுப்பார் என்று கருதப்படுகின்றது. புத்திர பிராப்திகளில் ஆரம்பத்தடைகளும் பிரீதிகள் செய்து பின் சுமுக நிலையும் சந்தானங்களுடன் விளங்க விதியும் ஏற்படும். பெண் பிள்ளைகள் பிறந்தால் பங்கமில்லை, நன்மையுண்டாம். சூரியன் சேரச் சில பலன்கள் உயர்வாகவும் சில பலன்கள் தடையாகவுமிருக்கும்.

பூர்வபுண்ணியாஸ்திகள் பூமியாயிருந்தால் அதம பலனே உண்டு. அது தன் கைக்குக் கிடைப்பதில் தடையும், அதனை முன்னிட்டுப் பலனும் குறைவாகவேயுண்டு. நீசம் பெற்ற செவ்வாயுடன் குரு உச்சமாகிக் கூடினால் யோகமும், ஏற்கனவே சந்திரன் ஆட்சியாகிச் செவ்வாயும் நீசமாயிருப்பதால் நீசபங்க ராஜயோகமும் ஏற்படும். அந்த வகையில் எதிர்பாராது தன்னுடைய சொத்துகள் தன் கைக்குக் கிடைக்குமென்று கூறப்படுகின்றது.

குலதெய்வம், தாய் போன்ற தெய்வமாகவும் சாந்த சொரூபியாகவும் இருந்தால், நற்பலன்கள் உண்டாகும். சில காலங்களுக்கு அக்குலதெய்வம் வழிபடப்படாமலும், பின்பு புத்துயிர் பெற்று விளங்கும் தன்மையுடையதாகவும் இருக்கும். அந்தத் தெய்வத்துக்குக் கீழ்ப்பந்தி தெய்வங்கள் உண்டாகும்.

தேவி உபாசனைகளும் சிவகாமி, அம்பாள் வழிபாடும் காளி தெய்வ உச்சாடனங்களும் நல்ல மேன்மையைத் தரும். முற்றிலும் தொடர முடியாவிட்டாலும், அதன் பலனை நல்லபடி அடையலாம்.

தாய்மாமன் வகையில் பலன்கள் உண்டாகும். எப்படியெனில், நீசம் பெற்ற செவ்வாயுடன் இரண்டுக்கு மேற்பட்ட நட்புக் கிரகங்கள் கூடினால் சம்பந்தமும் அவர்கள் வழி உதவியும் உண்டாகும்.

துர்பலன்களைத் தவிர்க்கத் தக்க பிரீதிகள் செய்து பலனை அனுபவிக்கும்படி கூறப்படுகின்றது.

கடக இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு 2ஆம் இடமான சிம்மத்தில் பொதுவாக நல்ல பலன்களைச் செய்வாரென்று கூறப்படுகின்றது. செவ்வாயுடன் சூரியன் ஆட்சியாகிக் கூடினால் நல்ல பலனைச் செய்வார். குருவும் கூடுவது நன்மையாகும்.

இப்படிப்பட்ட கிரக அமைப்புகளில் புத்திரத்தடையிருக்க ஆண மகவுகள் அதிகமாயிருக்கும். அவர்களால் பக்கபலமும், ஆதரவும், அனுசரணையும் உண்டாகும்.

பூர்வ புண்ணியாஸ்திகள் தன் வசமிருக்க விதியுண்டாகும். தக்க முறையில் பயன்படுத்தினால், பலனுண்டு. இல்லையேல் விரய பலனையே அடைய வேண்டி வரும். செவ்வாயுடன் சூரியன், குரு ஆகியன கூடினால் பூர்வபுண்ணியாஸ்திகளை அடைய பாக்கியமுண்டாம். சிலருக்கு அடிப்படையிலேயே இல்லாமலும் போகலாம்.

சிவாலய வழிபாடுகள், சிவசம்பத்துகள், சிவபூஜைகள் போன்றவற்றில் மனஇலயிப்பும், மெத்த பலனும் உண்டாகும். பஞ்சாட்சர பூஜைகளாலும், வில்வ அர்ச்சனைகளாலும் பயனுண்டு. தொடர்ந்து பிரீதிகள் செய்து வரப் பலனாம்.

குலதெய்வம் ஆண்தெய்வமாயிருக்குமாயின் அது வீர, தீர, பராக்கிரமங்களோடு காணப்படும். பலி, படையல் செய்யாவிட்டால் மத்திம பலனே உண்டுபண்ணும். பெண் தெய்வமாயிருந்தால் பந்தி தெய்வங்களுள் ஒன்றாய் இருக்கும்.

தாய்மாமன் வகையில் முற்றிலும் பலன் குறைவு. செவ்வாயுடன் மித்துருக்கள் சேர்ந்தார்களாயின் சம்பந்தம் செய்வதில் இடரில்லை. செவ்வாய்க்கு உரிய பிரீதிகள் மூலம் உயர் பலனை அடையலாம் எனக் கூறப்படுகின்றது.

செவ்வாயானவர் கடக இராசிக்கு 3ஆம் இடத்தில் கன்னியிலிருக்கப் புதன் சேராதிருந்தால் நன்மையான பலனே உண்டாகும். புதன் ஆட்சியுச்சமாகிச் செவ்வாயுடன் கூட முன் புத்திரத் தடைகள் ஏற்பட்டுப் பின்பு நல்ல பலனைத் தரும். பெண் பிள்ளைகளால் நல்ல பலன்கள் உண்டாகும். புத்திரத் தடையிருப்பின் குருவுக்குக் கடுமையான முறையில் பிரீதிகள் செய்யப் பலனாகும்.

பூர்வ புண்ணியாஸ்திகள் கணிசமாகத் தமக்குக் கிடைக்க விதியுண்டாகும். சுக்கிரன் நீசமாகிக் கூடினால் அதற்குத் தடையுண்டு.

பூர்வ புண்ணியாஸ்திகள் ஸ்திர சொத்தாய் இல்லாமல் அடிக்கடி கைமாறும் அமைப்பையுடையதாயிருக்கும்.

குலதெய்வம் குதிரையில் பவனிவரும் தெய்வமாய் இருப்பின் நல்ல பலன்களாகும். பிரம்மச்சரிய தேவதையாய் இருப்பின் இன்னமும் விசேஷமுண்டாகும். பந்தி தெய்வத்துக்கு மத்தியில் பலனைத் தடையில்லாமல் செய்யும். குலதெய்வத்தைக் கண்டுபிடிப்பதில் சிரமமுண்டாம்.

விஷ்ணு ஆராதனைகள், பெருமாள் தலவழிபாடுகள் போன்றவை மேன்மையைத் தரும். துளசி அர்ச்சனை, விரதங்கள், படையல்கள் ஆகியன, கிரக பலன்கள் தடையானபோது மேன்மையான - காப்பான பலனைச் செய்யும் என்று கூறப்படுகின்றது.

செவ்வாயுடன் புதன் ஆட்சியாகக் கூடியிருக்கத் தாய்மாமன் தேவையில்லாமல் ஒட்டியிருப்பார். தன் வகையில் சம்பந்தம் செய்ய முயல்வார். சுக்கிரன் நீசமாகிக் கூடினால், சம்பந்த வகையிலும் பங்கமுண்டாகும். தாய்மாமன் துன்பத்துடன் வாழ நேரும்.

செவ்வாய்க்கு எந்திர மந்திர பிரீதிகளைக் கடுமையாகச் செய்தால் மேன்மையான பலனையடையலாம் என்று நாடி நூல் வாயிலாக அறியப்படுகின்றது.

கடக இராசிக்கு 4ஆம் இடமான துலாத்தில் செவ்வாயிருக்க உங்களின் 5ஆம் பாவ வழியில் புத்திரத் தடையில்லை. பெண் பிள்ளைகள் மிகுதியாயிருக்க விதியுண்டாகும்.

அவர்களால் உதவியும் உண்டு. செவ்வாயுடன் சுக்கிரன் ஆட்சியாகிக் கூட சுக்கிர மங்கள யோகமும் அதனால் புத்திர, புத்திரி வகையில் நன்மையும் உண்டென்று கூறப்படுகின்றது.

பூர்வ புண்ணியாஸ்திகள் மனைகளாக இருக்கும். அவை ஸ்திரமாயிரா. ஆனால், அவற்றின் மூலம் கணிசமான வருவாய் கிடைக்க வழியிருக்கும். அதைப் பெறுவதில் தடையில்லை. சூரியன் செவ்வாயோடு நீசமாகிக் கூடினால் பூர்வ புண்ணிய தனங்களைப் பெறுவதில் தடையுண்டாகும்.

குலதெய்வம் சாந்தலட்சண சொரூபியாகவும் நான்கு கைகளையுடையதாயுமிருந்தால் மேன்மையுண்டாகும். கண்கள் வகையில் பிரசித்தி பெற்ற தேவதைகளாக இருந்தால் பலனுமுண்டாகும். அதற்குத் தக்க பிரீதிகளைச் [illegible]

தேவி உபாசனைகள் நல்ல பலனைத் தரும்; இடரில்லை. சூரியன் நீசமாகிக் கூடினால் உபாசனைக்கும் வழிபாட்டுக்கும் தடையுண்டாகும். கடுமையான செயல் மூலம் நல்ல பலனைப் பெறலாம். சனி உச்சனாய்க்கூட பலனுண்டு; ஆனால், மந்தமான நிலையையே உண்டு செய்யும்.

தாய்மாமன் வகையில் சம்பந்த உறவுகள் தோன்றும். சனி உச்சமாகிக் கூடினால் அயல்பந்த உறவுகளே தோன்றும். தாய்மாமன் வகையில் மனக்கிலேசம் உண்டாகும். தக்க பிரீதிகள் செய்ய மேன்மையான பலன்களுண்டாகும் என்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது.

# சிம்மம்

தேவ குருவான வியாழ பகவானை 5ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற சிம்ம இராசி அன்பர்களே!

5ஆம் பாவம் என்பது புத்திரப் பிராப்தி, தாய்மாமன், பூர்வ புண்ணியம், மந்திர சம்பந்தம், குலதெய்வம் போன்ற பலன்களைக் குறிப்பிடும். அதன்படி உங்களின் 5ஆம் இடத்ததிபதியான வியாழன், மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளிலும் ஒவ்வோர் இடங்களிலும் இருந்தால் என்னென்ன பலன்களைச் செய்வார் என்று மகரிஷி ஸ்ரீ பதஞ்சலி முனிவரின் நாடி நூல் வாயிலாக அறிந்து கூறி இருக்கின்றோம்.

தேவ குருவாகிய வியாழ பகவான் சூரிய சந்திரரோடும், செவ்வாயோடும் கூடினால் நற்பலன்களையும், மித்துரு கிரகங்களான புதன், சுக்கிரன், சனி, இராகு போன்ற கிரகங்களுடன் கூடினால் மத்திம பலன்களையும் தருவார் என்று கூறப்படுகிறது.

''புத்திரனாம் காரகனும் வேதனுமே
புகழான மதிக்குத்தான் பஞ்சமத்தில்
உத்தமமாய் யாட்சிபலன் தந்திடினும்
உம்மையாம் புத்திர யிடருமேதான்
மத்திமமாய் இடர்பின்னும் பிருதிமேலாய்
மைந்தனுக்குப் புத்திரரும் சிறக்கும்தானே
அத்தலத்தில் ஈரரவர் கூடிடினும்
அதமமேதான் பிருதிமேல் பலனுந்தானே''

குரு மகர வீட்டில் சுக்கிரனோடோ, புதனோடோ சேர்ந்திருந்தால் பாபியாவார். அதனால் பலன் குறையும். புத்திர தோஷத்தை உண்டு செய்யும். குரு பகைக் கிரகங்களுடன் சேர்ந்து தடை செய்தால் குருவுக்குத் தக்க பிரீதிகள் செய்தும், யந்திர, மந்திர பூசைகளும், தக்ஷிணாமூர்த்திக்கு அர்ச்சனையும் ஆராதனையும் செய்தால் நற்பலனை அடையலாம்.

சிம்ம இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 5ஆம் இடமான தனுசு ராசியில் ஆட்சி பெற்றிருந்தால் புத்திர சந்தான விருத்தி உண்டாகும். புத்திரர்கள் சற்புத்திரர்களாய் இருப்பார்கள். பூர்வ புண்ணியச் சொத்துகளால் நல்ல பலன்களையும் இலாபத்தையும் அடைய முடியும். நிலபுலன்களுள் காடு கழனிகள், வீடுவாசல்கள் ஆகியவையும், செல்வாக்கு, சொல்வாக்கு, தலைமைப் பதவிகள், நிருவாகத் தலைமை ஆகியனவும் அமைய விதியுண்டு. தாய்மாமன் வழியில் நல்ல முன்னேற்றம் அடைய விதி உண்டு. தாய்மாமனின் உதவியும் அவரால் நன்மையான பலன்களும் உண்டு. குலதெய்வம் சிவ கணங்களுள் ஏதாவது ஒன்றாய் இருக்கும். மந்திரங்கள் சித்தி பெற விதியுண்டு. ஒழுக்கம், ஆச்சாரம், பக்தி, சிவத்தலங்களை வணங்கிவர வாய்ப்பு ஆகியன அமைய விதியுண்டு. பல நிர்வாகங்களைச் சீர் தூக்கி நடத்தும் பொறுப்பும், பொறுமையும் இருக்க விதியுண்டு. இவருடன் சத்துரு கிரகங்கள் கூடினால் மத்திம பலன்களையும், மித்துரு கிரகங்கள் கூடினால் நல்ல பலன்களையும் செய்வார். இதற்குத் தக்ஷிணாமூர்த்திக்கு அர்ச்சனை செய்தால் நற்பலன்களை அடையலாம்.

சிம்ம இராசிக்கு ⁻ ஆம் இடத்து அதிபதி குரு இராசிக்கு 6ஆம் இடத்தில் மகர இராசியில் நீசம் பெற்றிருந்தால், புத்திர சந்தானங்களுக்குத் தடை, தோஷம் ஆகியன ஏற்படும். பூர்வ புண்ணியங்கள் உங்களுக்குக் கிடைக்கா. சொத்துகளை அனுபவிக்கத் தடை ஏற்படும். தாய்மாமன் வழியில் அனுசரணையும், உதவியும் இரா. குலதெய்வங்களின் கருணையையும், அருளையும் பெற முடியாத சூழ்நிலையில் இருப்பார்கள். மந்திரங்கள் சித்திக்கா. குலதெய்வம் குதிரைமேல் அமரக்கூடிய தெய்வமாகவும், காவல் தெய்வங்களாகவும் இருக்கும். குருவோடு செவ்வாய், சனி ஆகியன சேர்ந்தால் நல்ல பலன்களைக் கொடுப்பார்கள்; ஆனால் புதன், சுக்கிரன், இராகு கேதுக்கள் கூடினால் நல்ல பலனைக் கொடுக்கமாட்டார்கள். தலைமைப் பதவிகள் கிடைக்கா. குரு நீசமானதால் 5ஆம் பாவ பலன்கள் அனைத்துமே தடைப்படும். ''அந்தணன் கெட்டிடில் அனந்தமும் கெட்டுவிடும்'' என்பது ஜோதிடப் பழமொழி. அதனால் தக்ஷிணாமூர்த்திக்குப் பிரீதியும், குருவுக்கு யந்திர, மந்திர பிரீதியும் செய்தால் நற்பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

சிம்ம இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 7ஆம் இடத்தில் கும்பத்தில் நட்புடன் இருந்தால் புத்திர சந்தான தோஷத்தை அளிக்கும். இதற்குப் புத்திர பரிகாரம் செய்யப் புத்திர பிராப்தி உண்டு. பூர்வ புண்ணியங்களையும், சொத்துகளையும் அனுபவிக்க விதி உண்டாகும். களத்திர மேன்மையும், நற்பெயரும் உண்டாகும். தாய்மாமன் வழியில் நல்ல உதவியும், அனுகுமுறையும் உண்டாகும். குல தெய்வ அருளைப் பெறுவீர்கள். குலதெய்வம் கருப்பு, காவல் தெய்வமாகவும், குதிரை வாகனத்தின்மீது அமரும் தெய்வமாகவும் இருக்கும். மந்திரங்கள் சித்தியுறும். தலைமைப்பதவிகள், நிர்வாகி போன்ற கௌரவப்பதவிகள் போன்றவை ஏற்படும். குருவோடு சூரியன், செவ்வாய் ஆகியன கூடினால் நல்ல உத்தமமான பலன்களும், குருவோடு சுக்கிரன், புதன் போன்ற சத்துரு கிரகங்கள் கூடினால் மத்திம பலன்களையும் கொடுப்பரென்று கூறப்படுகின்றது. இதற்குத் தக்ஷிணாமூர்த்திக்குப் பூசையும், குருவுக்குப் பிரீதியும், எந்திர, மந்திர பூசைகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

சிம்ம இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி குரு இராசிக்கு 8ஆம் இடத்தில் மீன இராசியில் ஆட்சி பெற்றிருப்பதால் நல்ல பலன்களையும் அதே சமயத்தில் புத்திரதோஷத்தையும் கொடுப்பார். அதற்குப் புத்திரதோஷப் பரிகாரம் செய்தால் நல்ல புத்திரர்களைப் பெற அருள்புரிவார். தாய்மாமன் நல்ல சௌக்கியத்துடன் இருப்பார். ஆனால், அவரால் உங்களுக்கு ஓர் உதவிகூடக் கிடைக்காது. குல தெய்வத்தின் அருள் முடிந்தவரை கிடைக்கும். அதற்கு மந்திர எந்திர பூசைகள் செய்தால் குலதெய்வத்தின் அருளைப் பெற முடியும். குலதெய்வம், சைவ சமயம் ஆகியவற்றில் பற்றும் ஏற்படும். சைவ சித்தாந்தங்களில் பிரியம் உண்டு. குரு 8ஆம் இடத்தில் மறைந்திருப்பதால் மத்திமமான பலன்களைச் செய்வார். இவரோடு சுக்கிரன், புதன் போன்ற கிரகங்கள் சேர்ந்தால் நீசபங்க ராஜயோகத்தைக் கொடுப்பார். வாழ்க்கையின் பிற்பகுதியில் அந்தந்த திசாபுத்தியில் செவ்வாய், சூரியன் ஆகிய இவர்களோடு சேர்ந்தால் நற்பலன்களைக் கொடுப்பார். தக்ஷிணாமூர்த்திக்குப் பூசையும் குருவுக்கு எந்திர, மந்திரப் பிரீதிகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம் என்று சந்திரநாடியில் கூறப்படுகின்றது.

சிம்ம இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 9ஆம் இடமான மேஷத்தில் பகை பெற்று அமர்ந்திருப்பதால் மத்திம பலன்களைச் செய்வார். புத்திரர்கள் சற்புத்திரர்களாய் இருப்பார்கள். புத்திர விருத்தியும், புத்திரர்களினால் மகிழ்ச்சியும், சௌகரியமும் பிதுர் பாக்கியங்களை

அனுபவிக்க விதியும் உண்டு. அதிகாரப் பதவியும் அந்தஸ்தும் கிடைக்கும். சாஸ்திரங்களை நீதியுடன் கடைப்பிடிப்பவராகவும் இருப்பார். குலதெய்வங்கள் உக்கிரமான தெய்வங்களாய் இருக்கும். குலதெய்வ அருளைப் பெற்றவர்களாய் இருப்பார்கள். தாய்மாமனுக்கு நல்ல தேக சௌக்கியம் உண்டு. இவருடன் செவ்வாய் சேர்ந்தால் புத்திரரால் பேரும் புகழும் கிடைக்க விதியுண்டு. பாவ, சத்துருக் கிரகங்களுடன் சேர்ந்தால் மத்திமமான பலன்கள் கிடைக்குமென்று சந்திரநாடி கூறுகிறது. மந்திரங்கள் சித்திக்க விதியுண்டு. சுக்கிரன், சனி போன்ற கிரகங்கள் சேர்ந்தால் மந்த புத்தியுள்ள புத்திரர்கள் தோன்றுவார்கள். இதற்குக் குருவுக்கு யந்திர மந்திரப் பிரீதியும் தக்ஷிணாமூர்த்தி தேவருக்கு அர்ச்சனையும் செய்ய நற்பலன்கள் அடைய விதியுண்டு என்று சந்திரநாடி கூறுகிறது.

சிம்ம இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 10ஆம் இடத்தில் ரிஷப ராசியில் நட்புடன் அமர்ந்திருந்தால், புத்திர சந்தான விருத்தி ஏற்படும். பூர்வ புண்ணியங்களையும், அவற்றைச் சார்ந்த சொத்து, சுகம் ஆகியவற்றையும் அனுபவிக்க யோகமும் விதியும் உண்டு. தாய்மாமன் நல்ல சௌக்கியத்துடன் வாழ்வார். குல தெய்வம், பெண் தெய்வங்கள் ஆகியவற்றின் அருளும் ஆசியும் ஏற்படும். சக்தியம்சம் கொண்ட பெண்தெய்வம் குல தெய்வமாக இருக்கும். மந்திரங்கள் சித்தி பெறும் யோகமுண்டு. அஷ்டகர்மச் சித்திகளும் ஏற்பட விதியுண்டு. அரசாங்கத்தில் உயர் பதவிகளையும், கௌரவம், அந்தஸ்து முதலியவற்றையும் பெறுவார்கள். தெய்விக வழிபாடுகள் நிறைந்தவர்களாகவும் இருப்பார்கள். இவருடன் சுக்கிரன், செவ்வாய் போன்ற கிரகங்கள் சேர்ந்தால், நல்ல பலன்களையும், குருவுடன் புதன், இராகு, கேது ஆகியன சேர்ந்தால் மத்திம பலன்களையும் கொடுப்பர். மிகவும் சந்தோஷமான வாழ்க்கை வாழ்வார்கள். குருவுடன் இராகு, கேது சேர்ந்தால் புத்திரதோஷத்தை ஏற்படுத்துவார்கள். இதற்குத் தக்ஷிணாமூர்த்திக்கு அர்ச்சனையும், குருவுக்கு யந்திர மந்திர பிரீதிகளும் செய்வதன் மூலம் நல்ல இலாபமான பலன்களைப் பெறலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

சிம்ம இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 11ஆம் இடமான மிதுனத்தில் நட்புடன் அமர்ந்திருந்தால், புத்திர பிராப்தியும் புத்திர விருத்தியும் புத்திரர்களால் சந்தோஷமும் மகிழ்ச்சியும் உண்டாகும். அமைதியான குடும்பத்தை உடையவர்களாய் இருப்பார்கள். பெரிய மனிதர்களின் நட்பும் ஆதரவும் இருக்கும். மூத்த சகோதரர்களால் இலாபமான பலனுண்டு. குலதெய்வம் பெண் தெய்வமாய் இருக்கும். வைணவ சம்பிரதாய தெய்வமாய் இருக்க விதியுண்டு. தாய்மாமன்

வழியினால் நல்ல இலாபங்களையும், நன்மைகளையும் பெற விதியுண்டு. மந்திரங்கள் சித்தி பெற விதியுண்டு. அரசாங்கத்தில் உயர் பதவிகள், கௌரவம், அந்தஸ்து போன்றவற்றை அனுபவிக்க விதியுண்டு. புதனுடன் குரு சேர்ந்தால் நன்மையான பலன்களையும் குருவுடன் செவ்வாய் சேர்ந்தால் மத்திமமான பலன்களையும் இராகுகேதுக்கள் குருவுடன் சேர்ந்தால் மோசமான பலன்களையும் கொடுப்பார்கள் என்று கூறுகிறது சந்திரநாடி. இதற்குக் குருவுக்கு எந்திர மந்திர பிரீதிகளும் தக்ஷிணாமூர்த்தி தேவருக்கு அர்ச்சனையும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம் என்று ஸ்ரீபதஞ்சலி மகரிஷி கூறுகிறார்.

சிம்ம இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 12ஆம் இடத்தில் கடக இராசியில் உச்சம் பெற்று மறைந்திருந்தால், புத்திர சந்தானத்துக்குத் தடை ஏற்படும். பாத சாரத்தில் சுபர் சாரத்தில் இருந்தால் நல்ல பலனைக் கொடுப்பார் என்று கூறுகிறார், மகரிஷி. இதற்குப் புத்திர தோஷ நிவர்த்தி செய்தால் புத்திரர் உண்டு. தாய்மாமன் வழியில் உதவியோ, நன்மைகளோ கிடைக்கா. பண விரயங்களும் நஷ்டமும் உண்டு. குலதெய்வம் பெண் தெய்வமாய் இருக்க விதியுண்டு. குலதெய்வ அருளும் பூரணமாகக் கிடைக்கவிடாமற் செய்யும். அந்தஸ்து, கௌரவம் போன்றவற்றிற்குப் பங்கம் வரும். குருவுடன் செவ்வாய் நீசமானால் குரு உச்சம் பெற்றிருப்பதால் சுமாரான பலன்களையும் கொடுப்பார். மந்திரங்கள் சித்திபெறக் குருவுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் பூசைகளும், குருவுக்குக் காரகமான தக்ஷிணாமூர்த்திக்குப் பூசையும் அர்ச்சனையும் செய்ய நற்பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

சிம்ம இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி குரு, இராசியிலேயே இருந்தால் நல்ல பலன்கள் உண்டு. புத்திர பாக்கியம் உண்டு. புத்திரர்களால் குறிப்பாகப் பிரபுத்துவமும், தாய்மாமன் வழியில் நற்பெயரும், நல்ல வருமானமும் உண்டு. குலதெய்வம் உக்கிர தெய்வமாய் இருக்க விதியுண்டு. சைவ சமயங்களில் பற்றுள்ளவராகவும் சத்க்ஷேத்திரங்களுக்குச்சென்று மதங்களைப் பரப்பும் குணம் உடையவர்களாகவும் இருப்பீர்கள். குரு, இராசிக்கு 10ஆம் இடத்துக்குக் காரனான சுக்கிரனுடன் சேர்ந்திருந்தால் மத்திம பலனைக் கொடுப்பார். இதற்குப் பரிகாரம் செய்தால், புத்திர பிராப்திகள் உண்டு. இராசியிலேயே இருப்பின் தலைமைப் பதவிகள் கிட்டும். அரசாங்க உயர் பதவிகளினால் நல்ல யோகமும் உண்டு. மந்திரங்கள் சித்தி பெற மார்க்கமுண்டு. பிரபுத்துவமும், அதிகார அந்தஸ்துள்ள பதவிகளும் ஆன்மிக நாட்டங்களும் ஏற்பட விதியுண்டு. சத்துரு கிரகங்களான புதன் சுக்கிரன் ஆகியவற்றுடன்

சேர்ந்தால் மத்திம பலன்களைக் கொடுப்பார். இதற்குத் தக்ஷிணாமூர்த்திக்குப் பூசையும், குருவுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் உத்தமமான பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

சிம்ம இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியாகிய குரு இராசிக்கு 2ஆம் இடத்தில் நட்புப் பெற்று அமர்ந்திருப்பதால், புத்திரர்களால் பணச்சேர்க்கையும் சந்தோஷமும் குடும்பத்தில் உண்டாகும். தாய்மாமன் வழியில் நல்ல முன்னேற்ற பலன்களைக்கொண்டு நல்ல வருவாயை பெருக்கி வாழ்பவராக இருப்பார். குலதெய்வம் பெண் கிரகங்களாக இருப்பின் நல்ல சூழ்நிலையில் இருப்பார். குருவுடன், செவ்வாய், சூரியன் ஆகியன சேர்ந்தால் நல்ல பலன்கள் அவ்வளவாய் இருக்க முடியாது. தலைமைப் பதவிகளை அனுபவிப்பவராக இருக்கக்கூடும். கௌரவப் பிரச்சினைகள் அதிகமாகி 5ஆம் பாவபலன்களைக் கெடுத்துவிடும். புதன், சுக்கிரன் ஆகியவற்றுடன் சேர்வதால் நீசபங்க ராஜயோகம் ஏற்பட்டு நல்ல இலாபம் கிடைக்கும் என்று சந்திரநாடி கூறுகிறது. தக்ஷிணாமூர்த்திக்கு அர்ச்சனையும், ஆராதனையும் செய்வதால் நன்மையான பலன்களைப் பெறலாம் என்று சந்திரநாடி கூறுகிறது.

சிம்ம இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 3ஆம் இடத்தில் துலாத்தில் நட்புடன் அமர்ந்திருப்பதால் மத்திம பலனே நடக்கும். புத்திர சந்தான தோஷங்களை உடையவராய் இருப்பார். தெய்விக வழியில் பற்றுக்கொண்டவராகவும் தெய்வபக்தி உடையவராகவும் இருப்பார். இளைய சகோதர மேன்மையுண்டு. மக்களால் நன்மையிராது. தாய்மாமன் வழியில் ஆதரவும் நன்மையும் இரா. குலதெய்வம் பெண் தெய்வமாய் இருக்க விதியுண்டு. சக்தியமிசம் கொண்ட தெய்வமாய் இருக்கும். மந்திரங்கள் சித்தி பெறாத நிலையை ஏற்படுத்தும். குருவுடன் சுக்கிரன், சனி ஆகியன சேர்ந்தால் பகைக் கிரகங்களால் மத்திம பலனே ஏற்படும். உச்சக் கிரகங்கள் கூடினால் நன்மையான பதவியையும், அந்தஸ்தையும் கொடுக்க விதியுண்டு. எந்திர மந்திர பிரீதிகள் செய்வதன் மூலமும் தக்ஷிணாமூர்த்தி தேவருக்குப் பூசைகள் செய்வதன் மூலமும் நற்பலன்களைப் பெறலாம்.

சிம்ம இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி குரு இராசிக்கு 4ஆம் இடத்தில் விருச்சிகத்திலிருந்தால் மத்திம பலன்களே வாய்க்கும். புத்திர விருத்தியும் புத்திர சுகமும் உண்டு. குடும்பத்தைக் கௌரவத்துடன் நடத்துபவர்களாகவும் வண்டி, வாகன சுகம், சௌக்கியம், ஆயுள், சம்பத்து ஆகியவற்றை நிறையப் பெற்றவர்களாகவும் இருப்பார்கள். பூர்வ புண்ணியச் சொத்துகள் வீடு, நிலபுலன், பூமி, வண்டி, வாகனங்களுள்

அலங்கார வாகனம் போன்றவற்றை அனுபவிக்கும் விதி உண்டாம். குல தெய்வம் ஆண் தெய்வமாகவும், உக்கிரமுடன், அக்னி, ஆயுதம் ஆகியன ஏந்திக் கோபமாய்க் காட்சியளிக்கும் தெய்வமாயும் இருக்கும். மந்திரங்கள் சித்தி பெறும். அரசாங்கத்தில் பெரிய உயர்பதவிகள், நற்பெயர், நற்கீர்த்தி ஆகியவற்றைப் பெற்றவர்களாய் இருப்பார்கள். செவ்வாய் ஆட்சி பெற்றுக் கூடினால் நல்ல பலன்கள் உண்டாகும். சுக்கிரன், புதன், இராகு, கேது ஆகியன கூடினால் நல்ல பலன்களைக் கொடுக்க மாட்டார்கள் என்று சந்திரநாடி கூறுகிறது. இதற்குக் குருவுக்கு எந்திர, மந்திர பிரீதிகளும் தக்ஷிணாமூர்த்திக்கு அர்ச்சனையும் செய்ய உத்தமமான பலன்கள் கிடைக்கும் என்று கூறப்படுகிறது.

# கன்னி

5ஆம் இடத்ததிபதியாக சனீஸ்வர பகவானைப் பெற்ற கன்னி இராசி அன்பர்களே!

5ஆம் பாவமென்பது புத்திரர்கள், குலதெய்வம், தாய்மாமன், மந்திர சம்பந்தங்கள், உபாசனைகள் போன்ற பலன்களைப்பற்றிக் குறிப்பிடும்.

மகரிஷி பதஞ்சலி மகாமுனிவரின் நூல்படி உங்கள் இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சனி, மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளிலும் ஒவ்வோர் இடங்களிலும் இருந்தால் 5ஆம் பாவ பலன்களை எப்படிச் செய்வார் என்று கூறப்பட்டுள்ளது. அன்பர்கள் உங்கள் இராசிக்குச் சனி எத்தனையாவது இடத்தில் உள்ளார் என்பதையறிந்து தங்களின் 5ஆம் பாவ பலனைக் கண்டுகொள்ளும்படி கேட்டுக்கொள்ளப்படுகின்றார்கள். சனியானவர் துர்க்கிரகங்களுடன் கூடிச் சில அதம பலனைச் செய்வாராயின் கிரகப் பிரீதிகளைச் செய்து அதம பலனைத் தவிர்க்கவும்.

''பாரப்பா என்மகனே ஞான தண்டி!
பகரமேல் மதிக்குத்தான் பஞ்சமனாய்
தேரவொண்ணா முடகாரி தானிருக்கத்
தலமென்றே யட்டவியம் பாபரொடு
காரணமாய்க் காரியவர் கூடிடினும்
குமரருக்குக் குழவியதும் தள்ளிச்செல்லும்
மாரகமாய்ச் சிதைவுசில காட்டிப் பின்னும்
மைந்தருமே தேர்வுடனே தொடர்வார்தானே.''

தாளேதான் பூர்வமென்ன புண்ணியங்கள்
தனயனுக்குப் பிறபலனாய்க் கிட்டிகிட்டா
வீணேதான் பிருதியது மில்லையென்றால்
வையகத்தில் அத்துணையும் வீணாய்ப் போச்சே''

இவ்வாறு சனியானவர் 8,12 என்ற மறைவிடங்களில் பாபர்களுடன் கூடி நின்றால் 5ஆம் பாவ பலன்கள் மத்திமமாய் உண்டாகுமென்று கூறப்படுகின்றது. அதன்படி கன்னி இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சனி இராசிக்கு 5ஆம் இடமான மகரத்திலேயே ஆட்சியாயிருக்கக் குருவானவர் நீசமாகிக் கூடினால் மகவுப் பலன்கள் குறையும். கர்ப்பச் சிதைவுகளும், பிரசவ இடரும் உண்டாம். பிரீதிகள் மேல் நலம் உண்டென்று கூறப்படுகின்றது. பெண் பிள்ளைகளால் தொந்தரவும் துயரமுமுண்டாகும். சனி தனித்திருந்தாலும் செவ்வாயுடன் உச்சமாகிக் கூடினாலும் 5ஆம் பாவ பலன்களை முரண்பாடாகவே செய்வார். புத்திரசோகம் உண்டென்று ரிஷிநூல்கள் கூறுகின்றன. பிரீதிகள் செய்ய நல்ல பலனையடையலாம்.

பூர்வ புண்ணியாஸ்திகள் இருந்தால் உரிய நேரத்தில் பலனைக் கொடுக்காது. சனியானவர் புதன், சுக்கிரன் போன்ற மித்துரு கிரகங்களுடன் கூடினால் பூர்வபுண்ணிய பலன்களைச் செய்வார்.செவ்வாய் உச்சமாகிச் சேர்ந்தால் உள்ளதுவும் போகும் நிலையுண்டாகும். சனி தன் மித்துருக்களோடு கூடினால் நன்மையுண்டாகும்.

குலதெய்வம் பெண் தெய்வமாயிருந்தாலும், ஆண் தெய்வத்துள் பிரமச்சரிய தேவர்களாய் இருந்தாலும் நன்மையான பலன்கள் உண்டாம். ஆனாலும், மந்தமான மத்திமமான பலன்களையே செய்யும். விடாமல் வருட வழிபாடு நடத்தினால் உயர்வுண்டு. சனியுடன் குரு நீசமடைந்து கூடினால் யோகமுண்டு. ஆனால் குலதெய்வ பலன் குறைவாகவே இருக்குமென்றும் கூறப்படுகின்றது.

தாய்மாமன் வகையில் பலன்கள் மத்திமமாகவேயுண்டு. சம்பந்தத் தொடர்புகள் குறைவாகவே இருக்கும். சனியுடன் புதன் கூடினால் தாய்மாமன் வகையில் தொடர்புண்டாகும்.

சனி தனித்திருந்தாலும், சத்துரு கிரகத்துடன் கூடி துர்பலன்களைச் செய்தாலும் சனி பிரீதிகள் செய்யவும். ஐந்தாமிடத்தில் இராகுகேதுக்கள் இருந்து துர்பலன்கள் செய்தால் இராகு கேதுகளுக்குப் பிரீதிகள் செய்து பலனை தக்க வைக்க வேண்டும் என்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது.

கன்னி இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சனி இராசிக்கு 6ஆம் இடமான கும்பத்தில் ஆட்சியுடனிருந்தாலும் 5ஆம் பாவ வழியில் மத்திமபலனேயுண்டாகும். புத்திர பிராப்திகள் தடைப்படும். அல்லது மந்தமான நிலைகளை உண்டு செய்யும். 6ஆம் இடத்தில் சனியுடன் சூரியன், செவ்வாய் போன்ற கிரகங்கள் கூடினால் புத்திரசோகம் ஏற்படுமென்றும், புத்திரன் தனக்கெதிரான மந்த செயலைச் செய்வானென்றும் கூறப்படுகின்றது. தக்க பிரீதிகள் செய்ய நல்ல பலனை அடையலாமென்று கூறப்படுகின்றது.

பூர்வ புண்ணியங்கள் ஸ்திரமாயிருந்தாலும் சனியுடன் பகை கிரகங்கள் கூடினாலும் பூர்வ புண்ணிய பலன்கள் தடைப்படும். அல்லது கிடைக்காமலே போக விதியுண்டாம். சனிக்குத் தக்க பிரீதிகள் செய்ய உயர்பலன்கள் உண்டாகலாம்.

குலதெய்வத்தைக் தேடிக் கண்டுபிடிக்க வேண்டியதாயிருக்கும். அதனால் முன் சாபங்களும், பின்பலன்களும் உண்டாகுமென்று நாடிநூல்கள் கூறுகின்றன. குதிரைமீது பவனி வரும் தெய்வமாய் இருந்தால் மேன்மையான பலனைச் செய்யும்; சனியுடன் சேய் கூடினால் குல தெய்வ பலன்கள் குறைவாகும்.

ஆச்சார அனுட்டானங்கள் குறைவுபடும். வழிபாடு குறையும். வாழ்வில் முற்பகுதியில் நாத்திகராகவும் துஷ்டபலன்களுக்குப் பின் ஆத்திகராகவும் மாற விதி ஏற்படும். பிரம்மச்சரிய தேவர்கள் வழிபாடுகளும், சிவ வழிபாடுகளும் மேன்மையைத் தரும்.

தாய்மாமன் வழியில் பலன் குறைவாகும். தன்னிடம் வில்லங்க விவகாரமாகவே இருப்பார்கள். சம்பந்தம் செய்ய விதி குறைவாகக் காணப்படும். தாய்மாமன் வழியில் மத்திம பலனேயுண்டாகும். சனி துஷ்ட சேர்க்கையினால் துர்பலன்கள் உண்டானால் உரிய பிரீதிகள் மூலம் தடையை நீக்கி பலனைப் பெறவும்.

கன்னி இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சனி இராசிக்கு 7ஆம் இடமான மீனத்தில் இருக்க மகவு வகையில் இடரில்லை. குருவும் சனியோடு சேர்ந்திருக்க நன்மையுண்டாகும். ஆண் புத்திரர்களால் நன்மையான பலன்கள் உண்டாகும்.

பூர்வ புண்ணிய ஆஸ்திகள் கைமாற விதியுண்டாகும். சனியுடன் செவ்வாய் கூடினால் மத்திம பலனேயாகும். பூர்வ புண்ணிய பூமிகள் தமக்குக் கிடைக்காமல் போகும். சனியோடு சுக்கிரன் உச்சமாகிக் கூடினால் அதன் பலனை அனுபவிக்கலாம்.

குலதெய்வம் ஆண் தெய்வமாயிருக்க நன்மையான பலனுண்டு. சாந்த இலட்சண சொரூபனாக இருக்கும் அமிசம் உண்டாகில் மந்தமான பலன்களையும், உச்சாடன வழிபாடு நடத்தத் தன் பலன்களையும் விசேஷமாகக் கொடுப்பார். சனி பகவானுடன் சத்துருக்கள் கூடாமல், குருவோ சுக்கிரனோ கூடினால் சிவவழிபாடுகள் மேன்மையைத் தரும். இலட்சுமி உபாசனைகளும் உண்டாகும். தொடர்ந்து வழிபாடுகள் செய்தால் அதன் வழிப் பலன்களையடையலாம்.

தாய்மாமன் வகையில் தொடர்புகள் இருந்தாலும், சனியோடு புதன் சேர்ந்து நீசமாகிக் கூடினால், தாய்மாமன் வகையில் சம்பந்த உறவுகள் தடையாகும். மனக்கிலேசமும் உண்டாகும். சனி தனித்திருந்தாலும் தன் மித்துருக்களோடு சேர்ந்திருந்தாலும் சில நன்மையான பலன்களைச் செய்வார். பகைக் கிரகங்களுடனும் செவ்வாயுடனும் கூடினாலே இருந்த வீட்டையும் அந்த பாவ பலனையும் கெடுப்பார்கள். பிரீதி செய்ய நற்பலனாம்.

கன்னி இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சனி இராசிக்கு 8ஆம் இடமான மேஷத்தில் நீசமானால் அதம பலனுண்டு. சூரியனும் செவ்வாயும் கூடினால் இன்னும் மோசமான பலன்கள் உண்டாகுமென்று கூறப்படுகின்றது. புத்திரவகையில் கடுமையான இடர்களும், புத்திர சோகங்களும் உண்டாகும். கடுமையான பிரீதிகள் மூலம் மகவினைப் பெறலாம். ஆண் புத்திரர்களினால் அவயோகத்தையடைய விதியுண்டு.

பூர்வபுண்ணியம் இருந்தாலும் பலன் குறைவாகவே உண்டாகும். சனியோடு செவ்வாய் கூடினால், கைக்கே கிடைக்காத நிலைகளையும் வில்லங்க விவகாரத்தையும் உண்டு செய்யும். சனி தனித்திருக்க நன்மையுண்டு. செவ்வாய் கூடி நீச பங்க இராஜயோகம் இருந்தாலும் அல்லது சூரியன் உச்சமாகிக் கூடி இராஜயோகத்தை உண்டு செய்தாலும் பெரும்பாலும் அந்த பாவ வழியில் அவயோகமேயுண்டாம்.

குல தெய்வம் ஆண் தெய்வமாயிருந்தால் உக்கிரமாகவும், பலி வாங்கும் தெய்வமாகவும் இருக்கும். வழிபாடு சரியான முறையில் செய்தால் தப்பலாம்; இல்லையேல் துஷ்ட பலனைக் கொடுக்கும். கடுமையான பிரீதிகளைச் செய்யவும்.

மந்திர சம்பந்தங்களில் ஈடுபாடு இருந்தாலும், அதனை முறையாகச் செய்வதில் கவனமின்மையும், மந்தமான குணமும் உண்டாகும். சுப்பிரமணியர் ஆராதனைகளும் ஈஸ்வர வழிபாடுகளும் மேன்மையைத் தரும்.

தாய்மாமன் வழியில் மத்திம பலனுண்டாகும். சம்பந்த நிலைகளில் இடருண்டு. சனி நீசமாகிச் சூரியன், செவ்வாய் சேர்ந்தால் 5ஆம் பாவ வழியில் அவயோகமே உண்டாகும். ஸ்தான பலனையும் கெடுக்கும். சனிக்குக் கடுமையான பிரீதிகள் மூலம் நல்ல பலனையடையாலாமென்று கூறப்படுகின்றது.

கன்னி இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சனி இராசிக்கு 9ஆம் இடமான ரிஷபத்தில் இருக்கப் புத்திர சந்தானங்களுக்குக் குறைவில்லை. பெண் மகவு அதிகமாயிருக்க விதியுண்டாகும். அவர்களால் நல்ல நன்மையுண்டு. சனியுடன் சுக்கிரன், புதன் சூரியன் கூடினால் நன்மையுண்டாகும்.

பூர்வ புண்ணியங்கள் தன் தகப்பனாரின் கைக்குள்ளேயே இருக்கும். தன் முதுமை வயதில் அவை கிட்ட விதிகள் உண்டாகும். சனியுடன் சுக்கிரனும் புதனும் கூடினும் நன்மையுண்டு. பூர்வ புண்ணியத்தினால் பாதக பலன்கள் குறையும்.

குலதெய்வம் பெண் தெய்வமாயிருக்க நன்மையுண்டு. சாந்த இலட்சண சொரூபியாகவும், பரிமள, தூபதீப பிரியமுள்ளதாகவும் இருக்கும்.தொடர்ந்த வழிபாடுகளில் நன்மையுண்டாகும். தேவதா சித்திகளும் ஏற்படும். சனியுடன் இராகு, கேதுக்கள் கூடினால் குலதெய்வத்திற்கு நாகங்கள் பிரதானமாயிருக்கும்.

இலட்சுமி உபாசனைகளும், மன்மத உபாசனைகளும், உச்சிஷ்ட தேவர்கள் உபாசனைகளும் உண்டாகும். என்றாலும், கடின முயற்சிக்குப் பின்பே சித்திகள் உண்டாகும். பெண் தெய்வ உபாசனைகளில் நல்ல பலன்கள் உண்டாகும்.

தாய்மாமன் வழியில் சம்பந்த பலன்கள் உண்டாகும். சனியுடன் சுக்கிரனோ, புதனோ கூடினால் தாய்மாமன் அனுசரணையும், ஆதரவும் உண்டாகும். சனி துர்பலன்களைத் துர்கிரகத்துடன் சேர்ந்து கொடுக்க நேர்ந்தால் பிரீதிகள் செய்து நல்ல பலனையடையவும்.

கன்னி இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சனி இராசிக்கு 10ஆம் இடமான மிதுனத்தில் இருக்கப் புத்திர செல்வங்கள், சந்தானங்கள் உண்டாகும். பெண் பிள்ளைகளால் அதிக பலனுண்டு. கர்மத்திற்குப் புதல்வர்களும் உண்டு. அவர்கள் தன் தொழிலைப் பின்தொடர்ந்து வரும் நிலையுண்டு.

பூர்வ புண்ணியாஸ்திகளைப் பெறலாம். சனியுடன் செவ்வாய் கூடாதிருந்தால் பூர்வ புண்ணிய பலனை முழுமையாகப் பெறலாம். மனைகளாகவோ, விவசாய நிலங்களாகவோ இருந்தால் தன் கைக்குள்

வர நெடுநாளாகும். சனி தன் மித்துருக்களுடன் கூடினால் பூர்வ புண்ணிய பலன்கள் உண்டாகும்.

குல தெய்வம் சர்ப்பம் தாங்கிய பெண் தெய்வமாய் இருக்க நற்பலன்கள் உண்டு. அதனால் சித்திகளையும் உயர் பலன்களையும் அடைய பிராப்தி ஏற்படும். தொடர்ந்து விசேஷ கால வழிபாடுகள் நடத்தக் குல தெய்வ பலன்கள் நல்லபடியாகக் கிடைக்கும் என்று அறியப்படுகின்றது.

சனியோடு புதன் ஆட்சியாகிக் கூடினால் தாய்மாமன் வகையில் சம்பந்தத் தொடர்புண்டாகும். தொழில்முறையில் உதவிகளும் உண்டாகும். சத்துருக்கள் சனியுடன் கூடினால் சில இடர்கள் உண்டாகும்.

விஷ்ணு ஆராதனைகளும், துளசி அர்ச்சனைகளும், பெருமாள் ஆலய வழிபாடுகளும், சேவைகளும் செய்ய மேன்மையுண்டு. அவற்றைத் தொடர்ந்து செய்தால் நல்ல சித்தியுண்டாகும். சனிக்குப் பிரீதிகளும், யந்திர, மந்திர பிரீதிகளும் செய்ய நல்ல பலனுண்டு என்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது.

கன்னி இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சனி இராசிக்கு 11ஆம் இடமான கடகத்தில் இருக்க மத்திமமான பலனுண்டாம். சனியுடன் சூரியன், செவ்வாய் போன்ற சத்துரு கிரகங்கள் கூடினால் மத்திமமான பலனுண்டாகும். புத்திரத்தடைகள் வந்து, பின்பு விலகும். பெண் பிள்ளைகளால் மேன்மையும் இலாபமும் உண்டாகும். அது போல், சில அபகீர்த்திகளைச் சந்திக்க வேண்டியதும் வரும். சனிக்குக் கடுமையான பிரீதிகள் மூலம் புத்திர நற்பலன்களை அடையலாம்.

பூர்வ புண்ணியச் சொத்துகள் இருந்தாலும் அவை இலாபகரமானதாய் இருக்கும் என்று கூற முடியாது. சனியுடன் குரு உச்சமாகிக் கூடினாலும், புதன், சுக்கிரன் போன்ற மித்துரு கிரகங்கள் கூடினாலும் பூர்வபுண்ணிய பலன்களையடையலாம் என்று கூறப்படுகின்றது.

குல தெய்வமானது பெண் தெய்வமாயிருக்குமானால், அது சாந்த இலட்சண சொரூபியாகவும், சதுர் புஜங்களைக் கொண்டதாகவும் இருக்கும். செவ்வாய் நீசமாகி இருந்தால் உக்கிரம் குறைந்திருக்கும். குல தெய்வ வழியில் மத்திமமான பலன்கள் ஏற்படும். தொடர்ந்த பிரீதிகள் மூலம் உயர்வான பலன்களையடையலாமென்று கூறப்படுகின்றது.

தேவி உபாசனைகளும், புவனேஸ்வரி, பார்வதி சிவகாமியம்பாள் உபாசனைகளும் உண்டாகும். சித்திகளை அடைவதற்குக் காலதாமதம் உண்டாகும். சனியுடன் மித்துரு கிரகங்கள் கூடினால் சித்தியுண்டாகி இலாபமுண்டாகும்.

தாய்மாமன் வகையில் குறைந்த பலனேயுண்டு. நிர்ப்பந்த நிலைகளால் சம்பந்த உறவுகள் தோன்றும். சனி புதனுடன் கூடினால் அதற்கு விதியுண்டாகும். இவர்களுடன் செவ்வாயோ, இராகு கேதுகளோ கூடினால் மத்திம பலனே உண்டாகும். சனிக்குத் தக்க பிரீதிகள் செய்வதன் மூலம் உயர்பலன்கள் உண்டாகுமென்று அறியப்படுகின்றது.

கன்னி இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சனி பகவான் இராசிக்கு 12ஆம் இடமான சிம்மத்தில் இருக்க மத்திம பலனேயுண்டு. புத்திரயிடர்களுக்குப் பின் ஆண் ஜெனனமும் உண்டென்று கூறப்படுகின்றது. சனிக்கும் குருவுக்கும் பிரீதிகள் செய்யச் சந்தான பாக்கியம் உண்டாகும். புத்திரர்கள் தனக்கு முரனாக நடக்க விதிகள் உண்டாகும்.

பூர்வபுண்ணிய பலன்கள் மத்திமமாக உண்டாம். விரய பலனே அதிகம் உண்டு. அதனை முழுமையாக அடையும் பாக்கியம் குறைவாகவேயிருக்கும். சனியுடன் மித்துருக்கள் சேர்ந்தால் மட்டுமே உயர்வுண்டு.

குல தெய்வமானது ஆண் தெய்வமாயிருக்க முன்பலன்கள் குறைவு; பிற்பலன்கள் அதிகமுண்டாகும். சனியுடன் சூரியன், செவ்வாய் போன்ற கிரகங்கள் கூடக் குலதெய்வ வகையிலுமே மத்திம பலன்களை ஏற்படுத்தும். முறைப்படி படையல்கள், பூசைகள் ஆகியன செய்தால் பலனை அடையலாம்.

தாய்மாமன் வகையில் பலன் குறைவாகும். சம்பந்த உறவுகளும் குறைந்து மத்திமமாகவே அமையும். அவற்றால் விரயமே உண்டாகும்.

சிவ வழிபாடு, லிங்க வழிபாடு, சிவகணங்கள் தேவர்கள் வழிபாடு ஆகியன செய்வதாலும் பொங்கல், படையல், வில்வார்ச்சனைகள் போன்றவை செய்வதாலும், சிவானந்த தோத்திரங்கள் ஜெபிப்பதாலும் நல்ல பலனையடையலாம்.

சூரியன், செவ்வாய் போன்ற சத்துருக்களோடு சனி கூடினால் மிகவும் மத்திமம பலனேயுண்டு. இராசிக்கு 12ஆம் இடத்தில் மறைந்த பலனையும் செய்வார்.

சனி பிரீதிகளாலும், ஈஸ்வர வழிபாடுகளாலும் உயர் பலன்களை அடையலாமென்று கூறப்படுகின்றது.

கன்னி இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சனி கன்னி இராசியிலே அமர்ந்தால் சில நல்ல பலன்கள் 5ஆம் பாவ வழியில் உண்டாகும். பெண் பிள்ளைகளால் நன்மையும், மேன்மையும் உண்டாகும். சனியுடன்

செவ்வாயும் சூரியனும் சேர்ந்தால் பலனைக் கெடுப்பர். புத்திரத் தடையில்லை. இருப்பினும், புத்திரர் வழியில் தொல்லையுண்டு.

பூர்வ புண்ணிய ஸ்தானாதிபதி சனியுடன் இரண்டுக்கு மேற்பட்ட சுபகிரகங்கள் கூடினால் இளவயதிலேயே பெரும் பாக்கியங்கள் உண்டாகும்: சத்ருக்கள் கூடினால் மத்திமமான பலன்களே உண்டெனப்படுகின்றது.

குல தெய்வம் பெண் தெய்வமாயிருந்தால் நல்ல பலனுண்டு. நாகங்களைத் தாங்கிய தெய்வங்களால் உயர்வான ஆற்றல்களைப் பெறும் பலன்களும் ஏற்படும். படையல்கள் மூலமும் பலி கொடுத்தல் மூலமும் உயர்வான பலனையடையலாம்.

விஷ்ணு ஆராதனைகளும், சுதர்ஸன பூஜைகளும் எந்திர, மந்திர பூஜைகளும் செய்தால் மந்திர சித்திகளையும் பூஜை பலன்களையும் அடையலாம். புதன் கிழமை விரதம் நல்லது.

தாய்மாமன் வகையில் நல்ல பலன்களிருக்கச் சனியுடன் புதன் ஆட்சியுச்சமாகிச் சேர்ந்தால் சம்பந்த உறவுகளும், அவர்களால் உதவியும் உண்டெனப்படுகின்றது.

சனி தன் உறவுக்கிரகமான சுக்கிரனுடன் சேர்ந்தால் மத்திமப் பலனாகும்; புதனோடும் வேறு நட்புக் கிரகத்தோடும் சேர 5ஆம் பாவம் மேன்மையான பலனைக் கொடுக்கும். துர்பலனை அகற்றச் சனிக்கு யந்திர, மந்திர பிரீதிகளைச் செய்ய நன்மையுண்டாகும்.

கன்னி இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சனி இராசிக்கு 2ஆம் இடமான துலாத்தில் உச்சம் பெற்றால் மகவுப் பாக்கியங்கள் உண்டாகும். பெண் பிள்ளைகள் அதிகமாயிருப்பதற்கு விதியுண்டாகும். சனியுடன் சூரியன் உச்சமாகிக் கூடினால் சில பாக்கியங்கள் குறைந்து சில பாக்கியங்கள் அதிகரிக்கும் என்று கூறப்படுகின்றது. அதனால் உண்டாகும் நீசபங்க ராஜயோகம் புத்திர வழியில் குறைவாகும்.

பூர்வ புண்ணிய சொத்துகள் பொதுவாயிருந்தாலும் அவற்றினால் கணிசமான வருவாயை ஈட்டமுடியும். சனி உச்சமாகிச் சுக்கிரன் கூடச் சேருவானாகில் சில பலன்கள் பூர்வ புண்ணிய வகையில் தன் கைக்குக் கிடைக்குமாறு செய்ய வழி பிறக்கும். சனியின் சத்துருவான சூரியன் நீசமாகிக் கூடினால் அந்த இராஜயோகத்தால் கிடைக்கப் பெறாத சில பொருள்களும் கிடைக்கப்பெறுமென்று கூறப்படுகின்றது.

குலதெய்வமானது பெண் தெய்வமாயிருக்க உச்ச பலனைக் கொடுக்கும். நான்கு கைகள் கொண்ட உச்சிஷ்ட தெய்வமாயிருக்க விதியுண்டாம். பந்தி படையல்களுடன் வழிபாடு நடத்தினால் உயர்யோக பலன்கள் அடையலாமென்று கூறப்படுகின்றது. ஆண் தெய்வமாயிருந்தால் பந்தி தெய்வங்களுள் ஒன்றாயிருக்க விதியுண்டாகும்.

மஹாலட்சுமி உபாசனைகளும், இந்திர பூஜைகளும் செய்ய மேன்மையான பலன்களுண்டு. சனி உச்சமாகிச் சுக்கிரனும் புதனும் கூடினால் நன்மையுண்டாகும். இவையல்லாது வேறு சத்துரு கிரகங்கள் நீச, பகையாகக் கூடினாலும் யோக பலன்களைத் தந்து பிடுங்குவர். பிரீதி செய்தல் அவசியம்.

தாய்மாமன் வகையில் சம்பந்த உறவுகளுக்கு விதியுண்டாம். சனியுடன் புதன் கூடினால் இன்னமும் தாய்மாமன் வகையில் வலுவுண்டு. சனியுடன் இரண்டுக்கு மேற்பட்ட துர்க்கிரகங்கள் கூட மத்திமமாம்.

சனி தன் திசை புத்திகளில் உச்ச பலன்களைச் செய்வார். பிரீதி செய்ய நல்ல பலன் உண்டென்று கூறப்படுகின்றது.

கன்னி இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சனி இராசிக்கு 3ஆம் இடமான விருச்சிகத்தில் பகை பெற்றிருக்க மத்திம பலனேயுண்டாகும். முதலில் புத்திரத் தடைகள் ஏற்படும். பிரீதிகளுக்குப் பின் நல்லபடியாக விளங்கும். சனியுடன் செவ்வாய் சேர மத்திமமான பலன்களேயுண்டாகும். இருந்த வீட்டைக் கெடுப்பார்கள். புத்திரருக்குப் பங்கமில்லை. ஆண்பிள்ளை பலமாயிருக்கும்.

பூர்வ புண்ணியாஸ்திகள் பலமுடன் இருந்தாலும் பகைகளுக்கிடையே போராட வேண்டிவரும். சனியும் தன் பகைவீட்டில் பலனை மத்திமமாகவே செய்வார். செவ்வாய் சூரியன் போன்ற கிரகங்கள் சனியுடன் கூடினால், பூர்வ புண்ணியம் இருந்தும் அதனால் சிறிதும் பயனில்லாது போக விதியுண்டு என்று கூறப்படுகின்றது.

குலதெய்வம் ஆண் தெய்வமாயிருந்தால் நன்மையுண்டு. அத்தெய்வம் மிகத்துடியாகவும், இரத்தப்பலி கேட்டுப் படையல் வாங்குவதாகவும் இருக்கும். அதனை விட்டிடாமல் தொடர்ந்து பூஜித்து நல்ல பலனையடையலாம். வழிபாடுகளை விட்டால் தொடர்ந்து துர்பலனை அனுபவிக்க நேரும்.

முருகக் கடவுள் வழிபாடும், ஆன்மிக ஈடுபாடும் உண்டாகும். சனியுடன் கேது உச்சமாகிக் கூடப் பின்வாழ்வில் ஆன்மிக நாட்டங்களும்,

வழிபாடுகளும் உண்டாகும். சனி தனித்திருந்தாலும் தன் மித்துருக்களோடு கூடியிருந்தாலும் நற்பலனைச் செய்வார்.

தாய்மாமன் வகையில் மத்திம பலனேயுண்டாகும். சனியுடன் புதன் சேர்ந்தால் சம்பந்தத் தொடர்புகள் உண்டு. சனியோடு வேறு சத்துருகிரகங்கள் கூடினால்
தாய்மாமன் வகையில் மனக்கிலேசங்கள் உண்டாகும். சனிக்குத் தொடர்ந்து பிரீதிகள் செய்ய நற்பலன்கள் உண்டு.

கன்னி இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சனி இராசிக்கு 4ஆம் இடமான தனுர் இராசியில் இருக்க மேன்மையான பலனுண்டு. புத்திரர்கள் சிறந்து விளங்குவர். சந்தான பாக்கியங்கள் உண்டாகும். ஆண் புத்திரர்களால் உதவியும், மற்ற பலன்களும் உண்டாகும். சனியுடன் மித்துரு கிரகங்கள் கூடினால் மெத்த பலன்கள் உண்டாகும்.

குலதெய்வம் உச்சிஷ்ட தேவராக இருக்க விதியுண்டாம். பந்தி, படையல்களுக்குத் தலைமையும், தேவர்களுக்குத் தலைமையும் வகிக்க விதிகளுண்டாம். தொடர்பூஜை, படையல்கள் செய்து வந்தால் குல தெய்வ அருளைப் பூரணமாகப் பெறலாம்.

பூர்வ புண்ணியாஸ்திகள் மனைகளாகவோ காடு, வயல்களாகவோ இருந்தால் நற்பலன்கள் உண்டாகும். சனி தனித்திருந்தாலும், தன் நட்புக் கிரகங்களுடன் சேர்ந்திருந்தாலும் தன் வசமாகவும், தான் அதனை அனுபவிக்கவும் விதிகள் ஏற்படும். சனி துர்க்கிரகங்களுடன் சேர்ந்து சில தீய பலன்களை 5ஆம் பாவ வழியில் செய்தால் தக்க பிரீதிகள் செய்து பலனைத் தக்க வைக்க வேண்டும்.

தாய்மாமன் வகையில் சம்பந்தங்கள் செய்யவும், அதன் மூலம் மனைகளைப் பெறவும் விதிகள் உண்டாகும். சனி தன் சத்துருக்களோடு கூடினால் மத்திமம்; புதனோடு கூடினால் தாய்மாமன் ஆதரவும், அனுசரணையும் உண்டாம்.

தெய்விக வழிபாடுகள், சிவாலயத் தரிசனங்கள் போன்றவை கிட்டும், சிவத்தல யாத்திரைகளும் உண்டாகும். இஷ்டதெய்வம் வடக்கே நோக்கும் தெய்வமாயிருந்தால் மெத்த பலன்களுண்டு.

சனி தன் துர்க்கிரகங்களுடன் சேர்ந்து துர்பலனைச் செய்தால், சனிக்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்து நல்ல பலனை அடைய வேண்டுமென்று கூறப்படுகின்றது.

# துலாம்

5ஆம் இடத்து அதிபதியாகச் சனீஸ்வரரைப் பெற்ற துலா இராசி அன்பர்களே!

ஐந்தாமிடம் என்பது புத்திரர், குலதெய்வம், பூர்வபுண்ணியம், தாய்மாமன், மந்திர சம்பந்தம் போன்றவற்றைக் குறிப்பிடும். உங்களின் ஐந்தாமிடத்து அதிபதியான சனீஸ்வரர் மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளிலும் ஒவ்வோர் இடங்களிலும் இருந்தால் என்னென்ன பலன்களைத் தருவார் என்று மகரிஷி பதஞ்சலி முனிவரின் சந்திர நாடியின் வழியாக அறிந்து கூறுகின்றோம்.

சனீஸ்வரர் செவ்வாய், சூரியன், குரு ஆகியோர் வீட்டிலிருந்தால் மத்திமமான பலன்களைச் செய்வார். புதன், சுக்கிரன், இராகு போன்ற கிரகங்களுடன் சேர்ந்தால் நல்ல பலன்களைத் தருவார்.

''மந்தரவர் புங்கன், சுங்கனரவுடன் சேர உத்தம பலனுமென்றே
முடகாரியவர் ஆரலொடு வெய், குருவொடு சேர மத்திமமாமே
மந்தமாய்ப் பலனுமென்றே சேயவனோடு கூடிடினுமவரில்ல
மிருந்திடினும் முரணான பலனுண்டாம் இடர்மெத்த
சொந்தமான புத்திரனு மிடர்செய்வான் திருந்தான்காண்
சுற்றியதொரு நாகம்போல் ஊழ்வினையும் தானிருந்து
பிந்தமாய் இடர் செய்யும் கிரகப்பிருதி மேலேதான்
பங்கமில்லை நற்பலன்கள் உண்டென்று செப்பினேனே''

சனி, செவ்வாய் வீட்டில் இருந்தால் நல்ல பலன்களைச் செய்யமாட்டார்; பாவியாவார். இதனால் புத்திரக்குறைவும் புத்திர சந்தான தோஷமும் ஏற்படும். 5ஆம் பாவ பலன்கள் முழுதும் குறைபாடு உண்டாகும். இதற்குச் சனீஸ்வரருக்கு அர்ச்சனையும் ஆராதனையும், எந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நன்மையான பலன்களும் உண்டாகும்.

துலா இராசிக்கு 5 ஆம் இடத்து அதிபதியான சனீஸ்வரர் இராசிக்கு 5ஆம் இடத்தில் கும்பத்தில் ஆட்சி பெற்றால் நற்பலன்கள் உண்டாகும். புத்திர சந்தான விருத்தியும் பூர்வ புண்ணியங்களை அடைந்து அனுபவித்தும் வர விதியுண்டாகும். பூர்வ புண்ணியங்களில் வீடு, மனை, விவசாய நிலங்கள் போன்றவற்றை அடையக்கூடிய விதியும் உண்டு. தாய்மாமன் நல்ல

நிலையில் இருப்பார். அவரால் நன்மையும் உதவியும் உண்டு. குலதெய்வம் கருப்பு வகையில் அமையவும் அய்யனார் போன்று குதிரைமேல் பவனி வரும் தெய்வமாகவும், காவல் தெய்வமாகவும், துடியான தெய்வமாகவும், பந்தி தெய்வங்களில் முதன்மை இடம் வகிக்கும் தெய்வமாகவும் இருக்க விதி உண்டு. குலதெய்வத்தின் அருள் பூரணமாக இருக்க விதியுண்டு. மந்திரங்கள் சித்தி பெற மார்க்கமுண்டு, சனியுடன் புதன், சுக்கிரன் ஆகியன கூடினால் நல்ல கௌரவப் பதவிகள், அதிகாரம், அந்தஸ்து ஆகியன பெற்று விளங்குவார்கள். செவ்வாய், சூரியன் ஆகியவை சனியுடன் கூடினால் மத்திம பலனே ஏற்படும். சனீஸ்வரருக்கு அர்ச்சனை செய்யவும்.

துலா இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான சனீஸ்வரர் இராசிக்கு 6ஆம் இடத்தில் மீனத்தில் குரு வீட்டில் நட்புப்பெற்றிருந்தால், புத்திர நிலையில் நிறைவு இராது, புத்திரக்கிலேசம் உண்டாகும். பூர்வபுண்ணியச் சொத்துகள், காடு கழனிகள் ஆகியவற்றைக் கடனாலோ பங்காளிச் சண்டையாலோ வழக்கு, வில்லங்கம், விவகாரம் ஆகியவற்றாலோ அனுபவிக்கத் தடை ஏற்படும். குலதெய்வம் உச்சிஷ்ட தெய்வமாகவும், பந்தித் தெய்வங்களுள் தலைமை வகிக்கக்கூடியதாகவும் இருக்கும். அது காவல் தெய்வமாகவும், கருப்பு போன்ற குதிரை மேல் பவனி வரும் தெய்வமாகவும் இருக்கும். தாய்மாமன் வழியில் வில்லங்கம், விவகாரம் ஆகியன ஏற்படும். நோய் நொடியினால் தாய்மாமன் அல்லலுற விதி உண்டாகும். தெய்வ அனுசரணைகள் மத்திமமாக இருக்கும். மந்திரங்கள் சித்தி பெற, கைகூட மிகவும் சிரமப்பட வேண்டியிருக்கும். சனியுடன், சுக்கிரன் உச்சம்பெற்று இராகுவும் கூடினால் நல்ல பலன்கள் நடக்கும். சனியுடன் செவ்வாய், வியாழன், சூரியன் ஆகியன கூடினால் மத்திம பலனைக் கொடுக்கும். இதற்குச் சனீஸ்வரருக்கு எந்திர, மந்திர பிரீதிகளும், பூசைகளும் செய்தால் நன்மையான பலன்களை அனுபவிக்கலாம்.

துலா இராசிக்கு 5 ஆம் இடத்து அதிபதி சனீஸ்வரர் இராசிக்கு 7ஆம் இடமான மேஷத்தில் நீசமுற்றால். மத்திமமான பலன்களே நடக்கும். புத்திர தோஷம் உண்டு. பூர்வ புண்ணியச் சொத்துகள் விரயமாகும். குலதெய்வத்தின் அருளைப் பூரணமாகப் பெறமுடியாது. மந்திர நிலைகள் முயற்சி பலனளிக்காது. எந்தப் பதவியில் இருந்தாலும் முழுமையாக இருக்கமுடியாது. பதவி நீக்கம் அல்லது தோல்வியைத் தழுவ வேண்டியதுவரும். தாய்மாமன் இருப்பது அரிது. அப்படி இருந்தாலும் எந்த உதவியும் நன்மையும் கிட்டாது. நீசம் பெற்ற சனீஸ்வரருடன் உச்சம் பெற்ற சூரியனும், ஆட்சி பெற்ற செவ்வாயும் கூடினால் இராஜ யோகத்தைக் கொடுத்து 5ஆம் இடத்துப் [illegible] சனியுடன் இராகு

கூடினால், குலதெய்வங்கள் கருப்பும், நாகதேவதை போன்ற பெண் தெய்வங்களும், துர்க்கை, காளி போன்ற சக்தி அமிசம் படைத்த உச்சிஷ்ட தெய்வங்களும் இருக்கும். சுக்கிரன் கூடினால் நல்ல பதவியும் செல்வாக்கும் 5ஆம் பாவ பூர்வ புண்ணியத்தை அனுபவிக்கவும் விதியுண்டாம். கேது கூடினால் மத்திம பலன்களே உண்டாகும். இதற்கு சனீஸ்வரருக்கு அர்ச்சனை எந்திர, மந்திரப் பிரீதி ஆகியன செய்ய வேண்டும்.

துலா இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 8ஆம் இடத்தில் ரிஷபத்தில் நட்புடனிருந்தால், புத்திரக்கிலேசம் உண்டாகும். இதற்குப் புத்திர பாவ சாந்திகளும், தோஷ நிவர்த்தியும் செய்ய வேண்டும். குலதெய்வம் அருளும் கிடைக்காத நிலையிலிருப்பீர்கள். தாய்மாமன் வழியில் உதவிகள், இலாபங்கள் ஆகியவை கிடைக்கா. அவருக்கு நோய் நொடிகளும் உண்டு. பூர்வ புண்ணியச் சொத்துகளை அனுபவிக்க இயலாது. மந்திரஸ்தானங்கள் சித்தி பெறும் நிலை உண்டாகும். தீர்த்தயாத்திரைகள், தெய்வபக்தி, வழிபாடு, யாகங்கள், ஹோமங்கள், பூசை புனஸ்காரம் ஆகியவற்றைச் செய்ய விதியுண்டு. தலைமைப் பதவிகள் இரா. வறிய வாழ்க்கை வாழ வேண்டியது வரும். சனியுடன், சுக்கிரன் சேர்ந்தால் குலதெய்வங்களுள் பெண் தெய்வங்கள் உச்சிஷ்ட தெய்வமாக இருக்கவும், இராகு சேர்ந்தால் காளி, துர்க்கை, பராசக்தி போன்ற துடியான சக்தியமிசம் கொண்ட பெண் தெய்வங்கள் இருக்கவும், கன்னிமார் போன்ற தேவ கன்னிகைகள் போன்ற தெய்வங்கள் இருக்கவும் விதி உண்டு. இவர்களின் அருள் பூரணமாக ஏற்படும். சனியுடன் சூரியன், செவ்வாய், குரு போன்ற கிரகங்கள் கூடினால் மத்திம பலன்களைச் செய்வர். இதற்குச் சனீஸ்வரனுக்கு அர்ச்சனையும், ஆராதனையும் எந்திர, மந்திர பூசைகளும் செய்ய நற்பலன்கள் உண்டாகும்.

துலா இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 9ஆம் இடமான மிதுன இராசியில் இருந்தால் நல்ல பலன்களைச் செய்வார். புத்திர சந்தான விருத்தி ஏற்படும். பூர்வ புண்ணியச் சொத்துகளுள் காடு, நிலபுலன்கள் ஆகியவற்றால் நற்பலன்களையும், நன்மைகளையும் இலாபங்களையும் பெற விதி உண்டு. தாய்மாமன் நல்ல சௌகரியங்களுடன் இருப்பார். தாய்மாமன்களினால் உதவியும் நன்மையும் உண்டு. குலதெய்வத்தின் அருள் பூரணமாக உண்டு. குலதெய்வம் வைஷ்ணவ சம்பிரதாயங்களுடன் கூடிய உச்சிஷ்ட தெய்வமாகவும், குதிரை மேல் பவனிவரும் தெய்வமாகவும் மகாவிஷ்ணுவின் அவதாரங்களுள் ஏதாவது ஒன்றாகவும், திருமண் இட்டு வைக்கும் தெய்வமாகவும், பெண் தெய்வங்களுள் சக்தியம்சம் பொருந்திய பெண் தெய்வங்களாகவும், தேவதைகள், கிராமியக் காவல் தேவதைகள் போன்றவை இருக்க விதி உண்டு. பிதுர்பாக்கியங்களை அனுபவிக்கும்

யோகம் பூரணமாக உண்டு. தலைமைப் பதவியும், அதிகாரமும் அந்தஸ்தும் உண்டாகும். மந்திர சித்திகள் ஏற்படும். தீர்த்தியாத்திரையும் மகாவிஷ்ணு வழிபாடுகளும், தெய்வபக்தியும் இருக்கும். சனியுடன் சூரியன், செவ்வாய், குரு போன்றவர்கள் கூடினால், சனீஸ்வரருக்கு அர்ச்சனையும் ஆராதனையும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

துலா இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 10ஆம் இடத்தில் கடகத்தில் இருந்தால் புத்திர சந்தான விருத்தியும், புத்திரரால் நன்மையும் உண்டாகும். பூர்வ புண்ணியச் சொத்துகளால் நல்ல இலாபமும் நன்மையும் உண்டாகும். காடு, கழனிகள், நிலபுலன்கள் ஆகியவற்றை அனுபவிக்க விதி உண்டு. தாய்மாமன் நல்ல சௌகரியங்களுடன் இருப்பார். அவரால் நன்மையும் உதவியும் உண்டு. குலதெய்வ அருளும் பூரணமாக உண்டு. குலதெய்வங்கள் பராசக்தி, அம்பாள் வகையில் பெண் தெய்வங்களாகவும், மற்ற கன்னித் தெய்வங்களாகவும், காவல் தெய்வங்களாகவும், கிராம தேவதைகளாகவும். உச்சிஷ்ட தெய்வமாகவும் இருக்கும். மந்திரங்கள் சித்திபெறும். ஆலயவழிபாடுகள், தெய்வபக்தி, சைவ நெறியில் பற்றுதல் போன்றவை இருக்கும். தலைமைப் பதவிகள், ஆலய நிர்மாணப்பணிகள், கோயில் திருப்பணிகள் போன்றவை ஏற்பட விதியுண்டு. தலைமைப் பதவிகளை அனுபவிக்க விதியுண்டு. சனியுடன் செவ்வாய், குரு, சூரியன் ஆகியோர் கூடினால் நல்ல பலன்களை அடைய முடியாது. இவற்றுக்குச் சனிக்கு அர்ச்சனையும், எந்திர மந்திரப் பிரீதியும் செய்தால் நன்மையான பலன்களை அடையலாம்.

துலா இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி சனி, இராசிக்கு 11ஆம் இடத்தில் சிம்ம இராசியில் பகை பெற்றிருப்பதால், புத்திர பிராப்தியும், கிலேசமும் உண்டு. குலதெய்வ அருள் உண்டு. பூர்வ புண்ணியச் சொத்துகளான, வீடு, மனை, காடு, கழனிகள், நிலபுலன்கள் ஆகியவற்றை அனுபவிக்க விதியுண்டு. தாய்மாமன் வழியில் அசௌகரியங்கள் உண்டு; இருந்தாலும், நல்ல நிலையில் இருப்பார். குலதெய்வங்களின் அருள் பூரணமாய் உண்டு. குலதெய்வம், சைவசித்தாங்களில் தேர்ச்சி, சைவத்தெய்வங்களின் வழிபாடுகள், சிவவழிபாடு போன்றவற்றில் பிரியம் ஆகியன உண்டாகும். சிவ மந்திரங்கள் எல்லாம் சித்தியாகும். தலைமைப்பதவி, அந்தஸ்து, கௌரவம் ஆகியன ஏற்படும். சூரியன் கூடினால் நற்பலனும், செவ்வாய் கூடினால் அதம பலன்களும் நடக்க விதி உண்டு. இதற்கு சனீஸ்வரருக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்ய வேண்டும்.

துலா இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி சனி, இராசிக்கு 12ஆம் இடத்தில் கன்னியில் இருந்தால் புத்திர பிராப்தியில் தடை உண்டு. பூர்வ புண்ணியச் சொத்துகளை அனுபவிக்க விதியில்லை. வீடு, மனை, நிலபுலன்கள் காடு கழனிகள் ஆகியவை எல்லாம் விரயமாகும் நிலை உண்டாகும். தாய்மாமன் வழியில் எந்த உதவியும், நன்மையும் கிட்டா. குலதெய்வம் வைஷ்ணவ சம்பிரதாயங்கள் கொண்ட தெய்வமாக இருக்கும். பெண் தெய்வங்களுள் சக்தி அமிசம், தேவதைகள், கிராம காவல் தெய்வங்கள், அம்மன் ஆகியவை இருக்கும். குலதெய்வத்தின் அருளைப் பெற எந்திர, மந்திர பூசைகள் செய்தால் பெறலாம். பதவிகள், கீர்த்தி, புகழ் ஆகியவை மறையும் நிலை உருவாகும். மந்திர சம்பந்தங்கள் சித்தி பெறா. சனியோடு புதன் கூடி உச்சம் பெற்றும் சுக்கிரன் நீசம் பெற்றும் கூடினால், நல்ல பலன்கள் நடக்கும். குலதெய்வ அருளும், புத்திர பிராப்தியும், தாய்மாமன் வழியில் ஆதரவும் உதவியும் கிட்டும். மந்திரங்கள் சித்தி பெறும், பூர்வ புண்ணியங்களை அனுபவிக்க நேரும். சனியுடன் சூரியன், செவ்வாய் ஆகியன கூடினால் மத்திம பலனே. இதற்கு சனீஸ்வரருக்கு யந்திர, மந்திர பிரீதி செய்ய நற்பலன்களாம்.

துலா இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி சனி இராசியிலே இருந்து உச்சம் பெற்றால் உத்தமமான பலன்கள் உண்டாகும். புத்திர சந்தான விருத்தியும், அதன் மூலம் நன்மையும் இலாபமும் உண்டாம். சற்புத்திரராகவும் இருப்பர். பூர்வ புண்ணியச் சொத்துகள் நல்ல இலாபம் தரக்கூடியவையாய் இருக்கும். காடு, கழனிகள், வீடு, மனை ஆகியன நல்ல பலனைத் தரும். அவற்றை எல்லாம் அனுபவிக்க விதியுண்டாகும். குல தெய்வத்தின் அருள் பூரணமாய் உண்டு. குலதெய்வம், அம்பாள், ஆதிபராசக்தி, கருமாரியம்மன், முத்தாலம்மன் எனச் சக்தியமிசம பொருந்திய பெண் தெய்வமாகவோ ரெங்கநாதர், சொர்ண பைரவர் போன்ற தெய்வங்களுள் ஒன்றாகவோ இருக்கும். மந்திரங்கள் சித்தி பெற விதி உண்டு. அஷ்டமாசித்திகளும் சித்தி பெற விதியுண்டு. சனியுடன் சுக்கிரன் கூடிச் சேர்ந்தால், அநேக நல்ல பலன்களை அடையலாம். தலைமைப் பதவிகள், சிவாலயத் திருப்பணிகள் சிவ சொத்தையோ, மடத்தையோ, கோயிலையோ நிர்வகிக்கும் பொறுப்பு ஆகியன வாய்க்க விதியுண்டு. சனியுடன் சூரியன், செவ்வாய், குரு ஆகியன சேர்ந்தால் மத்திம பலன்களே உண்டாகும்.

துலா இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி சனியாகி இராசிக்கு 2ஆம் இடத்தில் இருந்தால் புத்திர பிராப்தியும், குடும்பத்தில் புத்திரரால் நன்மையும், உதவியும் உண்டு. பூர்வ புண்ணியச் சொத்துகளால் குடும்பத்தில் நன்மையும் இலாபமும் உண்டு. குலதெய்வம் ஆண்தெய்வமாயின் ஆறுமுகக்

கடவுளாகிய முருகப் பெருமானோ, அதன் வகைகளோ, உக்கிரதெய்வமான அக்கினியோ, அகோர வீரபத்திரரோ அதன் வகையைச் சேர்ந்த தெய்வமோ, பெண் தெய்வமாயின் காளியோ, துர்க்கையோ இருக்க விதியுண்டு. குலதெய்வ அருள் நல்லபடியாகக் கிடைக்கும். மந்திர சம்பந்தங்களும் மற்றும் முருக, சிவாலய வழிபாடுகளும் தெய்வ பக்தியும். நெறிமுறைகளோடு இருக்க விதியுண்டு. மந்திரங்கள் சித்தி பெற யோகமுண்டு. குலதெய்வ அருளைப் பெற மந்திரங்கள், படையல்கள், பூசைகள் ஆகியன செய்தால் நல்ல அருளைப் பெறலாம். பதவிகள், அந்தஸ்து, கௌரவம் ஆகியன குடும்பத்தில் குறையாது இருக்கும். சூரியன் சனியுடன் சேர்ந்தால் நல்ல பலனைச் செய்ய மாட்டார். இதற்குச் சனீஸ்வரருக்கு யந்திர மந்திரப் பூசைகள் செய்தால் நற்பயன்களை அடையலாம்.

துலா இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி சனியாகி அவர் இராசிக்கு 3ஆம் இடத்தில் தனுசில் இருந்தால் புத்திர சந்தானத்திற்குத் தடையும், புத்திரகிலேசமும் உண்டாகும். அதனால் பூர்வ புண்ணியச் சொத்துகளை அனுபவிக்க முடியாதபடி விதி அமைப்பு உள்ளது. நிலபுலம், காடு கழனிகள் ஆகியன நல்லபடியாக இரா. இளைய சகோதரரால் நன்மையான பலனுண்டாகும். தாய்மாமன்களின் வழியில் உதவிகளை அடைய முடியாது. குலதெய்வம் சௌமிய தெய்வங்களாகவும் சைவ சமயக் கடவுள்களாகவும். உச்சிஷ்ட தெய்வமாகவும் இருக்கும். குலதெய்வ அருளைப் பெற மந்திர உபாசனைகள் செய்தால் பூரண அருள் உண்டு. பதவி, புகழ், கீர்த்தி ஆகியன ஏற்பட விதியுண்டு. மந்திரங்கள் சித்தியாகும். இவருடன் குரு சேர்ந்து ஆட்சி பெற்றால் மந்திரசித்தியும், அஷ்டமா சித்திகளும் ஏற்படும். சூரியன், செவ்வாய் ஆகியன சேர்ந்தால் மத்திமபலன் உண்டு. இதற்குச் சனீஸ்வரருக்கு யந்திர மந்திர பூசைகள் செய்தால் நன்மையான பலனைச் செய்வார்.

துலா இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியானவர் சனி. அவர் இராசிக்கு 4 ஆம் இடத்தில் மகரத்தில் இருந்தால் புத்திர சந்தான விருத்தியும் புத்திரரால் மகிழ்ச்சியும், சந்தோஷமும் உண்டு.புத்திரரால் நன்மையும் உண்டு. நற்சுகமும் உண்டு. பூர்வ புண்ணியச் சொத்துகள் மூலம் நன்மையான பலன், வாகன சுகம், பெண்கள் சுகம் ஆகியவற்றை அனுபவிக்க யோகமும் உண்டாம். குலதெய்வம் கருப்பு வகைகளுள் ஏதாவது ஒன்றாகவும், பரிமேல் சவாரி செய்யும் தெய்வமாகவும், சாத்தான், ஐயனார், ஐயப்பன் போன்ற உச்சிஷ்ட தேவதைகளாகவும், கருமாரியம்மன் போன்ற தெய்வங்களாகவும் இருக்கும். குலதெய்வத்தின் அருளைப் பெற மந்திர பூசைகள் செய்தால் அருளைப் பெற முடியும். கீர்த்தி, புகழ், பட்டம், பதவிகள் போன்றவற்றை அனுபவிக்க விதியுண்டு. மந்திரங்களால் சித்தி பெற யோகமுண்டு.

சூரியனுடன் சனி சேர்ந்தால் மத்திம பலன்களே உண்டாகும். இதற்கு சனீஸ்வரருக்கு அர்ச்சனையும் எந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும். தாய்மாமன் வழியில் நன்மையும் உதவியும் கிடைக்கும்.

# விருச்சிகம்

''அங்ஙனமே தேளுக்கு மைந்தன் வேதனவன்
அயலான் கோணகேந்திர மேறிடவே உத்தமமாம்
தங்க நிறத்தோன் சுரமீனில் நீசமுற அதமபலனேயாகும்
தனயனுக்கு சிசுபாக்கியம் மந்திர நிலைகளப்பா!

அங்கமாய் இடர்செய்யும் பிருதிமேல் பலனுந்தானே
அறியலாம் அந்தணரொடு நீசர் கூடிடினும்
சுங்கனவர் கூடிடினும் முரண்கள் மெத்தவுண்டாம்
சாற்றலிடம் பஞ்சமநிலை விருத்தி வாய்க்காதப்பா!

விருச்சிக இராசிக்கு 5ஆமிடத்து அதிபதி குருவானவர் கோணம், கேந்திரம் ஏறி நின்றால், நற்பலன்கள் உண்டு. குரு நீசமானால் அதம பலனுண்டு. சிசுபாக்கியம், மந்திரபாக்கியம், குலதெய்வ பாக்கியம், தாய்மாமன் பாக்கியம் ஆகியன குறைவுண்டாம்.

இதற்கு யந்திர மந்திர பிரீதிகளின் வாயிலாக நற்பலன் அடையலாம்.

குருவோடு சந்திரன் கூடினாலும், நீச கிரகங்கள் கூடினாலும், முரணான பலன்களையே கொடுக்கும். குழந்தை பாக்கியம் காலம் கடக்கும் நிலைகளுண்டாம்.

விருச்சிக இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு (மீனம்) 5ஆம் இடத்தில் ஆட்சி பெற்றிருந்தால், சற்புத்திரர் உண்டு. ஆனாலும், புத்திர தோஷம் உண்டு. அதற்குப் புத்திரபாவ பரிகாரம், குருவுக்குப் பிரீதி ஆகியன செய்தால், தோஷம் நீங்கி நல்ல புத்திரரை அடையமுடியும். பூர்வ புண்ணியச் சொத்துகளான காடு கழனி, நிலபுலன், விவசாய நிலங்கள், வீடு, மனை ஆகியவற்றினால் நல்ல இலாபம் கிடைக்க விதியுண்டு; அனுபவிக்க விதியுண்டு. நல்ல வசதி வாய்ப்புகளுடன் தாய்மாமன் இருக்க விதியுண்டு. அவரால் நன்மையான பலனுண்டு. குலதெய்வம் சைவ சமயக் கடவுள்களுள்

ஏதாவது ஓர் உச்சிஷ்ட தெய்வமாகவோ, கிராம தேவதைகளுள் முதலிடம் வகிக்கும் சௌமிய குணம் கொண்ட தெய்வமாகவோ இருக்க விதியுண்டு. குலதெய்வத்தின் அருள் பூரணமாய் உண்டு. தலைமைப் பதவிகள், புகழ், கீர்த்தி, தெய்வ வழிபாடு, ஒழுக்கம், நெறி போன்றவை உண்டாகும். சிவவழிபாடு, சிவனுடைய மந்திரங்கள் போன்றவை சித்தி பெற விதியுண்டு. 5ஆம் பாவப் பலன்களை நல்ல வழியில் அடையத் தக்ஷிணாமூர்த்திக்கு அர்ச்சனை செய்யவும்.

விருச்சிக இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி குரு இராசிக்கு 6ஆம் இடமான மேஷத்தில் இருந்தால் புத்திர பிராப்தி இராது. புத்திரரால் மனக்கிலேசம் உண்டாகும். இவற்றிற்குப் புத்திர சாந்தி செய்தால் புத்திரருண்டு. பூர்வ புண்ணியச் சொத்துகளை அனுபவிக்க முடியாது. குருவோடு செவ்வாய் சேர்ந்தால் பூர்வ புண்ணியத்தில் வில்லங்கம், விவகாரம் ஆகியன ஏற்பட விதியுண்டு. குலதெய்வம் எம்பெருமான், உச்சிஷ்ட தெய்வமாகிய முருகன் போன்ற தெய்வங்களும் வீரபத்திரர், அக்கினி வீரபத்திரர் போன்ற தெய்வங்களும் பெண்தெய்வங்களுள் காளி, துர்க்கை, மாரி போன்ற சக்தியமிசம் பொருந்திய பெண்தெய்வங்களும் ஆகும். மந்திர சம்பந்தங்களில் சித்தி பெற முடியாதிருக்க விதியுண்டு. குலதேவதைக்கு மந்திர, படையல் வைத்து வணங்கினால் 5ஆம் பாவ பலன்கள் நல்ல முறையில் நடக்குமென்று கூறப்படுகிறது. பதவிகளைக்காட்டிலும் வில்லங்க விவகாரம், மனஸ்தாபம் ஆகியன ஏற்பட விதியுண்டு. பதவி, புகழ், கீர்த்தி எல்லாமே மறையும் நிலை ஏற்படும். இதற்குக் குருவுக்குப் பூசையும் மந்திர, தந்திர பிரீதியும் செய்தால் நன்மையான பலன்களை அடையலாம் என்று பதஞ்சலிமுனிவர் கூறுகிறார்.

விருச்சிக இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி குரு இராசிக்கு 7ஆம் இடத்தில் ரிஷபத்தில் நட்புடன் இருந்தால் நல்ல பலன்களைத் தருவார். புத்திர சந்தான விருத்தியும், புத்திர சந்தோஷமும் உண்டாகும். பூர்வ புண்ணியச் சொத்துகளை அனுபவிக்க விதி உண்டாகும். அதைச் சிரமத்தின் பேரிலே அனுபவிக்க முடியும். குருவுக்குக் காரகப் பிரீதி செய்தால் பூர்வ புண்ணியங்களை அனுபவிக்க முடியும். பராசக்தி, அம்பாள் போன்ற அம்மன் வகைப் பெண் தெய்வங்களோ கிராம தேவதைகளோ சில உச்சிஷ்ட தெய்வங்களோ குல தெய்வங்களாய் இருக்க விதி உண்டாம். மந்திரங்கள் சித்தி பெற விதியுண்டு. வேள்வி, யாகம், ஹோமம் போன்ற பிரீதிகளைச் செய்வதில் நாட்டம் செல்லும். பதவிகள் தாமாகவே வலிய வரும். கௌரவம், அந்தஸ்து ஆகியன உண்டு. பிரபுத்துவம் உண்டு. குருவுக்கும் தக்ஷிணாமூர்த்திக்கும் எந்திர பிரீதிகள் செய்தால் நற்பலன்களை அடையலாம் என்று நாடி சாஸ்திரம் கூறுகிறது. தாய்மாமன் வழியில் நல்ல உதவியும் உண்டு.

விருச்சிக இராசிக்கு 5 ஆம் இடத்து அதிபதி குரு இராசிக்கு 8ஆம் இடத்தில் மிதுனத்தில் இருந்தால் மத்திமமான பலன்களைச் செய்வார். புத்திர தோஷமும் புத்திரகிலேசமும் உண்டாகும். பூர்வ புண்ணியச் சொத்துகளை அனுபவிக்கத் தடை ஏற்படும். குருவுக்கும் தட்சிணாமூர்த்திக்கும் பிரீதிகள், பூசைகள் ஆகியன செய்தால் புத்திரப் பிராப்தியும் பூர்வ புண்ணியத்தை அனுபவிக்கவும் விதி உண்டாகும். குலதெய்வம் வைஷ்ணவ சம்பிரதாயங்கள் கொண்டதாகவும், சக்தி அமிசங்கள் கொண்டதாகவும் இருக்கும். குலதெய்வத்தின் அருளைப் பெறக் குலதெய்வத்திற்கு பிரீதிகள், பூசைகள் ஆகியன செய்ய வேண்டும். தலைமைப் பதவிகளும், கீர்த்தி, புகழ் ஆகியனவும் மறைந்துவிட விதியுண்டாம். மந்திரங்கள் சித்திபெறாத நிலை ஏற்பட விதியுண்டு. தாய்மாமன் வழியில் எந்த உதவியையோ, நன்மையினையோ எதிர்பார்க்க முடியாது. குருவோடு சூரியன், செவ்வாய் போன்ற கிரகங்கள் சேர்ந்தால் நல்ல பலனுண்டாகும். புதன், இராகு ஆகியன சேர்ந்தால் மத்திம பலனையும், சனி, கேது சேர்ந்தால் அதம பலனையும் கொடுப்பார்களென்று கூறுகிறது. இதற்குக் குருவுக்கும் தஷிணாமூர்த்திக்கும் பிரீதி செய்ய வேண்டும்.

விருச்சிக இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 9ஆம் இடமான கடகத்தில் உச்சம் பெற்றிருந்தால், புத்திர சந்தான விருத்தியும், அதனால் சந்தோஷமும் உண்டாகும். புத்திரரால் நன்மையும் இலாபமும் ஏற்படும். பூர்வ புண்ணியச் சொத்துகளான காடு, கழனிகள், வயல், நிலபுலன்கள், விவசாயம் ஆகியன நல்ல இலாபத்தைத் தரும். தாய்மாமன் நல்ல வசதிகளோடு சௌகரியத்துடன் இருப்பார். அவரால் உதவியும் நன்மையான பலனுமுண்டு. குலதெய்வம், பெண் தெய்வம் பராசக்தி அம்மன், பார்வதி, பரமேஸ்வரி போன்ற சக்தி அம்சம் பொருந்திய தெய்வமாகவோ, சப்தமாதாக்கள் போன்ற தேவதையாகவோ இருக்க விதி உண்டு. குல தெய்வத்தின் அருள் பூரணமாய் உண்டு. மந்திரங்கள் சித்தி பெறும், தெய்வ வழிபாடு, பக்தி நெறி, சிவ பூசைகள் ஆகியன செய்தால், சிவாலயங்களுக்கு யாத்திரை செல்லுதல் போன்றவை ஏற்படும். தலைமைப் பதவிகளும், கௌரவப் பதவிகளும் கிடைக்க விதியுண்டு. குருவுக்கும் தட்சிணாமூர்த்திக்கும் யந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நன்மையான பலன்களை அடையலாம்.

விருச்சிக இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 10ஆம் இடத்தில் இருப்பதால் (சிம்மத்தில்) புத்திர உற்பத்தியும், அதன்மூலம் மகிழ்ச்சியும் உண்டாகும். பூர்வ புண்ணியச் சொத்துகளால் இலாபமும் நன்மையும் உண்டாகும். தாய்மாமன் நல்ல சௌகரியங்களுடன் இருப்பார்.

அவரது உதவியும் உண்டு. குலதெய்வம் ஆண் தெய்வமாயும், சைவ சமயக் கடவுளாகவும், பந்தி தெய்வங்களுக்குத் தலைமை வகிக்கும் தெய்வமாகவும் இருக்கும். குல தெய்வத்தின் அருள் பூரணமாக உண்டாகும். சிவாலய வழிபாடுகள், ஆன்மிகத்தில் நாட்டம், பக்திநெறி ஆகியவற்றில் இவர்கள் சிறந்து விளங்குவார்கள். சிவனுடைய மந்திரங்கள் சித்தியாகும். அரசியல் போன்ற கட்சிப் பதவிகளும், தலைமைப் பதவிகளும், புகழும் கீர்த்தியும் குருவுடன் சூரியன் கூடினால் ஏற்படும். பிரபுத்துவம், அடக்கியாளும் அதிகாரம் அந்தஸ்து ஆகியன ஏற்படும். இவற்றுடன் சனி, சுக்கிரன், புதன் ஆகியன கூடினால் பலன்களைத் தடை செய்வார்கள். இதற்குக் குருவுக்கும், தக்ஷிணாமூர்த்திக்கும் யந்திர, மந்திர பூசைகள் செய்தால் நல்ல பலன்களை அடையலாம்.

விருச்சிக இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 11ஆம் இடத்தில் கன்னியில் நட்புடனிருந்தால் நல்ல பலன்களே ஏற்படும். புத்திர சந்தான விருத்தியும், நன்மையும், அவர்கள் மூலம் இலாபமும் ஏற்படும். பூர்வ புண்ணியச் சொத்துகள் நிலபுலம், வீடு, மனை போன்றவற்றால் நல்ல இலாபம் கிடைக்க விதி உண்டு. தாய்மாமன் வகையில் நல்ல உதவியும் உபசரிப்பும் இலாபமும் உண்டு. குலதெய்வம் வைஷ்ணவ சம்பிரதாயம் கொண்டு திருமண் இடும் தெய்வமாகவோ, பெண் தெய்வங்களுள் சக்தியமிசம் படைத்த அம்மனாகவோ இருக்க விதி. குலதெய்வத்தின் அருள் உண்டு. மகாவிஷ்ணுவினுடைய மந்திரங்கள், அதைச் சார்ந்த தெய்வத்தின் மந்திரங்கள் ஆகியன சித்தி பெறும். விஷ்ணு ஆலயங்களில் வழிபாடு, பிரார்த்தனை போன்றவையும் பக்திநெறி, ஒழுக்கம் முதலியவையும் இருக்கும். தலைமைப் பதவிகள், ஆளுமைகள், நிர்வாகங்களில் பொறுப்பு ஏற்பு ஆகியவையும் உண்டு. குருவுடன் சனி, சுக்கிரன் ஆகியன கூடினால் மத்திமபலன்களே ஏற்படும். இராகு கேது கூடினால் அதமபலன்களும் நடக்கும். இவற்றிற்குக் குருவுக்கும் தட்சிணாமூர்த்திக்கும் யந்திர, மந்திர பிரீதிகளும் பூசைகளும் செய்தால் நற்பலன்கள் நடக்கும்.

விருச்சிக இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி குரு இராசிக்கு 12ஆம் இடத்தில் துலாத்தில் மறைந்து நட்புப் பெற்றிருப்பதால் புத்திர சந்தான விருத்தி இராது. புத்திர தோஷத்தை நீக்கப் பரிகாரம் செய்ய வேண்டும். பின் புத்திர உற்பத்தி உண்டாகும். பூர்வ புண்ணியங்களை அனுபவிக்கவும் தடை ஏற்படும். குருவுடன் சனி, சுக்கிரன் ஆகியோர் கூடினால் நல்ல பலன்களைத் தருவார். ராஜயோகம் ஏற்படும். தாய்மாமனின் உதவியும் உபசரிப்பும் இரா. குலதெய்வம் சக்திஅமிசம் கொண்டதாகவோ, பரிமேல் அமரும் தெய்வமாகவோ இருக்கும். குலதெய்வத்தின் அருளைப் பெற விதியும்,

பூசை, படையல்கள் போன்றவற்றையும் செய்ய வேண்டும். மந்திரங்கள் சித்தி பெறத் தடை ஏற்படும். சக்தி, மகாவிஷ்ணு, சிவன் இந்த மூன்று தெய்வங்களின் மந்திரத்தை உச்சரிக்கச் சித்தியுண்டாம். குருவுடன் இராகுகேதுகள் சேர்ந்தால் மத்திம பலனைக் கொடுப்பர். இவற்றிற்குத் தக்ஷிணாமூர்த்திக்கும், குருவுக்கும், யந்திர மந்திர பிரீதியும் பூசையும் செய்தால் நற்பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

விருச்சிக இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான குரு இராசியிலே இருந்தால், நல்ல பலன்கள் உண்டாகுமென்று கூறப்படுகின்றது. புத்திர சந்தான உற்பத்தியும், புத்திரரால் நன்மையும் உண்டாகும் பூர்வ புண்ணியச் சொத்துகளை அனுபவிக்க வழி உண்டாம். நிலபுலன்கள், காடுகழனிகள், வீடு, மனை போன்றவற்றால் நல்ல பலன் உண்டு. தாய்மாமன் வழியில் அன்பும், ஆதரவும், அரவணைப்பும் உண்டு. குலதெய்வம் ஆண் தெய்வமாகவும், உக்கிரமான தெய்வமாகவும், முருகன், வீரபத்திரர் போன்ற சைவ சமயத் தொடர்புடைய உச்சிஷ்ட தெய்வமாகவும் இருக்கும். குருவோடு செவ்வாய் ஆட்சி பெற்றிருந்தால், காளி, துர்க்கை, அம்பிகை, போன்ற பெண் தெய்வங்களின் அமிசம் பொருந்திய அம்மன் தெய்வமாயும், சிம்மத்தின் மேல் பவனி வரும் உக்கிரமான சக்தியாகவும் இருக்க விதியுண்டு. தெய்வத்தின் அருள் கிடைக்க விதியுண்டு. மந்திரங்களுள் சடாட்சரவகை மந்திரங்களும் சக்தியுடைய மந்திரங்களும் சித்தி பெற விதியுண்டு. பதவிகள் கிட்டவும் தலைமைப் பொறுப்பு ஏற்படவும் விதி உண்டாகும். குருவோடு சுக்கிரன், புதன், இராகு ஆகியன சேர்ந்தால் மத்திம பலனுண்டு. இதற்குப் பரிகாரமாகக் குருவுக்கும் தக்ஷிணாமூர்த்திக்கும் யந்திர மந்திர பூசைகள் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 2ஆம் இடத்தில் தனுசில் ஆட்சி பெற்றால் நல்ல பலன்கள் உண்டாகும். குடும்பத்தில் புத்திர சந்தான உற்பத்தியினால் அதிக மகிழ்ச்சியும் நிம்மதியும் உண்டாகும். பூர்வபுண்ணியச் சொத்துகளால் அதிக இலாபமும் நன்மையும் உண்டாகும். தாய்மாமன் வழியில் நல்ல ஆதரவும் உதவியும் உண்டு. குலதெய்வம் ஆண் தெய்வமாயும் சௌமிய குணம் கொண்டதாயும் இருக்கும். சைவ சமயத்தைத் தழுவிய தெய்வமாய் இருக்கும். சிவாலய வழிபாடு, சிவனுடைய மந்திரங்கள் ஆகியன சித்தி பெற விதியுண்டு. தனுசில் குருவுடன் செவ்வாய், சூரியன் ஆகியன சேர்ந்தால் 5ஆம் பாவப் பலன்கள் நல்ல பலன்களாய் இருக்கும். பதவி, புகழ், கீர்த்தி, அந்தஸ்து ஆகியன

எல்லாம் கிடைக்க விதியுண்டாகும். குருவோடு இராகு, கேது போன்ற கிரகங்கள் கூடினால் மத்திமபலன்கள் உண்டாகும். இதற்குத் தட்சிணாமூர்த்திக்கும், குருவுக்கும் பிரீதிகளும் பூசைகளும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம் என்று கூறப்படுகிறது.

விருச்சிக இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி குரு இராசிக்கு 3ஆம் இடத்தில் மகரத்தில் நீசம் பெற்றால் புத்திர தோஷமும், புத்திர கிலேசமும் உண்டாகும். இவற்றிற்குப் புத்திர பாவ கிரகதோஷப் பரிகாரம் செய்தால் புத்திர சந்தான உற்பத்தி உண்டு. பூர்வ புண்ணியச் சொத்துகளை அனுபவிக்கத் தடை ஏற்படும். தாய்மாமனின் உதவி இரா. இருந்தும் இல்லாத நிலையுண்டு. குலதெய்வம் கருப்பு, ஐயனார், சாத்தான் வகையினதாகவோ, உச்சிஷ்ட தெய்வத்தின் வகையினதாகவோ, பெண் தெய்வங்களுள் கிராம தேவதைகள், சப்த மாதர்கள் போன்ற பெண் தெய்வங்களின் வரிசையில் ஒன்றாக அமையும். மந்திர உபாசனைகள், படையல்கள், பூசைகள் ஆகியவற்றைச் செய்து குலதெய்வத்தின் அருளைப் பெறலாம். மந்திரங்கள் சித்தி பெறாத நிலையில் கருப்பு, அம்மன் ஆகியவற்றின் மந்திரங்களை உச்சாடனம் செய்தால் மந்திர சித்தி ஏற்படும். பதவிகள், கீர்த்தி, புகழ் ஆகியன அழியும் நிலை ஏற்படும். குருவுடன் சனி, செவ்வாய் ஆகியன கூடி ஆட்சி பெற்றால் நல்ல பலன்களையும், குருவுடன் புதன், சுக்கிரன், இராகுகேதுக்கள் ஆகியன கூடினால் மத்திம பலன்களையும் அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

விருச்சிக இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி குரு இராசிக்கு 4ஆம் இடத்தில் கும்பத்தில் நட்புடன் அமர்ந்திருப்பதால், புத்திர சந்தான விருத்தியும் அதன் மூலம் சொத்து சுகங்களும், வீடு, மனை, வாகன சுகங்களும் கால்நடைகள் போன்ற நன்மைகளும் கிடைக்க விதியுண்டு. பூர்வ புண்ணியங்களை அனுபவிக்க விதி உண்டாகும். தாய்மாமன் நல்ல சௌகரியத்துடனிருப்பார். அவரால் உதவியும், உபசரிப்பும் உண்டாகும். கருப்புத் தேவதையாகவும், கருமாரி, ஐயனார், சாத்தான், கரை காக்கும் தெய்வங்களும், பரிமேல் அமரும் காவல் தெய்வங்களும், கிராம தேவதைகள் போன்ற அம்மன் தெய்வங்களும் குல தெய்வங்களுள் அடங்கும். குல தெய்வத்தின் அருள் பூரணமாக உண்டு. மந்திரங்கள் சித்தி பெறும். நற்பெயர், கீர்த்தி, ஆளுமைகள், அதிகார அந்தஸ்து பதவி ஆகியன கிடைக்கும். குருவுடன் சுக்கிரன், புதன் ஆகியன கூடினால் மத்திம பலனே உண்டாகும். இவற்றிற்குக் குருவுக்கு யந்திர, மந்திர பூசையும், தக்ஷிணாமூர்த்திக்கு அர்ச்சனையும், ஆராதனையும் செய்தால் நல்ல பலன்கள் உண்டாகும் என்று சந்திர நாடி கூறுகிறது.

# தனுசு

செவ்வாய் பகவானை உங்கள் இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற தனுசு இராசி அன்பர்களே!

5ஆம் பாவமென்பது புத்திரர்களைப்பற்றியும், அந்த வகையான இடர்களை நீக்குவது பற்றியும், மற்றும் குலதெய்வம், தாய்மாமன், பூர்வ புண்ணியம் போன்ற அமைப்புகளைப் பற்றியும் குறிப்பிடும்.

உங்கள் இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான செவ்வாய் சுபகிரகங்களோடு கூடியிருந்தால் மேன்மையான பலன்களைச் செய்வார். துர்க்கிரகங்களுடன் கூடி 5ஆம் பாவ பலன்களைக் கடுமையாகச் செய்தால் செவ்வாய்க்குக் கிரகப்பிரீதிகள் செய்வதன் மூலம் உயர்வான பலனை அடையலாமென்று கூறப்படுகின்றது.

''ஆரலவன் பஞ்சமனாய் தான்வரவே
  அறுபடையோன் தலமொட்டி பூசைசெய்ய
சேரவரும் செல்வங்கள் பஞ்சமத்தில்
  செல்வாக்கு உயர்யோகம் புத்திர சந்தானம்
காரணமாய்ச் சேயவனின் யந்திர, மந்திரம்
  கவனமுடன் பூசையது தானேசெய்கின்
பாரம்போகும் பாவமெல்லாம் தானேபோகும்
  பஞ்சமனை வணங்கிடவே புண்ணியமே''

இதுபோலத் தனுசு இராசிக்காரர்கள் செவ்வாய் பகவானையும் சுப்பிரமணிய தேவரையும், ஆறுபடைவீட்டுத்தலங்களையும் தரிசித்தும் பூசை செய்தும் வந்தால் ஐந்தாம் பாவ வழியில் உயர்வான பலனைப் பெறலாமென்று கூறப்படுகின்றது.

தனுசு இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான செவ்வாய், இராசிக்கு 5ஆம் இடமான மேஷத்தில் ஆட்சி பெற்றிருந்தால் புத்திர சந்தான விருத்தியும், அதன் மூலம் புத்திர கிலேசமும் உண்டாகும். இதற்குச் செவ்வாய்க்குப் பிரீதியும், புத்திர தோஷத்திற்கு பரிகாரமும் செய்தால் புத்திர சந்தான உற்பத்தியுண்டு. பிதுர் பூர்வ புண்ணியங்களை அனுபவிக்கும் யோகமுண்டாகும். நிலபுலன்கள், வீடு, மனைகள், காடு கழனிகள்

போன்றவற்றினால் நன்மையான பலனையும் அடைய விதி உண்டாகும். தாய்மாமன் நல்ல சௌகரியத்துடன் வாழ்வார். அவரால் உதவியும் நன்மையும் உண்டாகும். குலதெய்வம் ஆண் தெய்வமாகவும், உக்கிரமான தெய்வங்களாகவும் சைவ சம்யத் தொடர்புடைய கிரகங்களாகவும் இருக்கும். முருகன். வீரபத்திரர் போன்ற தெய்வங்களும், பந்தி தெய்வங்களுள் தலைமை வகிக்கும் படைத் தெய்வமாகவும் இருக்கும். குல தெய்வத்தின் பூரண அருள் உண்டு. சிவ மந்திரங்கள், முருகன் மந்திரங்கள், காயத்ரிகள் ஆகியன சித்தி பெற விதியுண்டு. பதவிகள் செல்வாக்கு, தலைமை ஏற்கும் பொறுப்பு ஆகியவற்றையடைய விதி ஏற்படும். செவ்வாயுடன் சனி, புதன் ஆகியன கூடியும் இராகு கேதுக்கள் கூடியும் இருந்தால் நல்ல பலன்களைச் செய்யமாட்டார்கள். இவற்றிற்குக் குருவுக்கும் முருகனுக்கும் அர்ச்சனை செய்யவும்.

தனுசு இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி செவ்வாய், இராசிக்கு 6ஆம் இடத்தில் ரிஷபத்திலிருந்தால் மத்திமமான பலன்களே ஏற்படும். புத்திர சந்தான விருத்தி இராது. புத்திரபரிகாரம் செய்தால் புத்திர விருத்தி ஏற்படும். பூர்வ புண்ணியச் சொத்துகளால் வழக்கு, வில்லங்கம் ஆகியன உண்டு, பாதி கடனுக்காகவும் இருக்கும். பூர்வ புண்ணியங்களை முழுவதும் அனுபவிக்க இயலாது. தாய்மாமன் வழியில் எந்த உதவியும் இராது. குலதெய்வம் பெண் தெய்வங்களாகவும், சக்தியமிசம் பொருந்தியதாகவும் தலைமை வகிப்பதாகவும் இருக்கும். ஆண் தெய்வங்கள் உக்கிர தெய்வங்களாய் இருக்கும். கிராமக் காவல் தேவதைகளும் இருக்கும். மந்திரங்கள் சக்தியுடையனவாய் இருக்கும்; சிவனுடைய மந்திரங்கள் சித்தியாகும். தலைமைப் பதவிகள், அந்தஸ்து போன்றவற்றை அடையத் தடை ஏற்படும். செவ்வாயுடன் சுக்கிரன் கூடினால் நற்பலனையும், செவ்வாயுடன் புதன், இராகு, கேது, சனி ஆகியன கூடினால் மத்திம பலன்களையும் கொடுப்பார்கள். இதற்குச் செவ்வாய்க்குப் பிரீதியும், எந்திர மந்திர பூசையும், சுப்பிரமணியர்க்கு அர்ச்சனையும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

தனுசு இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 7ஆம் இடமான மிதுனத்தில் இருப்பதால் புத்திர சந்தான உற்பத்தியும், அதன் மூலம் சந்தோஷமும் உண்டாகும். பூர்வ புண்ணிய சொத்துகளான, காடு, கழனிகள், நிலபுலன்கள் முதலியவற்றின் சேர்க்கையினால் நல்ல இலாபமும், நன்மையும் உண்டு. தாய்மாமன் வழியில் நல்ல உதவியும் இலாபமும் உண்டு. குல தெய்வத்தின் அருள் பூரணமாக உண்டு. குலதெய்வம் வைஷ்ணவ சம்பிரதாயங்கள் உடையதாகவும், பரிமேல் ஏறி அமரும் தெய்வமாகவும் திருமண் [illegible] தெய்வமாகவும் இருக்கும். [illegible]

இருந்தால் சக்தியமிசம் பெற்ற அம்மன் தெய்வமாய் இருக்கும்; உச்சிஷ்ட தெய்வமாகவும் இருக்கும். மந்திரங்கள் மகாவிஷ்ணுவினுடையதாகவும், காயத்ரி சக்தியுடையனவாயும் இருந்தால் சித்தி பெறும் நிலை உண்டாகும். நிருவாகப் பொறுப்பு, அதிகாரம், அந்தஸ்து ஆகியவை ஏற்பட விதியுண்டு. செவ்வாயுடன் புதன் கூடினால் நற்பலனும் உண்டாகும். இவற்றுடன் சனி, இராகு ஆகியன கூடினால் மத்திம பலன்களே ஏற்படும், பதவிகள் பறிபோகும் நிலை உருவாகும். இவற்றிற்குச் செவ்வாய்க்கு எந்திர, மந்திர பூசைகளும், சுப்பிரமணியருக்கு அர்ச்சனையும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

தனுசு இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 8ஆம் இடமான கடகத்தில் நீசம் பெற்றிருந்தால் நல்ல பலன்கள் ஏற்படா. கடுமையான புத்திர தோஷமும், புத்திர கிலேசமும் உண்டாகும். இதற்குப் புத்திர தோஷ நிவர்த்தி பரிகாரமும், குருவுக்கும் அங்காரகனுக்கும் பிரீதியும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம். பூர்வ புண்ணியச் சொத்துகளுக்கு அழிவும் ஏற்படும். குலதெய்வம் பெண் தெய்வங்களாகவும், ஈஸ்வரி, பராசக்தி போன்ற அமிசம் கொண்ட பெண் தேவதைகளாகவும், ஆணாக இருந்தால் சைவ சமயத்தொடர்புடைய தெய்வமாகவும் இருக்கும். மந்திரங்கள், படையல்கள் போட்டு உபாசனை செய்தால் குலதெய்வ அருளைப் பெறலாம். மந்திரசித்தி உண்டு. பதவிகள், அந்தஸ்து, கீர்த்தி, புகழ் ஆகியவற்றை அடையச் சிரமப்படவேண்டி இருக்கும். செவ்வாயுடன் குரு, சூரியன் ஆகியன சேர்ந்தால் நற்பலனையும், புதன், சனி, இராகு கேதுகள் ஆகியன கூடினால் மத்திம பலனையும் கொடுப்பார்கள். இதற்குச் செவ்வாய்க்குப் பிரீதியும், சுப்பிரமணியருக்கு அர்ச்சனையும் செய்ய நல்ல பலன்களைப் பெறலாம் என்று கூறப்படுகிறது.

தனுசு இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி சேய் இராசிக்கு (சிம்மத்தில்) 9ஆம் இடத்தில் இருப்பதால் நற்பலன்கள் உண்டு. புத்திர சந்தான விருத்தியும், அதன் மூலம் பாக்கியங்களை அடைய விதியும் உண்டாம். பூர்வ புண்ணியச் சொத்துகளையும் பிதுர்பாக்கியங்களையும் அடைய விதி உண்டு. தாய்மாமன் நல்ல சௌகரியத்துடன் இருப்பார். அவரால் நன்மையும், உதவியும் உண்டு. குலதெய்வம் ஆண் தெய்வமாகவும் சைவ சமயத் தொடர்புடைய தெய்வங்களாகவும். உக்கிரமான தெய்வங்களாகவும் இருக்கும். தெய்வத்தின் அருளைப் பெறும் பாக்கியங்களைப் பெற்றிருப்பார்கள். பதவிகள், ஆளுமைகள், நிருவாகப் பொறுப்புகள் ஆகியன ஏற்படவிதி உண்டாகும். செவ்வாயுடன் சூரியன் சேர்ந்தால் நற்பலனும் செவ்வாயுடன், சனி, இராகு கேதுகள் கூடினால் மத்திமபலன்களே உண்டாகுமென்று சந்திர நாடி கூறுகிறது. இதற்கு அங்காரகப் பிரீதியும், யந்திர, மந்திர பூசைகளும், சுப்பிரமணியருக்கு அர்ச்சனையும் செய்ய நற்பலன்களை அடையலாம்,

தனுசு இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி சேய் 10ஆம் இடத்தில் கன்னியில் இருப்பதால் புத்திர சந்தான விருத்திக்குக் குறைவில்லை. பூர்வ புண்ணியச் சொத்துகளான நிலபுலன்கள், காடு, கழனிகள், மனை, வீடு, வாகனங்கள் போன்றவற்றை அனுபவிக்க விதியுண்டு, தாய்மாமன் வழியில் நல்ல உதவியும். நன்மையும் உண்டாகும். குலதெய்வம் வைஷ்ணவ சம்பிரதாயத் தொடர்புடைய தெய்வமாகவும், பரிமேல் பவனி வரும் தெய்வமாகவும், பெண் தெய்வமாய் இருந்தால் சக்தியமிசம் கொண்ட பெண் தெய்வமாகவும் இருக்கும். சக்தியின் மந்திரங்கள், மகாவிஷ்ணு மந்திரங்கள் ஆகியன சித்தி பெறும். விஷ்ணுவாலாய வழிபாடு, பக்தி ஆகியன நிறைந்து காணப்படும். பதவிகள், நிர்வாகப் பொறுப்புகள், அரசியல் கட்சித் தலைவர் பதவி, அதிகாரம், கௌரவம் முதலியன நிறைந்துள்ள பதவி ஆகியனவாய் இருக்கும். செவ்வாயோடு புதன் உச்சம் பெற்றால் நல்ல பலனும், இராகு, கேது, சனி ஆகியன கூடினால் மத்திம பலனும் உண்டாம். செவ்வாய்க்கு யந்திர மந்திர பிரீதியும் சுப்பிரமணியருக்கு அர்ச்சனையும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

தனுசு இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதி செவ்வாய் இராசிக்கு 11ஆம் இடமான துலாத்திலிருந்தால், புத்திர சந்தான விருத்தியும், புத்திரரால் இலாபமும் நன்மையும் ஏற்படும். பூர்வ புண்ணியச் சொத்துகள் மூலம் நல்ல இலாபத்தையும் பலனையும் அடைய விதி உண்டு. தாய்மாமன் வழியில் நல்ல உதவியும் உபசரணையும் இலாபமும் உண்டு. குல தெய்வம் பெண் தெய்வங்களான பந்தி தெய்வங்களுக்குத் தலைமை ஏற்கும் தெய்வமாகவும், சக்தியமிசம் பொருந்திய அம்மன்களாகவும் இருக்கும். ஆண் தெய்வமாய் இருந்தால் வைஷ்ணவ சம்பிரதாயங்கள் நிறைந்த ரெங்கநாதரைப் போன்றதாகவும், அதன் தொடர்புடைய தெய்வங்களாகவும் இருக்கும். காயத்ரி மந்திரம், மகாவிஷ்ணு வழிபாடு, அம்பாள் வழிபாடு போன்றவை சித்தி பெறும். பதவிகள், செல்வாக்கு, அந்தஸ்து, கௌரவம், தலைமை, ஆளுமைப்பதவிகள் ஆகியவற்றை அனுபவிக்க விதி உண்டு. செவ்வாயுடன் குரு, சுக்கிரன் ஆகியன சேர்ந்தால் நல்ல பலன்களையும், இராகு, கேது, புதன் ஆகியன சேர்ந்தால் கெடுதியான, மத்திமமான பலன்களையும் செய்வார்கள். இதற்குச் சுப்பிரமணியருக்கு அர்ச்சனையும், செவ்வாய்க்குப் பிரீதியும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம்.

தனுசு இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 12ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால், புத்திர தோஷமும், புத்திர கிலேசமும் ஏற்படும். இதற்குப் புத்திர பரிகாரம் செய்தால் பலனுண்டு. பூர்வ புண்ணியச் சொத்துகள் விரயமாகும் நிலை ஏற்பட விதியுண்டு. பூர்வ புண்ணியச்

சொத்துகளால் எந்த இலாபமும் ஏற்படவிதியில்லை. தாய்மாமனால் எந்த உதவியும் இல்லை. குலதெய்வம் உக்கிரமான ஆண்தெய்வங்களாகவும், முருகன். வீரபத்திரர், காளி, துர்க்கை போன்ற தெய்வங்களாகவும் இருக்க விதி. சடாட்சரம், பஞ்சாட்சரத் தொடர்புடைய மந்திரங்கள் சித்தி பெறும். பதவிகள், ஆளுமைகள் ஆகியன ஏற்பட்டாலும் அவை அதிக நாள்களுக்கு நிலைக்கா. செவ்வாயுடன் சுக்கிரன், சூரியன் ஆகியன சேர்ந்தால் நல்ல பலன்களையும், செவ்வாயுடன் இராகு கேதுகள் ஆகியன சேர்ந்தால் மத்திமமான பலன்களையும் செய்வார்கள் என்று அறியலாம். இதற்குச் சுப்பிரமணியருக்கு அர்ச்சனையும், செவ்வாய்க்குப் பிரீதியும் யந்திர, மந்திர பூசையும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

தனுசு இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசியிலே இருந்தால், நல்ல பலன்கள் உண்டாகும். புத்திர சந்தான விருத்தியும், பூர்வ புண்ணியச் சொத்துகளை அனுபவிக்கும் யோகமும் உண்டு. காடு, கழனிகள், வீடு, மனை, வாசல் போன்றவற்றால் நல்ல இலாபம் ஏற்படும். தாய்மாமன் வழியில் நல்ல உதவியும் நன்மையும் உண்டு. குலதெய்வம் ஆண் தெய்வமாகவும் சைவ சமயத் தொடர்புடைய தெய்வமாகவும் சிவன் போன்ற உச்சிஷ்டதேவதையாகவும் இருக்கும். சிவனுடைய மந்திரங்கள், சித்தி பெற நிலை உண்டாகும். குல தெய்வ அருள் பூரணமாய் உண்டு. பதவிகள், செல்வாக்கு, ஆளுமைகள், அதிகாரம், அந்தஸ்து, கௌரவம் போன்றவை குறையாது இருக்கும். செவ்வாயுடன் குரு, சந்திரன் ஆகியன கூடினால் நல்ல பலனும், சனி இராகு கேதுகள் கூடினால் மத்திமமான பலன்களையும் கொடுப்பார். இதற்கு சுப்பிரமணியருக்குப் பூஜையும், செவ்வாய்க்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

தனுசு இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு (மகரம்) 2ஆம் இடத்திலிருந்தால் நல்ல பலன்கள் உண்டாகும். புத்திர சந்தான விருத்தியும் அதன் மூலம் குடும்பத்தில் நன்மையும் மகிழ்ச்சியும் உண்டாகும். பூர்வ சொத்துகளால் நல்ல இலாபமும் கிடைக்கும். பூர்வ புண்ணியத்தை அனுபவிக்க விதியுண்டு. தாய்மாமன் வழியில் குடும்பத்தில் அன்பும் அரவணைப்பும், உதவியும் நன்மையும் உண்டாகும். குலதெய்வம் கருப்பு, உக்கிர தெய்வங்களாகவும் தலைமை ஏற்கும் தெய்வங்களாகவும் இருக்கும். உச்சிஷ்ட தேவதையாகவும் இருக்கும். மகாவிஷ்ணு மந்திரங்கள், சடாட்சரம் போன்றவை சித்தி பெறும். பதவிகள், அந்தஸ்து, கௌரவம் போன்றவை

குறையாது நிலையிலிருக்கும். செவ்வாய் உச்சம் பெற்றதால் நல்ல பலன்களைச் செய்வார். சத்துரு கிரகங்கள் கூடினால் மத்திம பலன்களைச் செய்வார். இதற்கு யந்திர, மந்திர பிரீதியும், சுப்பிரமணியருக்கு அர்ச்சனையும் செய்தால் நன்மையான பலனுண்டாகும்.

தனுசு இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 3ஆம் இடமான கும்பத்திலிருந்தால் மத்திம பலனே ஏற்படும். புத்திர தோஷமும் ஏற்படும். இதற்குப் புத்திர தோஷ நிவர்த்தி பரிகாரம் செய்தால் புத்திர உற்பத்தி உண்டாகும். பூர்வ புண்ணியச் சொத்துகளால் தன் இளைய சகோதரரோடு வில்லங்கம் ஏற்படும். பூர்வ புண்ணியச் சொத்துகளை அடையத் தடை உண்டாம். குல தெய்வம் ஐயனார், மகாவிஷ்ணு, பரிமேல் பவனி வரும் காவல் தெய்வங்கள், கருப்பணசாமி போன்றவற்றின் அமிசமாக இருக்கும். மகாவிஷ்ணு, கருப்பு மந்திரங்கள் போன்றவை சித்தி பெற விதி உண்டு. பதவி, பொருள், அந்தஸ்து, அதிகாரம் போன்றவற்றை இழக்க வேண்டிவரும். தாய்மாமன் வழியில் உதவியோ, நன்மையோ இராது. செவ்வாயுடன் சூரியன், குரு, ஆகியன சேர்ந்தால் நல்ல பலன்களை அடைய விதி உண்டாகும். செவ்வாயுடன் இராகு, கேது ஆகியன சேர்ந்தால் மத்திம பலனே உண்டாகும்.

தனுசு இராசிக்கு 5ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 4ஆம் இடமான மீனத்திலிருந்தால் மத்திமமான பலனே ஏற்படும். புத்திர சந்தான விருத்தியும் ஏற்படும். பூர்வ புண்ணியச் சொத்துகளால் நல்ல இலாபத்தையும் நன்மையான பலன்களையும் அடையமுடியும். தாய்மாமன் வழியில் நல்ல உதவியும் உபசரணையும், நன்மையும் உண்டாகும். குலதெய்வம் ஆண் உச்சிஷ்ட தெய்வமாகவும், சைவ சமயத் தொடர்புடைய தெய்வங்களாகவும் இருக்கும். அது சௌமிய குணமும் கொண்டிருக்கும். சிவனுடைய மந்திரங்கள், காயத்ரிகள் ஆகியன சித்தி பெற விதி உண்டு. பட்டம், பதவி, சொத்து சுகம், அதிகாரம், புகழ், கீர்த்திகள் ஆகியவற்றை அடைய விதி உண்டாகும். செவ்வாயோடு குரு, சூரியன் ஆகியன கூடினால் நற்பலனையும், செவ்வாயோடு புதன், சனி, இராகுகேதுகள் ஆகியன கூடினால் மத்திமமான பலன்களையும் அடையலாம் என்று சந்திரநாடி கூறுகிறது. செவ்வாய்க்கு எந்திர மந்திர பிரீதியும் சுப்பிரமணியர்க்கு அர்ச்சனையும் செய்ய நற்பலன்களை அடையலாம் என்று ஸ்ரீ பதஞ்சலி மகரிஷி, நாடியில் கூறுகிறார்.

# மகரம்

அசுர குருவான சுக்கிராச்சாரியை 5ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற மகர இராசி அன்பர்களே!

5ஆம் பாவமென்பது புத்திரர், பூர்வபுண்ணியம், குலதெய்வம், மந்திர சம்பந்தம், தாய்மாமன் போன்ற பலன்களைக் குறிப்பிடுவதாகும்.

உங்கள் இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளிலும் நின்ற பலன்களையும் மற்ற கிரகங்களோடு கூடிய பலனையும் உங்களின் 5ஆம் பாவ பலன்களாக அளிக்கப்படுகின்றது.

அன்பர்கள் தங்கள் இராசிக்குச் சுக்கிரனானவர் எந்த இடத்தில் அமர்ந்துள்ளார் என்று அறிந்து, தங்களின் 5ஆம் பாவ பலன்களை அறிந்துகொள்ளவும். சுக்கிரன் துர்க்கிரகங்களுடன் கூடி அதம பலனைச் செய்தால் சுக்கிரனுக்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்து பலனை நல்ல முறையில் அடையவும்.

''கலகனென்ற சுங்கனவன் பஞ்சமனாகி
குருவில்லம் வில்லதனின் நின்றாலே
நலமில்லை பஞ்சம செயல்களெல்லாம்
நாயகனுக்கு பாபமென்றே போவதாகும்!
பலமான மித்ரு கிரகமொடு கூடிடவே
பகரவரும் பலாபலன் மெத்தவாகும்
தலமாற நன்மனையில் கூடத்தானும்
தனயனுக்கு மெத்தபலன் தானும்பாராய்''

சுக்கிரனானவர் தம் சத்துரு வீட்டில் பாவியாகி பகைக்கிரகமொடு கூடியிருந்தால் துர்பலன்களைச் செய்வார். கிரக மறைவிடங்களில் இருந்தாலும் துர்பலன்களே உண்டாகும். சுக்கிரன் தன் மித்துருக்கள் மனையில் சுபபலம் பெற்றிருந்தால் 5ஆம் பாவம் சிறப்புப் பெறுமென்று கூறப்படுகின்றது. சுக்கிரன் பாபகிரகத்தோடு கூடி ஒரு பலனைச் செய்வாராகில் அந்தப் பலனைக் கவனமுடன் நோக்குதல் அவசியம். பிரீதிகள் செய்து பலனை அடையவும்.

மகர இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 5ஆம் இடமான ரிஷபத்திலேயே ஆட்சியாயிருக்கப் புத்திர நன்மைகள் உண்டாகும். சுக்கிரனுடன் குரு கூடினால், புத்திர வகையில் முன் பாதகமும் பின் நன்மையும் ஏற்படும். இராசிக்கு 5ஆம் இடத்தில் இரு பாம்புகளான இராகு, கேதுகள் இருந்தாலும் நன்மை குறைவாம். பெண் பிள்ளைகளால் நன்மையுண்டாகும். பிரீதிகளைச் செய்து பலனையடையவும்.

பூர்வ புண்ணியம் ஸ்திரமாயிருந்தாலும், சுக்கிரனானவர் தனித்திருந்தாலும் தன் மித்துருக்களுடன் சேர்ந்திருந்தாலும் நன்மையுண்டாகும். சூரியன், குரு முதலானவர்களுடன் கூட மத்திம பலனேயுண்டாகும். ஸ்திரமான பூர்வ புண்ணியங்கள் கைமாறும் நிலையை உண்டுசெய்யும் என்று கூறப்படுகின்றது. பிரீதிகள் செய்தால் நற்பலன்களாம்.

குலதெய்வம் பெண் தெய்வமாயிருக்க நன்மையுண்டாகும். நான்கு கைகளோடும் சாந்த முகத்தோடும் இருந்தால் மெத்த பலனுண்டு. ஆங்காரமாயிருந்தால் பலி கேட்கும் தெய்வமாயிருக்கும். பூஜை, பலி முதலியன செய்து குலதெய்வத்தை மகிழ்வித்தால் மெத்த நன்மையாகும்.

மந்திர சம்பந்த நிலைகளில் தொடர்புண்டாகும். லட்சுமி உபாசனைகளும், தேவி உபாசனைகளும் உண்டாகும். சுக்கிரன் இரண்டுக்கு மேற்பட்ட நட்புக் கிரகங்களுடன் கூட தெய்வசித்தியுண்டாகும். பரிமளப்பிரிய தெய்வ உபாசனையும் ஏற்படும். தாய்மாமன் உறவு மத்திமமாம். சுக்கிரனோடு பாவகிரகங்கள் சேர்ந்தால் மாமன் உறவு அறுந்துபோக விதியுண்டு. சம்பந்தப் பலனும் குறையும் சுக்கிர பிரீதிகள், லட்சுமி உபாசனைகள் செய்தால் நற் பலனை அடையலாம்.

மகர இராசிக்கு 5ஆம் இடத்ததிபதி சுக்கிரன் இராசிக்கு 6ஆம் இடமான மிதுனத்தில் நட்புடனிருந்தாலும், பகைக் கிரகங்கள் கூடினால் புத்திரத் தடைகளும், நோய்களும் உண்டாகும். கடுமையான பிரீதிகள் செய்து முன்வினை நற்பலன்களால் சந்தான பாக்கியத்தை அடையலாம். பெண் பிள்ளைகளால் நன்மையும், சில இடர்களும் உண்டாகும்.

பூர்வ புண்ணியங்கள் வில்லங்க விவகாரமாகவோ அல்லது இல்லாமலேயே போவதற்கோ விதியுண்டாகும். கடன் தொல்லைகள், சத்துரு உபாதைகள் ஆகியன இருக்கும். சத்துரு சம்ஹாரங்கள் செய்தும், சுக்கிர பிரீதிகள் செய்தும் பலனையடையவும். குலதெய்வம் குதிரைமீதேறும் தெய்வமாகவும், ஆண் தெய்வமாகவும் இருக்க மெத்தப்பலனுண்டாகும். கடுமையான வழிபாடுகள் செய்துவர சத்துரு உபாதைகள், தோல் பிணிகள் ஆகியன தீரும். பெண்

தெய்வமாயிருக்க பந்தி தெய்வங்களுள் முதன்மையாய் இருக்க அமிசங்கள் உண்டாகும்.

விஷ்ணு ஆராதனைகளும், துளசி அர்ச்சனைகளும், சுதர்ஸன ஹோமங்களும் மெத்த பலன்களை அளிக்கும். தொடர்ந்து பூசைகள் செய்துவர வாழ்வில் மேன்மை உண்டாகும்.

சுக்கிரனுடன் புதன் ஆட்சியாகிக் கூடத் தாய்மாமன் வகையில் சம்பந்தப் பலனுண்டாம். இவர்களுடன் இரண்டுக்கு மேற்பட்ட பகைக் கிரகங்கள் கூட மத்திமமாம். சுக்கிரனுக்கு உரிய பிரீதிகள் செய்து நற்பலனை அடையலாம்.

மகர இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 7ஆம் இடமான கடகத்தில் இருக்க, சுக்கிரனுடன் குரு உச்சமாகிக் கூடினால் முரணான பலன்களுண்டாகும். ஆனாலும் சுக்கிரனுடன் மித்துரு கிரகங்கள் கூடியிருக்கப் புத்திர பிராப்திகள் ஏற்படும். பெண் பிள்ளைகளால் நன்மையுண்டாம். 7ஆம் இடத்தில் இராகு, கேதுகள் கூடினால் மத்திம பலனேயேற்படும்.

குலதெய்வம் பெண் தெய்வமாயிருக்க உயர்ந்த தெய்வமாகவும் பந்தியில் முதல் படையலும், தனக்குக் கீழ் உப தெய்வங்களையும் கொண்டிருக்க விதியுண்டாகும். குல தெய்வம் ஆண் தெய்வமாய் இருக்கப் பந்தி தெய்வத்தில் முதல் தெய்வமாகவும், உக்கிரமாகவும் இருக்க அமிசங்கள் உண்டாகும்.

பராசக்தி உபாசனை, பூஜைகள், வழிபாடுகள் ஆகியன செய்ய நற்பலனாகும். தேவி பராசக்தியின் அவதாரங்களையும், மற்ற ரூபங்களையும் வழிபட நல்ல பலன்கள் உண்டென்று கூறப்படுகின்றது.

தாய்மாமன் வகையில் சம்பந்தங்கள் ஏற்பட விதியுண்டாகும். சுக்கிரன் தனித்திருந்தாலும், தன் நட்புக் கிரகத்துடன் சேர்ந்திருந்தாலும் நல்ல பலனுண்டாகும். சுக்கிரனுடன் நீசக் கிரகமும், பகைக் கிரகமும் கூட மத்திம பலனேயுண்டாகும். சுக்கிரனுக்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்ய உயர்பலன்கள் உண்டாகும்.

பூர்வ புண்ணியங்கள் ஸ்திரமாயிருக்கா; கைமாறிக்கொண்டே இருக்கும் விதியைப் பெற்றிருக்கும். ஒரு காலத்தில் உயர்வையும் ஒரு காலத்தில் மத்திமபலனையும் சேர்த்துக் கொடுக்கும்.

மகர இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 8ஆம் இடமான சிம்மத்தில் [illegible] கடுமையாக

உண்டு. சுக்கிரனுடன் குரு கூடினாலும், சூரியன் கூடினாலும் முரணான தீர்வற்ற பலன்களையே உண்டுசெய்வார்கள். ஆண் புத்திரர்களால் தொல்லையும், சிக்கலுமுண்டென்று கூறப்படுகின்றது. பிரீதிகள் மூலம் புத்திர பலன்களை நல்லபடியாகப் பெறலாம்.

பூர்வ புண்ணியங்கள் ஸ்திரமாயிருந்தாலும், நல்ல பலனைக் குறைவாகவே கொடுக்கும். அல்லது பலனைக் கெடுக்கும் அமைப்புகளை உடையதாயிருக்கும். சுக்கிரனோடு இரண்டுக்கு மேற்பட்ட சுபகிரகங்கள் கூடினால் நற்பலன்கள் உண்டாகும்.

குலதெய்வம் ஆண் தெய்வமாயிருக்க உயர்பலனுண்டாகும். ஆனால், உயிர் வதை தெய்வமாயிருக்க அமிசங்கள் உண்டாகும். சுக்கிரனுடன் சூரியனோ, மற்ற பகைக் கிரகமோ கூடக் குல தெய்வம் துடியான தெய்வமென்று கூறப்படும். அதற்குத் தேவையான முறையில் படையல்கள் செய்து, மனம் குளிரச் செய்து நல்ல பலனையடையவும்.

சிவாலய வழியில் ஈடுபாடிருக்கும். சிவபூஜை, சிவகணங்கள் பூஜை போன்றவற்றில் ஈடுபாடும், கடுமையான முயற்சியின்மேல் சித்திகளும் உண்டாகும்.

தாய்மாமன் வகையில் மத்திம பலனே ஏற்படும். சம்பந்த உறவுகள் குறைவாகவேயுண்டு. சுக்கிரனுக்குக் கடுமையான பிரீதிகள் மூலம் உயர் பலனை அடையலாம் என்று நாடி கூறுகின்றது.

மகர இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 9ஆம் இடமான கன்னியில் நீசமடைய மத்திம பலனேயுண்டாகும். கடினமான புத்திரத்தடைகள் ஏற்படும். புதன் ஆட்சியாகிக் கூடினால் வரும் நீசபங்க ராஜயோகம் புத்திர வழியில் ஏற்பட்டாலும் கடுமையான பிரீதிகள் மூலம் நல்ல பலன்களையடையலாமென்று கூறப்படுகின்றது. பெண் பிள்ளைகளால் சில சோகமும், தொந்தமும் உண்டென்று கூறப்படுகின்றது.

பூர்வ புண்ணியம் தன் தகப்பன் இருக்கும் காலத்தே அழிய விதியுண்டாகும். இருந்தாலும் நீசபங்க ராஜயோகம் இருப்பின் மீண்டும் பெற விதியுண்டு. சுக்கிரனுடன் சூரியன் சேர்ந்தால் பங்கமுண்டு.

குலதெய்வம் பெண் தெய்வமாயிருக்க, பல இடர்களை உண்டு செய்யும். பங்காளிச் சண்டைகளையும் ஏற்படுத்தும். சில சாபங்களும் அதன் வழியில் ஏற்பட விதியுண்டாகும். கடின பூஜைகள் மூலம் அந்த பலனுண்டு.

சுக்கிரனுடன் புதன் கூடினால் தாய்மாமன் வகையில் திடீர்ச் சம்பந்த உறவுகளும், திடீர் உதவிகளும் உண்டாகும். ஆனாலும், நீடித்திருக்க விதி இராது.

விஷ்ணு ஆராதனையும், விஷ்ணு அவதார மகிமை, தோற்றங்கள் ஆகியவற்றை வழிபாடும் செய்தால் நன்மை உண்டாகும். நீசம் பெற்ற சுக்கிரனாதலால் மத்திமமான பலனே உண்டு. சுக்கிர பிரீதிகளைக் கடுமையாகச் செய்தால் நற்பலனை அடையலாமென்று அறியப்படுகின்றது.

மகர இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 10ஆம் இடமான துலாத்தில் தன் வீட்டிலேயே ஆட்சியாக நற்பலனுண்டு. புத்திர பிராப்திகளுக்குக் குறைவில்லை. பெண் பிள்ளைகள் அதிகமாய் இருக்க விதிகளுண்டாகும். பிள்ளைகளால் தன் தொழிலுக்கு உதவியும், உற்சாகமும் ஏற்படும். சூரியன் மற்றும் சத்துரு கிரகங்கள் கூட மத்திம பலனுக்குப் பின் உத்தம பலன்கள் உண்டென்றும், பிரீதிகள் செய்தால் நற்பலன்களை அடையலாமென்றும் கூறப்படுகின்றது.

பூர்வ புண்ணியாஸ்திகளால் தொழிலையும், அதன் வகையில் புகழையும் பெறலாம். சுக்கிரன் தனித்திருந்தாலும் தன் மித்துரு கிரகங்களுடன் கூடியிருந்தாலும் நன்மையுண்டாகும். சுக்கிரனுடன் இராகு, கேதுகள் கூட முரணான பலனுண்டாகும்.

குலதெய்வம் பெண் தெய்வமாயிருக்க நற்பலன் உண்டாகும். முதன்மையான தெய்வமாகவும் கலியுகம் நம்பாத அதிசயத்தைச் செய்வதாகவும் இருக்க அமிசங்கள் உண்டு. தொடர்ந்து பிரீதிகள், பூஜைகள் ஆகியன செய்து, குல தெய்வப் பலனையடையலாம்.

தாய்மாமன் வகையில் உறவும், தொழிலில் உதவியும் அடைய விதியுண்டாகும். சுக்கிரனுடன் புதன் கூட, சம்பந்த உறவுகள் ஏற்பட பிராப்திகள் ஏற்படும்.

இலட்சுமி உபாசனைகள், அட்டதிக்குப் பாலகர்கள் உபாசனைகள் போன்றவை ஏற்படும். சுக்கிரனுக்குக் கடுமையான யந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் 5ஆம் பாவம் மேலும் சிறப்படையும்.

மகர இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 11ஆம் இடமான விருச்சிகத்திலிருக்க ஆண் ஜெனனங்கள் அதிகமுண்டாக விதியுண்டாகும். சுக்கிரனுடன் இரண்டுக்கு மேற்பட்ட உறவுக் கிரகங்கள் கூட 5ஆம் பாவம் சிறக்கும். புத்திரர்களால் இலாப பலன்களையடையலாம்.

பூர்வ புண்ணியாஸ்திகள் இலாபமானவையாகவும், ஸ்திரமானவையாகவும் இருக்கும். சுக்கிரனுடன் சத்துருக்கள் கூடினால் மட்டுமே பூர்வபுண்ணிய வழியில் பங்கமுண்டாகும். பொதுவாக இலாபமானதாக இருக்கும்.

குலதெய்வம், ஆண் தெய்வமாயிருக்க அது உக்கிரமானதாகவும், சத்துருக்களை அழிக்கும் தெய்வமாகவும் காணப்படும். துடியான, பலிகளைப் பெறும் தெய்வமாகவும் இருக்கும். தேவையான பலி, படையல்களைக் கொடுத்து உயர்வான பலன்களையடையவும்.

சுப்பிரமணிய தேவருக்கு உபாசனைகள் செய்தலும் அறுபடை வீடுகளின் பெருமைகளை உணர்தலும், வணங்குதலும் உண்டாகும். முருக்கடவுளுக்குத் தொடர்ந்து பிரீதிகள் செய்துவர நல்ல பலன்கள் உண்டாகும்.

தாய்மாமன் வகையில் சில கால கட்டங்களில் தொடர்ந்து இலாபங்களும், சம்பந்த உறவுகளும் ஏற்படும். சுக்கிரனுடன் சத்துருக்கள் கூடினால் மத்திம பலனேயுண்டாகும். யந்திர, மந்திர பிரீதிகள் செய்து பலனைத் தக்க வைக்கவும்.

மகர இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 12ஆம் இடமான தனுசில் இருக்க பாபியாவார். பலனும் குறைவாகும். கடினமான புத்திரத் தடைகளை ஏற்படுத்தும். கடினமான பிரீதிகள் மூலம் ஆண் மகவு உண்டென்று கூறப்படுகின்றது.

பூர்வபுண்ணிய நன்மைகள் குறைவாகும். பெரும்பாலும் விரய பலன்களே அதிகம் ஏற்படும். சில, சாபம் பெற்று விளங்கும். சுக்கிரனோடு குரு கூடினால் அதமமான முரணான பலன்களே உண்டு.

குலதெய்வம் ஆண் தெய்வமாயிருக்கச் சில கால கட்டங்களில் வழிபாடுகள், படையல்கள் ஏதுமில்லாதிருக்கும். அதனால் தொந்தரவு உண்டாகும். விடாமல் குலதெய்வ பூஜை செய்துவரப் பலன்கள் உண்டாகும்.

சிவபூஜைகளாலும், சிவ அவதாரங்களினாலும் நன்மையுண்டு. சில காலங்களில் தெய்வ வழியில் அவநம்பிக்கையும் அதன் பின்பு நம்பிக்கை தொடர்தலும் உண்டாகும். விடாமல் நம்பிக்கை கொண்டு சிவ வழிபாடுகள் செய்யப் பலனுண்டாகும்.

தாய்மாமன் வகையில் மத்திம பலனேயுண்டாகும். தேவைக்கு ஒட்டிக்கொள்ளுதலும், விரயச் செலவுகளை ஏற்படுத்துதலும், தொடர்ந்து [illegible]

சுக்கிரன் இராசிக்கு 12ஆம் இடத்தில் மறைவான காரணத்தாலும், தன் சத்துரு வீட்டில் பாபியானதாலும் சில பலனை அதமமாகவும், முரணாகவும் செய்வார். பிரீதிகள் மூலம் உயர்பலனை அடையலாம்.

மகர இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் மகர இராசியிலேயே இருக்க நன்மையுண்டாகும். குரு நீசமாகிக் கூட சில பலன்களில் முரண்பாடான அமிசங்கள் ஏற்படும். புத்திர பிராப்திகள் உண்டு. சுக்கிரனுடன் பெண் கிரகங்கள் அதிகமாகச் சேர்ந்தால் நன்மையுண்டு. பெண் பிள்ளைகளாலும் 5ஆம் பாவம் உயர்வடையும் அமிசங்கள் ஏற்படும்.

பூர்வ புண்ணியமானது நன்மையானதாய் இருந்தாலும் இடம் பெயர்ந்து வாழ நேரும். பூர்வ புண்ணியத்திற்குப் பாதகமில்லை. அதனை முன்னிட்டுச் சில நன்மைகள் உண்டாகும்.

குலதெய்வம் வாகனத்தின்மேலும், குதிரைமேலும் பவனி வரும் தெய்வமாயிருந்தால் நன்மையுண்டு. ஆனால், அது மந்தமான மூர்க்கக் குணத்தையுடையதாயிருக்கும். தொடர்ந்து பிரீதிகள் செய்தால் நன்மையுண்டாகும்.

ஈஸ்வர உபாசனைகளாலும், அட்டதிக்குப் பாலகர்கள் வழிபாட்டாலும் நல்ல பலனுண்டாகும். நவக்கிரக வழிபாட்டால் உயர்வான பலனை அடைய விதி உண்டாகும்.

சுக்கிரன் மித்துரு கிரகங்களோடு கூடியிருந்தால் தாய்மாமன் வகையில் சம்பந்த உறவுகள் அமையும். சுக்கிரன் தனித்திருந்தாலும், பகைக் கிரகம் மற்றும் நீசருடன் கூடியிருந்தாலும் மத்திமமாகும். சுக்கிர யந்திர, மந்திர பிரீதிகள் செய்து நற்பலனை அடையவும்.

மகர இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 2ஆம் இடமான கும்பத்தில் இருக்க நன்மையுண்டு. புத்திர பாக்கியங்கள் ஏற்படும். சனி கூடியிருத்தல் நன்மையாகும். சூரியன் கூடினால் பலன் மத்திமமாய் உண்டாகும். பெண் பிள்ளைகளால் இலாப நட்டங்கள் கலந்தே வரும்.

பூர்வ புண்ணியாஸ்திகளால் சில தனங்களைப் பெற விதிகளுண்டு. சுக்கிர னோடு சத்துருக்கள் கூடினால் அதற்கும் பங்கமுண்டாகும். விவசாய நிலங்க ளாகவோ மனைகளாகவோ இருந்தால் ஸ்திரமாகும் அமிசங்கள் ஏற்படும். சுக்கிரன் தன் மித்துருக்களுடன் கூடினால் பெருநன்மையுண்டாகும்.

குல தெய்வம் மிருகங்கள் ரூபமாகவோ வாகனமேறி வரும் தோற்றத்துடன் கூடிய தெய்வமாகவோ இருந்தால் விசேஷ பலிதங்கள், நற்பலன்கள் ஆகியன

உண்டாகும். தொடர்ந்து பூஜைகள், வழிபாடுகள் ஆகியன நடத்துவதால் குலதெய்வத்தின் பலனை நல்லபடியாகப் பெறலாம்.

கிராம தேவதைகள், சிவகண உச்சாடனங்கள் ஆகியவற்றால் மேன்மையுண்டாகும். உடனடி சித்தியேற்படும். சுக்கிரனோடு மித்துருக்கள் கூடி நிற்க குலதெய்வ அருளால் வாக்குப் பலிதம் உண்டாகும். தாய்மாமன் வகையில் சம்பந்த உறவுகள் குறைவாகும். ஆனால், தொடர்ந்து உறவுகள் இருந்து வரும். இதை முன்னிட்டு மத்திம பலனேயுண்டாகும்.

மகர இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 3ஆம் இடமான மீனத்தில் உச்சமாக உத்தமமான பலனுண்டாம். ஆண் பிள்ளைகளால் நன்மையும், தொடர்ந்து வழிநடத்தும் நிலைகளும் ஏற்படும். சுக்கிரன் தனித்திருந்தாலும் தன் உறவுக் கிரகங்களுடன் சேர்ந்திருந்தாலும், நன்மையாகும். நீச பகை கிரகங்களுடன் கூட மத்திம பலனே 5ஆம் பாவ வழியில் ஏற்படும்.

பூர்வ புண்ணியங்களைத் தன்னுடன் சேர்த்துத் தன் உடன்பிறப்புகளும் பலனை அனுபவிக்கும் நிலையுண்டாகும். பொதுவாக, பூர்வ புண்ணியாஸ்திக்கு பங்க பாதகங்கள் குறைவாகும். சுக்கிரன் வலுத்திருந்தால் நற்பலனை அடையலாம்.

குலதெய்வம் ஆண் தெய்வமாயிருக்க மெத்த பலன்களுண்டு; பந்தியில் தலைமையாகவும், உயர்ந்த தெய்வமாகவும் இருக்கும். பொங்கல், பலி, படையல்கள் ஆகியன செய்து வரப் பூரண பலனையும் பலங்களையும் பெறலாம்.

சிவ வழிபாடுகள் நல்ல பலனைத் தரும். வடக்கு நோக்கியிருக்கும் தெய்வங்களால் விசேஷ பலனுண்டாகும்.

தாய்மாமன் வகையில் சம்பந்தப் பலன்கள் குறைவாகும். உறவுகளும் தொடர்ந்து இராது. புதன் நீசமாகிக் கூடினால் தாய்மாமன் வகையில் திடீர் யோகங்கள், பலன்கள் ஆகியவை உண்டு. சுக்கிரனுக்கு யந்திர மந்திர பிரீதிகள் செய்ய மெத்த பலனுண்டாகும்.

மகர இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 4ஆம் இடமான மேஷத்தில் இருக்கப் புத்திர பிராப்திகள் உண்டாகும். சுக்கிரனுடன் சனிகூட மந்தமான நிலைகள் சந்தான வழியில் ஏற்படும். ஆண் பிள்ளைகளால் பயனும், பலனும் ஏற்படும்.

பூர்வ புண்ணியங்கள் மனைகளாய் இருந்தால் அவற்றால் மிகுந்த பயனுண்டாகும். சுக்கிரனுடன் செவ்வாய் கூடினால் யோகமுண்டாகும். மனைகளைத் தக்க வைக்கும் நிலைகளும் ஏற்படும். சூரியன் உச்சமாகிக் கூடச் சில பலன்கள் முரணாகவே அமையுமென்று கூறப்படுகின்றது.

குலதெய்வம் ஆண் தெய்வமாயிருந்தால் மிகுந்த உக்கிரமாகவும், பலிகளை ஏற்பதாகவும் இருக்கும். அதற்கு வேண்டிய முறைப்படி பிரீதிகள் செய்து, அதன் பலனைப் பூரணமாகத் தக்க வைத்துக்கொள்ளலாம். குலதெய்வ வழிபாட்டை விட்டுவிட்டு மறுபடியும் தொடர்ந்தால் மிகவும் கவனமாக இருக்க வேண்டும்.

சுப்பிரமணிய தேவர் உபாசனை ஏற்படும். அறுபடை வீட்டின் அவதார மஹிமைகளை நல்லபடியாக உணரும் சக்தியும், வழிபாட்டு நிலைகளும் உண்டாகும். தொடர்ந்து பூஜைகள் செய்ய நற்பலன்களாகும்.

தாய்மாமன் வழி சம்பந்த உறவுகள் மத்திமமாகவே அமையும். சுக்கிரனோடு புதன் கூட சில வகையில் சேரும். தொடர்ந்து ஸ்திரமான உறவாய் இராது. சுக்கிரனுக்கு யந்திர மந்திர பிரீதிகள் செய்வதன் மூலம், உயரிய பலனையடையலாம்.

# கும்பம்

திருமாலின் அமிசமாகிய புத பகவானை 5ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற கும்ப இராசி அன்பர்களே!

5ஆம் பாவமென்பது புத்திரர்கள், குல தெய்வம், பூர்வபுண்ணியம், மந்திர சம்பந்தங்கள், தாய்மாமன் போன்றவற்றின் பலன்களைக் கூறுவதாகும்.

உங்கள் இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான புதன் மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளிலும் இருந்த பலனும், அவரோடு மற்ற கிரகங்கள் கூடிய பலனும் 5ஆம் பாவ பலன்களாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

அன்பர்களே! உங்கள் இராசிக்குப் புதன், எந்த இராசியில் இருக்கின்றார் என்பதை அறிந்து உங்களின் பலன்களை அறிந்து கொள்ளவும். புதனானவர் மற்ற கிரகங்களோடு கூடி கெட்ட பலன்களைச் செய்ய நேர்ந்தால் புதபகவானுக்கு உரிய கிரகப் பிரீதிகள் செய்து பலனைத் தக்க வைக்கவும்.

புதன் பாபர்களோடு சேர்ந்தால் பாபியாகவும், சுபர்களோடு சேர்ந்தால் சுபராகவும் பலனைச் செய்வார்.

''புங்கனவர் மதிக்குத் தானைந்தோனாக
பாபியொடு கூடிடினும் பாபியாவார்
மங்கமேல் துர்பலன்கள் சிலவுந் தானாய்
மேலதனில் வந்துபோகும் அட்டியில்லை
பங்கமில்லை சுபரோடு சேர்ந்தாலும்
புண்ணியமே மறையா திருந்தாலே
அங்கமாய் புத்திர பிராப்தியாகும்
அனேகபலன் பஞ்சம வழிதானுண்டே''

புதன் கூடாத கிரகங்களோடு கூடித் துர்பலன்களைச் செய்ய நேர்ந்தாலும், பஞ்சம வழியில் இடர்களை உண்டு செய்தாலும், சுதர்சன ஹோமங்கள், நாராயண பூஜைகள் ஆகியவற்றைச் செய்வதாலும், துளசி அர்ச்சனைகள், பெருமாள் ஆலயங்கள் வழிபாடு ஆகியவற்றாலும் நற்பயன்களை அடையலாமென்று கூறப்படுகின்றது. புதனை மதிக்கு மட்டும் ஆராயாமல், விதிக்கும் கதிக்கும் சேர்த்து ஆராய்ந்து பலனறிவது நன்மையாகும் என்று பதஞ்சலி மகாமுனிவரின் நாடி வாயிலாக அறியப்படுகின்றது.

கும்ப இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 5ஆம் இடமான மிதுனத்தில் இருக்கப் புதன் தனித்திருந்தால் நன்மையுண்டாகும். இராகு, கேதுக்களுடன் கூடினால், புத்திர பிராப்திகளுக்கும் தடையுண்டாகும். தக்க பிரீதிகள் செய்து பலனை அடைய வேண்டும். பெண் பிள்ளைகளால் நன்மையுண்டாகும்.

பூர்வபுண்ணியங்கள் கைமாறிப் போய் வரும் இயல்புடையதாயிருக்கும். புதனுடன் இரண்டுக்கு மேற்பட்ட நட்புக் கிரகங்கள் கூட சாதகப்பலனுண்டாகும். தக்க வைக்கும் நிலைகளுமேற்படும்.

குலதெய்வம் பெண் தெய்வமாயிருக்க உயர்ந்த பலன்களுண்டு. அதன் ஆற்றல்களால் தீமைகள் அழியும். சத்துருக்களை வெல்வார்கள். முறைப்படி படையல்கள், பொங்கல், பலி செய்துவர நற்பலன்கள் உண்டாகும்.

புதனுடன் சுபக்கிரங்கள் கூடியிருக்கத் தாய்மாமன் வழியில் சம்பந்தமும், உறவுகளும் ஏற்படும். பொதுவாக, நற்பலன்கள் உண்டென்று அறியப்படுகின்றது.

விஷ்ணு ஆராதனைகளும், துளசி அர்ச்சனைகளும் பூஜைகளும் செய்து வர நற் பலன்களுண்டு. துர்பலன்கள் சில நடந்தால் புதனுக்கு யந்திர மந்திர பிரீதிகள் செய்யவும்.

கும்ப இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 6ஆம் இடமான கடகத்தில் இருக்க மத்திம பலனே உண்டாகும். புத்திரத் தடைகள் ஏற்பட்டு, பெண் மக்கள் தோன்ற விதியுண்டு. கிரகப் பிரீதிகளும், யந்திர, மந்திரப் பிரீதிகளும் செய்ய நற்பலனாகும்.

பூர்வ புண்ணியங்கள் கடனாலும், வில்லங்க விவகாரங்களாலும் அழிக்கப்படும். அதனால் தொந்தரவான நிலைகள் உண்டாகும். புதனுடன் இரண்டுக்கு மேற்பட்ட பகை கிரகங்கள் கூடினால், மிகவும் அதம பலனே உண்டாகும்.

குலதெய்வம் சம்பந்தப்பட்ட வழிபாடுகளைச் செய்வதில் கால தாமதமும் இடையூறும் உண்டாகும். இரத்தப் பலி வாங்கும் தெய்வமாயிருந்தால் பூஜைகளைத் தவறாமல் நடத்திப் பலனை அடைய வேண்டும்.

பார்வதி தேவியையும், சக்தியின் அமிசங்களையும் வணங்குவதால் நற்பலன்கள் உண்டு. தொடர்ந்து பூஜை செய்தால் சத்துருக்களை ஜெயிக்கும் ஆற்றலையடையலாம். அதனால் மிகுந்த நன்மையுண்டு.

தாய்மாமன் வகையில் மத்திம பலனேயுண்டு. இடருக்குமேல் ஆறுதல் நிலைகள் உண்டு. ஆனால், சம்பந்த உறவுகள் குறைவாக இருக்கும். துர்பலன்கள் ஏற்பட்டால் கிரகப் பிரீதிகள் செய்து பலனையடையவும்.

கும்ப இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 7ஆம் இடமான சிம்மத்தில் இருக்க மத்திம பலனேயுண்டு. புத்திர பிராப்திகள் ஏற்படும். ஆண் பிள்ளைகளால் நன்மையுண்டாகும். புதனுடன் சூரியன் கூடினால் முரணான பலன்களே புத்திர வகையில் உண்டாகும்.

பூர்வ புண்ணியங்கள் மத்திமமான பலன்களையே செய்யும்; ஆனாலும் பங்கமில்லை. புதன் இரண்டுக்கு மேற்பட்ட பகைக் கிரகங்களுடன் கூடினால் பூர்வ புண்ணிய வகையில் பாதகம் உண்டாகும். கிரகப் பிரீதி செய்ய நலமுண்டு.

குலதெய்வம் ஆண் தெய்வமாயிருக்கப் பந்தியில் முதல் தெய்வமாகவும், உயர்ந்த தெய்வமாகவும் இருக்க அமிசங்கள் உண்டாகும். பலி, பூஜைகள் ஆகியன செய்து நற்பலனை அடையவும்.

சிவபூஜைகள் செய்வதாலும், சிவாலய பணிகளாலும் நன்மையுண்டாகும். சிதம்பர பூஜைகள், யந்திர, மந்திர பிரீதிகள் ஆகியன மேற்கொள்ள நற்பலனுண்டு.

தாய்மாமன் வகையில் சம்பந்த உறவுகள் ஏற்பட பிராப்திகள் உண்டாகும். புதன் தனித்திருந்தாலும் மித்துருக்களோடு சேர்ந்தாலும் நன்மையுண்டாகும்.

சில மத்திம பலன்கள் உண்டானால் புதன் கிரகத்திற்கு யந்திர மந்திர பிரீதிகள் மேற்கொண்டு நற்பலனையடையவும்.

கும்ப இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 8 இடமான கன்னியில் ஆட்சியுச்சம் ஏறச் சில நட்டப் பலன்களும். சில வகையில் இலாபப் பலன்களும் உண்டாகும். புத்திர சந்தானத் தடையுண்டாகும். கடுமையான கிரகப் பிரீதிகளுக்குப் பின் நல்ல புத்திர பலனை அடையலாம். குருவுக்குத் தனிப்பட்ட முறையில் பிரீதிகள் செய்வது நன்மையாகும்.

பூர்வ புண்ணிய வகையில் மத்திம பலனேயுண்டாகும். பல பேர் கைமாறும் அமைப்புக் கொண்டதாயிருக்கும். தன் கைக்குக் கிடைப்பதில் சிரமமுண்டாகும்.

குலதெய்வம் பெண் தெய்வமாயிருந்தால் அது ஆக்ரோஷமாகவும் துடியாகவுமிருக்கும். சில இரத்தப் பலிகளைப் பெறும். தக்க முறையில் பூஜைகள் செய்து பலனையடையவும்.

விஷ்ணு ஆராதனைகளாலும், நாராயண பூஜைகள், வழிபாடுகள் ஆகியவற்றாலும் ஆலயங்களைத் தரிசித்தலாலும் தெய்வப் பலன்கள் மேன்மையடையும்; ஆயுள் விருத்தியுண்டாகும்.

தாய்மாமன் வகையில் முன் நன்மையும், பின் இடரும் உண்டாகும். சம்பந்த உறவுகள் இருந்தாலும் மத்திமம். துர்பலன்களைத் தவிர்க்கப் பூஜைகள் மேற்கொள்ள நல்ல பலனையடையலாம்.

கும்ப இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 9ஆம் இடமான துலாத்திலிருக்கப் புத்திர, பிராப்திகள் உண்டாகும். பெண் பிள்ளைகளால் பாக்கியமுண்டாகும். சூரியன் நீசமாகிக் கூடினால் மத்திம பலனுண்டாகும்.

பூர்வ புண்ணியாஸ்திகள் தன் தகப்பன் வழியில் கைமாற விதியுண்டு, தனக்குக் கிடைப்பதில் மத்திம பலனேயுண்டாகும். பிரீதிகள் செய்தால் தன் வழியில் சாதகப் பலனுண்டு.

குலதெய்வம் பெண் தெய்வமாயிருக்க உயர்ந்த பலன்கள் உண்டு. பந்தியில் உட்படும் தெய்வமாகவும், தனக்குக் கீழ் உபதெய்வங்களைக் கொண்டதாகவும் இருக்கும். சரியானபடி பூஜை, பலிகளை மேற்கொண்டு வர நற்பலன்களாகும்.

தாய்மாமன் வகையில் உதவியும், சம்பந்த பாக்கியங்களும் உண்டாகும். புதன் தனித்திருந்தாலும், தன் உறவுக் கிரகங்களுடன் சேர்ந்திருந்தாலும் நன்மையுண்டு.

இலட்சுமி உபாசனை செய்வதாலும், இலட்சுமியவதார மகிமைகளை உணர்வதாலும் நன்மையுடண்டாகும். ஐஸ்வரியங்களும் ஏற்படும். துர்பலன்கள் ஏற்பட்டால் புதபகவானுக்கு பிரீதிகள் செய்து நற்பலனையடைவும்.

கும்ப இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 10-ஆம் இடமான விருச்சிகத்தில் இருக்கப் புத்திரபிராப்திகள் உண்டாகும். ஆண் பிள்ளைகளால் தொழில் விருத்தியாகும். அவர்கள் கர்மம் செய்வதில் மேன்மைகள் ஏற்படும்.

பூர்வ புண்ணியாஸ்திகள் பலப்படும். அவ்வகையில் தொழில் அமைப்பில் சிலவும் உண்டாகும். புதனுடன் பாபக் கிரகங்கள் கூடினால் பூர்வபுண்ணிய வழியில் மத்திம பலனே உண்டாகும்.

குலதெய்வம் ஆண் தெய்வமாயிருந்தால் அது உக்கிரமானதாயும் பராக்கிரமங்கள் செய்யக்கூடியதாகவும் இருக்கும். தலைமையில் உயர்ந்ததாகவும், பந்தியில் முதல் தெய்வமாகவும், இரத்தப் படையலைப் பெறுகின்ற தெய்வமாகவும் இருக்க அமிசங்கள் உண்டாகும்.

அவ்வப்போது தாய்மாமன் வழியில் அனுசரணைகள் வந்துபோகும். தொழில் வழியில் சில உதவிகள் உண்டாகும். ஆனால், திருப்தியிராது.

சுப்பிரமணியஸ்வாமிக்கு பூஜைகள் செய்வதாலும் வீரபத்திர ஸ்வாமிக்கு பிரீதிகள் செய்வதாலும், திருமாலை வணங்குவதாலும் நல்ல பலன்கள் உண்டாகி 5ஆம் பாவம் சிறக்குமென்று கூறப்படுகின்றது.

கும்ப இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 11 ஆம் இடமான தனுசு இராசியில் இருக்க, புத்திர பிராப்திகள் உண்டாகும். ஆரம்ப காலத் தடைகள் சில இருப்பின் திருமாலுக்கும், குருபகவானுக்கும் பிரீதிகள் செய்ய ஆண் பிள்ளைகளால் வமிச விருத்தியும், இலாப பலன்களும் உண்டாகும்.

புதனுடன் இரண்டுக்கு மேற்பட்ட நட்புக் கிரகங்கள் கூட பூர்வ புண்ணியங்களால் இலாபமும் அதனால் செல்வாக்கும் ஸ்திரத் தன்மையும் உண்டாகும். அவ்விடத்தில் இராகு, கேதுகள் கூட மத்திமம் என்று கூறப்படுகின்றது.

குலதெய்வம் ஆண் தெய்வமாயிருக்க மேன்மைகளும், அதனால் இலாப பலன்களும் உண்டாகும். மிகவும் காப்புள, சுத்தமுள்ள கிராம வழக்கில் பயப்படும் அளவிலான தெய்வமாயிருக்கும்.

தட்சிணாமூர்த்தி தேவர் உபாசனைகளையும் திருமால் உபாசனைகளையும் மேற்கொள்ள உயர்ந்த பலன்களும், சுதர்ஸன எந்திரங்களால் தொழில் மற்றும் குடும்ப இலாபங்களும் உண்டாகும்.

தாய்மாமன் வகை உறவுகள் பிரிந்து பின் பலப்படும். சம்பந்த இலாபங்களும் உண்டாகும். 5ஆம் பாவ வழியில் சில துர்பலன்களைச் சந்திக்க வேண்டியிருந்தாலும், புத்திர பிராப்திகள் தள்ளிச் சென்றாலும் தட்சிணாமூர்த்திக்கும் குருபகவானுக்கும் பிரீதிகள் செய்யவும்.

கும்ப இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 12-ஆம் இடமான மகரத்தில் இருக்கப் புத்திரத் தடைகள் உண்டாகி விலகும். புத்திர பிரீதிகள் செய்தால் நல்ல புத்திரர்களை பெற விதிகள் உண்டு. ஆண், பெண் குழந்தைகள் கலந்தே பிறக்கும்.

பூர்வ புண்ணியங்கள் வில்லங்கமானவையாய் இருக்கும். அதனால் சில விரயங்கள் ஏற்படும். மந்தமான பலன்களைக் குறைத்துக் கொடுக்கும் அமிசங்களைக் கொண்டிருக்கும்.

குலதெய்வம் பிரம்மச்சரிய தெய்வமாகவும், கருப்புசாமி வகைத் தெய்வமாகவும் இருக்கும். அது மிகவும் துடியானதாகவும், கோபங் கொண்டதாகவும், வேண்டினால் நல்ல பலன்களை நிறைவேற்றக் கூடியதாகவும் இருக்கும்.

ஈஸ்வர உபாசனைகளையும் சிவலிங்க வழிபாடுகளையும் மேற்கொள்ள உயர்வான பலன்களுண்டு.

தாய்மாமன் வகையிலான உறவுகள் மத்திமம். அதிகமாய் விரய பலன்களையே சந்திக்க வேண்டியிருக்கும். புதன் கிரகத்திற்கு உரிய எந்திர மந்திர பிரீதிகள் செய்யவும்.

கும்ப இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான புதன் இராசியிலேயே இருக்கப் புத்திரபிராப்திகள் தடைப்பட்டுப் பின்பு உயர்வாக விளங்கும். புதனுடன்இரண்டுக்கு மேற்பட்ட நட்புக் கிரகங்கள் கூட 5ஆம் பாவ வழியில் பிற்பலன்கள் உண்டாகும்.

பூர்வ புண்ணிய வழிகளில் பலன்கள் குறைந்தே காணப்படும். மந்தமான சூழ்நிலைகளும், பலன்களை அடைய நாளாகும் நிலையும் உண்டாகும். பூர்வ புண்ணிய வழியிலான சிக்கலை நீக்குவதற்கு நெடுங்காலமாகுமென்று கூறப்படுகின்றது.

குதிரைமேலேறிய தெய்வமோ கரிய நிறமுடைய தெய்வமோ குலதெய்வமாய் இருந்தால் மேன்மையும் காரிய ஜெயமும் உண்டாகும். ஆனால், வழிபாடு குறைவதால் தீமையும் உண்டாகுமென்று அறியப்படுகின்றது.

பஞ்சாட்சர உபாசனைகளாலும் சிவ பூஜைகளை மேற்கொள்வதாலும் உயர்வான பலன்களும், தீமைகளில் உடனடி நிவாரணங்களும் உண்டாகும். சிதம்பர பூஜைகளை மேற்கொள்ள உயர்ந்த பலனும் சித்திகளும் ஏற்படும்.

தாய்மாமன் வகையில் ஒட்டுறவு இருந்தாலும் மத்திமமான நிலைகளே உண்டாகும். மந்தமான சூழ்நிலைகளே ஏற்படும். சம்பந்த உறவுகள் குறைவாகவே உண்டாகும். புதன் கிரகத்திற்கு எந்திர மந்திர பிரீதிகளை மேற்கொள்ளப் பலனுண்டு.

கும்ப இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 2ஆம் இடமான மீனத்தில் நீசமாகி இருக்க மத்திம பலன்கள் உண்டாகும். புத்திர பிராப்திகளுக்கு ஆரம்பத் தடைகளும், அதனால் சில தொல்லைகளும் உண்டாகும். புத்திர பிரீதிகள் செய்யத் தீர்க்க பலன்கள் உண்டு. அதனால் ஆண் பிள்ளைகளால் விருத்தியும் சுகமும் உண்டாகும்.

பூர்வ புண்ணிய வழியில் தனங்கள் குறையும். அதனால் குடும்ப வகையில் வில்லங்க விவகாரங்களைச் சந்திக்க நேரும். சில சாபக் கேடுகளும் பூர்வபுண்ணிய வழியில் ஏற்படும். புதன் கிரகப் பிரீதிகள் செய்தால் நல்ல பலனை அடையலாம்.

சில காலங்களுக்குக் குலதெய்வம் சாபம் பெற்றிருப்பதுபோல் காணப்படும். அதற்குப் பின்பு உயர்வுடனும் நல்ல முறையிலும் பலன் செய்ய, அதற்குப் பிரீதிகள், பூஜைகள் ஆகியன செய்தால் நல்ல பலன் உண்டாகும்.

தாய் மாமன் வகையில் பலன்கள் குறைவாகும். சம்பந்த உறவுகளும் தடைப்படும். அடிப்படையில் உறவுகள் பாதிக்கப்பட்டிருக்கும். கிரக பூஜைகள் மேற்கொள்ளப் பலனுண்டு.

கும்ப இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 3ஆம் இடமான மேஷத்தில் இருக்க, ஆரம்ப காலத்தில் புத்திர பிராப்திக்குத் தடையுண்டு. திருமாலுக்கும் தட்சிணாமூர்த்தி தேவருக்கும் உரிய பிரீதிகளைச் செய்யத் தடைகள் விலகி ஆண் விருத்தியுடன் 5ஆம் பாவ பலன்கள் உயரும்.

பூர்வ புண்ணியாஸ்திகள் மனைகளாகவோ கட்டடங்களாகவோ இருக்கும். அதனைப் பிரிக்கும் சமயம் தனக்கு இளையோரால் இடர்கள் ஏற்படும். புதனுடன் சனி நீசமாகிக் கூட பூர்வ புண்ணிய வகையில் உரிய காலத்தில் தீர்வு கிடைக்காது.

குலதெய்வம் ஆண் தெய்வமாய் இருந்தால், அது பராக்கிரமமானதாயும் எதிரிகளைத் தவிடுபொடியாக்கி வெல்லக்கூடியதாகவும் இருக்கும். இடைவிடாமல் அதற்கு உரிய முறையில் படையல்கள் செய்தால் அதன் பலனைப் பூரணமாக அடையலாம்.

சுப்பிரமணியக் கடவுள், அறுபடை வீட்டுத் தெய்வங்கள், சடாச்சர மஹிமை, போன்ற உயரிய தெய்வ வழிபாடுகளாலும் மகிமையை உணர்தலாலும் நல்ல பலன்கள் உண்டு.

தாய்மாமன் வகையில் மத்திம பலனுண்டாகும். சம்பந்த உறவுகள் பாதிக்கப்படும். புதனுடன் செவ்வாய் கூடினால் தாய்மாமன் வழியில் இடருண்டாகும். கிரகப் பிரீதிகள் செய்துவரப் பலனுண்டு.

கும்ப இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 4ஆம் இடமான ரிஷபத்தில் இருக்கப் புத்திர பிராப்திகள் உண்டு. பெண் பிள்ளைகளால் விருத்தியும் சுகமும் காணப்படும்.

பூர்வ புண்ணியாஸ்திகள் மனைகளாய் இருக்க, அவற்றின் வழியில் சொற்ப வருவாய் உண்டாகச் சில வழிகள் ஏற்படும். காலங்கடந்தே அப்பலனை அனுபவிக்க முடியுமென்று கூறப்படுகின்றது.

குலதெய்வம் பெண் தெய்வமாய் இருந்தால் உயர்வான பலன்கள் உண்டாகும். மங்களகரமான சுப பலன்களைத் தரக்கூடிய இளவயது தெய்வமாகவும், சிவப்பு ஆடையை அணியக்கூடிய தெய்வமாகவும் இருக்க, இல்வகையிலும் தொழில் மற்றும் புத்திர வகையிலும் உயர்வுகள் ஏற்படும்.

இலட்சுமி உபாசனைகள், மற்றும் மஹாவிஷ்ணு, மகாலட்சுமி சேர்ந்தாற் போல் உள்ள அவதார உருவங்களை வழிபடுதல் போன்றவற்றாலும் துளசி அர்ச்சனையாலும், சுதர்ஸன யந்திரத்தாலும் மஹிமைகள் உண்டாகும்.

தாய்மாமன் வகையில் சம்பந்த உறவுகள் உண்டாகும். அவர்கள் வகையிலும் சுமுகத் தொடர்புகள் உண்டாக வழிகள் உண்டாகும். திருமாலை பூஜிப்பதாலும், புதன் யந்திர, மந்திரங்களை வழிபடுவதாலும் உயர்வான பலன்கள் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 5ஆம் இடமான மிதுனத்தில் இருக்கப் பெண் மக்களால் உயர்வுண்டாகும். நன்மக்களைப் பெறுவார்கள் என்று கூறப்படுகின்றது.

பூர்வ புண்ணியாஸ்திகள் இருந்தாலும் பல பேர் கைமாற விதியுண்டாகும். அவ்வகையில் நிரந்தரமான பலனை அடைவதற்குத் தடையுண்டாகும். புதபகவானை வழிபடுவதாலும் அவருக்குரிய யந்திர மந்திரங்களை வழிபடுவதாலும் இடர்கள் நீங்கி சுமுக பலனுக்கு வழிவகுக்கும்.

குலதெய்வம் பெண் தெய்வமாய் இருக்க உயர்ந்த அமிசங்களைக் கொண்டும், தனக்குக் கீழ் உபதேவதைகளைக் கொண்டும் இருக்கும். அதற்கு உரிய முறையில் படையல்கள், வழிபாடுகள் ஆகியன செய்துவர உயர்வான பலன்களை அடையலாம்.

மஹாவிஷ்ணுவை வழிபடுவதாலும் அவர் அவதார மகிமைகளை உணர்வதாலும் துளசி அர்ச்சனை, சுதர்ஸன ஹோமங்கள் ஆகியன நடத்துவதாலும், தெய்வ வழிபாடுகள் சிறந்து நல்வாழ்வுக்கும், தெய்வீக சித்திக்கும் வழி வகுக்கும்.

தாய்மாமன் வகையில் சம்பந்த உறவுகள் உண்டாகும். சில விதத்தில் அனுசரணைகள் உண்டாகும். மிதுனத்தில் புதன் இருக்க அவருடன் இரண்டுக்கு மேற்பட்ட சுப கிரகங்கள் கூடினால் 5ஆம் பாவம் சிறக்கும்.

புதனுக்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்வதால் 5ஆம் பாவ வழியில் பூரணமான நல்ல பலனை அடையலாம்.

# மீனம்

சந்திர பகவானை 5ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற மீன இராசி அன்பர்களே!

5ஆம் பாவமென்பது புத்திரர் புத்திரிகள், தடைக்கு நிவர்த்தி, தாய்மாமன், குல தெய்வம், மந்திர சம்பந்தம், பூர்வ புண்ணியம் போன்ற பலன்களைக் குறிப்பிடும்.

உங்கள் இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியான சந்திரன், உடல் என்ற இராசி ஆகி மீனத்தில் இருந்ததனால் உங்கள் இராசிக்கு 5ஆம் இடமான கடகத்தில் மற்ற கிரகங்கள் நின்ற பலனையும், மீனத்தில் சந்திரனுடன் மற்ற கிரகங்கள் கூடிய பலனையும், உங்கள் இராசிக்கு 5ஆம் பாவ பலனாக அறிகின்றோம்.

5ஆம் இடத்திலோ 5ஆம் இடத்ததிபதியுடனோ துர்க் கிரகங்கள் சேர்வதாலோ பார்ப்பதாலோ ஏற்படும் துர்பலன்களைத் தவிர்க்க சந்திர பகவானுக்கும் சந்திரனுக்கு அதிதேவதையான பார்வதி தேவிக்கும் பூஜைகள் மேற்கொள்ள வேண்டும். அதனால், துர்பலன்கள் குறைந்து நல்ல பலன்கள் அதிகரிக்கும் என்று கூறப்படுகின்றது.

"ஆறோனு மைந்திலேற புத்திரன் சத்துருபோலேதான்
அட்டமத்தோன் மைந்திலேறப் புத்திர பங்கமாமே
வீரியத்தோ னைந்திலேறக் குற்றங்கள் நிறையண்டு
விரையத்தோ னைந்திலேற பஞ்சமும் இடருமெத்த
மெத்தவரும் இடர் நீக்க பிரீதிகள் மெத்த
மேவமேல் தட்சிணாமூர்த்தி தேவருக்குமே
உத்தமமாய் குருவாரம் தீபதூபமென்றே
உரைத்திட்டேன் செய்தாலே பலனுந்தானே"

இராசிக்கு ஆறுக்குடையவர் 5இல் இருந்தாலும் இடருண்டு. 8ஆம் இடத்திற்குரியவர் 5இல் இருந்தாலும் 3ஆம் இடத்ததிபதி 12ஆம் இடத்ததிபதி 5இல் இருந்தாலும் 5ஆம் பாவ வழியில் இடர்கள் உண்டாகும். மேற்சொன்ன பிரீதிகள் செய்ய உயர்வுப் பலனுண்டாம்.

சந்திர பகவான் இராசிக்கு 5ஆம் இடத்ததிபதியாக, அவர் வீடான கடகத்தில் 3,6,8,12 போன்ற இடத்ததிபதிகள் இருந்தால் புத்திர இடர்களும் சந்தான பாக்கியங்களும் குறையும் என்று கூறப்படுகின்றது. இவை தவிர மற்ற இடத்ததிபதிகளும், சுபர்களும் கடகத்தில் இருந்தாலும், கடகத்தைப் பார்த்தாலும் 5ஆம் பாவ வழியில் தொல்லைக்ள் இருந்தாலும் விலகும்.

5ஆம் இடமான கடகத்தில் இராகு, கேதுகள் இருக்கச் சில பலன்களை நன்மையாகச் செய்தாலும் சில பலன்களைப் பூர்ணமாகக் கிடைக்காதபடி செய்துவிடுவார்கள். இராகு, கேதுகளுக்குச் சர்ப்ப பிரீதிகள் செய்வதன் மூலம் புத்திர சந்தான பாக்கியங்களைப் பெறலாம்.

இராசிக்கு 5ஆம் இடத்தில் சுப கிரகங்கள் வீற்றிருக்கப் பூர்வ புண்ணியங்கள் வலுத்திருக்கும். ஆனால், ஆறுக்குடையவர் 5இில் இருந்தால் பூர்வ புண்ணிய வழியில் வில்லங்கங்களைச் சந்திக்க வேண்டியிருக்கும். அதுபோல் 3,8,12-க்குடையவர்கள் 5ஆம் இடத்தில் இருந்தாலும் பூர்வ புண்ணிய வழியில் செல்வாக்கு குறைந்தும், அதனை முழுமையாக அடைய முடியாத நிலை உண்டாகும்.

மீன இராசிக்கு 5ஆம் இடமான கடகத்தில் பாப கிரகச் சேர்க்கைகள் இருந்தால் 5ஆம் பாவ வழியில் தொல்லைகளே உண்டாகும்.

குலதெய்வ வழியில் பூரணமான பலனை அடைய முடியாது. குலதெய் வத்தை நீண்ட காலமாக வேண்டாமல் திடீரென்று வேண்டுதலாலும் படை யல்கள் செய்வதனாலும் தொல்லைகளும் துயரங்களும் உண்டாகும். சந்திர பகவானுக்கும், பார்வதி தேவிக்கும் உரிய பிரீதிகளைச் செய்வதன் மூலம் 5ஆம் பாவ வழியில் உயர்வான பலனை அடையலாம்.

மீன இராசி அன்பர்கள் ஆச்சார அனுட்டானமுடையவர்களாதலால் சக்தி பூஜைகளை மேற்கொள்ளுதல் உயர்வான பலன்களைக் கொடுக்கும். கடகத்தில் இரண்டுக்கும் மேற்பட்ட பெண் கிரகங்கள் கூடினாலும் அவர்களோடு இராகு கேதுகள் கூடினாலும் தெய்விகச் சித்திகள் சக்தி வழிபாட்டின் மூலம் ஏற்படும். ஐந்தாம் இடமான கடகத்தில் நீசக் கிரகங்கள் இருந்தால் சில துர் தேவதைகளின் தொல்லைகளுக்கு ஆளாக வேண்டியிருக்கும். துர்க் கிரக பெண் தெய்வ உபாசனைகளைக் குறைத்தல் வேண்டும். இல்லையேல் இடர் உண்டாகும்.

கடகத்தில் செவ்வாய் நீசமாகித் தனித்திருந்தால் புத்திர பாதகமும், குலதெய்வம் மற்றும் மந்திர சம்பந்த வழியில் இடர்களும் உண்டாகும். நீசமான கிரகத்தோடு உச்சக் கிரகம் கூடினால் பிற்பலன்களே உண்டாகும். ஆனாலும் அந்தப் பலன்களில் முரண்பாடுகள் அதிகம் உண்டாகும்.

மீன இராசியில் சந்திரனுடன் நீசக் கிரகம் கூடினால் தெய்விகத்திலும் உபாசனைகளிலும் தடைகள் ஏற்படும். முழுமையாகச் செயல்களை மேற்கொள்ள முடியாது. இடையிலேயே தடைகள் ஏற்படும் என்று கூறப்படுகின்றது.

சந்திரனுடன் ஆட்சி, உச்சக் கிரகங்கள் சேர்ந்தால் 5ஆம் பாவம் சிறக்கும்.

சந்திரனுடன் சூரியன் கூடினால் வரும் அமாவாசை யோகத்தில் நல்ல, கெட்ட பலன்கள் கலந்தே வரும். தெய்விகம் கிடைக்கும் என்று கூறப்படுகிறது.

இந்த வழியில் துர்க் கிரக உபாசனைகளைக் குறைத்தல் வேண்டும். இல்லையேல் சில துர்பலன்களைச் சந்திக்க வேண்டியிருக்கும். துஷ்ட தேவதை ஆராதனைகளும், தெய்விகத்திற்குப் பங்கம் ஏற்படுத்தும்.

சந்திரனுடன் இரண்டுக்கு மேற்பட்ட சுபகிரகங்கள் கூடினால் ஐந்தாம் பாவம் சிறக்கும்.

5ஆம் இடத்ததிபதியான சந்திரனுடனோ, 5ஆம் இடமான கடகத்திலோ துர்க்கிரகங்கள் இருந்து துர்பலன்களைச் செய்தால் சந்திர பகவானுக்கு யந்திர, மந்திர பிரீதிகளைச் செய்வதன் மூலமும் சந்திர கிரக அதிதேவதையான பார்வதி தேவிக்கு உபாசனைகள் செய்வதன் மூலமும் உயர்வான பலன்களை அடையலாம் என்று காண்ட நூல்கள் வழியாக அறியப்படுகின்றது.

அன்பர்கள் துர்பலன்களைத் தவிர்க்க மேற்சொன்ன பிரீதிகளைச் செய்து 5ஆம் பாவ பலன்களைப் பூரணமாகப் பெறுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

# ஆறாம் பாவம்

## மேஷம்

மகாவிஷ்ணுவின் அமிசமாகிய புதபகவானை 6ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற மேஷ இராசி அன்பர்களே!

ஆறாம் பாவம் என்பது ரோகம், சத்துரு ஏவல், பில்லி, சூனியம், கடன் வழக்கு, வில்லங்கம் போன்ற துர்ப்பலன்களைக் குறிப்பதாகும்.

உங்கள் இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான புதன் பாபியோடு சேர்ந்தால் பாபியாகவும், சுபர்களோடு சேர்ந்தால் சுபராகவும் இருந்து பலனைச் செய்வார்.

அப்படிப்பட்ட புதனானவர் எந்தந்த இடங்களில் இருந்தால் துர்பலன்களையும், எந்தெந்த இடங்களில் சுப பலனையும் கொடுப்பார் என்று பதஞ்சலி மகரிஷியின் நாடி வாயிலாக அறிந்து கூறுகின்றோம். துர்பலன்கள் அதிகமாக இருப்பின் புதனுக்கு உரிய முறையில் யந்திர, மந்திர பிரீதிகள் செய்வதன் மூலம் நற்பலனை அடையலாம்.

''புங்கவர் மதிக்குத் தானாறோ னாகப்
பகன்றிடுமோர் மூன்றாறு யெட்டு வியத்தில்
பங்கமுடன் பாபரோடு கூடிடினும்
பலனில்லை நீசபகை யாயிடினும்
அங்கமெல்லாம் ரோகமுண்டாம் மைந்தனுக்கு
உபாதைகளும் மெத்தவுண்டு சத்ருபங்கம்
சுங்கன், பரிதியொடு கூடினாலும்
சற்றேதான் நற்பலன்கள் வருகும்பாரே''

இதன்படி புதனானவர் இராசிக்கு 3,6,8,12ஆம் இடங்களிலும் தனக்குப் பகை வீட்டிலும் இருந்தால் அங்கமெல்லாம் நோயுண்டாகும். சத்துரு உபாதைகளும், எதிரிகளால் ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துர்விளைவுகளால் பாதிப்புமுண்டு என்று கூறப்படுகின்றது. புதனுடன் நேசக் கிரகங்கள் கூடினால் சில துர்பலன்கள் தவிர்க்கப்படலாம்.

மேஷ இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான புதன், இராசிக்கு 6ஆம் இடமான கன்னியில் ஆட்சியுச்சமேறிடக் கண்ட ரோகங்களும், வாத ரோகங்களும் ஏற்படுமென்று கூறப்படுகின்றது. பித்தப்பை வியாதிகளும், காமாலை பாண்டு நோய்களும் உண்டாகும். புதன் தனித்திருந்தாலும், சுப கிரகத்துடன் அதாவது, நட்புக் கிரகங்களான சூரியன், சுக்கிரன் முதலானவர்களோடு - சேர்ந்திருந்தாலும் சில துர்பலன்கள் குறையுமென்றாலும் அடுத்தடுத்து நோய்கள் ஏற்பட வழி வகுக்கும். தக்க மருந்து முறைகளைக்கொண்டு நிவர்த்திக்க நன்மையுண்டாகும்.

எதிரிகள் தொந்தரவு இருந்தாலும், அவர்களை வென்று தம் காரியத்தை நிலைநாட்டுகின்ற நன்னிலைகள் உண்டாகும். சுதர்சன பூஜைகள் மேற்கொள்வதால் சத்துரு ஜெயமும், காரிய ஜெயமும் உண்டாகிக்

கடனடையும். சுபிட்சங்கள் உண்டாகும். புதனுடன் குரு கூட மத்திமம் உண்டாகும். சுக்கிரன் கூடினாலும் வழக்கு, வில்லங்கங்கள் ஆகியன தோன்றித் தனக்குச் சாதகமான பலனை ஏற்படுத்தும். இராகு, கேதுகள் கூட சரும வியாதிகளையும், சதா மன பிராந்தியையும் உண்டு செய்யும். கடனை அடைக்க வழி உண்டாகும். ஆனால், முழுமையாகக் கடன் தீராது. புதனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளையும் பெருமாள் ஆலயத்திற்குச் சென்று வழிபாட்டையும் செய்தால் நன்மையும் ஏற்படும். அண்ட ரோகமும், விஷ ரோகமும் வந்தால் உடனே தக்க அவிழ்தங்களைக் கொண்டு பயன் பெறவும்.

மேஷ இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 7ஆம் இடமான துலாத்தில் நட்புப் பெற்றால் மத்திமமான பலன்களுண்டாகும். மர்மஸ்தான நோய்களும், கண் சம்பந்தமான நோய்களும் ஏற்படுவதற்கு விதியுண்டாகும். மேக நோய்களும் நீரிழிவு நோய்களும், பெண்ணினால் ஏற்படக்கூடிய நோய்களும் ஏற்படுவதற்கு இடமுண்டு. நம்மை நாம் பாதுகாத்துப் பக்குவமாய் இருத்தல் வேண்டும். புதனும் சுக்கிரனும் கூடினால் இதுபோன்ற நோய்கள் ஏற்படுவதற்கு ஏதுவாகும். சூரியனும் நீசமாகிக் கூடினால் தவறாகும். கடன், சத்துரு உபாதைகளும் அவர்களை எதிர்ப்பதில் பலக்குறைவும் உண்டாகும். மனைவி வகையில் துர்ச் சம்பவங்களும், விவகாரங்களும் உண்டாகும். புதனானவர் தனித்திருந்தால் நன்மையுண்டாகும். இராகு கேதுகள் கூடினாலும், மத்திம பலன் உண்டாகும், தோஷம் உண்டாம்.

ஏவல், பில்லி, சூனியம் போன்ற துர்ச்சம்பவங்களுக்கு ஆளாக வேண்டியிருக்கும். இலட்சுமி உபாசனைகள் செய்தால் நன்மையும், சுதர்ஸன பூஜைகள், சக்கர பூஜைகள் செய்தால் சத்துரு பங்கமும் ஒடுங்கும் நிலையும் ஏற்படும். மர்மஸ்தான நோய்கள் இருப்பின் உடனே தக்க அவிழ்தங்களைக் கொண்டு நிவர்த்தி செய்து நல்ல பலனை அடையவும். புதனுக்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் நல்ல பலனை அடையலாம்.

மேஷ இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 8ஆம் இடமான விருச்சிகத்தில் இருக்க இரத்த சம்பந்தமான நோய்களும் எலும்பில் மஜ்ஜை ரோகங்களும் உண்டாகும். இரத்த அழுத்தம் ஹிருதய பலவீனம் போன்ற நோய்கள் கண்டால் தக்க அவிழ்தம் கொண்டு நிவர்த்தித்து நற்பலனை அடையவும். புதனானவர் இராகு, கேதுகளுடன் கூடினால் மத்திமபலனே உண்டாகும். புதன் சூரியன், சுக்கிரன் முதலானவர்களுடன் கூடச் சில துர்பலன்கள் தவிர்க்கப்படும். கடன் தொல்லைகளும், அதனால்

தீராத சஞ்சலங்களும் உண்டாகும். எதிரிகள் தன் உயிருக்கே உலை வைப்பதுபோல் ஏவல் வழியான முறைகளைக் கையாண்டாலும் புதனுடன் செவ்வாய் கூடினால் பங்கமில்லை. இல்லையாயின் துர்ச்செயல்களாலும், எதிரிகளால் மானபங்கப்படுத்தப்பட்டும் அவகீர்த்தி அடைய நேரிடும். புதனுக்கும் செவ்வாய்க்கும் கடுமையான யந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் உயர்வான பலன்களை அடையலாம் என்று கூறப்படுகின்றது. வழக்கு வில்லங்கங்களால் தண்டனை கிட்டும் சூழ்நிலைகளும் உண்டாகும். கிரகப் பிரீதிகள், தெய்வ உபாசனைகள் ஆகியன நல்லபடியாக இருந்தால் யாதோர் இடரும் இன்றித் தப்பலாம் என்றும் நாடிகள் கூறுகின்றன.

மேஷ இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 9ஆம் இடமான தனுசில் இருக்கச் சத்துரு பங்கங்கள், ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துர்தேவதைகளின் கொடுமைகள் ஆகியவற்றிலிருந்து தப்பித்தாலும், கடன், நோய் ஆகியவற்றிலிருந்து தப்பிப்பது கடினம். கடன் வாங்கினாலே இலாபம் பெருகும் பாக்கியங்கள் உண்டாகுமென்று நிலைகள் உருவாகும். இதய நோய்களும், வாத நோய்களும் ஏற்பட விதியுண்டாகும். தக்க அவிழ்தங்களை உண்டுவந்தால், விதி தீர்க்கமுடன் இருந்து நல்வாழ்வு வாழலாம் என்று கூறப்படுகின்றது. சத்துருக்களால் உபாதைகள் இருந்தாலும், அவை வெகுவாகப் பாதிக்கா. அவற்றை எதிர்க்கும் மனத்துணிச்சலும் உண்டாகும். வழக்கு, வில்லங்கம் போன்ற நிலைகளிலும் அப்படியே நமக்குச் சாதக பலன்கள் ஏற்பட விதியுண்டாகும். புதனுடன் குரு கூடச் சில பலன்களை முரண்பாடாகவே செய்வார். கடன் தொந்தரவுகள் உண்டாகித் தன்னுடைய சுக, போக பாக்கியங்களுக்கு இடையூறு உண்டானாலும், அதை அடைக்கக்கூடிய மனப்பக்குவமும் திறமைகளும் உண்டாகும். சுக்கிரன் தனுசில் புதனுடன் கூட மத்திமமாம். புதனுக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்ய நற்பலன்கள் உண்டென்று நாடிவாயிலாக அறியப்படுகின்றது.

மேஷ இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 10ஆம் இடமான மகரத்தில் இருக்க முட ரோகங்கள் உண்டாகும். வாத ரோகங்களும், மந்தமான குணங்களும் ஏற்படும். தைலங்கள் மற்றும் மருந்து வகைகளைக்கொண்டு நிவர்த்திக்க உடனடிப் பலனுண்டு என்றாலும், அது தொடர்ந்துகொண்டேயிருக்கும்.

தொழில் வகையில் எதிரிகள் தோன்றுவர். அதனால் வழக்கு, வில்லங்கங்கள் என்று தோன்றி, அதற்கு ஒரு முடிவு இல்லாமல் தொடர்ந்துகொண்டேயிருக்கும். குரு புதனுடன் கூட பாக்கியமும் கெட்டு வீண் செலவுகளும், விரயங்களும் உண்டாகும். புதனுடனுடன் சனி

கூடினாலும் மத்திமமே. இருந்தாலும், சனிக்கும் புதனுக்கும் யந்திர, மந்திர பிரீதிகள் செய்ய காரிய ஜெயங்களும் சத்துரு ஜெயங்களும் உண்டாகும், வீரபத்திர ஸ்வாமியை வழிபடுவதால் சத்துருபங்கமும், ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துஷ்ட வாதைகளும் குறையும். மனக்கவலைகள் நீங்கித் தெளிவுண்டாகும். சத்துரு பங்கத்தையும், துஷ்ட வகையான சம்பவங்களையும் குறைக்கத் தெய்வ, கிரக பிரீதிகளைவிட வேறு சிறந்தது ஒன்றுமில்லை. கடன், தொழில் ஆகிய வகையிலும், மந்தமாக அடையும் நிலையும் உண்டாகும் போது, பூசைகளை மேற்கொள்ள நல்ல பலனுண்டு.

மேஷ இராசிக்கு 6ஆம் இடத்திபதியான புதன் இராசிக்கு 11ஆம் இடமான கும்பத்தில் இருக்க மந்த நடையும், நுட, முட ரோகங்களும் உண்டாகுமென்று கூறப்படுகின்றது. வாத நோய்களால் சதா தொல்லையை அனுபவிக்க வேண்டியிருக்கும். தக்க அவிழ்தங்கள் மூலம் பயன்பெற வேண்டும். சித்த மருத்துவ ரீதியான தைலங்களைப் பின்பற்றுவது நன்மையைத் தரும்.

சத்துரு பங்கங்கள், துஷ்ட வகையிலான தொல்லைகள் போன்றவை இருந்தாலும் அவற்றிற்கும் மற்றும் நோய்க்கும் செலவழிப்பதால் இலாப பலன்கள் குறையும். புதனுடன் சுக்கிரன் கூடினால், சில துர்பலன்கள் தடையாகுமென்று கூறப்படுகின்றது. புதனுடன் இராகு, கேதுக்கள் கூட மத்திமமாகும். எதிரிகள் வழியில் துர் ஏவல்களும், மற்ற சொல்லத் தகாத உபாதைகளும் உண்டாகும். வழக்கு, வில்லங்கங்கள் ஆகியன இருந்தாலும் கிரகச் சூழ்நிலையால் வெற்றியடைந்து இலாபம் பெறும் நிலைகள் உண்டாகும். மேற்படி உபாதைகளைக் குறைக்கக் கிரக பிரீதிகளை மேற்கொள்ள வேண்டும். அதன் மூலமே உயர்பலனையடையலாமென்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது. புதனுக்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் உயர்பலனைப் பெறலாம்; சத்துரு உபாதையையும் குறைக்கலாம்.

மேஷ இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 12ஆம் இடமான மீனத்தில் நீசமாக, மிகவும் துர்பலன்கள் உண்டாகும். காமாலை ரோகங்களும், பித்தப்பை மற்றும் கல்லீரல் உபாதையும் உண்டாகும். வாத தேகமாகி, உட்சூடு மிகுந்து, உஷ்ண நோய்களையும் உண்டு செய்யும். சுக்கிரன் உச்சமாகி இருக்க மர்மஸ்தான நோய், நீரிழிவு நோய் ஆகியவற்றை ஏற்படுத்தி விரயச் செலவுகளை ஏற்படுத்தும். உடனடியாகத் தக்க அவிழ்தங்களை உட்கொள்ள நற்பலன்கள் உண்டாம்.

எதிரிகளால் துர்உபாதைகளையும், துர் ஏவல்களையும் சந்திக்க நேரும். அந்த விளைவால் சில கால கட்டங்களில் விரயச் செலவுகளும் உண்டாகும். தன் பணத்தை எதிரிகளும் விரயமாக்குவதிலேயே குறியாய் இருப்பார்கள்.

கடனடைக்க முடியாத அளவு இன்னல்கள் உண்டாகும். புதன், சுக்கிரனுடன் கூடி நீசபங்க ராஜ யோகத்தை ஏற்படுத்தினால் சில நற்பலன்களை ஆறாம் பாவ வழியில் அடைய முடியும். வழக்கு, வில்லங்கம் என்ற வகையில் சில விரயங்களையும் சந்திக்க நேரும். புதன் கிரகத்திற்குக் கடுமையான முறையில் யந்திர, மந்திர பிரீதிகள் செய்வதால் நற்பலன்களை அடையலாம். மஹாவிஷ்ணு வழிபாட்டினாலும் சுதர்ஸன ஹோமங்களினாலும் இழந்த பலத்தை மீண்டும் பெறலாமென்று கூறப்படுகின்றது.

மேஷ இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான புதன் மேஷ இராசியிலேயே இருந்து செவ்வாயுடன் கூடி நின்றால் மத்திமமாம். இளமையிலேயே பித்த தேகத்தைக் கொண்டவராகவும், இரத்த நோய், இரத்த அழுத்தம் ஆகியவற்றைப் பெற்று உபாதைகளை அனுபவிக்க நேரும். புதனுடன் சனி நீசமாகிக் கூடினால் முட ரோகங்களை உண்டு செய்யும். இளமை முதற்கொண்டே செரிப்புத் தன்மை குறைவாயிருக்கும் நிலைகள் உண்டாகும்.

எதிரிகளின் உபாதைகள் கடினமாய் இருந்தாலும் அவற்றை எதிர்த்து நிற்கும் துணிவு பலமாகவே உண்டாகும். புதனுடன் சூரியன் உச்சமானால் ஏவல், பில்லி போன்ற துர்செயல்கள் தடுக்கப்படும். குல தெய்வ மகிமையால் நன்மையுண்டு. எதிரிகளால் சில போராட்டங்களும், சண்டைகளும் உண்டாகும். கடன் தொந்தரவுகள் இளமை முதற்கொண்டே உண்டாகும். முழுமையான தீர்வு காண முடியாது. இருந்தாலும், பங்கமில்லை. வழக்கு வில்லங்கம், ஆகியவற்றில் வெற்றி கொள்ளும் நிலைகளை உண்டு செய்யும். தீவிர கிரகப் பிரீதிகளால் சத்துரு உபாதைகளைத் தகர்த்து, நோய், நொடி போன்ற ஆறாம் பாவத் தொல்லைகளிலிருந்து மீளலாம்.

மேஷ இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 2ஆம் இடமான ரிஷபத்திலிருக்கக் கடன்தொல்லைகள், சத்துரு உபாதைகள் ஆகியன இருந்தாலும் தன்னைப் பங்கபடுத்துவதில் தீவிரம் குறைவாகவே உண்டாகும். மேக நோய்களையும், முக்கியமாகச் சர்க்கரை வியாதியினையும், தலைகிறுகிறுப்பையும் மர்மஸ்தான நோய்களையும் ஏற்படுத்தும். சுக்கிரனுக்கும் புதனுக்கும் கிரகப் பிரீதிகள் செய்து உரிய அவிழ்தங்களை உண்ண நற்பலன்கள் உண்டாகும்.

சில கால கட்டங்களில் தனம் குறைந்து கடனை ஏற்படுத்தும். சுதாரித்தால் நன்மையுண்டு. பொதுவாக, வழக்கு, வில்லங்கங்கள், சத்துரு உபாதைகள் ஆகியன இருந்தாலும் நமக்கே சாதகபலன்கள் உண்டாகுமாறு பலன்கள் ஏற்படும். கடன் தோன்றி மறைந்து மறுபடியும் தேவைக்கேற்பக் கடன்

உண்டாகும். புதனுடன் சுக்கிரன் கூட நன்மையுண்டு. கடன் அடைப்பதிலும் தெளிவுண்டாகும். புதனுடன் இராகு, கேதுகள் ரிஷபத்தில் கூட மத்திம பலனுண்டாகும்.

ஏவல், பில்லி, சூனியங்கள் ஆகியன சில கால கட்டங்களில் தொடர்ந்து வரும். அதனால், பங்கம் ஏற்படுமுன் உரிய பிரீதிகள் செய்து நலமடைதல் நன்மையாகும். புதனுக்குக் கிரகப் பிரீதிகள் செவ்வனே செய்வதன்மூலம் நல்ல பலன்களை அடையலாம்.

மேஷ இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 3ஆம் இடமான மிதுனத்திலிருந்தால் சகோதர துர் உபாதைகள் உண்டாகும். கல்லீரல், மண்ணீரல் போன்ற ஈரல்வகைக் கோளாறுகளும், பித்தப்பை கோளாறுகளும் ஏற்பட்டுத் தொந்தரவுகள் உண்டாகும். உரிய அவிழ்தங்களைக் காலத்தே உண்ண நோய் தீர்ந்து குணமாகும். இல்லையேல், உட்சூடு மிகுந்து சளமாலை, பாண்டு போன்ற நோய்கள் ஏற்பட வழிவகுக்கும்.

சத்துரு உபாதைகள் இருந்தாலும் அவற்றைத் தடுக்கும் பராக்கிரமங்கள் உண்டாகும். கண்ட ரோகத்தினால் தொல்லையும் வாதரோகத்தினால் பயமும் விரயமும் உண்டாகும். புதனுடன் இரண்டுக்கு மேற்பட்ட நட்புக் கிரகங்கள் இருக்க சத்துரு உபாதைகள் குறையும். துஷ்ட வகையான ஏவல் வகைகளை முறியடிக்கும் ஆற்றல்களும் உண்டாகும். புதன், இராசிக்கு 3இல் மறைவதால் சில பலன்கள் தடைப்பட்டாலும் கிரகப் பிரீதிகள் மூலம் நற்பலனை அடையலாம். கடன் சிறுகச் சிறுகக் குறைந்தாலும் பூரணமாகக் குறைவதற்கு அமிசங்கள் குறைவாம். புதன் கிரக யந்திர, மந்திரப் பிரீதிகள் செய்ய நற்பலன்கள் உண்டாகுமென்று கூறப்படுகின்றது.

மேஷ இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 4ஆம் இடமான கடகத்தில் இருக்க மத்திம பலன்களே உண்டாகும். சிலேத்தும நோயும், குளிர் சுரங்களும், அதிமூத்திரமும், முகத்தினைப்பற்றிய ரோகங்களும் உண்டாகும். உரிய அவிழ்தங்கள் கொண்டு சிகிச்சை செய்ய நற்பலன்களாகும். புதனுடன் சத்துரு கிரகங்களோ நீசக் கிரகங்களோ கூடினால் மத்திம பலனே உண்டாகும். கடன்படவும், அதனால் ஏற்பட்ட துன்பங்களினால் சுகத்தைத் துறக்கவும் நேரும். வீடு, மனை, வாகனம், நிலம் போன்றவை கடனாகவும், கடனுக்கு ஈடாக அடைக்கப் படவும் விதிகள் உண்டாகும்.

எதிரிகளினால் உபாதைகளும், ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துர் வகைகளில் துர்தேவதைகளின் அட்டகாசங்களும் உண்டாகும். இராகு, கேதுக்கள் புதனுடன் கூடியிருந்தால் மத்திமம். தொல்லைகள் அனுபவிக்க

வேண்டியிருக்கும். வீடு, மனை, வாகனம், விவசாய நிலங்கள் போன்ற அமைப்புகளில் வில்லங்க, விவகாரங்கள் இருந்தாலும், ஒரு முடிவுக்கு வருவதற்குத் தீர்வில்லாமல் இருக்கும். மஹா விஷ்ணுவுக்குப் பூஜைகள் மேற்கொள்ளுவதாலும் நல்ல பலன்களை அடையலாமென்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது.

மேஷ இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான புதன் இராசிக்கு 5ஆம் இடமான சிம்மத்தில் இருக்க உஷ்ண நோய்களும், சிரசுபாரங்களும், பித்த நோய்களும் உண்டாகும். புதனுடன் சூரியன் கூடினால் நன்மையுண்டு. குலதெய்வ அருளால் சத்துரு உபாதைகளையும் துர்உபாதைகளையும் களைந்தெறியும் ஆற்றல்கள் உண்டாகும். கடன் தொல்லைகள் குறைய விதிகளும் உண்டாகும்.

புதனுடன் இரண்டுக்கு மேற்பட்ட பகைக் கிரகங்கள் கூட, பூர்வ புண்ணியாஸ்திகளால் சத்துரு உபாதைகளும், பிரிவினைகளில் தகராறும் உண்டாகும். கடினமான கருத்து வேறுபாடுகளுக்குப் பின்னரே சுமுகமடைய விதிகள் உண்டு.

குலதெய்வ வகையில் ஆற்றல் குறைவும், வழிபாட்டுக் குறைவும் ஏற்படும். ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துர் உபாதைகளால் தொந்திரவும், உடல் உபாதைகளும் உண்டாகும். புதனுக்குக் கடுமையான முறையில் எந்திர, மந்திர பிரீதிகள் செய்யப் பலனுண்டாம். புதன் நல்ல கிரகத்தோடு சேர நல்ல பலன்களையும், துர்க்கிரகங்களோடு சேரத் துர்பலன்களையும் கொடுப்பார். கிரகப் பிரீதிகள் மூலம் நற்பலன்களை அடையலாம்.

# ரிஷபம்

அசுர குரு சுக்கிராச்சாரியை 6ஆம் இட அதிபதியாகப் பெற்ற ரிஷப இராசி அன்பர்களே!

ஆறாம் பாவம் என்பது ரோகம், எதிரி, கடன், வழக்கு, வில்லங்கம், சத்துரு உபாதை, ருணவாதைகள் போன்றவற்றை குறிப்பிடுவதாகும்.

உங்கள் இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் மேஷம் முதல் மீனம் வரை ஒவ்வோர் இடங்களில் இருந்தாலும், மற்ற கிரகங்களுடன் சேர்ந்தாலும், பலன்களை எப்படிச் செய்வார் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

அன்பர்கள் அதன்படி சுக்கிரனானவர் இராசிக்கு எத்தனையாவது இடத்தில் உள்ளார் என்று பார்த்து உங்களின் ஆறாமிடப் பலன்களைக் கண்டறியவும்.

சுக்கிரன் துர்கிரகச் சேர்க்கைகளால் சில பலன்களை மத்திமமாகவோ அதமமாகவோ செய்தால் சுக்கிர கிரகத்திற்கும் அவருக்கு அதிதேவரான இலட்சுமிக்கும், இந்திரனுக்கும் உரிய பிரீதிகள் செய்து நற்பலன்களை அடையலாம்.

ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துர் உபாதைகள் ஏற்பட்டால் வீரபத்திர தேவதைக்கும், சுக்கிரனுக்குக் காரகமான ஸ்தலங்களுக்கு சென்றும் வழிபடுதல் மூலம் உயர்வான பலன்களைப் பெறலாம் என்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது.

உங்கள் இராசிக்கு சுக்கிரனை ஆறாமிடத்ததிபதியாகப் பெற்றதனால் அவர் காரக நோய்களான மூத்திர உபாதைகள், நீரிழிவு, மர்மஸ்தான நோய்கள் நேத்திர நோய்கள் ஆகியன உண்டாகும். அவற்றை உரிய அவிழ்தங்கள் கொண்டு குணப்படுத்தியும், சுக்கிரனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளை செய்தும் நற்பலன்களை அடையலாம்.

''சுங்கனவர் பாபியாயினும் நீசரில்லம் புகுந்திடினும்
சாற்றவரும் பலன்களதும் முன்பின் னென்றே
பங்கமது பின்னாலும் பலனுமென்றேதான் சுபபலனும்
பெறவே தான்
பகரவரும் பாவ பலன்கள் மேன்மைதானே''

சுக்கிரன் பாபரானாலும், தன் சத்துரு வீட்டில் துர்பலம் பெற்றாலும், தன் பகைக் கிரகங்களின் நீச வீடுகளில் இருந்தாலும் எந்த பாவாதிபதியாகின்றாரோ அந்த பாவ பலன்களை முன் பின்னாகவே செய்வார் என்று கூறப்படுகின்றது. சுபர் வீட்டில் இருந்தாலும் நற்பலம் பெற்றாலும் ஜெயங்களும் நன்மையும் உண்டாகும். அதன்படி ரிஷப இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 6 ஆம் இடமான துலாத்தில் இருக்க, முன் சத்துரு உபாதைகளையும், பின் நன்மைகளையும் ஜெயங்களையும் செய்வார். சுக்கிர கிரகப் பிரீதிகள் மூலம் இன்னமும் சத்துரு உபாதைகளை முழுமையாக அகற்ற விதிகள் உண்டாகும். ஆனால், மர்மஸ்தான நோய்களையும், மது மேக நோய் என்னும் நீரிழிவு நோயையும், நேத்திர ரோகங்களையும் உண்டு செய்யும். உரிய அவிழ்தங்கள் மூலம் ரோகத்தை நிவர்த்தி செய்தல் வேண்டும்.

பெண் வகையிலான தொந்தரவுகள் உண்டாகும். அதனால் வில்லங்கம், விவகாரங்கள், சத்துரு உபாதைகள் போன்ற துர்நிலைகள் உண்டாகலாம். எனவே, கவனத்துடன் செயல்படுதல் நலம். சுக்கிரனுடன் சூரியன் நீசமாகிக் கூடினால், வரும் யோகங்களைக் குறைத்து மதிப்பிடக்கூடாது. ஆனாலும், சுக்கிரன் கெட்டதில் நல்லது என்ற அடிப்படையில் யோக பலன்களைச் செய்வார். தன் சத்துருவான சந்திரனுக்குச் - சஷ்டாஷ்டமத்தில் இருப்பதால் - சில பலன்கள் தடைப்படும். கடன் தொல்லைகளும், அவற்றால் வில்லங்க விவகாரத் தொந்தரவும் உண்டாகலாம். எனவே, உரிய கிரகப் பிரீதிகள் செய்து ஆறாம் பாவ வழியில் தொந்தரவு தாக்காது நற்பலனை அடையவும்.

ரிஷப இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 7ஆம் இடமான விருச்சிகத்தில் இருக்க மனைவி வகையில் முன்பு ஆதரவுகள் குறைந்தும், பின்பு ஆதரவுகள் ஓரளவாகவும் இருக்கும். சுக்கிரனுடன் செவ்வாய் கூடினால் வரும் சுக்கிர மங்கள யோகம், பின் வாழ்வில் பயன் தரும். தன் பகைக்கிரகமான சந்திரனின் நீச வீட்டில் சுக்கிரன் புகுந்திருந்தால் மத்திம பலனேயுண்டாகும். இரத்த சம்பந்தமான நோய்களையும், இரத்தம் கெடுதல், உதிரம் ஒழுகுதல் போன்ற துர் செயல்கள் செய்யும் நோய்களையும் உண்டு செய்யும். சுக்கிரனுடன் இராகு கேதுகள் கூடினால் சரும வியாதிகள் வந்து போகும். பொதுவாக, மனைவி வழியில் விரோதங்கள் அநேகம் இருக்கும். மறைமுக சத்துருக்களும் இருப்பார்கள். திருமண வழியில் கடன் ஏற்படும். அதனை அடைக்க நெடுங்காலம் ஆகும். வில்லங்கங்கள், விவகாரங்கள் என்று வந்தால் மூர்க்கத்தனமாகவும், ஆவேசமாகவும் சில காலங்களில் வந்துபோகும். சுக்கிரனுடன் சனி, புதன் போன்ற நட்புக்கிரகங்கள்கூட நன்மையான பலன்கள் உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 8ஆம் இடமான தனுசு இராசியில் பாவியாக மத்திம பலனே யுண்டாகும். கடன் வாங்கியே ஜீவனத்தை நடத்தும் நிலைகள் உண்டாகும். இதனால் மனக்கஷ்டங்களும், ஜீவன பங்கமும் சில காலங்களில் உண்டாகும். சுக்கிரனுடன் குரு கூடினால் 6ஆம் பாவ வழியில் முரணான பலனே உண்டாகும். சூரியன் கூடினாலும் மத்திம பலனேயாகும். இராசிக்கு அட்டமத்தில் கோட்சாரத்தில் குரு வந்தாலும் இடர்களே செய்வார். இருதய சம்பந்தமான வியாதிகளும், சுக்கில ரோகங்களும் உண்டாக விதியுண்டாகும். தக்க அவிழ்தங்கள் மூலம் நோயை நிவர்த்திக்க ரோக கண்டங்களிலிருந்து தப்பலாம். வழக்கு, வில்லங்கம், விவகாரம் ஆகியன வந்தாலும் அவற்றால் ஒரு தீர்வடையாமல், அலைக்கழிக்கும் நிலையே இருக்கும். பெண் வகையிலான இடர்களிலும், வில்லங்கங்களிலும், சத்தருச் களிடமும் கவனம்

தேவை. அட்டம கண்டத்தை ஏற்படுத்தும் நிலைகளை உண்டுசெய்யும் அளவுக்குச் சூழ்நிலைகள் உண்டாகும். சத்துரு உபாதைகள் அதிகம் இருந்தாலும், ரோகங்களால் தொல்லைகள் ஏற்பட்டாலும் சுக்கிரனுக்குப் பூஜைகளும், கிரக யந்திர, மந்திர பிரீதிகளும் செய்வதால் நற்பலனை அடையலாமென்று நாடிவாயிலாக அறியப்படுகின்றது.

ரிஷப இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 9ஆம் இடமான மகரத்தில் இருக்க ஆறாம் பாவ வழியில் நொம்பலங்கள், தொந்தரவுகள் ஆகியன இருந்தாலும் அவை மந்தமாகவே இருந்து விலகும் நிலைகள் உண்டாகும். வாத ரோகத்தால் கால்கள் தளர்வாகவும், மந்தமாகவும் இருக்கும்; நாள்பட்டே மெதுவாகக் கால்கள் குணமாகும். அதுபோல், பெண்கள் வகையான நோய்களிலும் கவனம் தேவை. இல்லாவிட்டால் குணமாவதற்கு நெடு நாள்கள் ஆகும்.

கடன் உபாதைகள் இருந்தாலும் காலங்கடந்தே தீரும். இதனால் சுக, பாக்கியங்கள் பாதிக்கப்படலாம்.

சத்துரு உபாதைகள் இருந்தாலும் ஜெயம் பெறும் நிலைகள் உண்டாகும். சுக்கிரனுடன் சனி, புதன் போன்ற உறவுக் கிரகங்கள் கூடியிருக்க நல்ல பலன்களும், இடர் வந்தால் விலகும் நிலைகளும் உண்டாகும். வீரபத்திர ஸ்வாமிக்கு பூஜைகளும், சுக்கிரனுக்கு யந்திர மந்திர பிரீதிகளும் செய்தால் நல்ல பலன்கள் 6ஆம் பாவ வகையில் உண்டாகும். வழக்கும் வில்லங்கங்களும் - தன் தகப்பனார் கால வழக்குகளுங்கூட - நமக்குச் சாதகமான பலனைத் தரும். சுக்கிரனுடன் குரு நீசமாகிக் கூட சில மத்திம பலன்கள் உண்டெனினும் கிரகப் பிரீதிகள் மூலம் தீர்வான பலன்களைப் பெறலாம்.

ரிஷப இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 10ஆம் இடமான கும்பத்தில் இருக்க முட ரோகங்களும், வாதங்களும் உண்டாகும். மர்ம ஸ்தான நோய்களும் வந்து விலகும். சுக்கிரன் கும்பத்தில் சுப பலத்துடன் கூடியிருந்தால் ஆறாம் பாவ வழியில் மேன்மையான சத்துரு ஜெய பலன்களும், கடனடையும் மார்க்கங்களும் உண்டாகும். கும்பத்தில் சுக்கிரன் பாப பலமானால் துர்வழியில் தொழிலும், அதனால் இடரும், சத்துரு பகைகள் அதிகமாகவும், விவகாரங்களையும் வழக்கு, வில்லங்கங்களையும் சந்திக்க நேரும். சனி, புதன் போன்றோர்களுடன் சுக்கிரன் கூடியிருந்தால் நோய்கள் ஏற்பட்டாலும் தீரும் நிலையிலிருக்கும். தொழில் முறையில் கடன்களும், வில்லங்கங்களும் தொடர்ந்தாலும், எப்படியும் தனக்குச் சாதகமான பலனைப் பெறுவதில் நற்பலனுண்டு. சூரியன் மற்றும் குருவோடு சந்திரன்

சேர்ந்திருந்தாலும் இராகு கேதுக்களோடு கூடினாலும் பலன் மத்திமம் என்று கூறப்படுகின்றது. இதனால் தொழிலிலும் குடும்பத்திலும் அவை சம்பந்தமான இதர வகைகளிலும் அதிருப்தியே உண்டாகும். என்றாலும், சுக்கிர கிரகத்திற்கு எந்திர, மந்திர பிரீதிகளும் மகாலட்சுமிக்கு பூஜைகளும் நல்லபடி செய்தால் ஓரளவு நல்ல பலனையடையலாம் என்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது.

ரிஷப இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 11ஆம்இடமான மீனத்தில் உச்சமாக, மர்ம ஸ்தான ரோகங்கள், இருதய சம்பந்தமான ரோகங்கள் ஆகியன வந்துசெல்லும். சுக்கிரனுடன் குரு கூடினால் 6ஆம் பாவ பலன்கள் முரணாகவே அமையும்.

சத்துருக்களால் வில்லங்கங்கள், உபாதைகள் ஆகியன இருந்தாலும் ஜெயமான நிலைகளே உண்டாகும். ஏவல், பில்லி, சூனியம் போன்ற துர்தேவதைகளின் அட்டகாசம் சில கால கட்டங்களில் சத்துருக்களால் ஏவிவிடப்பட்டாலும் அவை நம்மை ஒன்றும் செய்யா. ஆனாலும், சில சம்பவங்கள் தீமையாகவும், அச்சம் தரக்கூடிய நிலையிலும் இருந்தால் அதனை அறிந்து, உரிய பிரீதிகள் மூலம் அதனை விரட்ட வேண்டும்.

மூத்த சகோதர, சகோதரிகளுக்கு நோய் உபாதைகளும், சத்துரு உபாதைகளும் வந்துவிலகும். சுக்கிரனுடன் குரு கூட பலன் முரணாக அமையும். புதன் கூடினால் நீசபங்க இராஜயோகம் வரும். வழக்குகள், வில்லங்கங்கள் போன்ற உபாதைகளில் வெற்றி கிட்டும். சில ஆறாம் பாவ வகையில் சத்துரு வகையிலான கடனை அடைக்க விதியுண்டாம். கிரகப் பிரீதி செய்ய நற்பலன்களாகும்.

ரிஷப இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 12ஆம் இடமான மேஷத்தில் இருக்க, ஆறாம் பாவ வழியில் பலவித உபாதைகளைச் சந்திக்க வேண்டியிருக்கும். மர்ம ஸ்தான நோய்களாலும், இரத்தம் சம்பந்தமான நோய்களாலும், மற்ற உடல் நோய்களாலும் வீண் விரயமும், அதனால் கடன் தொல்லைகளும் உண்டாகும்.

சத்துரு உபாதைகளினால் அடிக்கடி தொந்தரவும், மனப்பேதலிப்பும் அநாவசியமான பயமும் உண்டாகும். சில வகையில் விரயமும், இடமாற்றமும் உண்டாகும். சுக்கிரனுடன் சூரியன் உச்சமாகிக் கூடினாலும் மத்திமமாம். காரிய ஜெயமும் வெற்றியும் குறையும். நோயும் உடனடியாகத் தீராத நிலையில் இருக்கும். சுக்கிரனுடன் சனி நீசமாகிக் கூடினால் கடனை அடைப்பதில் கால தாமதமும், அதனால் அகால போஜனமும், பயமும்,

உபாதையும் உண்டென்றும் கூறப்படுகின்றது. சுக்கிரனுடன் இராகு கேதுக்கள் கூடினாலும் மத்திம பலனாகும். சரும ரோகங்களால் தொல்லையும் பண விரயமும் உண்டாகும். சில காலகட்டங்களில் ஏவல், பில்லி போன்ற துஷ்ட தேவதைகளின் ஏவலால் துயரமும் பீடையும் உண்டாகும். இதை நீக்கும் முயற்சியில் பண விரயம், கால விரயம் ஆகியன உண்டாம். கடுமையாகச் சுக்கிர கிரகப் பிரீதிகள் செய்வதாலும், மஹாலட்சுமிக்கு பூஜைகள் செய்வதாலும் உயர்வான பலன்கள் உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் ரிஷப இராசியிலேயே ஆட்சியாகிச் சுப கிரகங்களுடன் கூடினால் ஆறாம் பாவ வழியில் உபாதைகள் குறைந்து பலன்களும், சத்துரு ஜெயங்களும், ரோக பீடைகளிலிருந்து விடுபடும் நிலைகளும் உண்டாகும். சுக்கிரனுடன் சனி, புதன் போன்ற உறவுக் கிரகங்கள் கூடினால் நன்மையாகும். சுக்கிரன் ஆட்சியாகி நற்பலன் பெற்றாலும் சத்துருவான சந்திரன் கூடுவாராயின், அவர் உச்சபலம் பெற்றதனால் ஆறாம் பாவ வழியில் துர்பலன்கள் ஏற்படும் நிலை உண்டு. சந்திரனோடு சூரியனும் குருவும் சேர ஆறாம் பாவ வகையில் சுக்கிரனுக்குப் பலன் குறைவேயுண்டாகும். அசுப பலமாயிருக்க இளமை முதற்கொண்டே பீடை பிணியுடனும், கடன் தொந்தரவுடனும், சத்துரு பயங்களுடனும் வாழ வேண்டியது இருக்கும். மர்மஸ்தான ரோகங்களும், பல் வகையில் உடல் பாதிப்பும் உண்டாகும். கடன்காரர்கள் தொல்லையும் உண்டாகும்.

சுக்கிரன் தன் உறவுக் கிரகங்களுடன் சுப பலத்துடன் இருக்க சத்துரு ஜெயமும், பீடை, பிணிகளை அழிப்பதில் வல்லமையும், ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துர் தேவதை அட்டகாசங்களைத் தடுத்து நிறுத்துதலில் உயர்வும் உண்டாகும். சுக்கிர கிரக பிரீதிகள் செய்வதால் உயர்வான பலன்களும் பரிகார பலன்களும் உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 2ஆம் இடமான மிதுனத்தில் இருக்கத் தனவிரயமும் அதனால் மேலும் கடனும், கடன் அடைப்பதில் தீவிரமும் ஏற்படும். சரச சல்லாப சேர்க்கையினால் ஆடம்பர நிலைகளை விரும்பி செலவு செய்வார்கள். அதனால் விரலுக்கு மிஞ்சிய வீக்கம் போல், தம் அளவுக்கு மிஞ்சி ஆசைப்பட்டுக் கடன் தொல்லைகளுக்கு ஆளாவார்கள். அதனை உணர்ந்து சரி செய்தலும் உண்டாகும். சுக்கிரனுடன் சனி, புதன் போன்ற மித்துரு கிரகங்கள் கூடினால் சில உபாதைகளுக்கு ஆளாக நேரிட்டாலும் அவை அதிகமாகத் தன்னை தாக்காவண்ணம் இருக்கும் நிலையுண்டாகும். கண்பார்வை மங்கலும், நேத்திரத்தில் பச்சையும், பூ விழுந்து காணுதலும் உண்டாகி மறையும்.

சுக்கிரன் அசுபபலமாகச் சூரியன், குரு முதலானவர்களுடன் சேர்ந்திருந்தாலும் இராகு கேதுக்களுடன் கூடினாலும் துர்தேவதை வசியங்களாலும், ஈடுகளாலும், பாதிக்கப்பட்டு மறுபடியும் மீளும் நிலை உண்டாகும். சத்துரு உபாதைகளும், நீண்ட காலம் இருந்தாலும் தன்னை அவர்களிடமிருந்து பாதுகாக்கும் நிலை எப்படியும் ஏற்படும். வழக்கு, வில்லங்கங்கள் போன்ற பாதிப்புகளில் நீண்ட காலத்திற்குப் பின்னே தீர்வடையும் நிலை உண்டாகும். சுக்கிர கிரகத்திற்குப் பிரீதிகளும், யந்திர, மந்திர ஜெபங்களும் செய்வதன் மூலம் காரியம் ஜெயபலன்களை அடையலாம்.

ரிஷப ராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 3 ஆம் இடமான கடகத்தில் இருக்க, இளைய சகோதரர்கள்கூடத் தனக்குப் பகைவர் போலத் தோன்றுவார்கள். அவர்களால் சில இடையூறும் வந்து செல்லும். சுக்கிரன் தன் சத்துருவான சந்திரன் வீட்டில் இருக்கச் சில துர்பலன்களே அமையும். அவரோடு குரு உச்சமாகிக் கூடினாலும், சூரியன் கூடினாலும் ஆறாம் பாவ வழியில் தொல்லை உண்டாகுமென்று அறியப்படுகின்றது.

சுக்கிரன் இரண்டுக்கு மேற்பட்ட நட்புக்கிரகத்தோடு கூடினால் சில காரிய ஜெயங்கள் உண்டாகும். எனினும், வதன நோய்களும், சரும நோய்களும், சீதள நோய்களும் உண்டாகும்; விலக அதிக நாளாகும். சில வாழ்வின் முடிவுவரை தொடரும். உரிய அவிழ்தங்கள் மூலம் அவற்றைத் தீர்க்க வேண்டும்.

இளைய சகோதரர் வசம் கடன் வாங்கினால் அவர்களே தனக்குச் சத்துரு போல் இருப்பார்கள்; தன்னை அவமதிப்பார்கள். மற்ற வகையில் ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துஷ்ட தேவதைத் தொந்தரவுகள் இருந்தால் மகாலட்சுமி ஹோமங்கள் செய்தும் சுக்கிர விஞ்சைகள், இரட்சைகள் செய்து அணிந்தும் உயர்வான பலனையடையலாம். சத்துரு ஜெயங்களையும் பெறலாம்.

ரிஷப இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான சுக்கிரன் இராசிக்கு 4ஆம் இடமான சிம்மத்தில் தன் சத்துருவான சூரியன் வீட்டில் இருக்க, மனை, மாடு, கன்று வாகனம் மற்றும் நிலங்கள் வழியாகக் கடன் தொல்லைகளும் கடன்காரர்கள் தொந்தரவும், சத்துரு உபாதைகளும், வில்லங்க விவகாரங்களும் உண்டாகும். சுக்கிரன் பகையாகிக் கூட, சூரியன் மற்றும் குரு முதலானோர் சுப பலத்துடன் கூடினால் ஆறாம் பாவ வகையில் துர் பலன்களை அனுபவிக்க நேரிடும்.

ஏவல், பில்லி, சூன்யம் போன்ற பாதிப்புக்குள்ளாகும் சமாச்சாரங்கள் தன் நிலம், மனைகளிலும், மாடு, கன்று வகையிலும், தன்மீதும் பாயும் நிலை உண்டாகும். சுக்கிரன் துர்பலத்துடன் இருக்க ஆறாம் பாவ வழியில் தொந்தரவே மிஞ்சும். சத்துருக்கள் உபாதைகளைச் செய்துகொண்டும் இருப்பார்கள்.

உடல் உஷ்ணங்களால் சுக்கிலம் உடையும்; வெள்ளை, வெட்டை போன்ற உபாதைகள் ஏற்படும். உடல் பலமும் மனபலமும் குறையும். எதிரிகள் அந்தச் சூழ்நிலைகளைப் புரிந்துகொண்டு உபத்திரவம் செய்ய வருவார்கள். சுக்கிரன் அசுப பலத்துடன் இருக்க மனை, மாடு, கன்று, நிலம், காடு போன்ற வகையிலும் வாகன வகையிலும் ஏற்பட்ட வில்லங்க விவகாரங்கள் மற்றும் நீதிமன்ற விவகாரங்கள் முடிவடையாமல், இடர் செய்யும் பாதக நிலையை உண்டுசெய்யும். சுக்கிரனுக்குக் கடுமையான முறையில் பிரீதி செய்யப் பலனுண்டாம்.

ரிஷப இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான சுக்கிரன், இராசிக்கு 5-ஆம் இடமான கன்னியில் நீசமாக ஆறாம் பாவ வகையில் சில கொடுமைகளை அனுபவிக்க வேண்டியிருக்கும். "கெட்டவன் கெட்டிடில் கிட்டிடும் ராஜயோகம்." அதுபோல், கெட்டவன் முழுக்கக் கெட்டுவிட்டால் அதன் காரணமாகச் சில பலன்களை உயர்வாகச் செய்வார். அதன்படி, சுக்கிரன் நீசமாகி, சத்துருக்கள் கூடியிருந்தால் சில கால கட்டங்களில் கெட்டதில் ஒரு நன்மை என்ற வகையில், சில மேன்மையான பலன்களைச் செய்வார். சுக்கிரன் துர்பலத்துடன் இருக்க ஈரல் நோய்களையும், மர்மஸ்தான நோய்களையும், நேத்திர ரோகங்களையும் உண்டு செய்வார். புத்திர வகையில் பீடையும் பிணியும் சத்துரு போல் பாவிக்கும் தன்மையும் உண்டாம். குலதெய்வம் பலமற்றுக் காணப்படும் அல்லது துடியான காரணத்தினால் துர் பலனைச் செய்யும். கடன் தொந்தரவும் இதனால் சில உபாதைகளும் உண்டாகும். ஏவல், பில்லி போன்ற துஷ்ட தேவதைகளின் செய்கைகளால் சில பாதிப்புகளும் உண்டாகும். சுக்கிரன் நீசமாகிப் புதன் கூடினால் ஏற்படும் நீசபங்க ராஜயோகமானது, சில வழக்குகள் வெல்லுவதிலும், சத்துரு உபாதைகள் முற்றிலும் நீங்குவதிலும் இருக்கும். சுக்கிரனுக்குக் கடுமையான முறையில் யந்திர, மந்திர பூஜைகள் செய்தால் பலனுண்டு.

# மிதுனம்

சுப்பிரமணிய தேவரை அதிதேவராகப் பெற்ற செவ்வாய் பகவானை, 6ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற மிதுன இராசி அன்பர்களே! 6ஆம் பாவமென்பது நோய், கடன், சத்துரு, ஏவல், பில்லி, சூன்யம், சத்துரு உபாதைகள், வழக்கு, வில்லங்கம் போன்றவற்றைக் குறிப்பிடுவதாகும்.

உங்கள் இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான செவ்வாய் மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளிலும் இருந்தாலும், மற்ற சுப, அசுப கிரகங்களோடு சேர்ந்தாலும் 6ஆம் பாவ பலன்களை எப்படிச் செய்வாரென்று பதஞ்சலி மகரிஷியின் நாடி வாயிலாக அறிந்து கூறப்படுகின்றது.

அன்பர்கள் தங்கள் இராசிக்குச் செவ்வாய் எத்தனையாவது இடத்தில் உள்ளார் என்பதை அறிந்து ஆறாம் பாவ பலனைத் தெரிந்துகொள்ளவும். அசுப கிரகங்களுடன் கூடித் துர்பலனைச் செய்ய நேர்ந்தால் செவ்வாய்க் கிரகத்திற்கும் சுப்பிரமணிய ஸ்வாமிக்கும் பிரீதிகள் செய்து சத்துருக்களை வெல்வதிலும் ஆறாம் பாவ துர்பலன்களை ஒடுக்குவதிலும் நல்ல பலனைக் காணவும்.

''அங்காரக னவமிருக்கு மிடத்திலி னின்று
  அசையாது நாலெழு மட்டம பார்வைதனில்
பங்கமாமட்ட மபார்வைதனில் மத்திமமாம்
  பகரவரும் நாலெழு பார்வைதனிலேதான்
திங்களில்லம் நோக்கிடவே யிடராமே
  துலங்கமேல் தமதில்லம் நோக்கிடவே
மங்காமலுயர்பலனே யந்தபாவவழி
  மகத்துவமாய்ச் சுபர்கூடச் செய்வாய்தானே!

இதன்படி செவ்வாய் 4,7,8 ஆம் பார்வையில், தான் இருக்கும் இடத்திலிருந்து 8ஆம் பார்வையாகச் சந்திரனுடைய வீட்டைப் பார்த்தாலும். சந்திரனைப் பார்த்தாலும் நன்மை குறைவு. 4,7 ஆம் பார்வையாகத் தமது வீட்டைப் பார்த்தால் அந்த பாவ பலன்கள் சிறக்குமென்று கூறப்படுகின்றது. சனியும் செவ்வாயும் ஓரிடத்தில் சேர்ந்து நின்றால் அந்த வீட்டின் பலனையே குலைப்பர் என்றும் கூறப்படுகின்றது.

மிதுன இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு 6ஆம் இடமான விருச்சிகத்தில் இருக்க வில்லங்க விவகாரங்கள், சத்துரு தொல்லைகளும் உண்டு. அதுபோல், வெற்றி (ஜெயம்) செய்யும் அமிசங்களும் உண்டாம். செவ்வாயானவர் தொல்லையும் கொடுத்து, தொல்லை கொடுப்பவரை அழிக்கவும் காரணமாவார். அவர் சுப பலமாக விருச்சிகத்தில் தனித்திருந்தாலும் அல்லது குரு, சூரியன் போன்ற உறவுக் கிரகங்களுடன் சேர்ந்திருந்தாலும், தொல்லைகளினால் சங்கடங்கள் ஏற்பட்டு, அதனால் பங்கமடையும்போது சாதகபலனைக் கொடுப்பார். அதன்படி இரத்த அழுத்த நோய்களையும், பித்த நோய்களையும், புஜம் மற்றும் கைகள் சம்பந்தமான நோய்களையும் கொடுத்து உடனே தீர்ப்பதில் வல்லமையுண்டாகும். சத்துருக்களும் சாதாரணமாக இல்லாமல் வலுத்தே இருப்பார்கள். அவர்களை எதிர்ப்பதில் தைரியமும், அவர்களுக்குச் சிம்ம சொப்பனத்தை ஏற்படுத்தும் அளவுக்குச் சூழ்நிலைகளும் உண்டாகும்.

கடன் வந்தாலும் உடனே அடைபடும் நிலையேற்படும். ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துர்தேவதைகளின் செயல்களை எதிர்த்துப் போராட வலிமையும் தெய்வ உபகாரமும் உண்டாகும். செவ்வாயுடன் புதன் கூடினால் மத்திமமாம். செவ்வாயுடன் சனி கூடினால் உள்ள பலனும் போய்விடும்; குழப்பமே மிஞ்சும். பொதுவாக, முரண்பாடு காணப்படும். செவ்வாய்க்கு எந்திர, மந்திர பிரீதிகளும், சுப்பிரமணியர் பூஜையும் செய்ய உயர்வான பலனுண்டாம்.

மிதுன இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு 7ஆம் இடமான தனுசு வீட்டில் இருக்க, மனைவி வகையில் துயரம், கடன், வழக்கு, வில்லங்கம், விவகாரம் என்று வந்து உடனே விலகிவிடும் நிலைகள் உண்டாம். இரத்தமானது அதிக அழுத்தமாகி இதயம் பழுதாகும் நிலையுண்டாம். எனவே, கோபங்களைக் குறைத்தால் நலமுண்டாகும். செவ்வாயுடன் குரு ஆட்சியாகிக் கூடினாலும் சூரியன் கூடினாலும் வில்லங்க விவகாரங்களிலும், நோயிடர்களிலும் ஜெயமுண்டாகும். புதனும் சனியுங் கூடப் பழுதாகும். மனைவி வழியில் ஆதரவில்லாமலும், விவகாரங்களோடும் இருக்கும். வழக்குகள், வில்லங்கங்கள் ஆகியன வந்தாலும் செவ்வாய் சுபமான நிலையில் இருந்தால் ஜெயத்திற்குப் பழுதில்லை. செவ்வாய் அசுப பலமாய் இருக்க ஆறாம் பாவத் தொல்லைகள் உண்டானால் செவ்வாய்க் கிரகப் பிரீதிகளையும் சுப்பிரமணிய சுவாமி உபாசனையையும் தொடர்வதன்மூலம் சத்துருக்களை வெல்லலாம். ஏவல், பில்லி, சூனியமென்று சில உபாதைகள் தோன்றினாலும், சத்துரு சம்ஹார பிரீதிகளையும் சடாச்சர உபாசனைகளையும் மேற்கொள்ளத் தீர்வான

பலன்கள் உண்டாகும். இராசிக்கு 7ஆம் இடத்தில் செவ்வாயிருக்க இராகு, கேதுக்கள் கூடினாலும் மத்திமம்.

மிதுன இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு 8ஆம் இடமான மகரத்தில் உச்சபலம் பெறச் சனி ஆட்சியாகிக் கூடினால் இடருண்டாம். செவ்வாய் தனித்திருந்தாலோ சூரியன், நீசம் பெற்ற குருவுடன் சேர்ந்திருந்தாலோ முரணான பலனைச் செய்வார். ஆக, இடருக்குப் பின் இயக்க பலனும் ஆக்கப் பலனும் உண்டென்று கூறப்படுகின்றது. புதன் செவ்வாயுடன் கூடினாலும் மத்திமமாம். இதன்படி சில விதமான கண்டங்கள் உண்டாகும். அவற்றால் சில இழப்புகள் ஏற்படும்; கால்கள் மரத்துவிடும்; வாத நிலைகள் உண்டாகும். இரத்த ஓட்டம் சில காலத்திற்குக் குறைவாக இருக்கும். சத்துருக்கள் மிகவும் வலிமையுள்ளவர்களாய் இருப்பர். அவர்களால் சில பங்கம் ஏற்பட்ட பின்னரே தமக்கு வெற்றி உண்டு என்று கூறப்படுகின்றது. ஏவல், பில்லி, சூன்யம் போன்ற குணங்களைச் செய்யும் துர் தேவதைகளின் அட்டகாசம் ஆடிப் பின் அடங்கும் நிலைகள் உண்டாம். கடன் விதிகளும் சிறுகச் சிறுகப் பெருத்துப் பின் தடையாகிப் படிப்படியே குறையும் நிலையுண்டு. இதற்குப் பொறுமை மிக அவசியம். செவ்வாய் சனியுடன் கூடினால், ஆடிப் பின்னரே அடங்கிப் பலன் செய்வார். எந்தப் பாவாதிபதியாக இருக்கின்றாரோ அந்தப் பலனைக் கெடுத்துப் பலன் செய்வார் என்பதாகும். செவ்வாய்க்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்வதாலும், சுப்பிரமணிய ஸ்வாமிக்கு பூஜைகள் மேற்கொள்வதாலும் உயர்வான ஜெயம் செய்யும் பலனையடையலாம்.

மிதுன இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு 9ஆம் இடமான கும்பத்தில் இருக்கப் பிதுர் வர்க்கச் சொத்திற்கும் பங்கமுண்டு. அதன் வழியில் சில வில்லங்க விவகாரங்கள் வந்து போகும் அமைப்புண்டாகும். வாத நோய்களும், முழங்கால் வியாதிகளும் உண்டாகும். செவ்வாயுடன் புதன் கூடினால் மத்திம பலனுண்டாகும். நோய்கள் உடனடியாகத் தீரா; மிகத் தொந்தரவாய் இருக்கும். செவ்வாயுடன் குரு கூடினால் சில பலன்கள் சுமுகமாய் ஏற்படும். வில்லங்க, விவகாரங்கள் தன் பிதுர்வர்க்க வழியிலோ மற்ற வழியிலோ உண்டெனினும், காலத்தால் உடனே தீர்வடைய மார்க்கமுண்டாகும். வழக்குகளும் சத்துரு உபாதைகளும், நீச சம்பந்தமான சேர்க்கைகளால் உண்டாகி ஒரு முடிவுக்கு வரும். மற்றவர்களுக்கு ஏற்பட்ட துஷ்ட ஏவல், பில்லி, சூன்யம், ஈடு போன்ற சமாச்சாரங்களைத் தீர்த்து வைக்கவும், தம் மேல் ஏற்பட்ட துஷ்டத்தை நீக்கவும் ஆற்றல்கள் ஏற்படும். செவ்வாய்க்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்வதன்மூலமும், சுப்பிரமணிய ஸ்வாமிக்கு பூஜைகள், வழிபாடுகள்

ஆகியன செய்வதன் மூலமும் துஷ்ட பலனைத் தவிர்க்கலாம் என்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது.

மிதுன இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு 10ஆம் இடமான மீனத்திலிருக்க இதய ரோகமும், இரத்த அழுத்தத்தினால் உடல் அசதியும் உண்டாகும். தொழில் வழியிலான வில்லங்க விவகாரங்கள் உண்டாகும். செவ்வாயுடன் குரு, சூரியன் போன்ற மித்துருக்கள் கூடினால், தொழில் வகையிலான வில்லங்க விவகாரங்களில் வெற்றி கிட்டும்; கடன் மற்றும் கடன்காரர்களின் தொல்லையிலிருந்து தப்பித்து விடுவார்கள். செவ்வாயுடன் புதன் நீசமாகிக் கூட அதம பலன் செலவுண்டாம். தன் சத்துருக்களிடமும், கடன்காரர்களிடமும் அவமானமும் தலைக்குனிவும் சில காலங்களில் வந்து போகும். சில வகையான துஷ்ட ஏவல் வகைகளும் வசிய ஈடு சமாச்சாரங்களும் தன் வகையிலோ தன் தொழில் சம்பந்தப்பட்ட வகையிலோ வந்து போகும். எனவே, கவனமாய் இருத்தல் நலம். வீரபத்திர ஸ்வாமிக்கு பூஜை பிரீதிகளும், யந்திர, மந்திர பூஜைகளும், செவ்வாய்க்கும் சுப்பிரமணிய ஸ்வாமிக்கும் கிரகப் பிரீதிகளும் செய்வதன் மூலம் தன் தொழிலைத் ஸ்திரம் செய்வதுடன், துர் உபாதைகளிலிருந்து தப்பலாம். உடல் நோய்கள் ஏற்பட்டால் உடனே உரிய அவிழ்தங்களைக்கொண்டு நிவர்த்திக்க வேண்டும்.

மிதுன இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான செவ்வாய், இராசிக்கு 11ஆம் இடமான மேஷத்திலிருக்க ஆறாம்பாவ வகையில் பல தொந்தரவு இருந்தாலும் பின் இலாபமாகவும், தனக்கு ஜெயங்களை ஏற்படுத்தக்கூடியதாகவுமிருக்கும். இரத்த சம்பந்தப்பட்ட நோய்களும், கால்கள், இடுப்பு ஆகியவற்றுக்கு மேல் உள்ள உறுப்புகளில் சோர்வும் சில கட்டங்களில் வந்து போகும். அதனை உடனடியாகத் தக்க அவிழ்தங்கள் கொண்டு நிவர்த்தி செய்தல் வேண்டும். கடன் வகையில் இலாபங்கள் உண்டாம். அதனால் கடன் அடைபடும் விதிகளும் ஏற்படும். சத்துரு உபாதைகள் இருந்தாலும், தம் யுக்திகளாலும் திறனாலும் அவற்றையே தனக்குச் சாதகமாக்கக்கூடிய நிலைகளும் உண்டாகும். செவ்வாயுடன் சூரியன் உச்சமாகிக் கூட நன்மையுண்டாகும். இவர்களுடன் சனி கூட மத்திமமாம். செவ்வாயுடன் குரு கூடினாலும் நன்மையுண்டு. ஏவல், பில்லி, சூன்யம் போன்ற சத்துருக்களின் மறைமுக உபாதைகள் இருந்தாலும், அவற்றைத் தகர்த்தெறியும் மனோபலம் மற்றும் தெய்வ ஆற்றல்களும் உண்டாகும். சுப்பிரமணிய சுவாமிக்குப் பிரீதிகளும், செவ்வாய்க் கிரகத்திற்கு யந்திர மந்திர ஜெபங்களும், உச்சாடனங்களும் செய்ய, ஆறாம் பாவ வகையான தொந்தரவுகள் தாக்காமல் சுமுகமான பலனடையலாம்.

மிதுன இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு 12ஆம் இடமான ரிஷபத்தில் இருக்க ஆறாம் பாவ வகையில் சில தொந்தரவுகள் வந்து செல்லும். மர்ம ஸ்தான நோய்களும், இரத்தக் கசிவு நோய்களும், இதய நோய்களும் வந்து போகும். இதனால் மனச்சஞ்சலமும் வீண் விரயமும் சில கால கட்டங்களில் வந்துபோகும். வீண் விரயத்தினால் கடன் தொந்தரவும், சில அவமானங்களும், தலைக் குனிவும் உண்டாகிப் போகும். செவ்வாயுடன் சுக்கிரன் சேரப் பெண் வகையில் கவனம் மிகவும் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் அதுவகையிலான சத்துரு உபாதைகளும், மனச்சஞ்சலமும், நோய்களும், ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துர் தேவதைகளின் தொல்லையும் உண்டாகும். செவ்வாய், சுக்கிரன் ஆகியன கூடி இவர்களுடன் புதன்கூட இன்னும் அதமமாம். வழக்கு, வில்லங்கம், நீதிமன்ற வகையில் பணம் இழத்தல், தண்டனை பெறும் சூழ்நிலைகள் போன்றவையுண்டு. செவ்வாயுடன் 12இல் இராகு கேதுக்கள் கூடினாலும் சில துர்சம்பவங்கள் ஆறாம் பாவ வழியில் நிகழும் என்று கூறப்படுகின்றது. செவ்வாய், இராசிக்கு 12ஆம் இடத்தில் மறைந்ததனால் சுபர்கள் கூடினாலும் அல்லது பார்த்தாலும் சில காரிய ஜெயங்களைச் செய்வார். செவ்வாய்க்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்ய நற்பலன்கள் உண்டாகும்.

மிதுன இராசிக்கு 6ஆம் இடத்ததிபதி செவ்வாய் மிதுன இராசியிலேயே இருக்கத் தன் சத்துரு வீட்டில் செவ்வாய் பலன் குறைவாகச் செய்வார். இரத்தக் கசிவு நோய்களும், ஈரல் சம்பந்தமான நோய்களும், காமாலை நோய்களும் வந்துபோகும். செவ்வாயுடன் புதன் சேர மஞ்சள் நிறம் இரத்தத்தில் பாய்ந்து பாண்டு நோய் போல் காணப்படும். கடன் தொல்லைகள் அடிப்படையிலிருந்தே குறையாமல் உண்டாகும். இதனால் சில தொல்லைகளும், கடன்காரர்களால் தொந்தரவும் உண்டாகும். செவ்வாயுடன் ஏற்கெனவே சந்திரன் சேர்ந்திருக்கக் குருவும் சூரியனும் கூடினாலும் சில வகையில் வெற்றியை உண்டு செய்யும். இப்படிப்பட்ட அமிசங்களில் ஏவல், பில்லி சூன்யம் போன்ற துர் உபாதைகள் பெரும்பாலும் தாக்கா. என்றாலும் சில உபாதைகளையும், சத்துரு உபாதைகளையும் சந்திக்க வேண்டிவரும். வழக்கு, வில்லங்கங்கள் இருந்தால் கால தாமதத்திற்குப் பின்னாலேதான் ஒரு தீர்வடையும். அது சாதகமாய் இருக்க அமைப்புகள் உண்டாகும். செவ்வாய்க் கிரக பிரீதிகளும், சுப்பிரமணிய ஸ்வாமிக்கு பூசைகளும், வீரபத்ர பூஜைகளும் செய்தால் சத்துரு ஜெயமும், துர் உபாதைகள் நீங்கியும் கடன் அடைந்தும் பலனையடையலாமென்று அறியப்படுகின்றது.

மிதுன இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு 2ஆம் இடமான கடகத்தில் இருக்கச் சிலேத்தும நோய்களும், குளிர் சுரங்களும்,

இரத்தம் உறைதலும் உண்டாகும். இருதய சம்பந்த நோய்கள் வந்தால் மிகக் கவனமாய் இருத்தல் வேண்டும். செவ்வாயோடு கேது கூடினால் சில முரணான பலன்கள் உண்டாகும். தனக்குறைவும் அதனால் கடனும் கடன் தொல்லைகளும் உண்டாகி விலகும். செவ்வாயுடன் குரு, சூரியன் முதலானவர்கள் கூட, ஆறாம் பாவ வழியில் தொந்தரவுகள் இருந்தாலும் அது வந்து விலகும் நிலையே உண்டாகும். வழக்கு வில்லங்கங்கள் போன்றவை (செவ்வாய் தனித்திருக்க) வலுக்கும். இதனால் தனம் குறைந்தும், அவமரியாதையும், தலைக் குனிவும் சில காலங்களில் உண்டாகும். செவ்வாயுடன் குரு கூடுவதால் நீசபங்கராஜயோகம் உண்டாகி அதன் பலனைச் செவ்வாய் தனது திசை புத்திகளில் கடன் அடையுமாறு சில பலன்களையும், தன பிராப்திகளையும் கொடுக்கலாம். ஏவல், பில்லி சூன்யம் போன்ற துர்தேவதைத் தொல்லைகள் செவ்வாயுடன் சத்துருக்கள் கூடினால் உண்டாகும். செவ்வாய்க்கு கடுமையான முறையில் யந்திர, மந்திர பிரீதிகள் செய்தால், துர்பலனைத் தவிர்த்து சுப பலனை அடையலாம். துர் தேவதைகள் தொல்லைகள் இருப்பின் சத்துரு சம்ஹார பூசைகள் செய்வதால் தனிப்பட்ட பலன்கள் உண்டென்று கூறப்படுகின்றன.

மிதுன இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு 3ஆம் இடமான சிம்மத்தில் இருக்கக் கொடிய உஷ்ண நோய்களும், மூல ரோகங்களும், பித்தரோகங்களும், சிரசு பாரமும் உண்டாகும். உரிய அவிழ்தங்களை உண்டு நற்பலனையடைய வேண்டும். கடன் தொல்லைகளும், கடன்காரர்கள் தொல்லைகளும் இருந்தாலும் அவற்றை எதிர்த்து நிற்கவும், கடனை அடைக்கவும் விதியுண்டாகும். செவ்வாயுடன் சூரியன் கூடினால் நன்மையுண்டு. குரு கூடினாலும் நன்மையாகும். எதிரிகளின் தொல்லையாகிய சத்துரு உபாதைகளும் ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துஷ்ட தேவதைகளின் தொல்லைகளால் துன்பங்களும் ஏற்பட்டால் அவற்றை எதிர்ப்பதற்கும் தடுத்து நிறுத்துவதற்கும் துணிவும், பக்கபலமும் உண்டாகும். செவ்வாயுடன் புதன் கூட மத்திமம். வில்லங்க விவகாரங்களால் தொல்லையையும், சத்துருக்கள் உபாதையையும், துர் ஏவல்களையும், கொடிய நோய்களையும் சந்திக்க வேண்டியவரும். சுப்பிரமணிய ஸ்வாமிக்குப் பூஜைகளும் சத்துரு சம்ஹாரப் பிரீதிகளும் செய்வதாலும், செவ்வாய் கிரகத்திற்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்வதாலும், சில துர்பலன்களைத் தவிர்க்கலாம். செவ்வாயுடன் இராகு கேதுக்கள் கூட இரத்த சம்பந்த நோய்களால் துர் உபாதை ஏற்படும். ஏற்பட்டால் உரிய அவிழ்தங்களைக்கொண்டு நீக்குதல் நலமென்று அறியப்படுகின்றது.

மிதுன இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு 4ம் இடமான கன்னியில் இருக்க, இரத்த சம்பந்தமான - ஈரலைத் தாக்கும் நோயும், குலை மற்றும் சூலை நோயும் வரும் விதிகள் உண்டாகும். செவ்வாயுடன் புதன் கூடினால் ஆறாம் பாவ வழியில் சில தொல்லைகளை அனுபவிக்க நேரிடும். கடன் உபாதைகள் மனை, நிலம், வாகனம், வீடு போன்ற வகையில் அதிகமாகி உடனே அடையாமல் காலத்தே மெதுவாக அடையும்படி இருக்கும். இதனால் சில வழக்கு வில்லங்கங்களும் சத்துரு உபாதைகளும் சில கட்டங்களில் நீதிமன்றம் வாயிலாக நீதியைத் தேடும் நிலைகளும் உண்டாகும். செவ்வாய் தனித்திருந்தாலும், குரு, சூரியன் முதலானவர்களோடு கூடியிருந்தாலும், ஆறாம் பாவ தொல்லை வகையில் சில நட்ட பலனையும் தன் வாயிலாகவே இலாப பலனையும் அடைய விதியுண்டாகும். துஷ்ட ஏவல், பில்லி, சூன்யம் போன்ற சத்துரு உபாதைகள் கொடுமையாகச் சில கட்டங்களில் தன் சுகத்திற்கும், உடலுக்கும் மற்றும் நில சம்பந்தங்களுக்கும் தொல்லைகள் ஏற்படுத்தினால் அவற்றை உடனே கண்டு, தெய்வ பிரீதிகளை முறையாகச் செய்து துஷ்ட வகைகளைத் தவிர்க்க முயல வேண்டும் என்று கூறப்படுகின்றது. செவ்வாய்க் கிரக வழிபாடுகளாலும், சுப்பிரமணிய சுவாமி பிரீதிகளாலும் ஆறாம் பாவ வழியில் உள்ள தொல்லைகள் யாவும் நீங்கி நற்பலன்கள் உண்டாகும்.

மிதுன இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான செவ்வாய் இராசிக்கு 5ஆம் இடமான துலாத்தில் இருக்க, இரத்தக் கசிவு நோய்களும், மர்ம ஸ்தான நோய்களும், சில உதிர ரோகங்களும் உண்டாகி விலகும். செவ்வாயுடன் சுக்கிரன் கூடச் சுக்கிர மங்கள யோகம் உண்டாகும். இந்த யோக பலன் சில தன பிராப்திகளை அடையும் விதத்திலும் ஆறாம் பாவ தொல்லைகளை நீக்கும் விதத்திலும் உண்டாகும். ஆனாலும், தொடர்ந்து இந்த மாதிரியான யோக பலன்கள் இரா. வழக்கு, வில்லங்கம் போன்ற சுத்துரு உபாதைகள் வந்தாலும் செவ்வாயுடன் சுபகிரகங்கள் கூடத் தனக்குச் சாதகமான பலனும், குல தெய்வ அனுக்கிரகமும் உண்டாகும். செவ்வாயுடன் இராகு கேதுகளோ, புதனோ கூடத் தன் பிள்ளைகள் தன் பேச்சை மதியாமல் சத்துரு போல பாவித்தும், கடன் மற்றும் வில்லங்க விவகாரத் தொல்லைகளைச் செய்வார்கள் என்று கூறப்படுகின்றது. ஏவல், பில்லி, சூன்யம் என்ற வகையில் துர்தேவதைகளின் தொல்லைகள் இருந்தால், அவற்றைத் தன் குலதெய்வ பலத்தாலும், சுய ஆற்றலாலும், செவ்வாய்க்கும் சுப்பிரமணிய சுவாமிக்கும் பிரீதிகள் செய்வதன் மூலமும் அகற்றும் நிலை உண்டாகும்.

# கடகம்

தேவ குருவை 6ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற கடக இராசி அன்பர்களே! உங்களின் 6ஆம் பாவம் கடன், வில்லங்கம், சத்துரு, நோய் உபாதைகள், ஏவல், பில்லி, சூன்யம் போன்ற தொல்லைகள் அவற்றின் நிவர்த்திகள் போன்றவற்றைக் குறிப்பிடும்.

உங்கள் இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான குரு மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளில் இருந்த பலன்களும், குருவோடு மற்ற கிரகங்கள் சேர்ந்த பலனும் உங்களின் 6ஆம் பாவ பலன்களாகும்.

குருவானவர் மற்ற சத்துரு கிரகங்களுடன் சேர்ந்து 6ஆம் பாவ வழியில் துர்பலன்களைச் செய்தால் சத்துரு சம்ஹார பூஜைகளையும், ரோக நிவர்த்தி பிரீதிகளையும், குருவுக்கு யந்திர, மந்திர பிரீதிகளையும் செய்து நற்பலன்களை அடையலாமென்று கூறப்படுகின்றது.

குரு தன் சத்துருக்களான புதன், சுக்கிரன் போன்ற கிரகங்களோடு, கண்ட ஸ்தானங்களில் இருந்தாலும், ரோக ஸ்தானங்களில் இருந்தாலும் சில இடர்களை உண்டுசெய்வார்.

குருவானவர் சூரிய சந்திரர்களொடு கூடினாலும், அவர்கள் வீட்டில் இருந்தாலும் சில பலன்களை 6ஆம் பாவ வழியில் கூட்டிக் குறைத்துச் செய்வார். குரு, செவ்வாயுடன் கூடினாலும் ஒரே சீரான பலன்களில்லாமல் 6ஆம் பாவ பலனைக் கூட்டிக் குறைத்துக் கொடுப்பார் என்று கூறப்படுகின்றது.

''அந்தணன் மதிக் காறோ னாகி
அசுரகுரு, மாலொடு கூடிட மத்திமமாம்
சந்திர சூரியனொடு கூடிடினு மிருந்திடினும்
சத்ருக்கள் மிகுந்துதானும் அழிவார்காணே
பந்தமொடு பகைசெய்யும் பின்னழியும்
பகரமேல் சத்ருக்கள் உபாதைகளொடு
உந்தமேல் தீதனினும் மேன்மையுண்டாம்
உரைப்பீரே பிருதி செய்ய பலனுமாமே''

குரு, சில துர்க்கிரகங்களுடன் சேர்ந்து பலனைத் தடை செய்தாலும், துர்பலன்களை விளைவித்தாலும் குரு பிரீதிகளைச் செய்து நல்ல பலன்களை அடையலாம்.

கடக இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான குரு இராசிக்கு 6ஆம் இடமான தனுசில் இருக்க இதய நோய்கள் உண்டாகும். இரத்த அழுத்த நோய்களும், கொழுப்புச்சதை பெருத்திருத்தல் போன்ற நோய்களும் வருமாம். இவற்றிற்கு உரிய அவிழ்தங்களைக்கொண்டும், குரு பிரீதிகளைச் செய்தும் யந்திர, மந்திர பூஜைகள் செய்தும் உயர்பலனையடையலாமென்று அறியப்படுகின்றது. புதன், சுக்கிரன் முதலானவர்களுடன் குரு கூடினால் சத்துரு உபாதைகளும், கடன் தொல்லைகளும், கடன்காரர்களால் தொல்லையும் உண்டாகும். குருவோடு சுப கிரகங்கள் கூடியிருந்தால் சத்துரு உபாதைகள் இருந்தாலும் வெற்றியும் குறைந்த பாதகப்பலனும் காணப்படும். தட்சிணாமூர்த்தி தேவருக்குப் பூஜைகள் செய்ய உயர்பலனை அடையலாம். தன் பேச்சால் வில்லங்க, விவகாரங்கள் வருதலும், தன் பேச்சுச் சாமர்த்தியத்தால் வெல்லுதலும் உண்டாகும். ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துர்தேவதைகளால் தொல்லைகளும் சில கால கட்டங்களில் வருத்தம். அவற்றைத் தெய்விக உபாசனையாலும், பலத்தாலும் விரட்டியடிக்கலாம். கடன் வகையில் சதா தொல்லைகள் இருந்துகொண்டேயிருக்கும். நோய்களினால் செலவுகளும் மாரக பயமும் அடிக்கடி உண்டாகும். சத்துருக்களை வெல்ல, குருவுக்கு யந்திர மந்திர பிரீதிகளைச் செய்ய உயர்பலன் உண்டாகும் என்று நாடி வாயிலாக அறியப்படுகிறது.

கடக இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான குரு இராசிக்கு 7ஆம் இடமான மகரத்தில் நீசமாகியிருக்க முட நோய்களும், இரத்தக்கட்டி நோய்களும், நோய் குறைதலில் மந்த நிலைகளும் உண்டாகும். உரிய மூலிகை அவிழ்தங்களை உண்ணத் தீர்வான பலன்கள் உண்டாகும். குருவுடன் சனியும் கூட நீசபங்க ராஜயோகமும் தன் மனைவியின் வழியிலே உண்டாகும். அதனால் சத்துரு குணங்களும், குத்திக்காட்டும் குணங்களும் உண்டாகும். சத்துருக்கள் மிகவும் பலமில்லாதவர் போல் காணப்பட்டாலும் மோசமான குணத்தை உடையவராயிருப்பார்கள். அவ்வகையில் ஏவல், பில்லி, சூன்யம் போன்ற சத்துரு உபாதைகளைச் சந்திக்க வேண்டியிருக்கும். உரிய தெய்வப் பிரீதிகளை மேற்கொண்டும், தேவ கணங்களின் உதவியைக்கொண்டும் அவற்றை உரிய காலத்தே அகற்ற வேண்டும்.

நீசம் பெற்ற குருவுடன் செவ்வாய் உச்சமாகிக் கூடினால் 6ஆம் பாவ வழியில் பலன்கள் முரண்பாடாகவே நடக்கும். இவர்களுடன் சனி கூடினால் அந்த பாவ பலன்களையே உண்டு இல்லையென்று செய்துவிடுவார்கள். இதனால் நண்பனே எதிரியாகும் நிலையும் உண்டாகும். வில்லங்க விவகாரங்களை உரிய காலத்தில் உடைத்தெறியாவிடில், அவற்றால் தொல்லைகளும், காலம் கடந்து செயல் செய்வதால் தீமையுமே உண்டாம். குருவுக்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்ய உயர் பலன்கள் உண்டாகும்.

கடக இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான குருவானவர் இராசிக்கு 8ஆம் இடமான கும்பத்தில் இருக்கச் சத்துரு உபாதைகளும், அவர்களினால் ஏவல், பில்லி, சூன்யம் போன்ற வகையிலான தொல்லைகளும் உண்டாகும். இதனால் மனச்சஞ்சலங்கள் உண்டாகும்.

கடன் உபாதைகளும், கடன்காரர்கள் உபாதைகளும் அடிக்கடி ஏற்படும். கடனை அடைப்பதில் காலதாமதமும் உண்டாகும். வாத நோய்களும், முட்டிக்கால் நோய்களும், இதயக் கோளாறும் உண்டாகும். இதனால் சஞ்சலமும், கடன் தொல்லைகளும் உண்டாகுமென்பதில் ஐயமில்லை. வில்லங்க, விவகாரங்களை உடனே தீர்க்காவிட்டால், பிரச்சினை விஸ்வரூபம் எடுக்கும். தன்னால் தாக்குப் பிடிக்க முடியாத சூழ்நிலைகள் உண்டாகும். தனக்குப் பிரியமானவர்களே தனக்கு எதிரான காரியங்களில் ஈடுபடுவார்கள்; தன்னைச் சத்துருவாக பாவிப்பதில் சில காலக்கட்டங்களில் குறியாக இருப்பார்கள். அந்தக் கட்டத்தில் மிகுந்த மனவேதனையால் அகால போஜனமும், உறக்கமும் உண்டாகும். உரிய கிரகப் பிரீதிகளைச் செய்யாவிடில் தொல்லைகளைத் தொடர்ந்து அனுபவிக்க வேண்டியிருக்கும். குருவோடு இராகுகேதுக்கள் கூடினாலும், மத்திமமான பலன்களையே ஏற்படுத்தும். சத்துருக்களால் பங்கமும், நீதிமன்ற வகையிலான மரியாதைக்குறைவும் உண்டாகலாமென்று கூறப்படுகின்றது. கிரகப்பிரீதிகள் செய்வதன் மூலம் சில தடைகளை அகற்றலாம்.

கடக இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான குருவானவர், இராசிக்கு 9ஆம் இடமான மீனத்தில் இருக்க, சத்துரு உபாதைகளும், நோயிடரும் இருந்தாலும், வந்துவிலகும் நிலையிலேயே இருக்கும். குருவுடன் சுக்கிரன் உச்சமாகிக் கூடினாலும், புதன் நீசமாகிக் கூடினாலும் சில சுக, பாக்கியங்களைக் கெடுத்து 6ஆம் பாவ வழியில் பின் சாதகப்பலன்களைக் கொடுப்பார்கள் என்று கூறப்படுகின்றது. இதய ரோகங்களும் சதை

ரோகங்களும், மர்மஸ்தான ரோகங்களும், வந்து விலகும். தன் தகப்பன்வழி கடனைத் தான் அடைக்கும் நிலைகள் சில கட்டங்களில் உண்டாகும். குரு சுபர்களுடன் கூடியிருந்தால் 6ஆம் பாவ வழியில் தொல்லைகள் இருந்தாலும் அவற்றைத் தடுக்குமளவுக்குத் தனக்குப் பலமும் பராக்கிரமும் உண்டாகும். ஏவல், பில்லி, சூன்யம் மற்றும் சல்லிய ஏவல்களின் தொல்லைகள் உண்டானாலும், தனக்குக் கிரகப்பிரீதியால் ஏற்பட்ட பாதுகாப்பால் அவை விலகி ஒடிவிடும் நிலையுண்டாகும். நண்பர்கள் சத்துருவாகும் நிலை அதிகமுண்டு. யாரிடமும் நிதானமாகவே பழகுதலும் பேசுதலும் நல்ல பலனைத் தரும். குருவுக்குக் கிரகப்பிரீதிகள் செய்தால் 6ஆம் பாவ வழியில் தொல்லைகள் குறைந்து உயர் பலனையடையலாம்.

கடக இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான குருவானவர் இராசிக்கு 10ஆம் இடமான மேஷத்தில் இருக்க இரத்த அழுத்த நோய்களும், அதனால் இதய வேதனைகளும் உண்டாகும். உரிய மூலிகை அவிழ்தங்கள் கொண்டும், நவீன கால சிகிச்சைகளைக்கொண்டும் குணம் பெறுவது நல்லது. தொழிலில் கடன்களும் சத்துருக்களும், வில்லங்க விவகாரங்களும் சில கால கட்டங்களில் வந்து செல்ல விதியுண்டாகும். குருவுடன் சூரியன் உச்சமாகிக் கூடத் தொல்லைகளையும், தொழில் முறையில் கடன்களையும் அகற்ற வல்லமையும் உண்டாகும். குருவுடன் சனி நீசமாகிக் கூட மத்திமமாய், வில்லங்க விவகாரங்களால் தொல்லையும் அதனால் அவ மரியாதையும், தலைக்குனிவும் சில காலகட்டங்களில் வந்துசெல்லும். குருவுக்கு எந்திர, மந்திர பிரீதிகளும் தட்சிணாமூர்த்தி தேவருக்கு வழிபாடும் செய்ய அவை தீரும் என்று கூறப்படுகின்றது. தொழில்வகையில் கடன்களும், அவற்றின் வகையில் சத்துருக்களும் உண்டாகி, மத்திம காலங்களில் பல்வேறு முறையில் தொல்லைகள் ஏற்படும். அதன்பின் பிரீதிகள், பூஜைகள் ஆகியன செய்வதன்மூலம் அவை அடங்குதலும் உண்டாகும். இரத்த அழுத்தம் சம்பந்தமான இதய பலவீனங்கள், ரோகங்கள் வந்தால் உடனே தக்க அவிழ்தங்களைக்கொண்டு பலனையடைய வேண்டும். தேவகுரு பிரகஸ்பதிக்கு பூஜைகள் செய்தால் ஆறாம் பாவ வழியில் தொல்லைகள் குறைந்து சாதகமான பலன்கள் ஏற்பட விதியுண்டாகும். குருவுடன் உறவுக்கிரகங்கள் கூட தொழில் வழியில் ஆறாமிடத் தொல்லைகள் இருந்தாலும் தனக்கு ஜெயப் பலன்கள் பின் உண்டாகும்.

கடக இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான குரு இராசிக்கு 11ஆம் இடமான ரிஷபத்தில் இருக்க, மர்மஸ்தான நோய்களும், இரத்தக்கசிவு மற்றும் பித்தநோய்களும், சிரசு கிறுகிறுப்பு நோய்களும் உண்டாகி விலகும். மூத்த

சகோதரர்கள், சில காலங்களில் தமக்கு எதிராகச் சொத்துகளை அடைய விடாமலும், இலாப பலன்களை அடைய விடாமலும் சத்துரு போல் குணம் கொண்டு செயல்படுவார்கள். குருவுடன் புதன், சுக்கிரன் முதலானோர் சேர்ந்தால் முன் சகோதர வழி இடர்கள் 6ஆம் இடத் தொந்தரவு வழியில் உண்டாகும். சில தொந்தரவுகளையும், உபாதைகளையும் தயக்கத்துடன் எதிர்த்து நிற்கப் பயந்து கண்டும்காணாமல் போகவேண்டியதிருக்கும். தொழில் வகையிலும், சகோதர வழியிலும் அல்லது பங்காளி முறை வகையிலும் சில துஷ்ட தொந்தரவுகளை அடைய நேரும். அவற்றால் மற்றவர்களையும் சில கட்டங்களில் பகைக்க நேரும். குருவுக்குக் கடுமையான பிரீதிகள் செய்வதன்மூலம் சில துஷ்டப் பலன்களைத் தடை செய்யலாம். பங்காளி மற்றும் சகோதர வகையில் கடன் வாங்கக் கூசுவார்கள். அப்படி வாங்கினால், அதனால் தொந்தரவு உண்டாகி பலவகையில் இம்சைகள் உண்டாகும். தட்சிணாமூர்த்திக்குப் பூஜைகள் செய்ய உயர் பலன்களை அடையலாம்.

கடக இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான தேவ குரு இராசிக்கு 12ஆம் இடமான மிதுனத்தில் இருக்கக் கடன் தொல்லைகளும், சத்துருக்களால் பங்கமும், அதனால் பணவிரயமும் கால விரயமும் சில காலங்களில் நேரும். ஈரல் நோய்களும், சுவாசத் தொந்தரவும், கபரோகமும் உண்டாகி விலக விதியுண்டு. சத்துருக்கள் மிகவும் வலிமையானவர்களாய் இருப்பார்கள். அவர்களிடம் சர்வ ஜாக்கிரதையாக இருத்தல் அவசியம். தன் பொருளையும், தன் புகழையும் அழிக்கும் நோக்கும், செயல்படுத்தும் நிலையும் அவர்களுக்குண்டாகும். கடன் தொல்லையால், அவமானப்படுதலும் கால விரயமும் உண்டாகி விலகும். குருவுக்கு உரிய பிரீதிகள் செய்வதன் மூலம் 6ஆம் பாவத் தொல்லைகளைத் தடுக்கலாமென்று கூறப்படுகின்றது. வில்லங்க விவகாரங்களும் நீதிமன்றம் மற்றும் காவல்துறை வகைகளில் பணவிரயமும், மனச்சஞ்சலமும் ஏற்படும். தனக்குச் சாதக பலன் குறைவான காரணத்தால் பயமும் உண்டாகும். தெய்வ பூஜைகள், சத்துரு சம்ஹார பிரீதிகள் போன்றவற்றைச் செய்வதால், அவர்கள் செய்யும் இடரை அழிப்பதுடன் தமக்குச் சாதகபலன்களைக் கிடைக்கச் செய்யும். குருவுக்கு யந்திர மந்திர பிரீதிகள் செய்வதால் உயர் பலனை அடையலாமென்று கூறப்படுகின்றது.

கடக இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான குரு கடக இராசியிலேயே உச்சமாக இருக்கச் சதை ரோகங்களும், சிலேத்தும ரோகங்களும், இதயரோகங்களும் சில கால கட்டங்களில் வந்து போகும். அந்தச் சமயம் உரிய மூலிகை மருந்துகளைக் கொண்டோ, நவீன காலச்

சிகிச்சையைக்கொண்டோ காலம் தாழ்த்தாது குணமடையச் செய்ய வேண்டும். நோயானது உச்ச நிலைக்குச் சென்றே குணமடையும். கடன் தொல்லைகள், கடன்காரர்கள் தொல்லைகள் போன்றவற்றால் சில காலங்களில் தொடர்ந்து தொல்லைகளும், அதன் பின்பு நீங்குதலும் உண்டாகும். குருவோடு செவ்வாய் நீசமாகிக் கூடினால், சில யோகங்களை 6ஆம் இட வழியில் கொடுத்தாலும் அவற்றில் கவனமாய் இருத்தல் நலம். ஏவல், பில்லி, சூன்யம் என்று துர்தேவதைகளால் சத்துரு உபாதைகள் ஏற்பட்டாலும், அவற்றைத் தாங்கும் குணமும், எதிர்க்கும் செயலும் உண்டாகும். குருவுக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்தால் உயர்வான பலன்களை 6ஆம் இட வழியில் அடையலாம். குருவோடு பகைக் கிரகங்கள் கூடச் சில முரணான பலன்கள் ஏற்படலாம். அவ்வாறு ஏற்பட்டால் சத்துரு சம்ஹார பிரீதிகள் மூலம், குருவுக்குக் காரகப் படையல் மற்றும் பூஜைகளைச் சரி வரச் செய்வதன் மூலமும் நல்ல பலன்களை அடையலாம். சத்துரு, ஏவல், பில்லி, சூன்யம், கடன் உபாதைகள், வில்லங்க விவகாரம், சிறைவாசம், நீதிமன்ற வகையில் நீதி போன்ற ஆறாம் பாவ செயல்கள் சில காலம் தொடர்ந்து வரும். அவற்றைப் பிரீதிகள் மூலமே தடைசெய்வது பலனளிக்கும் என்று மகரிஷி பதஞ்சலி முனிவரின் நாடி வாயிலாக அறியப்படுகின்றது.

கடக இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான குரு இராசிக்கு 2ஆம் இடமான சிம்மத்தில் இருக்க வெப்பு நோய்களும், வெள்ளை, வெட்டை நோய்களும், இதய பலவீனமும் உண்டாகுமென்று அறியப்படுகின்றது. சில கட்டங்களில் சிரசு நோய்களால் தொல்லைகள் உண்டாகும். தன் வழியில் தனம் அழிந்து கடன் ஏற்படுதலும், அந்தக் கடனை காலங்கடந்தே அடைத்தலும், தன் பரம்பரையிலும் அந்தக் கடன் தொடர்தலும், இதனால் குடும்பவழியில் தொல்லையும், மனக்கிலேசமும் உண்டாகும். குருவுடன் இரண்டுக்கு மேற்பட்ட பகைக் கிரகங்கள் கூட மத்திமமாம். பகைகள் ஓங்கி நிற்கும், நெருங்கிய நண்பர்களையும் எதிரிபோல் பாவிக்கும் நிலையுண்டாகும். குருவுடன் சூரியன் ஆட்சியாகிக் கூடச் சில துர்பலன்களைத் தவிர்க்கலாம். எதிரிகளும் பயந்து நடப்பார்கள். வில்லங்க விவகாரங்களாலும் குடும்ப ஒற்றுமையில்லாததாலும் சில காலங்களில் நீதி தேடி அலைவதன் மூலமோ தன்மானம் காப்பாற்றப்படவோ செலவழிக்க நேருமாதலால், தனம் குறையும். அதுபோல், ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துர்தேவதைகளின் தொல்லைகளால் நண்பர்களையும் நெருங்கிய உறவினர்களையும் சந்தேகப்படும் அளவுக்கு நிலைகள் உண்டாகும். குருவுக்கு எந்திர மந்திர பிரீதிகள் செய்வதாலும், குரு தலத்திற்குச் சென்று வணங்குவதாலும் நற்பலனையடையலாமென்று அறியப்படுகின்றது.

கடக இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான குரு, இராசிக்கு 3ஆம் இடமான கன்னியில் இருக்க 6ஆம் வழியில் பல தொல்லைகளை அடைய வேண்டி வரலாம். ஈரல் நோய்களும், இரத்தத்தில் கிருமிகளும், காமாலை நோய்களும் வந்து போகும். குருவுடன் சுக்கிரன் நீசமாகிக் கூடினால் மத்திமம். இளைய சகோதர வழியில் ஒற்றுமையில்லாமை இருக்கும். அவர்கள் தன்னை எதிர்த்து எதிரிபோல் பாவித்தும் நடப்பார்கள். அவர்களிடம் வில்லங்க, விவகாரங்களையும், கடன் தொல்லைகளையும் அனுபவிக்க வேண்டியிருக்கும். குருவுடன் இரண்டுக்கு மேற்பட்ட உறவுக் கிரகங்கள் கூடினால் 6ஆம் பாவ வழியில் வரும் தொல்லைகள் கணிசமாகக் குறையும். தன் காரியத்தில் வெற்றியடையலாம். சில காலங்களில் தன் தைரிய, வீரியங்கள் குறைய நேரிட்டுத் தன் வலுவான எதிரிகளை எதிர்க்காது தலைகுனிய வேண்டிவரும். அச்சமயம் குருவுக்கும், தட்சிணாமூர்த்தி தேவருக்கும் பூஜைகள் செய்தும், சத்துருக்கள் தொல்லைகள் அதிகமாய் இருப்பின் சத்துரு சம்ஹார பூஜைகளைத் தொடர்ந்து நடத்தியும், அவர்களின் தொல்லைகளைக் குறைவாகப் பெற்று நம் வழியில் நல்ல பலனை அடையலாம். நீதிமன்ற விவகாரங்கள், சிறை வகையிலான தண்டனைகள் போன்றவற்றில் கவனமாக இருக்க வேண்டும். பூஜைகள் நடத்த வேண்டியது அவசியம்.

கடக இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான குரு இராசிக்கு 4ஆம் இடமான துலாத்தில் இருக்க ஆறாம் பாவ வழியில் பல தொல்லைகள் உண்டாகும். சத்துருக்கள் சதா தொல்லைகளைக் கொடுத்துக்கொண்டும், மிக மூர்க்கமானவர்களாகவும் இருப்பார்கள். நிலம், மனை, காடு, கழனி, வாகனம் போன்றவற்றில் இடர்களையும், உபாதைகளையும் செய்வார்கள். குருவுடன் சுக்கிரன் சேர வில்லங்க, விவகாரங்கள் உண்டாகும். அவற்றின் வழியே நிரந்தரத் தீர்வடைய நாளாகும். குருவுடன் சூரியன் நீசமாகிக் கூட குருவின் உறவுப் பலம் குறையும். தனக்குச் சாதகபலன் குறைந்தே காணப்படும். மர்மஸ்தான நோய்களும், இரத்தக் கசிவு நோய்களும் வந்து விலகும். மதுமேக நோய்கள், சர்க்கரை வியாதி போன்ற ரோகங்கள் ஆகியவற்றால் உடல் நலம் கெடலாம். கவனமாயிருந்து உரிய அவிழ்தங்களை உண்ண வேண்டும். ஏவல், பில்லி, சூன்யம் போன்ற சல்லிய சமாச்சாரங்களால் வீடு, நிலம், உடல் போன்றவை பெருமளவில் பாதிக்கப்படலாம். வீரபத்திர ஸ்வாமிக்கும், தட்சிணாமூர்த்தி தேவருக்கும் பிரீதிகள் செய்வதாலும், நிலம் மனைகளில் ''பஞ்ச கௌவியம்'' என்று முன்பு கூறப்பட்ட பொருளைத் தெளிப்பதாலும் 6ஆம் பாவத் தொல்லைகளிலிருந்து விடுபட்டு நல்வாழ்வையடையலாம் என்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது.

கடக இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான குரு இராசிக்கு 5ஆம் இடமான விருச்சிகத்தில் இருக்க இரத்த அழுத்த நோய்களும், இதயப்படபடப்பு நோய்களும் உண்டாகும். புத்திர வழியில் இடர்களும், தனக்கு எதிராகச் செயல்படும் நிலைகளும் உண்டாகும். பூர்வ புண்ணிய சொத்துகளால் இடர்களும், வில்லங்க விவகாரங்களும் வந்து போகும். சில விஷயங்களில் மூர்க்கத்தனமான தாக்குதல்களும், அவற்றால் பலத்த இடர்களும் உண்டாகும். சில வேளைகளில் குலதெய்வ, இஷ்ட தெய்வ பலனை அண்டியிருத்தலும், அந்தப் பலன் காலதாமதமாகக் கிடைக்க நேர்தலும் உண்டாகும். புத்திர வகையிலும், தன் தாய்வழிச் சகோதரரிடையேயும் கடன்களால் சில வில்லங்க விவகாரங்கள் வந்து போகுமென்று கூறப்படுகின்றது. ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துர் உபாதைகள் சில காலங்களில் தொடர்ந்து இருத்தலும், தடை செய்ய மனத்துணிவு குறைதலும் உண்டாகும். எனினும், சத்துரு உபாதைகளைத் தவிர்க்கச் சத்துரு சம்ஹார பிரீதிகளையும், தட்சிணாமூர்த்திக்கும், குரு பகவானுக்கும் பிரீதிகளையும் செய்வதால் நல்ல பலன் உண்டென்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது. 6ஆம் பாவ வழியில் துர் பலனை தவிர்க்கக் குருவுக்கு யந்திர, மந்திர பிரீதிகள் செய்து நன்மையை அடையலாம்.

# சிம்மம்

சனீஸ்வர பகவானை 6ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற சிம்ம இராசி அன்பர்களே! ஆறாம் பாவமென்பது கடன், சத்துரு, வல்வழக்கு, வில்லங்கம், ருணவாதை, ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துர்பலன்களைக் குறிப்பிடும். உங்கள் இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான சனி பகவான் மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளிலும் இருந்த பலனும் மற்ற கிரகங்களுடன் சேர்ந்த பலனும் உங்களின் 6ஆம் பாவ பலன்களாக அறியப்படுகின்றன. அதன்படி, அன்பர்கள் சனி பகவான் தங்கள் இராசிக்கு எத்தனையாவது இடத்தில் அமர்ந்திருக்கின்றார் என்பதை அறிந்து, பலன்களைத் தெரிந்துகொள்ளவும். துர்பலன்கள் இருப்பின் பிரீதிகள் செய்து நல்ல பலனையடையவும்.

''கண்டிடுமோர் முடகாரி ஆறோனாகி
கருத்துடனே ஐந்தெட்டு பனிரெண்டில்
விண்டுரைப்பேன் ஆறின்வகை தொந்தம்பல

விரிக்கக்கேள் சத்ருக்கள் ஏவல்பில்லி
சண்டையொடு சச்சரவால் விரையமொத்து
சாற்றவரும் பாவபலன் தானே கெடுத்தும்
தொண்டில்லை உயர்பணியும் போச்சுதானே
துன்பமேல் துயர்நீக்க பிருதிசெய்யே''

இராசிக்கு 8, 12ஆம் இடங்களில் சனியிருக்க 6ஆம் பாவ வழியில் பல தொல்லைகளைச் சந்திக்க நேரிடும். துர்பலன்கள் ஏற்பட்டால் உரிய பிரீதி செய்து நற்பலன்களை அடைய வேண்டும்.

சிம்ம இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 6ஆம் இடமான மகரத்தில் ஆட்சி பெற்றிருந்தால் சத்துரு பயம், மனக்கவலை ஆகியன இருக்கும். வாத ரோகங்களும், வறுமையும், ஏவல், பில்லி, சூன்யம் போன்றவற்றால் தொந்தரவும் இருக்கும். கடன்கள் தொல்லை தரும். வழக்கு விவகாரங்கள் போன்றவை அடிக்கடி வந்து விலகும். விவசாய நிலங்களால் கடன் அதிகமாகும் நிலை உருவாகும். குடும்பத்தில் அடிக்கடி மனஸ்தாபங்களும், அலைச்சலும் தரித்திர நிலையை உருவாக்கும். மனைவியால் வில்லங்க விவகார நிலைகள் வரும். சனியோடு உச்சம் பெற்ற செவ்வாய் சேர்ந்தால் உஷ்ணம் சம்பந்தமான நோய் நொடிகள் வருவதற்கான சாத்தியக் கூறுகள் நிறையவுண்டு. எதிரியை வெல்லும் திறமையும் உண்டு. சனியுடன் சுக்கிரன், புதன் ஆகியன சேர்ந்தால் இராஜ தண்டனை, சிறைவாசம் போன்றவற்றை அனுபவிக்கும் நிலை உருவாகும். சனியுடன் இராகு சேர்ந்தால், ஏவல், பில்லி, சூன்யம் ஆகியன தெரிந்தவராகவும், அவற்றை நிவர்த்தி செய்யும் மந்திரங்கள் கற்றவராகவும் இருக்க விதியுண்டு. சனியுடன் குரு சேர்ந்தால் நீரிழிவு போன்ற நோய்களும், சனியுடன், சுக்கிரன், இராகு அல்லது கேது ஆகியன சேர்ந்தால் மர்மஸ்தான நோய்களும் உண்டாகும். இவற்றிற்குச் சனிக்கு எந்திர, மந்திர பூஜைகள் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

சிம்ம இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 7ஆம் இடமான கும்பத்தில் ஆட்சி பெற்றிருந்தால். மனைவி வழியில் ஆதரவும் நிம்மதியும் இருக்காது. மனஸ்தாபங்களும், வில்லங்க விவகாரங்களும் ஏற்படும். விரோதங்கள் அதிகமாகும் நிலை உருவாகும். கடன்களால் அடிக்கடி அவதி ஏற்படும். பெண்களினால் வியாதியும் மனக்கவலையும் உண்டாகும். சனியுடன் சூரியன், செவ்வாய் ஆகியன சேர்ந்தால் உஷ்ணம் சம்பந்தமான நோய்கள், இரத்தக்கட்டி, கணுக்கால் சூலை நோய் போன்றனவும், இராஜப்பிளவை, இரத்த அழுத்தம் போன்ற நோய்களும்

இருக்க விதி உண்டு. இவற்றிற்கும் அவிழ்தங்களை உண்டு சரி செய்ய வேண்டும். சனியுடன் புதன், சுக்கிரன் ஆகியன கூடினால் எதிரியால் தொல்லைகளும், இனிப்பு நீர், வாதம், மதுமேகம் போன்ற நோய்களால் அவதியும் ஏற்படும். சனியுடன் இராகு சேர்வதால் கணவன், மனைவி ஆகிய இருவருக்கும் தோல் சம்பந்தமான வியாதிகளும், மர்ம ஸ்தான நோய்களும் உண்டாகும். பில்லி, சூன்யம், செய்வினை போன்றவற்றால் தொந்தரவையும், தொல்லைகளையும் அனுபவிக்க விதியுண்டு. இரத்தம் கெட்டுத் தோலில் கருமை படர்ந்த நோய்களும் உண்டாகும். இதற்கு விநாயகருக்குப் பூஜையும் அர்ச்சனையும், சனீஸ்வரருக்குப் பிரீதியும் செய்ய உத்தமமான பலன்களை அடையலாம்.

சிம்ம இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 8ஆம் இடத்தில் மீன இராசியில் நட்புடனிருப்பதால் மத்திமமான பலன்களே உண்டு. குடும்பத்தில் பெரும்பாலும் வறுமையே தலைவிரித்தாடும் நிலை உருவாகும். சண்டை சச்சரவுகள் நிறைய உண்டு. எதிரிகளினால் தொல்லையும், அவமானமும் உண்டாகும். மனஸ்தாபங்கள், வம்பு வழக்கு, வில்லங்கம் போன்றவை உருவாகும் நிலை உண்டாகும். வருமானம் குறைந்திருக்கும். பொருள்கள் திருடுபோகும் நிலையும், வறுமையும் அபகீர்த்தியும் உண்டாகும்.

சனியுடன் சூரியன், செவ்வாய் ஆகியன சேர்ந்தால், பித்தப் படபடப்பு, மயக்கம், இரத்த அழுத்தம், கட்டிகள், இரணம் போன்றவை உண்டாகும். இதற்குத் தக்க மருந்துகளை உண்டு குணப்படுத்த வேண்டும். விவசாய நிலங்களால் கடன்கள் உண்டாகும். ஏவல், பில்லி, சூன்யம் போன்றவற்றால் தொல்லைகள் உண்டாகும். சனியுடன் சுக்கிரன், புதன் போன்ற கிரகங்கள் கூடினால், பெண்களினால் வியாதிகளும் நீரிழிவு போன்றவையும் உண்டாகும். சனியுடன் இராகு கேதுக்கள் கூடினால் மது மேகமும், சரும நோய்களும் மர்மமான நோய்களும் உண்டாகும். தண்டனை, சிறைவாசம் போன்றவற்றை அனுபவிக்க நேரிடும். இதற்கு விநாயகருக்கு அர்ச்சனையும், சனிஸ்வரருக்கு ஆராதனையும் செய்ய, நல்ல பலன்கள் உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 6ஆம் அதிபதியான சனி, இராசிக்கு 9ஆம் இடத்தில் மேஷத்தில் நீசம் பெற்றிருந்தால் மத்திமமான பலன்களே உண்டாகும். பிதுர் பாக்கியச் சொத்துகள் விரயமாகும். அதனால் கடன்கள், மனக்கவலை, வியாதிகள் ஆகியவற்றை அனுபவிக்க நேரிடும். நம்பிக்கைத் துரோகம் ஏற்படும். மனம் நல்ல வழிகளில் ஈடுபாடு கொள்ளாது. ஏவல் பில்லி சூன்யங்களும் குடும்பத்தில் இருக்கும். அமைதி இராது. பெரும்பாலும்

நற்பலன்கள் ஏற்படாது. காடு, கழனி நிலபுலன்களில் விளைச்சலின்றி நஷ்டமே ஏற்படும். அதனால் கடன்கள் அதிகமாகும். சனியுடன் சூரியன், செவ்வாய், குரு ஆகியன சேர்ந்தால் கிறுகிறுப்பு, தடுமாறி விழுதல், வாய்வு, வலிப்பு போன்ற நரம்பு சம்பந்தமான நோய்களும் உண்டாகும். சனியுடன் புதன், சுக்கிரன் ஆகியன சேர்ந்தால், இனிப்பு நீர் சம்பந்தமான நோய்களும், வாதம், அண்டவாதம் போன்றவற்றால் தொல்லைகளும் உண்டாகும். சனியுடன் இராகுகேதுக்கள் கூடினால் தகப்பனுக்கு இருக்கும் வியாதி பரம்பரையானதாகவும், இனிப்பு நீர், தோல், இரத்த சம்பந்தமான வியாதிகளாகவும் இருக்கும்; ஏவல், பில்லி, சூன்யம், செய்வினை ஆகியவற்றால் தொந்தரவும், மன அமைதியில்லாமையும், வம்பு வழக்கு வில்லங்கமும் ஏற்படும். இதற்கு விக்னேஷ்வரருக்குப் பூஜையும், அர்ச்சனையும் சனீஸ்வரருக்கு எந்திர, மந்திர பிரீதியும் செய்ய, நல்ல பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

சிம்ம இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 10ஆம் இடமான ரிஷபத்தில் நட்புடனிருப்பதால், மத்திமமான பலன்களே நடக்கும். பிறர் பொருளை மோசம் செய்வார்கள்; பிறரை ஏமாற்றிப் பிழைப்பார்கள்; ஊர் சுற்றிக்கொண்டும், சோம்பேறித்தனமாகவும் இருப்பார்கள். வாழ்க்கையில் கடன்களால் தொல்லைகளையும், அவமரியாதையையும் சந்திக்க நேரிடும். மனத்தில் சதா பயமும், துஷ்டத்தனமான செயல்களும் உண்டாகும். குடும்பத்தில் சண்டை சச்சரவுகள் நிறைந்து, ஒருவருக்கொருவர் மனஸ்தாபங்களும் உண்டாகும். தொழிலில் போட்டியும் மனஸ்தாபங்களும் தொல்லைகளும், முடக்கங்களும் உண்டாகும். சனியுடன் புதன், சுக்கிரன் ஆகியன கூடினால் வாத ரோகங்களும், இனிப்பு நீர், மதுமேகம், மேகநீர் சம்பந்தமான வியாதிகளும் உண்டாகும். ஆனால், எதிரி அடங்குவான். சனியுடன் குரு சேர்ந்தால் வாய்வு ரோகங்களும் சிலேத்ம நோய்களும் உண்டாகும். கடன்களும், தொழிலில் நஷ்டங்களும், கஷ்டங்களும் ஏற்படும். சனியுடன் இராகு கேதுக்கள் சேர்ந்தால் மர்மஸ்தான நோய்களும் பித்த, வாய்வு, சரும ரோகங்களும் உண்டாகும். அவற்றிற்குத் தகுந்த மருந்துகளை உண்டு நீக்கலாம். சனியுடன் செவ்வாய் சேர்ந்தால் காடு, கழனிகளால் வருமானம் இருந்தும் செலவுகளே அதிகம் ஏற்படும். இதற்கு விநாயகருக்குப் பூஜையும், சனீஸ்வரருக்கு பிரீதியும், எந்திர மந்திர பூஜையும் செய்தால் நற்பலன்கள் கிட்டும்.

சிம்ம இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 11ஆம் இடமான மிதுனத்தில் நட்புடனிருந்தால் வியாதிகளால் அவஸ்தையும், இலாபத்தில் அதிகமான மருத்துவச் செலவும், கடன்களால் தொல்லையும்

வந்து, பின் விலகும். மூத்த சகோதரர்கள் வியாதிகளால் அல்லலுற விதியுண்டு. மூத்த சகோதரர்களால் தொல்லையும் அவமதிப்பும் ஏற்படும். இலாபங்கள் கைக்கு எட்டிய நிலையில் இருந்தாலும் அந்தப் பலனை அனுபவிக்க முடியாத நிலை உருவாகும். சனியுடன் குரு, சூரியன் ஆகியன சேர்ந்தால் உஷ்ண சம்பந்தமான பீடைகளும், வாத ரோகங்கள், ஜுரங்கள், அம்மை நோயால் அவதி போன்றவை ஏற்படும். சனியுடன் செவ்வாய் சேர்ந்தால் புற்று நோய் உண்டாகலாம். சனியுடன் சுக்கிரன், புதன் ஆகியன சேர்ந்தால் கடன்கள் அதிகமாகி அலைச்சலும் தொல்லையும் ஏற்படும். கடன்களால் சண்டைகள், வம்பு வழக்குகளும் உண்டாகும். மர்மமான முறையில் வியாதிகளும், ஆஸ்துமா, க்ஷயம், காசம் போன்ற வியாதிகளும் உண்டாகும். சனியுடன் இராகு கேதுக்கள் சேர்ந்தால் மர்மஸ்தான வியாதிகள், பெண்களினாலும், பெண் போகங்களினாலும் ஏற்படும். பெண்களிடம் மோகம் அதிகரிக்கும். அதனால் பணச்செலவும், மாது, சூது போன்றவற்றால் அபகீர்த்தியும் ஏற்படும். இதற்கு விநாயகருக்கு அர்ச்சனையும் சனீஸ்வரருக்கு எந்திர, மந்திர பூசையும் செய்ய, நற்பலன்களை அடையலாம்.

சிம்ம இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 12ஆம் இடமான கடக இராசியில் இருந்தால் மத்திமமான பலன்களே நடக்கும். எதிரிகளால் அடிக்கடி தொல்லைகளும், மன பயமும், மரண பயமும் இருந்து கொண்டேயிருக்கும். அகால போஜனமும், தூக்கமில்லாமையால் அவதியும், வறுமையும், சயன சுகக் குறைவும் ஏற்படும். அலைச்சல் அதிகமாகிக் கஷ்டம் மேலோங்கும். அநாவசியமான மருத்துவச் செலவுகள் ஏற்பட்டு, குடும்பம் வருவாயை இழக்கும் நிலை உருவாகும். கடன்கள் கட்டுக்குமீறி இருக்கும். சண்டை சச்சரவுகள், ஏற்படும். வழக்கு வியாஜ்ஜியங்களால் பூர்வ சொத்துகளும் மனைவி சொத்துக்களும் அழியும் நிலை உருவாகும். சனியுடன் சுக்கிரன் சேர்ந்தால் வம்பு, வழக்குகள் ஏற்படும். அதன் மூலம் நீதிச் செலவுகளும் அதிகமாக உருவாகும். மதுமேகம், பெண்களினால் ஏற்படும் வியாதிகள், மர்மமான முறையில் ஆண் உறுப்பில் வியாதிகள் ஆகியன உண்டாகும். சனியுடன் புதன் கூடினால் மருத்துவச் செலவுகள் அதிகரித்து அதனால் கல்வி தடைப்படும் நிலை ஏற்படும். வாய்வு, பித்தக் கிறுகிறுப்பு போன்றவற்றால் அவதி நிலை உருவாகும். சனியுடன் சூரியன், செவ்வாய் ஆகியன கூடினால், பத்திய உணவுகள் அருந்தும் நிலை உருவாகும். குடும்பத்தில் நல்லது நடக்கும். சுபகாரியத் திருஷ்டி ஒன்று உண்டு. இருந்தும் இலாபம் மட்டுப்படும். விரயம் அதிகமாக இருக்கும். சூரியனுடன் செவ்வாய் இருக்குமானால், அதிகாரம் செலுத்தும் நிலை ஏற்படும். வியாதிகள் உண்டாகும். சனியுடன், இராகு கேதுக்கள் கூடினால் வியாதிகளால்

கஷ்டமும் நஷ்டமும் உருவாகும். இதற்கு சனீஸ்வரருக்கு எந்திர மந்திர பிரீதி செய்ய நற்பலன்களை அடையலாம்.

சிம்ம இராசிக்கு 6ஆம் அதிபதியான சனி, இராசியிலே இருந்து பகை பெற்றிருந்தால் மத்திமமான பலன்களே நடக்கும். சதா வியாதிகளும் கடன்காரர்களால் தொல்லைகளும், கஷ்டங்களும் மிகுந்து இருக்கும். மனத்தில் பயமும், குரோதமும் இருந்து வரும். எதிரிகளின் தொல்லைகளால் மனக்கவலையும் உண்டாகும். வம்பு வழக்கு, வில்லங்கம் போன்றவற்றைச் சமாளிக்க வேண்டிவரும். சனியுடன், சிம்ம இராசியில் ஆட்சி பெற்ற சூரியன் சேர்ந்திருந்தால், அம்மைநோய், வைசூரி, இரத்த அழுத்த நோய் போன்ற உஷ்ண சம்பந்தமான நோய்கள் உண்டாகும். இருந்தாலும் எதிரிகளைச் சமாளிக்கும் ஆற்றல் உண்டாகும். சனியுடன் புதன், சுக்கிரன் ஆகியன சேர்ந்தால் மேகநீர், மதுமேகம், பெண்களினால் ஏற்படும் வியாதிகள் ஆகியவை உண்டாகும். இவற்றிற்குத் தகுந்த மருந்துகளை உண்டு போக்கிக் கொள்ளவேண்டும். சனியுடன் செவ்வாய், குரு ஆகியன சேர்ந்தால் மனத்தில் தைரியமிருந்தும் பயன்படுத்திக் கொள்ள முடியாத சூழ்நிலை உருவாகும். கடன்களினாலும் வியாதிகளினாலும் தொல்லைகள் மிகுந்துவரும். சனியுடன் இராகு கேதுக்கள் கூடினால் ஏவல், பில்லி, சூன்யம் போன்றவற்றினால் கஷ்டங்களும், நஷ்டங்களும் தொல்லைகளும் உண்டாகும். நோய் நொடியால் அவதியுறும் நிலையும் உருவாகும். இதற்கு ஸ்ரீவிநாயகப் பெருமானுக்கு அர்ச்சனையும் சனீஸ்வரருக்கு எந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பயன்களை அடையலாம்.

சிம்மராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 2ஆம் இடமான கன்னி இராசியில் நட்புடனிருப்பதால் மத்திமமான பலன்களே உண்டாகும். வாக்குவன்மை இருக்காது. குடும்பம் நாளுக்கு நாள் தேய்ந்துகொண்டே வரும். கண்ணில் வியாதியும் அதனால் தொல்லைகளும் கஷ்டங்களும் வரும். ஸ்திரமான் பேச்சுகள் இருக்காது. அதிகமாகப் பேசுபவர்களாய் இருப்பார்கள். அதிகமாகக் கடன்களை வாங்கிச் செலவு செய்பவர்களாய் இருப்பார்கள். குடும்பத்தில் அமைதி யிராது. கல்வி, தடைப்படும் நிலை உருவாகும். "இவர்கள் பேச்சினால் விரோதம் வரும் நிலை உண்டாகும். வாக்குச் சனி கோப்பைக் கலைக்கும்" சனியுடன், ஆட்சி உச்சம் பெற்ற புதனும் நீசமான சுக்கிரனும் கூடினால் எவ்வளவு கடன் இருந்தாலும், தொல்லைகள் இருந்தாலும், புதன்திசை, சுக்கிர புத்தியிலோ சுக்கிர திசை, புதன் புத்தியிலோ கடன் அடைபடும் நிலை உண்டாகும். ஆனால், வாதரோகங்களும், சிறுநீர் சம்பந்தமான வியாதிகளும், பாண்டு ரோகங்களும் தொல்லையும் கஷ்டமும் தரும். சனியுடன் சூரியன், குரு ஆகியன கூடினால் குடும்பத்தில் ஒற்றுமை

குறைவுபடும். உஷ்ணபீடைகளும், நீர்ச்சுரப்பும் ஏற்படும். மன அமைதி இராது. வம்பு வழக்கு, வில்லங்கங்கள் ஆகியன உண்டாகும். சனியுடன் செவ்வாய், இராகு, கேதுக்கள் ஆகியன கூடினால் ஏவல், பில்லி, சூன்யம், செய்வினை ஆகியவற்றால் கஷ்டம் ஏற்படும். இராஜப்பிளவை, கட்டிகள், வெட்டுக்காயங்கள், வெண்குஷ்டம், பித்த சம்பந்தமான வியாதிகள் ஆகியவை உண்டாகும். இதற்குச் சனீஸ்வரருக்கு எந்திர, மந்திர பூசைகள் செய்தால் நற்பலன்களை அடையலாம் என்று ஸ்ரீமகரிஷி பதஞ்சலி முனிவர் சந்திர நாடியில் கூறுகிறார்.

சிம்ம இராசிக்குப் 6ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 3ஆம் இடமான துலாத்தில் உச்சம் பெற்றதால், தைரியம், ஆற்றல், திறமை ஆகியன எல்லாம் ஓங்கி இருக்கும். ஆனால், இளைய சகோதரர்கள் அவ்வளவு நல்லவர்களாய் இருக்கமாட்டார்கள். எதிரிகள் அஞ்சுவர். கடன் அதிகமாய் இருந்தாலும், தொல்லை தராத நிலை உண்டாகும். இவர்கள் உடலில் வாதநோய்கள் அதிக ஆதிக்கம் செலுத்தும் நிலை உருவாகும். சனியுடன் நீசம் பெற்ற சூரியனும் ஆட்சி பெற்ற சுக்கிரனும் கூடினால், நற்பலன்கள் உண்டாகும்; கடன்கள் அடைபடும்; எதிரிகள் அடங்கி அஞ்சுவர். சனியுடன் செவ்வாய், குரு ஆகியன கூடினால் வியாதிகளால் கஷ்டமும் அவதியும் உண்டாகும். சனியுடன் புதன் சேர்ந்தால் வாயுக்கோளாறினால் அண்டவாதம், கணுக்கால் முழங்கால் வாதம் போன்றவற்றினால் தொல்லைகளும், அவதியும் உண்டாகும். சனியுடன் இராகு கேதுக்கள் கூடினால், மர்ம ஸ்தானங்களில் வியாதிகளும், பெண்கள் மேல் பிரியமும், மோகமும் உண்டாகும். பெண் போகங்களினால் வியாதிகள் சேர்ந்து, கஷ்டங்களும் தொல்லைகளும் உண்டாகும். ஏவல், பில்லி, சூன்யங்கள் போன்றவற்றால் அவதியும், தொல்லைகளும் உண்டு. இதற்கு ஸ்ரீவிநாயகருக்கு அர்ச்சனையும், சனீஸ்வரருக்கு எந்திர, மந்திர பிரீதிகளும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

சிம்ம இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 4ஆம் இடத்தில் விருச்சிக இராசியில் இருப்பதால் மத்திமமான பலன்களே நடக்கும். தாய்க்கு உடல்நலம் பாதிக்கும். தாயே எதிரியாகும் சூழ்நிலை உருவாகும். நிலபுலன்கள், வீடு, மனை, கட்டடங்கள், காடு, கழனிகளால் விளைச்சல் பாதிக்கும். அதன்மூலம் கடன் தொல்லைகள் ஏற்படும். இரும்பு எந்திர வாகனங்கள் பழுதடைந்து சேதமடையும். கால்நடை இழப்பு, உயிரிழப்பு ஆகியன ஏற்படும். வீடுகள் பழுதடையும், கட்டடங்கள் நிலை குலைந்து காட்சியளிக்கும். கடனுக்காக வீடு, நிலம் ஆகியவற்றை விற்கவோ,

அடமானம் வைக்கவோ நேரிடும். சனியுடன் செவ்வாய் ஆட்சி பெற்றால் தாய்க்கு வியாதி வந்து தீரும் நிலை உண்டாகும். உஷ்ண சம்பந்தமான வியாதிகள், பீடைகள், இரத்தக் கொதிப்பு, இரத்தக் கட்டிகள், கொப்புளங்கள் ஆகியவை ஏற்படும். சனியுடன் சூரியன், குரு ஆகியன சேர்ந்தால், பித்தத்தால் திரேகத்தில் உஷ்ணம் அதிகரித்து சுகக் கெடுதலும், காமாலை, கண்டமாலை போன்ற வியாதிகள் ஏற்படவும் விதியுண்டு. சனியுடன், சுக்கிரன், புதன் ஆகியன கூடினால் திரேகத்தில் வாத, பித்தத் தொல்லைகளை உண்டு செய்யும். பெண்களின் மூலம் சுகமும் போகமும் கிடைக்கும். அவற்றால் பணச்செலவும் ஏற்படும் இவர்களுடன் இராகுகேதுக்கள் கூடினால் ஏவல் பில்லி, சூன்யத்தால் சுகக்கெடுதலும், தாய்க்கும் சேய்க்கும் அசௌகரியமான நிலையும் உண்டாகும். எதிரிகளின் மூலம் தொல்லைகளும், மர்மஸ்தான வியாதிகளும் ஏற்படும். இதற்கு ஸ்ரீவிநாயகருக்கு அர்ச்சனையும், சனீஸ்வரருக்கு எந்திர, மந்திர பிரீதிகளும் செய்வதால் நற்பலன்களை அடையலாம்.

சிம்ம இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 5ஆம் இடமான தனுசு இராசியில் இருந்தால் மத்திமமான பலன்களே ஏற்படும். புத்திரதோஷம் ஏற்படும். இதற்குப் பரிகாரம் செய்தால் புத்திர உற்பத்தி உண்டு. பிறரை ஏமாற்றும் குணம் கொண்டவர்களாக இருப்பார்கள். கடன் நிறைய உண்டாகி அவற்றுடன் தொல்லைகளை அனுபவிக்க நேரிடும். தாய்மாமன் வழி ஆதரவு இராது. விரோதங்களும், சண்டைகளும், வில்லங்கங்களும் உண்டாகும். சனியுடன் குரு ஆட்சி பெற்றால் நற்பலன்கள் பாதியும், மீதி மத்திம பலன்களும் உண்டாகும். சனியுடன் புதன், சுக்கிரன் ஆகியன கூடினால் பெண்களினால் வியாதியும், மன உலைச்சலும் அலைச்சலும் உண்டாகும். சனியுடன் சூரியன், செவ்வாய் ஆகியன கூடினால் தன்மதிப்பை இழக்க நேர்தலும் காடுகழனிகளை அடமானம் வைக்கும் நிலையும் ஏற்படும். பூர்வ புண்ணியத் சொத்துகள் அழியும். சரீர பீடையும் ஏற்படும் நிலை உருவாகும். கெட்ட எண்ணங்களைக் கொண்டவர்களாகவும், இதய நோய் உள்ளவர்களாகவும் இருப்பார்கள். மேற்கண்டவற்றில் இருந்து விடுபட, ஸ்ரீவிநாயகருக்கு அர்ச்சனையும், சனீஸ்வரருக்குப் பிரீதியும் எந்திர, மந்திர பூசைகள் செய்து நற்பலன்களை அடையலாம் என்று கூறுகிறது சந்திர நாடி.

# கன்னி

சனீஸ் வர பகவானை 6ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற கன்னி இராசி அன்பர்களே! 6ஆம் பாவமென்பது கடன், வழக்கு நொம்பலங்கள், ருணவாதை, ஏவல், பில்லி, சூன்யம் போன்ற சத்துரு உபாதைகளையும், நோய் உபாதைகளையும் குறிப்பிடும். சனியானவர் மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளிலும் இருந்த பலனையும் மற்ற கிரகங்களோடு கூடிய பலனையும் அறிந்து, உங்களின் ஆறாம் பாவத்தின் பலன்கள், பதஞ்சலி மகரிஷியின் கண்ட நாடி வாயிலாகக் கூறப்படுகின்றது. அன்பர்கள், தங்கள் இராசியாகிய கன்னிக்கு, சனி எத்தனையாவது இடத்தில் இருக்கின்றார் என்பதை அறிந்து பலனைத் தெரிந்து கொள்ளவும். சனியானவர் துர் ஸ்தானங்களில் இருந்து துர்பலன்களைச் செய்யநேர்ந்தால், சனிக்கு கிரகப் பிரீதிகள் செய்தும் யந்திர மந்திர பிரீதிகள் செய்தும் பலனையடையவேண்டும்.

''கருங்காரி வெய்சேய் அம்புலியொடு கூடி
காணா மறைவிட மேறியிருக்கத் தானும்
வரும்பலனும் பாவமது கெட்டேபோகும்
வழுத்தலாம் சுபர்நோக்கின் துன்பமில்லை
தருமமொடு மேற்பலன்கள் தானமொடு
தனயனவன் துயர்துடைக்கத் தானேசெய்ய
வருமேதான் பாவபலன் துயர்நீக்கி
வன்மையொடு பலனைத்தான் நோக்கி நில்லே''

என்றபடி சனியானவர் சூரியன், செவ்வாய், சந்திரன் ஆகியவற்றோடு மறைவிடங்களில் கூடினால் அவர் எந்த பாவத்திற்குரியவரோ அந்த பாவ பலனைக் கொடுமையாகச் செய்வார். சனிக்கு யந்திர, மந்திர, பிரீதிகள் செய்வதன் மூலமும், காரியார்ச்சனை, தூப, தீபம் போன்ற உபச்சாரங்கள் செய்வதன் மூலமும் உயர்பலன்கள் அடையலாமென்று கூறப்படுகின்றது.

கன்னி இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சனி இராசிக்கு 6ஆம் இடம் கும்பத்தில் ஆட்சி பெற்றிருந்தால் கடன் கப்பு தொல்லைகள், வியாதிகள், வாதரோகங்கள், சூலை நோய்கள் ஆகியவற்றால், கஷ்டங்களும் தொல்லைகளும் உண்டு. எதிரிகளினால் பயமும் மனக்கவலையும் உண்டு. கலகங்கள் உண்டு பண்ணும். மனஸ்தாபத்தை பெரியோர்களிடமும், மற்றவர்களிடமும் ஏற்படச்செய்து வைக்கும். வறுமையும்,

சிறைவாசத்தையும் அனுபவிக்கும் நிலை உருவாகும். சனியுடன் குரு, சூரியன், செவ்வாய் ஆகியவர்கள் கூடினால் காடு கழனிகளினால் கடன்கள் உண்டாகும். வியாதிகள் மரண பயத்தையும் கண்டத்தையும் ஏற்படுத்தும். சனியுடன் சுக்கிரன், புதன் ஆகியன கூடினால் வாத ரோகங்களும், விஷ ரோகங்களும் பெண்களினால் வரும் வியாதிகளும், மர்ம உறுப்பு வியாதிகளும் வந்து விலகும். இதற்கு தகுந்த மருந்துண்ணத் தீர்வு ஏற்படும். சனியுடன் இராகு கேதுக்கள் கூடினால் விஷ பயமும், விஷ ரோகங்களும், விஷ நீர் சம்பந்தப்பட்ட சரும நோய்களும் உண்டாகும். தொழிலில் நஷ்டங்களும் போட்டிகளும் உண்டாகும். இதற்கு ஸ்ரீ விநாயகருக்கு அர்ச்சனையும், சனீஸ்வர பகவானுக்கு பிரீதியும், எந்திர, மந்திரப் பூஜைகளும் செய்வதால், நற்பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

கன்னி இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 7ஆம் இடமான மீன இராசியில் இருந்தால், மனைவியால் கஷ்டங்களும், மனஸ்தாபங்களும் உண்டாகும். மனைவியே எதிரியாகும் சூழ்நிலை உருவாகும். மனைவி வழியில் ஆதரவு இராது. குடும்பத்தில் அமைதி இராது. மனைவிக்கு வியாதிகளும் கஷ்டங்களும் ஏற்படும். வாத ரோகங்களும், சூலைநோய்களும், வயிற்றில் தொல்லைகளும் மனக்கவலையும் ஏற்படும். எதிரிகளால் பயமும் உண்டு. சனியுடன் சூரியன், செவ்வாய் ஆகியன கூடினால் பொருள் அழிவும், விரயமும் வில்லங்கமும், அதனால் மனத்தைரியமும் ஏற்படும். கண்டங்களும் மரண பயத்தைக் கொடுக்கக் கூடிய அளவுக்குக் கஷ்டத்தை ஏற்படுத்தும். சனியுடன், புதன், குரு, சுக்கிரன் ஆகியன கூடினால், காடு கழனிகளால் நஷ்டமும் பணவிரயமும், தொழில் முடக்கமும், பிதுர் பாக்கியத்தை அடையமுடியாத சூழ்நிலையும், உண்டாகும். பெண்களினால் வியாதியும், நீர்ச்சுரப்பு, இனிப்புநீர், மகோதரம், பாண்டு, வாய்வுக் கோளாறுகள், மதுமேகம் நீரிழிவு போன்ற வியாதிகளும், உண்டாகும். சனியுடன் இராகுகேதுக்கள் சேர்ந்தால் கருங்குஷ்டம், வெண்குஷ்டம், விஷநீர் சம்பந்தமான புண்கள், கட்டிகள் கொப்புளங்கள் போன்றவை ஏற்படும். இதற்கு ஸ்ரீவிநாயகருக்கு அர்ச்சனையும் சனீஸ்வரருக்கு எந்திர, மந்திர, பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

கன்னி ராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 8ஆம் இடமான மேஷத்தில் நீசமானால் வியாதிகளினால் கஷ்டங்களும், நஷ்டங்களும், நோய் நொடியினால் மரண பயமும், கண்டங்களும் உண்டாகும். வறுமையும், நோய் நொடிகளும் உருவாகும். சண்டை சச்சரவுகள் வம்பு வழக்குகள் ஆகியன உண்டாகும். வழக்கும் வியாஜ்ஜியங்களும், உண்டாகும். சனியுடன் சூரியன்,

செவ்வாய் ஆகியன கூடினால் இரத்த அழுத்தம், உஷ்ண பீடைகள், மஞ்சள் காமாலை, இதய நோய்கள், கண்டமாலை, அம்மை, வைசூரி போன்ற நோய்கள் ஏற்படும். கடன்களால் அதிக தொந்தரவும் உண்டாகும். சனியுடன் புதன், சுக்கிரன் ஆகியன கூடினால், நீர்ச்சுரப்பு, மகோதரம் போன்ற நோய்கள் ஏற்படும். பெண்களினால் சுகமும், அதே சமயத்தில் காம சுகத்தினால் மதுமேகம், நீரிழிவு போன்ற நோய்களும் உண்டாகும். இவற்றிற்குத் தகுந்த அவிழ்தங்கள் உண்டால் இந்த நோய்க்கொடுமைகளிலிருந்து தப்பலாம். பிதுர்பாக்கியச் சொத்துகள் சேதமாகும்; தொழிலில் மந்தமான சூழ்நிலை உண்டாகும். சனியுடன் குரு கூடினால் வாயு சம்பந்தமான தொந்தரவுகளினால் வியாதிகள் உண்டாகும். பூர்வ சொத்து, மனையால் வில்லங்கம் விவகாரம் ஏற்படும். சனியுடன் இராகுகேதுக்கள் கூடினால் ஏவல், பில்லி, சூன்யம் ஆகியன உண்டாகும். விஷ சம்பந்தமான பீடைகள் உண்டாகும். இதற்கு ஸ்ரீ விநாயகர் பூஜையும் சனீஸ்வரருக்கு அர்ச்சனை ஆராதனையும், எந்திர, மந்திரப் பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் கிடைக்கும்.

கன்னி இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 9ஆம் இடமான ரிஷபத்தில் நட்புப் பெற்றிருப்பதால் மத்திமமான பலன்களே கிடைக்கும். பிதுர்பாக்கியச் சொத்துகள் அடமானம் வைக்கவும், விற்கவும் நேரிடும். தகப்பனார் சதா வியாதியாலே கஷ்டப்படுவார்; பாக்கியங்களை அனுபவிக்க முடியாது. தகப்பனாருக்கும் மகனுக்குமிடையே உறவில் விரிசல் ஏற்படும். அவரை எதிர்த்துப் போராட வேண்டிய சூழ்நிலை இருந்துவரும். மனத்தில் நீதி நேர்மைகள் குறைந்து, பாவச் செயல்களில் மனம் இலயிக்கும் நிலை உண்டாகும். பிறரை நம்பி ஏமாறுதலும் உண்டாகும். சனியுடன் சூரியன், குரு கூடினால் விவசாய நிலபுலன்களை விற்கவேண்டிய நிலை உண்டாகும். பித்த, வாத ரோகங்களும், இருதய சம்பந்தமான வியாதிகளும் உண்டாம். இருந்தாலும், எதிரி அஞ்சுவான். சனியுடன் செவ்வாய், புதன் ஆகியன கூடினால் கண்டங்களும், விபத்துகளும் ஏற்படும். வாதரோகங்களும், வாயு சம்பந்தமான, நரம்பு சம்பந்தமான சிலந்தி, கொப்புளம், இரணம் முதலியவற்றால் கஷ்டமும் தொல்லையும் உண்டாகும். சனியுடன் சுக்கிரன், இராகுகேதுக்கள் கூடினால் பிதுர்பாக்கிய சொத்துகளினால் வில்லங்கமும், மனஸ்தாபமும் ஏற்படும். வீடு, மனை, காடு, நிலபுலன்கள் ஆகியவற்றில் ஏவல் பில்லி, சூன்யம் இருப்பும் உண்டாகும். சர்க்கரை நோய்களும் மேக நீர், விஷ நீர் சம்பந்தமான நோய்களும் உண்டாகும். இதற்கு ஸ்ரீவிநாயகப் பெருமானுக்கு அர்ச்சனையும், சனீஸ்வரருக்கு எந்திர, மந்திர, பிரீதியும் செய்து நல்ல பலன்களை

அடையலாம்.

கன்னி இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 10ஆம் இடமான மிதுனத்தில் நட்புடன் இருந்தால் வாத ரோகியாகவும், வியாதியஸ்தராகவும் இருப்பார். வாழ்க்கை சுகமாய் இராது. மனத்தில் பயம் குடி கொண்டிருக்கும். தொழிலில் போட்டி இருக்கும். தொழில் செய்ய மனம் வராது. தொழில் மந்தமாய் நடக்கும். பிறர் பொருளை அபகரிக்கும் குணமும் கள்ளத்தனமும் உண்டாகச் செய்யும். மோசம் செய்யும் போக்கும், குணமும் உண்டாகும். சிறைவாசம், வறுமை போன்றவற்றையும் அனுபவிக்க விதி உண்டாகும். சனியுடன் ஆட்சி பெற்ற புதனும், சுக்கிரனும் கூடினால் நற்பலன்களையும், அடையலாம். ஆனால் மதுமேகம், நீர்ச்சுரப்பு வியாதிகளும், சிறுநீரகக் கோளாறுகளினால் அவதியும் தொல்லையும் உண்டு. சனியுடன் சூரியன், செவ்வாய் ஆகியன கூடினால் உஷ்ணம் அதிகமாகி உடல் வலிமை குறைந்தும் அசௌகரியங்கள் நிறைந்தும் இருக்கும். வேனல் கட்டிகள், கண்டமாலை, அம்மை போன்ற நோய்கள் ஏற்படும். எதிரிகளை அடக்கும் திறமையுண்டாகும். கடன்களினால் பிரச்சினையையும் தொல்லையையும் சந்திக்க வேண்டி வரும். பூர்வ மனை, நிலபுலம், இடம் ஆகியவை விரயமாகும் நிலையும் உண்டாகும். சனியுடன் குரு கூடினால் விவசாய நன்மைகள், இலாபங்கள் கிடைக்காது. நஷ்டமும், கஷ்டமும் மிஞ்சும். சனியுடன் இராகுகேதுக்கள் கூடினால் வியாதிகளும், விஷ சம்பந்தமான பீடைகளும், தொழில் முடக்கமும் ஏற்படும். இதற்கு ஸ்ரீவிநாயகருக்கு அர்ச்சனையும் சனீஸ்வரருக்கு எந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

கன்னி இராசிக்கு 6ஆம் அதிபதியான சனி, இராசிக்கு 11ஆம் இடமான கடகத்தில் இருந்தால் மூத்த சகோதரரால் வில்லங்கம், மனஸ்தாபம் ஆகியன உண்டு. மூத்த சகோதரர் வியாதியால் துன்பத்தை அனுபவிப்பார். கடன்கள் அதிகமாகி அதனால் கஷ்டங்களும், நஷ்டங்களும் ஏற்படும். இலாபங்கள் அடைய முடியாத சூழ்நிலையை உருவாக்கும். சனியுடன் செவ்வாய் நீசமாகி, குரு உச்சமாகிக் கூடினால் குடும்பத்தில் புத்திர சந்தான விருத்திகளும் சௌகரியங்களும் மிகுந்து காணப்படும். சனியுடன் புதன், சுக்கிரன் ஆகியன கூடினால் பல பெண்களின் தொடர்பும் அதனால் சயன சுகங்களும் கிடைக்கும் நிலை உருவாகும். அதனால், பெண்களினால் வியாதியும், தொல்லையும், பணச்செலவும் வந்து மாறக்கூடும். சனியுடன் சூரியன் கூடினால் இலாபங்கள் கைக்கு வந்தாலும் நிற்பதில்லை; உடனுக்குடன் கரைந்துவிடும், பெரிய இலாபங்களை எதிர் பார்க்க முடியாது. சனியுடன் இராகு கேதுக்கள் கூடினால் விஷ ரோகமும் விஷநீர் சம்பந்தப்பட்ட

நோய்களும், மர்மஸ்தான நோய்களும், சரும வியாதிகளும் உண்டாகும். அவற்றிற்குத் தகுந்த மருந்துண்ண வியாதிகளும் தீரும். இதற்கு ஸ்ரீ விநாயகருக்குப் பூசையும், சனீஸ்வரருக்கு எந்திர, மந்திர, பிரீதிகளும் செய்ய, உத்தம பலன்களை அடையலாம்.

கன்னி இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 12ஆம் இடமான சிம்ம இராசியில் இருப்பதால் வியாதிகளும், கஷ்டங்களும், தூக்கமின்மையும் உண்டு. சயன சுகங்கள் கிடைக்காது. அலைச்சல் அவதி, பொருள் விரயம் ஆகியவை ஏற்படும். அகால போஜனம், எதிரிகளைக் கண்டு பயப்படுவது போன்ற நிலை உருவாகும். இடமாற்றமும் அடிக்கடி ஏற்படும். அனாவசியமான செலவுகள் நிறைய உண்டு. எலும்புருக்கி நோய், வாத சம்பந்தமான நோய்கள் ஆகியனவும் ஏற்பட விதியுண்டு. சனியுடன் சூரியன், செவ்வாய் ஆகியன கூடினால் விபத்துக்களும், கண்டங்களும், பயங்களும், எதிரியால் மனக்கவலையும், உண்டாகும். சனியுடன் புதன், சுக்கிரன் ஆகியன கூடினால் குடும்பத்தில் ஒற்றுமை குறையும். தொழிலில் நிறைய கவனம் செலுத்தவேண்டும். மன பயம் மிகுந்து காணப்படும். பித்த வாத ரோகங்களும் உண்டு. பெண்களினால் வியாதியும், நீர் சுரப்பு, மகோதரம் போன்ற நோய்களும் ஏற்படும். மதுமேகம், மேகநீர், ஜுரம் போன்ற நோய்களினால் அவதி ஏற்படும். இவற்றிற்குத் தகுந்த அவிழ்தங்களை உண்டு வியாதிகளைப் போக்கிக் கொள்ள வேண்டும். சனியுடன் இராகு கேதுக்கள் கூடினால் வில்லங்க விவகாரமும், சண்டை சச்சரவுகளும் ஏற்படும். போதைப் பொருள்களினால் மதிப்பு இழக்க நேரும். அதனால் அவமானமும் சண்டை சச்சரவுகளும் உண்டாகும். ஏவல், பில்லி, சூன்யம் ஆகியன [illegible]ும் உண்டு. இதற்கு ஸ்ரீவிநாயகருக்கு அர்ச்சனையும் சனீஸ்வரருக்கு எந்[illegible], மந்திர, பிரீதியும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

கன்னி இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சனி, இராசியிலே இருந்தால் சதா வியாதிகளும், நோய் நொடிகளும் அதிகமாய் இருக்கும். கடன்களால் தொல்லையும், அவதியும், அதன் மூலம் சண்டை சச்சரவுகள் நிறைய உண்டாகும். மனத்தில் பயம் குடிகொள்ளும் எதிரிகளால் தொல்லைகளும் துன்பங்களும் நிறைய உண்டு. தைரிய, வீரியம், மட்டுப்படும். சனியுடன் புதன் ஆட்சி உச்சம் பெற்றுக் கூடியும், சுக்கிரன் நீசமாகிக் கூடியும் இருந்தால் நற்பலன்கள் நிறைய உண்டாம். ராஜயோகங்களும், கடன்கள் அடைபடுதலும் உண்டாகும். எதிரிகள் அஞ்சக் கூடிய நிலைகள் உண்டாகும். வாயுக்கோளாறுகள், வாதநோய்கள் மிகுந்து இருக்கும். சனியுடன் சூரியன், செவ்வாய், குரு ஆகியன கூடினால் வியாதிகளும், கஷ்டங்களும், துன்பங்களும் மிகும். கண்டங்கள், விபத்துகள்,

ஆகியவற்றால் துன்பமும் வந்து சேரும் நிலை உண்டாகும். சனியுடன் இராகு கேது கூடினால், விஷரோகம், சருமரோகம் முதலிய நோய்களும், ஏவல், பில்லி, சூன்யத்தால் பாதிப்பும் ஏற்படும். இதற்கு விநாயகருக்கு அர்ச்சனையும், சனீஸ்வரருக்கு, எந்திர, மந்திர பிரீதிகளும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

கன்னி இராசிக்கு 6-ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 2-ஆம் இடமான துலாத்தில் உச்சம் பெற்றிருந்தால், சொன்ன சொல்லைக் காப்பாற்றும் நாணயமில்லாத மனிதராகத் திகழ்வார்கள். உறுதியான பேச்சுகளை பேசமாட்டார்கள். வழவழ பேச்சுகள் மிகுந்து காணப்படும். ஊதாரித்தனமான செலவு செய்பவர்களாகவும், கடன்காரர்களின் தொல்லைகள் மிகுந்தவராயும் காணப்படுவார்கள். கல்வி பயிலத் தடை ஏற்படும். வழக்கு, வில்லங்கம், விவகாரம் ஆகியவை நிறைந்து காணப்படும். குடும்பத்தில் ஒற்றுமை இராது. மனைவியினால் அடிக்கடி மனஸ்தாபங்கள் ஏற்படும். சனியுடன் சுக்கிரன் சேர்ந்தால் குடும்பத்தில் சுக சௌக்கியங்கள் நிறைந்தும், பின் சௌக்கியங்களை இழந்தும் துன்பத்தை அனுபவிக்க வேண்டிய காலம் வரும். சனியுடன் செவ்வாய் சேர்ந்தால் எதிரியஞ்சும் நிலை ஏற்படும். உஷ்ணாதிக்கம், கட்டிகள், பித்த படபடப்பு, கிறுகிறுப்பு, மயக்கம் போன்ற வியாதிகளும், துன்பங்களும் நிறையவுண்டு. சனியுடன் சூரியன் சேர்ந்தால் இராஜயோகம் ஏற்பட்டுக் கடன்கள் அடைபடும் நிலையுண்டாகும். மனத்தில் தைரியம் நிறைந்து காணப்படும். சனியுடன் இராகு கேதுக்கள் புதன் கூடினால் வாதநீர் சம்பந்தமான வியாதிகளும், வாய்வு, வலிப்பு, பித்தநீர் சம்பந்தமான வியாதிகளும் நிறைய உண்டு. ஏவலால் அதிகத் தொல்லையும் உண்டு. இதற்குச் சனீஸ்வரருக்கு எந்திர, மந்திர, பூசைகள் புனஸ்காரமும் பிரீதியும், விநாயகருக்கு அர்ச்சனையும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம்.

கன்னி இராசிக்கு 6-ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 3ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால் மனத்தில், தைரியம், வீரியம் ஆகியன நிறைந்து காணப்படும். ஆனால், வியாதிகள் நிறைய உண்டு. சகோதர சகோதரிகள் ஒற்றுமையுடன் இருக்கமாட்டார்கள். கடன்களால் அவதியும், அவமதிப்பும் ஏற்படும். கடன் வாங்கியே காலம் கழிக்கும் நிலை உருவாகும். குடும்பத்தில் ஒற்றுமை இராது. சனியுடன் செவ்வாய் கூடினால் மனத்தில் தைரியம் குடிகொள்ளும், உஷ்ணரோக வியாதிகளும், வாத, பித்த ரோகங்களும் உண்டாகும். இளைய சகோதரம் எதிரியாகக் காட்சியளிப்பர். சனியுடன் சூரியன், குரு ஆகியன சேர்ந்தால் சகோதரர்களுடனும், குடும்பத்துடனும், மனஸ்தாபம் உண்டாகும். வில்லங்கம், வழக்கு

போன்றவையும் ஏற்படும். சனியுடன் புதன், சுக்கிரன் ஆகியவை கூடினால் கடன், வழக்கு, வம்புகள் ஆகியன அவ்வப்போது ஏற்படும். மேகநீர் சம்பந்தப்பட்ட வியாதிகளால் கஷ்ட நஷ்டங்கள் உண்டாகும். சனியுடன் இராகு கேதுக்கள் கூடினால் விஷநீர், பத்து, படை, சொறி, சிரங்கு போன்ற நோய்கள் உண்டாகும். இதற்கு ஸ்ரீவிக்னேஷ்வரருக்குப் பூசையும், சனீஸ்வரருக்கு எந்திர, மந்திரப் பிரீதியும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

கன்னி இராசிக்கு 6-ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 4-ஆம் இடமான தனுசு இராசியில் இருந்தால் தாய்க்கு வியாதியால் துன்பமும், அவதியும் உண்டாகும். வீடு, மனை, நிலபுலன்கள், காடு கழனிகள் போன்றவற்றை அடமானம் வைக்கவோ, விற்கவோ நேரும். வாகனங்கள் பழுதடையும். கால்நடை வர்க்கங்களுக்குச் சேதம் விளையக் கூடிய நிலை உருவாகும். கல்வி, தடைப்படும். விவசாய நிலங்கள் நல்ல முறையில் விளைச்சலைத் தருவதில்லை. சனியுடன் குரு சேர்ந்தால் குடும்பத்தில் ஒற்றுமை நிலவும். கல்வியில் வளர்ச்சியும், வாகன சுகமும் ஏற்படும். ஆனால், வியாதிகளினால் அசௌகரியம் ஏற்படும். சனியுடன் சூரியன், செவ்வாய் ஆகியன சேர்ந்தால், உஷ்ண ரோகங்களும், வாத பித்த ரோகங்களும் உண்டாகும். அதனால் அவதியும் தொல்லைகளும் உண்டு. கடன் தொல்லையும், துன்பங்களும் நிறைய உண்டு. சனியுடன் புதன், சுக்கிரன் ஆகியன சேர்ந்தால் வாத ரோகங்களும், பாதங்களில் வியாதிகளும் பித்தத்தினால் வெடிப்பும் உண்டாகும். மேகநீர், நீர் ஜுரம் போன்ற வியாதிகளும் உண்டு. எதிரிகளால் தொல்லை, மன பயம் ஆகியவை ஏற்படும். சனியுடன் இராகுகேதுக்கள் கூடினால் ஏவல், சூன்யத்தால் அவதியும், சரும பீடையும், உஷ்ண திரோகநோவும் ஏற்படும். இதற்கு ஸ்ரீவிக்னேஷ்வரருக்கு அர்ச்சனையும், சனீஸ்வரருக்கு எந்திர, மந்திர, பிரீதியும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

கன்னி இராசிக்கு 6-ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 5-ஆம் இடமான மகரத்தில் ஆட்சி பெற்றிருந்தால் புத்திர சந்தான தோஷமும், தடையும் ஏற்படும். பூர்வ புண்ணியச் சொத்துகள் அடமானம் வைக்கவோ, விற்க வேண்டிய சூழ்நிலையோ அமையும். தாய் மாமனுக்கும் உங்களுக்கும் மனக் கசப்பு, மனஸ்தாபம் போன்றவை ஏற்படும். இதனால் தாய் மாமனே எதிரியாகும் நிலை உருவாகும். கெட்ட எண்ணங்களும், கெட்ட நடத்தையும் உடையவராய்த் திகழ்வீர்கள். பிறரை ஏமாற்றி வாழ நினைப்பவர்களாகவும் இருக்க விதி உண்டு. சனியுடன் செவ்வாய் உச்சம் பெற்றும், குரு நீசம் பெற்றும் கூடினால் நல்ல ராஜயோக அமைப்பு உருவாகும். உஷ்ண

பீடைகளுள், சொறி, சிரங்கு, இரத்தக்கொதிப்பு, இருதய நோய், மாரடைப்பு போன்ற நோய்களும் ஏற்படக்கூடும். சனியுடன் சூரியன் கூடினால் அவ்வளவு நல்ல பலன்களை எதிர்பார்க்க முடியாது. பூர்வ புண்ணியம் விரயமாகும் நிலை உருவாகும். சனியுடன் புதன், சுக்கிரன் ஆகியன சேர்ந்தால் ஓரளவு நன்மையான பலன்களைத் தரும். சனியுடன் இராகு கேதுக்கள் கூடினால் விஷ ரோகம், சர்ப்பதோஷம் விஷ ஜந்துக்களால் பயம் போன்றவையும், விஷநீர், மர்மஸ்தான நோய்களும் உண்டாகும். இதற்கு விநாயகருக்கு அர்ச்சனையும், சனீஸ்வரருக்கு எந்திர, மந்திர, பிரீதிகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

# துலாம்

தேவகுருவை 6ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற துலா இராசி அன்பர்களே! 6ஆம் பாவமென்பது கடன், வல்வழக்கு. வில்லங்கம், ருணவாதை, ஏவல், பில்லி, சூன்யம் போன்ற கெடுதலான பலன்களைக் குறிப்பிடும். உங்கள் இராசிக்கு 6-ஆம் இடத்ததிபதியான தேவ குரு மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளிலும் ஒவ்வோர் இடத்திலும் இருந்த பலனும் மற்ற கிரகங்களுடன் கூடிய பலனும் ஆறாம் பாவத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. அன்பர்கள் தங்கள் இராசிக்கு குரு எத்தனையாவது இடத்தில் உள்ளார் என்று அறிந்து, தங்கள் 6ஆம் பாவ பலனை அறிந்து கொள்ளவும். தேவகுரு துர்க்கிரகங்களுடன் கூடியோ அவர்கள் வீட்டில் இருந்தோ துர்பலன்களை 6ஆம் பாவ வழியில் செய்தால், குருவுக்கு எந்திர, மந்திர, பிரீதிகளும் கிரக பூஜைகளும் செய்தால் உயர்வான பலனை அடையலாமென்று கூறப்படுகின்றது.

''வல்வழக்கு வில்லங்கம் ருணவாதை
வாட்டமொடு கூறுபாதை நொம்பலங்கள்
சல்லியமாய் ஏவலொத்து சூனியமும்
சடுதியிலே தான்தீர்க்க ஓர்பிருதி
மெல்லவிட்டு வீரபத்ர கடாட்சத்தாலே
மேவவரும் பூஜையொத்து எந்திரமந்திரம்
வல்லதொரு ஆறின்வகை தொந்தம் நீங்க
வழுத்தவே பிருதிசெய்ய கிரக பலனே''

ஆறன் வகை தொந்தரவுகள் அதிகம் இருந்தால் வீரபத்ர ஸ்வாமிக்குக் கடுமையான முறையில் பூஜைகளைச் செய்தும், 6ஆம் இட கிரக வழி யந்திர, மந்திர பூஜைகளைச் செய்தாலும், உயர்வான பலன்கள் கிடைக்கும் என்று நாடி நூல்கள் கூறுகின்றன.

துலா இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான குரு, இராசிக்கு 6ஆம் இடமான மீனத்தில் ஆட்சி பெற்றிருந்தால் கடன் தொல்லைகள் அதிகமாகும். எதிரியினால் பயமும், மனக்கலக்கமும், உண்டாகச்செய்யும் நிலை உருவாகும். தண்டனை சிறைவாசம், வறுமை போன்றவற்றால் துன்பங்களும், கஷ்டங்களும் வந்துசேரும் நிலை உருவாகும். குருவுடன் நீசம் பெற்ற புதனும் உச்சம் பெற்ற சுக்கிரனும் சேர்ந்தால் நல்ல இராஜயோகத்தைக் கொடுப்பார்கள். சுரப்பு நோய்கள், வாத நோய்கள் ஆகிய வியாதிகள் இருக்க வாய்ப்பு உண்டாகும். குருவுடன் சூரியன், செவ்வாய் ஆகியன கூடினால் உஷ்ணாதிக்கம் அதிகமாகி இரத்த அழுத்தம், இதயப் படபடப்பு, மாரடைப்பு போன்ற நோய்களும் ஏற்படும். மனை, வீடு ஆகியவற்றால் வில்லங்க விவகாரமும் இருந்து வரும். குருவுடன் சனி கூடினால் கெட்ட வழிகளில் வியாதிகளும், பணச்செலவும் அதிகமாகி பூர்வபுண்ணியச் சொத்துக்களை இழக்கநேரிடும். கடன்களால் தொல்லையும் கஷ்டமும் உண்டாகும். வழக்குகள், வில்லங்க விவகாரங்கள் ஆகியன ஏற்பட விதியுண்டாகும். குருவுடன் இராகு கேதுக்கள் கூடினால் பாதங்களில் ஊறல், அரிப்பு, வெடிப்பு போன்ற நோய்கள் தொல்லைதரும். வீடு மனைகளில் ஏவலால் கஷ்டமும் நஷ்டமும் உண்டு.

துலா இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியாகிய குரு, இராசிக்கு 7ஆம் இடமான மேஷத்தில் இருந்தால், மனைவிக்கு வியாதியால் கஷ்டம் உண்டாகும். மனைவியினால் எந்த உதவியும் இராது. மனைவிக்கும் உங்களுக்கும் மனக்கசப்பு, மனஸ்தாபம் இருக்கக்கூடும். மனம் அமைதி இழந்து தவிக்கும். குடும்பத்தில் ஒற்றுமை இன்றி மகிழ்ச்சி குறையும். நண்பர்கள்கூட எதிரிகளாக மாறுவார்கள். குருவுடன் நீசம் பெற்ற சனியும், ஆட்சி பெற்ற செவ்வாயும் கூடினால், கடன்களால் தொல்லையும், வியாதிகளால் பணச்செலவும் அதிகரித்துக் கையிலுள்ள பணமெல்லாம் செலவழிய விதியுண்டு. குருவுடன் சுக்கிரன், புதன் ஆகியன சேர்ந்தால் வியாதியால் கஷ்டமும், பணச்செலவுகளும் அதிகமாகும். பிதுர்பாக்கியச் சொத்துகளும் வில்லங்கத்தில் இருக்க விதி உண்டு. குருவுடன் சூரியன் கூடினால் இலாபம் கிடைப்பதே அரிதாகும். குருவுடன் இராகுகேதுக்கள் கூடினால் மனைவிக்கும் உங்களுக்கும் தோல் சம்பந்தமான நோய்களும், மர்மஸ்தான நோய்களும், கடன் விவகாரங்களால் தொல்லையும் இருக்கும்.

இரத்த சம்பந்தமான நோய்களும், வயிற்றில் கட்டி தோன்றுதலும் உண்டாகும். கருங்குஷ்டம் வெண்குஷ்ட நோய்களும் உண்டாகும். அவற்றிற்குத் தக்க மருந்துண்ணச் சரியாகி விடும். ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி தேவருக்கு அர்ச்சனையும், குருவுக்கு எந்திர, மந்திர பிரீதியும் செய்ய நற்பலன்கள் நடக்கும் என அறியலாம்.

துலா இராசிக்கு 6க்குடையவரான குரு, இராசிக்கு 8ஆம் இடத்தில் ரிஷபத்தில் இருந்தால், வியாதியால் துன்பங்களும், கண்டங்களும் விபத்துகளும் ஏற்பட விதியுண்டு. மிகுந்த வறுமை ஏற்படும். பொருள்களை விற்றுப் பசியாறும் நிலை உண்டாகும். சண்டை சச்சரவுகளும் அவற்றால் அவமானமும் அபகீர்த்தியும் அடைய விதி உண்டு. வருமானத்திற்கு வழி இன்றி இருப்பார்கள். சிறைவாசத்தை அனுபவிக்கும் நிலை உண்டாகும். குருவுடன் சுக்கிரன் சேர்ந்து கூடினால் வியாதிகளால் கஷ்டமும், க்ஷயம், இருமல், ஈழை, இளைப்பு போன்ற நீர் ஜுர வியாதிகளும், வாதரோகங்களும் உண்டாகும். அவற்றிற்குத் தகுந்த மருந்துகளை உண்டு போக்கிக்கொள்ள வேண்டும். குருவுடன் புதன், சனி ஆகியன கூடினால் வாத ரோகங்களும் சூலை நோய்களும் உண்டாகும். பிதுர்பாக்கியங்களை அனுபவிக்க முடியாதபடி வில்லங்க விவகாரங்கள் ஏற்பட விதியுண்டு. குருவுடன் சூரியன் சேர்ந்தால் எதிரியின் பயம் தெளிந்து நன்மையடைந்தும் பின்பு எதிரிகளால் நல்ல இலாபமும், பின் அதிக விரயமாகும் நிலையும் உண்டாகும். குருவுடன் இராகுகேது சேர்ந்தால் சிறு நீரகக் கோளாறுகள் நீர்ச்சுரப்பு, மகோதரம் போன்ற வியாதிகளும், பில்லி, சூன்யக் கோளாறுகளும் உண்டாகும். இவற்றிற்குத் தக்ஷிணாமூர்த்தி தேவருக்கு அர்ச்சனையும், பிரீதியும் செய்வதால் நற்பலன்களை அடையலாம்.

துலா இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான குரு, இராசிக்கு 9ஆம் இடமான மிதுனத்தில் இருப்பதால் பிதுர்பாக்கியச் சொத்துகள் உங்களுக்கு நல்ல பலனைத் தராது. வீடு, மனை, கால்நடைகள், பொருள்கள் ஆகியன சேதமாகும். குருவுடன் சூரியன் செவ்வாய் ஆகியன கூடினால் பித்த சம்பந்தமான நோய்களும், அனல் கட்டிகள், போன்றவையும் ஏற்படும். சூதும், வாதும் நிறைந்த மனிதராகவும், வியாதியஸ்தராகவும் இருப்பார்கள். குருவுடன் சுக்கிரன், புதன் ஆகியன கூடினால் மேக ரோகங்களும், நீர் சம்பந்தமான நோய்களும் துன்பத்தைக் கொடுக்கும். பிதுர்பாக்கியச் சொத்துகளை அனுபவிக்க முடியாத நிலை உருவாகும். சொத்தில் வில்லங்க விவகாரங்களும், சண்டை சச்சரவுகளும் ஏற்படும். சிறுநீரகக் கோளாறுகளும் உண்டாகும். குருவுடன் சனி கூடினால் மனை, வீடு ஆகியவற்றால் வழக்கு, வில்லங்கம் போன்றவை ஏற்படும். அவற்றால் துன்பங்களும், அவமானமும்,

அபகீர்த்தியும் ஏற்படும். குருவுடன் இராகுகேதுக்குள் கூடினால் தந்தையை உங்கள் இளவயதிலேயே நீங்கள் இழக்கவோ பிரியவோ நேரிடும். சரும நோய்கள், பத்து, படை, சொறி, சிரங்கு ஆகியவற்றால் துன்பமும் கவலையும் உண்டாகும். ஸ்ரீதட்சிணாமூர்த்திக்கு அர்ச்சனையும் குருவுக்கு எந்திர, மந்திர பூசையும் செய்ய நற்பலன்கள் உண்டாகும்.

துலா இராசிக்கு 6க்குடையவரான குரு, இராசிக்கு 10ஆம் இடமான கடகத்தில் உச்சம் பெற்றிருந்தால், வியாதி ஏற்படும். எதிரிகள் மிகுதியாக ஏற்படுவர். அவர்கள் வலுத்து இருப்பார்கள். நீர் ஜுரம், இருதய படபடப்பு, இருமல், நீர்க்கணை போன்ற வியாதிகளால் துன்பமும் கஷ்டமும் வந்து விலகும். சம்பாதிப்பது கள்ளத்தனமாய் இருக்கும். பிறரை ஏமாற்றி வாழ்பவராவர். துர் நடத்தைகளால் கெட்ட மனிதன் என்று பெயர் பெறுவார். மனத்தில் பயமும், சூழ்ச்சியும் இருக்கும். வறுமை, சிறைவாசம் ஆகியவற்றை அனுபவிக்க விதியுண்டு. குருவுடன் நீசம் பெற்ற செவ்வாய் கூடினால், மனைவிக்கு சதா வியாதியால் துன்பம் இருந்து கொண்டே இருக்கும். அதனால் பணச் செலவும் அதிகமுண்டு. குருவுடன் சூரியன் கூடினால் உஷ்ண சம்பந்தமான சிரசு நோய்கள் உண்டாகும். தீராத ஒற்றைத் தலைவலியால் அவதியுற விதி உண்டு. குருவுடன் சனி, புதன், சுக்கிரன், ஆகியன கூடினால் வீடு, மனை, வாகனங்கள் ஆகியவற்றால் வழக்கு வில்லங்கமும் பிதுர் பாக்கியத்தை அனுபவிக்க முடியாமையும், தொழிலில் சிரத்தை இல்லாமல் இருக்கும் நிலையும் இருக்கும். தொழில் மந்தநிலையில் இருக்கும். குருவுடன் இராகுகேது கூடினால் தொழிலை விட்டுவிட நேரும். பின், விட்டதைத் தொடரவும் நேரிடும். சருமத்தில் வெடிப்பு, கொப்புளங்கள் ஆகியவை ஏற்படும். இதற்கு ஸ்ரீதட்சிணாமூர்த்தி தேவருக்கு அர்ச்சனையும், குருவுக்கு எந்திர, மந்திர பிரீதியும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

துலா இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான குரு, இராசிக்கு 11ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால் இலாபங்களை எதிர்பார்க்க முடியாது. மூத்த சகோதரர்கள் வியாதியுடன் இருப்பார்கள். கடன் தொல்லைகள் அதிகமாகி, குடும்ப கஷ்டங்களையும் சுமக்க வேண்டி வரும். சிரசு நோய்களால் அவதியும் துன்பங்களும் உண்டாகும். குருவுடன் சூரியன் கூடினால் கபால நீர் சம்பந்தமான வியாதிகளும், ஒற்றைத் தலைவலி, சிரசு ஸ்தம்பம் போன்ற நோய் நொடிகள் உண்டாகும். குருவுடன் சனி கூடினால் வில்லங்க விவகாரமும் வீடு, தோட்டம், கழனி ஆகியவற்றில் வழக்கும் ஏற்படும். குருவுடன் புதன், சுக்கிரன், ஆகியன கூடினால் க்ஷயரோகம், இருமல், குளிர் ஜுரங்கள் போன்ற நோய்களும், சிறுநீரகக் கல் போன்ற நோயும் ஏற்படும். இவற்றிற்குத் தக்க மருந்து உண்ண, நோய்கள் தீரும். குருவுடன்

இராகுகேதுக்கள் கூடினால் விஷநீர் சம்பந்தமான நோய்களும், மர்மஸ்தான நோய்களும் உண்டாகும். சரும நோய்களும், கடன் தொல்லைகளால் அவதியும் ஏற்படும். இதற்கு தக்ஷிணாமூர்த்திக்கு அர்ச்சனையும் குருவுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய்வதால் நற்பலன்களை அடையலாம் என்று சந்திரநாடி கூறுகிறது.

துலா இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான குரு, இராசிக்கு 12ஆம் இடமான கன்னி இராசியில் இருப்பதால், எதிரிகளால் தொல்லையும் அடிக்கடி வந்து மாறும். அகால போஜனம் உண்ண நேரும். நித்திரைக் குறைவும், தூக்கம் இல்லாமல் பல வித நோய்களும் வந்து மாறும். அநாவசியச் செலவுகளும் மர்மஸ்தான வியாதிகளும் ஏற்படும். குருவுடன் ஆட்சி உச்சம் பெற்ற புதனும், நீசம் பெற்ற சுங்கனும் சேர்ந்துகூடினால், விரயாதிபதி உச்சம் பெற்று நீசபங்க ராஜயோகத்தைக் கொடுப்பார். பெண்களினால் சுகமும், பெண் போகத்தினால் மர்மஸ்தான வியாதிகளும் வந்து மாறும். கடன்கள் அதிகமாகி நோய் நொடிகளினால் பணச்செலவும் ஏற்பட விதியுண்டு. குருவுடன் சூரியன் கூடி இருந்தால் இலாபம் கிடைத்தாலும் அவ்வளவும் நோய் நொடிக்கே விரயமாகும். அலைச்சலும், சிரசு ரோகங்களும் உண்டாகும். குருவுடன் சனி, செவ்வாய் ஆகியன கூடினால் தனம் விரயமாகும். வீடு, மனை, தோட்டம், கழனிகள் ஆகியவை எல்லாமே விரயமாகும். சூழ்நிலை உண்டாகும். வாத ரோகங்களும், உஷ்ண பீடைகளும் அடிக்கடி வந்துமாறும். குருவுடன் இராகுகேதுக்கள் கூடினால் விஷ ரோகங்களும் விஷபயமும், உறுதி குலைந்து சரீரத்தில் கொப்புளங்களும் தோன்றும். இதற்கு ஸ்ரீதட்சிணாமூர்த்திக்கு அர்ச்சனையும் குருவுக்கு எந்திர, மந்திர, பிரீதியும் செய்து நற்பலன்கள் பெறலாம்.

துலா இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான குரு இராசியிலே இருந்தால் சதா நோய்நொடியில் வாழ்ந்து கொண்டிருக்க வேண்டிய விதி ஏற்படும். தைரியம் வீரியம், ஆகியன குறைந்து காணப்படும். கடன்களால் தொல்லை ஏற்படும். மனத்தில் பயம் குடி கொண்டிருக்கும். குருவுடன் சூரியன் நீசமாகிக் கூடியும் சனி உச்சம் பெற்றும் கூடிச் சேர்ந்தால், உஷ்ண சம்பந்தமான வியாதிகளும், சிரசுநோய்களும், வாத ரோகங்களும் உண்டாகும். வம்பு, வழக்கு, வில்லங்கங்கள் ஆகியன வந்து தீரும். எதிரிகளால் தொல்லையும், மனக்கவலையும் உண்டாகும். குருவுடன் புதன், சுக்கிரன் கூடினால் ஜாக்கிரதையுடன் வாழ நேரிடும். பித்தம், சிலேத்மம் ஆகிய நோய்களை ஏற்படுத்தும். குருவுடன் செவ்வாய் சேர்ந்தால் உஷ்ணாதிக்கம் மிகுந்து கட்டிகள், கொப்புளங்கள், ரணம், பித்தக் கிறுகிறுப்பு மயக்கம் ஆகியன உண்டாகும். குருவுடன் இராகுகேதுக்கள் கூடினால் சரும நோய்கள், விஷநீர், மேகநீர், போன்ற நோய்கள் ஏற்படும். இதற்கு தட்சிணாமூர்த்திக்கு

அர்ச்சனையும், குருவுக்கு எந்திர, மந்திர, பிரீதிகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

துலா இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான குரு, இராசிக்கு 2ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால் கண்ணில் நீர் வடியும். கண்நோய் சம்பந்தப்பட்ட நோய் நொடிகளினால் அவதி உண்டாகும். வாக்கில் வன்மை இல்லாத நிலை இருக்கும். உறுதியான பேச்சு இராது. குருவுடன் செவ்வாய் சேர்ந்தால் குடும்பத்தில் ஒற்றுமை இராது. கல்வி தடைப்படும். குருவுடன் சனி சேர்ந்தால் விளை நிலங்களை அடமானம் வைத்தும், விற்றும் கடன் வாங்கிச் செலவுசெய்ய வேண்டிய நிலை உண்டாகும். வாத ரோகங்களும், கணுக்கால், தொடை போன்ற இடங்களில் வியாதியும் புண்களும் கொப்புளங்களும் ஏற்படும். அவற்றின் வேதனைகளை அனுபவிக்க வேண்டிய சூழ்நிலை உருவாகும். குருவுடன் சூரியன், புதன் ஆகியன சேர்ந்தால் குடும்பத்தில் அதிகமாகச் செலவாகும். வருமானம் இராது. குருவுடன் சுக்கிரன் சேர்ந்தால் வாதரோகங்களும், முழங்கால் வலிகளும் உண்டாகும். குருவுடன் இராகு கேதுக்கள் சேர்ந்தால் ஏவல் பில்லி சூன்யங்களால் பாதிப்பும், சர்ம ரோகங்களும் உண்டாகும். விஷநீர் சம்பந்தமான வியாதிகள் உண்டாகும். அவற்றிற்குத் தகுந்த மருந்து உண்ண வியாதிகள் தீரும். இதற்கு ஸ்ரீதட்சிணாமூர்த்திக்கு அர்ச்சனையும், குருவுக்கு எந்திர, மந்திர பிரீதியும் செய்ய நற்பலன்கள் உண்டாகும்.

துலா இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான குரு, இராசிக்கு 3ஆம் இடமான தனுசு இராசியில் ஆட்சி பெற்றிருந்தால், இளைய சகோதரர்களால் பகையும் மனஸ்தாபமும், கலகமும் ஏற்படும். குடும்பத்தில் ஒற்றுமை குறையும். கடன் தொல்லைகள் அதிகமாக உண்டாகும். தைரியம், வீரியம் ஆகியவை நிறைந்து இருந்தாலும், மனத்தில் கலக்கம் நிறைந்திருக்கும். குருவுடன் சூரியன், செவ்வாய் ஆகியன சேர்ந்திருந்தால், மனைவியால் வம்பு வழக்கையும் வில்லங்க விவகாரத்தையும் சந்திக்க நேரும். சகோதரர்களால் மனப்பகையும், கடன் தொல்லையும் ஏற்பட விதியுண்டாகும். குருவுடன் சனி, சுக்கிரன், புதன் ஆகியன சேர்ந்தால் வீடு, மனை, கட்டிடம் ஆகியவற்றால் நஷ்டமும், கடனும் ஏற்படும். வாகனத்தினால் கண்டங்களும், விபத்துகளும் உண்டாகும். கால்நடைகளால் நஷ்டம் உண்டாகும். பிதுர்பாக்கியங்கள் விரயமாகலாம். வாத ரோகமும், வலிப்பு, பித்தம், கைகால் அசதி போன்ற வியாதிகள் ஏற்படவும் விதி உண்டாம். குருவுக்கு இராகுகேதுக்கள் சேர்க்கை ஏற்பட்டால் கடன் தொல்லையும் மனத்தில் பயமும், கலக்கமும், சர்மரோகமும் ஏற்பட விதியுண்டு. இதற்கு தட்சிணாமூர்த்தி தேவருக்கு அர்ச்சனையும் குருவுக்கு எந்திர, மந்திர பிரீதியும் செய்ய நல்ல பலனை அடையலாம்.

துலா இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான குரு, இராசிக்கு 4ஆம் இடமான மகரத்தில் நீசமானால், தாயார் நோய் நொடியுடன் இருப்பார். அவரே எதிரியாகக்கூட ஆகும் சூழ்நிலை உருவாகும். குடும்பத்தில் நிம்மதி, சௌக்கியம் ஆகியவை குறைந்து காணப்படும். வீடு, மனை, காணி, பூமி, நிலபுலன்கள் ஆகியவை இருந்தாலும் அவை வழக்கு, வில்லங்கங்களினால் முழுமையாக அனுபவிக்க முடியாத நிலையில் இருக்கும். கடன்கள் அதிகமாகும். குருவுடன் சனி ஆட்சி பெற்றுச் செவ்வாய் உச்சம் பெற்றால் நற்பலன்கள் உண்டாகும். வீடு, காணி, பூமி விவசாய நிலபுலன் ஆகியவற்றிலிருந்து வருமானம் கிட்டும். எதிரிகள் அஞ்சி வாழ்வார்கள். உஷ்ண சம்பந்தமான, பித்த சம்பந்தமான வியாதிகள் உண்டு. மனத்தில் தைரியம், திறமை, ஆற்றல் ஆகியவை உண்டாகும். குருவுடன் புதன், சுக்கிரன் ஆகியன சேர்ந்து கூடினால் வீடு, மனை, விவசாய நிலங்கள் முதலியவற்றைக் கடனுக்காக விற்க வேண்டிய நிலை ஏற்படும். சிரமத்துடன் வாழவேண்டிய நிலை ஏற்படும். இனிப்பு, நீர், வாயு சம்பந்தமான கோளாறுகள், பெண் போகத்தினால் ஏற்படும் வியாதிகள் தொல்லை தரும். குருவுடன் இராகுகேது சேர்ந்தால், வாழ்வின் முற்பகுதியில் செழிப்பு இருக்கும். பிற்பகுதியில் எதிரிகளின் வஞ்சனையாலும் இரத்தக் கட்டி, பிளவை போன்ற நோய் நொடிகளாலும் அவதி உண்டாகும். இதற்கு ஸ்ரீதட்சிணாமூர்த்திக்கு அர்ச்சனையும், குருவுக்கு எந்திர, மந்திரப் பிரீதியும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

துலா இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான குரு, இராசிக்கு 5ஆம் இடமான கும்ப இராசியில் இருந்தால், புத்திர சந்தான தோஷமும், பூர்வ புண்ணியச் சொத்துகளில் வில்லங்க, விவகாரமும், வழக்கும் இருந்துவரும். கெட்ட செயல்களில் மனம் ஈடுபடும். தாய்மாமன் ஆதரவு இராது. குருவுடன் சனி ஆட்சி பெற்றால் குரு சண்டாள யோகம் ஏற்படும். பெரியோர்களையும், தெய்வங்களையும் நிந்திக்கும் நிலையில் இருப்பார்கள். புத்திர சந்தானத்தில் இடரும் தோஷமும் உண்டு. இதற்குப் புத்திர பரிகாரம் செய்தால், புத்திரர் உண்டு. குருவுடன் சூரியன், செவ்வாய் ஆகியன சேர்ந்தால் கடன் தொல்லைகளும் அவமானமும், அபகீர்த்தியும் உண்டாகும். அம்மை, வைசூரி, காக்கை வலிப்பு, இராஜப்பிளவை, நரம்புச் சிலந்தி போன்ற வியாதிகள் ஏற்படும். குருவுடன் சுக்கிரன், புதன் ஆகியன கூடினால் பூர்வ புண்ணிய விரயமும், அரையாப்புக்கட்டி, கரப்பான், புண், சொறி சிரங்கு முதலிய நோய்கள் ஏற்பட்டு அவதியும் உருவாகும். குருவுடன் இராகுகேதுக்கள் சேர்ந்தால், வெண்புள்ளிகள், கருந்தேமல் போன்ற நோய்களுடன் ஏவலால் துன்பமும் உண்டாகும். இதற்குத் தட்சிணாமூர்த்தி

தேவருக்கு அர்ச்சனையும் குருவுக்கு எந்திர, மந்திர பிரீதிகள் செய்தும் நற்பலன்களை அடையலாம்.

# விருச்சிகம்

சுப்பிரமணிய தேவரை அதிதேவராகப் பெற்ற செவ்வாயை 6ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற விருச்சிக இராசி அன்பர்களே! 6ஆம் பாவமென்பது கடன், வழக்கு, துன்பங்கள், நோய், ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துர்பலன்களைக் கொண்டதாகும். உங்கள் இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான செவ்வாய் மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளிலும் இருந்த பலனையும், மற்ற கிரகத்துடன் கூடிய பலனையும் மகரிஷிகள் கண்ட சுவடிகளின் வழியாக அறிந்து உங்களுக்குத் தெரிவிக்கப்பட்டுள்ளது. செவ்வாயானவர் துர்கிரகச் சேர்க்கையால் தவறான பலன்களைச் செய்ய நேர்ந்தால், அவருக்கு உரிய கிரகப் பிரீதிகள் செய்து நல்ல பலனை அடையவும். செவ்வாய் சனியோடு கூடி ஏதாவது ஒரு வீட்டில் இருக்க, அந்த வீட்டின் பலனை மொத்தமாகக் கெடுத்தே பிறபலன்கள் செய்வார் என்று கூறப்படுகின்றது.

''கண்டிடவே சேயோனும் ஆறோனாகி
காட்டவரும் தண்டொத்து கன்னியொடு
விண்டுரைப்பேன் புங்கனொடு காரியொடு
வில்லாளி இராசியிலே கூடத்தானும்
தொண்டில்லை துயரங்கள் ஆறின்வழி
துயர்மேலாய் இருந்தவிடம் பாழாய்ப்போகும்
முண்டுகின்ற வினையறுக்க கிரகப்பிருதி
முயற்சிமேல் செய்யத்தானும் பலனுந்தானே''.

செவ்வாயானவர் தன் சத்துரு வீட்டில் இருந்தாலும் தன் சத்துருவோடு கூடினாலும் துர்பலனே அந்த பாவ வழி செய்வாரென்று கூறப்படுகின்றது. கால தாமதப் பலன்களையும் துர்பலன்களையும் தவிர்க்க, கிரகப் பிரீதிகள் மேற்கொள்ளுதல் நலமென்று கூறப்படுகின்றது.

விருச்சிக இராசிக்கு 6க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 6ஆம் இடமான மேஷ இராசியில் ஆட்சி பெற்றிருந்தால், உஷ்ணாதிக்கம் நிறைந்து இருக்கும். பித்தநோய்கள், வெள்ளை, வெட்டை போன்ற நோய் நொடிகளும் இராஜபிளவை, நரம்புச் சிலந்திகள், கட்டிகள், வெட்டுக்காயம் போன்ற நோய்களினால் அவஸ்தையும் உண்டாகும். செவ்வாயுடன் சனி நீசமாகிக் கூடினால், சூரியனும் உச்சம் பெற்றுக் கூடினால் அம்மை, வைசூரி, இரத்தக்கொதிப்பு, மாரடைப்பு, சிரசு நோய்கள் போன்றவையும் பிதுர்பாக்கியச் சொத்துகளை அனுபவிக்க முடியாமல் தவிக்கும் நிலையும் உண்டாகும். எதிரிகள் அஞ்சுவார்கள். செவ்வாயுடன் புதன், சுக்கிரன், ஆகியன கூடினால் மேகநீர், வாயுத் தொல்லைகள் போன்ற வியாதிகளும், கடன்களால் தொல்லையும் உண்டாகும். வம்பு வழக்கு வில்லங்கம் போன்றவற்றை அனுபவிக்க நேரும். செவ்வாயுடன் குரு கூடினால் பூர்வ புண்ணியச் சொத்துகளால் வில்லங்கமும், வழக்கும் பணச்செலவும் உண்டாகும். செவ்வாயுடன் இராகுகேதுக்கள் கூடினால் விஷநீர் சம்பந்தமான ரோகங்களும் விஷங்களால் தொல்லையும் உண்டாகும். இதற்கு ஸ்ரீசுப்பிரமணியருக்கு அர்ச்சனையும், செவ்வாய்க்கு யந்திர மந்திர, பிரீதியும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

விருச்சிக இராசிக்கு 6க்குடையவரான செவ்வாய் இராசிக்கு 7ஆம் இடமான ரிஷபத்தில் இருந்தால், நோய் நொடிகளால் அவதியும், தொல்லையும் அதிகரிக்கும். எதிரிகளால் வெட்டுக் காயங்கள், இரணம், முதலியவை உண்டாகும். மனைவியால் பிரச்சினையும் வழக்கும் உண்டாகும். குடும்பத்தில் ஒற்றுமை இராது. செவ்வாயுடன் சுக்கிரன், புதன் ஆகியன கூடினால், வில்லங்க விவகாரம் நிறைந்தும், மனைவிக்கு நோய்நொடியும் அதனால் பணச் செலவும் வரும் விதி உண்டாகும். செவ்வாயுடன், சூரியன், குரு ஆகியன கூடினால் தொழிலில் முன்னேற்றத்தடை ஏற்படும். இதனால் எதிரிகள் அதிகரிப்பார்கள். மனத்தில் பயமும், குதர்க்கமும் உண்டாகும். செவ்வாயுடன் இராகுகேதுக்கள் கூடினால் வெண்குஷ்டம், வெண்புள்ளிகள், கருந்தேமல் போன்ற வியாதிகளால் அவதி ஏற்படும். இவற்றுக்குத் தக்க மருந்தும், ஸ்ரீசுப்பிரமணியருக்கு அர்ச்சனையும், செவ்வாய்க்குப் பிரீதியும், எந்திர, மந்திர பூசையும் செய்ய நன்மையான பலன்களை அடையலாம்.

விருச்சிக இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான செவ்வாய், இராசிக்கு 8ஆம் இடமான மிதுனத்தில் இருப்பதால் குடும்பத்தில் மன அமைதி குறையும். நிம்மதி இராது. புத்திர சோகம் ஏற்படும். வருவாயின்றி கஷ்டமும் துன்பமும் நேரும். கடன்கள் அதிகமாய் இருக்கும். நோய் நொடியால்

அமைதியின்றி தவிக்க நேரும். செவ்வாயுடன் புதன் கூடினால், விபத்தாலும், கண்டங்களாலும் இரத்தம் சிந்த நேரும். நாள்பட்ட வியாதிகளால் துன்பமும், துயரமும் உண்டாகும். செவ்வாயோடு சூரியன், குரு ஆகியன கூடினால் நோய் நொடியால் பணச் செலவும், கடன் தொல்லையும், காசு பண விரயமும் ஏற்படும். வைத்தியச் செலவு அதிகரிக்கும். செவ்வாயுடன் சுக்கிரன் கூடினால் பெண்கள் சேர்க்கையுண்டாகும். அதன்மூலம் வியாதிகளும் அவமதிப்பும் உண்டாக விதி உண்டாகும். செவ்வாயுடன் இராகு கேதுக்கள் கூடினால் விஷத்தால் கண்டம் ஏற்படும். விஷம் தீண்டுதலும் உண்டு. சரும நோய்களும், ஏவல் பில்லி, சூன்யத்தால் கஷ்டமும் துன்பமும் உண்டாகும். இதற்கு ஸ்ரீசுப்ரமணியர்க்கு அர்ச்சனையும் ஆராதனையும், செவ்வாய்க்கு பிரீதியும், எந்திர மந்திர பூசையும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

விருச்சிக இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான செவ்வாய், இராசிக்கு 9ஆம் இடமான கடக இராசியில் இருந்து நீசம் பெற்றபடியால் வியாதியும், கடன் தொல்லையும் குறையும். எதிரியால் மனக் கலக்கம் இருந்து வரும். தந்தையே எதிரிபோல் நடந்து கொள்ளச் சந்தர்ப்பம் உண்டு. செவ்வாயுடன் குரு உச்சம் பெற்றுக் கூடினால் நற்பலன்கள் நடக்கும். பூர்வ புண்ணியங்களை அனுபவிக்கும் நிலை ஏற்படும். இவர்கள் பேச்சுக்குப் பொதுமக்களிடம் மதிப்பிருக்கும். இவர்கள் அரசியல்வாதியாகவோ, மத போதகராகவோ, ஆசிரியர்களாகவோ, இருந்தால் இவர்கள் பேச்சுக்குச் செவி கொடுத்து எல்லோரும் கேட்க வேண்டிய நிலை ஏற்படும். செவ்வாயுடன், சுக்கிரன், புதன் ஆகியன சேர்ந்தால் இலாபங்களை மனைவியின் நோய் நொடிக்காகவே செலவு செய்ய நேரிடும். நீர்ச்சுரப்பு, மேகநீர் உபத்திரவம் ஆகியவை இருக்கும். செவ்வாயுடன் சூரியன் சேர்ந்தால் அனல் சார்ந்த பிணிகளோடு அவதிப்பட விதி உண்டாகும். செவ்வாயுடன் இராகுகேதுக்கள் கூடினால், தம் வயிற்றில் உதிரக்கட்டி, உதிர ஒழுக்கு போன்ற வியாதிகளால் பெண்கள் அவஸ்தைப்பட நேரிடும். இதற்கு மருந்து உண்டால் நலம் பெறலாம். ஸ்ரீசுப்பிரமணியருக்குப் பூஜையும் செவ்வாய்க்கு யந்திர மந்திரப் பிரீதியும் செய்தால் நலம் பெறலாம்.

விருச்சிக இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான செவ்வாய், இராசிக்கு 10 இடத்தில் சிம்ம இராசியில் இருந்தால், வில்லங்கம், விவகாரம், போட்டி, பொறாமை ஆகியவற்றால் தொழிலில் சிதைவு ஏற்படும். தொழில் நசிவால் குடும்பத்தில் வருமானம் இன்றி வறுமையைச் சந்திக்க விதியுண்டு. இதனால் மனம் போனபடி சென்று, பிறர் சொத்தை அபகரிக்கும் நிலை உருவாகும். மனத்தில் பயமும், குதர்க்கமும் குடி கொண்டிருக்கும். செவ்வாயுடன் சூரியன் ஆட்சி பெற்றுக் கூடினால் எதிரியை வெல்லும்

திறமை உண்டாகும். கொண்ட காரியங்களில் வெற்றியும், மதிப்பும் மரியாதையும் உண்டாகும். தொழில் விருத்தி ஏற்படும். ஆனால், கொடிய வைசூரி, அம்மை, மூல நோய்கள், சிரசு நோய்கள் போன்றவற்றால் அவதியும் துன்பமும் நேரிடும். செவ்வாயுடன், புதன், சுக்கிரன் ஆகியன கூடினால் மனநிம்மதி குறையும். கடன் அதிகமாகும். பெண்களினால் வியாதியும், போக சுகமும், செய்தொழில் விருத்தியில் பாதியில் சிக்கலும், மீதியில் நல்ல இலாபத்தை அடைய விதியுண்டு. செவ்வாயுடன் இராகுகேதுக்கள் கூடினால், ஆறாத ரணம், புண்கள், கட்டிகள், சரும ரோகங்கள் முதலியவையும் கருமேக படை போன்ற நோய்களும் ஏற்பட விதியுண்டு. இதற்கு ஸ்ரீசுப்பிரமணியருக்கு அர்ச்சனையும் செவ்வாய்க்கு அங்காரகப் பிரீதியும், எந்திர மந்திரப் பிரீதியும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

விருச்சிக இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான செவ்வாய், இராசிக்கு 11ஆம் இடத்தில் கன்னியில் இருந்தால் இலாபங்கள் வராது. மூலதனமே விரயமாகும் நிலை உருவாகும். மூத்த சகோதரர் வியாதியஸ்தராக இருப்பார். கடன்கள் அதிகமாகிக் கடனை அடைக்க முடியாமல் நிம்மதி இழந்து தவிக்கும் நிலை உருவாகும். செவ்வாயுடன் நீசம் பெற்ற சுக்கிரனும், ஆட்சி உச்சம் பெற்ற புதனும் கூடினால், மூத்த சகோதரர்கள் நல்ல முறையில் இணக்கமாய் இருப்பார்கள். வாயுத் தொல்லைகள் அதிகரிக்கும். அந்தந்த திசா புத்திகளில், கண்டம் ஏற்பட்டுப் பரிகாரத்தினால் நற்பலன்கள் கிடைக்க விதியுண்டு. செவ்வாயுடன் குரு, சூரியன் ஆகியன கூடினால், வில்லங்க விவகாரம், வழக்குபோன்ற துன்பங்கள் ஏற்பட விதியுண்டு. உஷ்ண பீடைகள் வந்து மாறும். செவ்வாயுடன் சனி, சுக்கிரன், ஆகியன சேர்ந்தால் கடன்களும் அவற்றினாலும் கஷ்டங்கள் ஏற்படும். வாத ரோகங்களும் குளிர் ஜன்னி, போன்ற இதர வியாதிகளும் ஏற்படும். இதற்கு ஸ்ரீசுப்பிரமணியருக்கு அர்ச்சனையும், செவ்வாய்க்கு அங்காரகப் பிரீதியும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

விருச்சிக இராசிக்கு 6-க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 12ஆம் இடமான துலா இராசியில் இருப்பதால் வியாதிகளால் கஷ்டமும், துன்பமும், துயரமும் உண்டாகும். பகைவர்களால் தொல்லையும், தூக்கமில்லாததால் அசதி, சோம்பேறியாய் இருத்தல் போன்றவையும், அகால நேர உணவுகளால் உடம்புக்கு அசௌகரியமும் ஏற்படும். சயன சுகம் குறைவாகக் கிடைக்கும். செவ்வாயுடன் சுக்கிரன் ஆட்சி பெற்றும் சூரியன் நீசமாகியும், சனி உச்சம் பெற்றும் கூடினால் கடன்களால் தொல்லை இராது. கடன் நிவாரணம் ஏற்படும். வம்பு, வழக்குகள் போன்றவை இருந்துகொண்டே இருக்கும். எதிரி அடங்குவான். செவ்வாயுடன் புதன்,

குரு ஆகியன கூடினால் அவ்வளவாக நற்பலன்களைக் கூறமுடியாது. அநாவ சியமான செலவுகளும், குடும்பத்தில் மன அமைதிக் குறைவும் ஏற்படும். செவ்வாயுடன் இராகுகேதுக்கள் கூடினால் விஷ பீடைகள், காய்ச்சல், ஜுரம் ஆகியன வந்து போகும்.சுமைகள் அதிகமாகிக் கஷ்டத்தை அனுபவிக்க விதி உண்டாகும். நீர்ச்சுரப்பு மூலம் வாதம் போன்ற நோய்கள் ஏற்பட விதியுண்டு. இதற்கு ஸ்ரீ சுப்பிரமணியருக்கு அர்ச்சனையும் செவ்வாய்க்கு யந்திர மந்திரப் பிரீதிகள் செய்தும் நற்பலன்களை அடையலாம்.

விருச்சிக இராசிக்கு 6க்குடையவரான செவ்வாய், இராசியிலே இருந்தால், கடன்களால் தொல்லையும் பணவிரயமும் ஏற்படும். சதா நோய் நொடிகள் வந்துகொண்டே இருக்கும். மனத்தில் பயம் அதிகரிக்கும். எதிரிகளால் தொல் லையும் உண்டாகும். கடன்களால் துன்பத்தையும் அனுபவிக்க விதிஉண்டா கும். செவ்வாயுடன் சந்திரன், குரு ஆகிய இவர்கள் கூடினால் நற்குணங்கள் கொண்டவராகவும், எதிரியை வெல்லுவதில் திறமை வாய்ந்தவராகவும் இருப் பார்கள். குளிர் ஜுரங்கள், நீர் வீக்கம், முகத்தில் நீர்ச் சுரப்பு, பல்வலி போன்ற வியாதிகளால் அவஸ்தைப்படுவார்கள். செவ்வாயுடன், சூரியன், புதன் ஆகி யன கூடினால் எதிரிகளினால் தொல்லையும் கடன் நிவாரணமும் உண்டா கும். உஷ்ணாதிக்க நோய்கள் இருந்துவர விதி உண்டாகும். செவ்வாயுடன் சுக்கிரன், சனி, கூடினால் பொன் பொருள்களாலும் இளைய சகோதரர்கள், மனைவி ஆகியவர்களாலும் தொல்லைகளும், வில்லங்க விவகாரமும் ஏற்பட விதி உண்டாகும். செவ்வாயுடன் இராகுகேதுக்கள் சேர்ந்தால் தோலில் கரு மைபடர்ந்த வியாதியும், மது மாமிசத்தால் கேடும் உண்டாம். ஸ்ரீசுப்பிரமணிய ருக்கு அர்ச்சனையும், செவ்வாய்க்கு எந்திர, மந்திர பிரீதியும் செய்ய நலமுண் டாகும்.

விருச்சிக இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான செவ்வாய், இராசிக்கு 2ஆம் இடமான தனுர் இராசியில் இருந்தால் கண் பார்வையில் கோளாறு உண்டாகும். குடும்பத்தில் வறுமையைச் சந்திக்க நேரும். இவர்கள் பேச்சி னால் அடுத்தவர்கள் மனம் கசப்புறும்; மனம் புண்படும். பேச்சில் உறுதியற்ற தன்மை இருக்கும். கடன்கள் அதிகரிக்கும். கல்வி, பட்டம் போன்றவை தடைப்படும். செவ்வாயுடன் குரு ஆட்சி பெற்றுக் கூடினால் கல்வியில் தடை மாறும் நிலை உண்டாகும். பேச்சில் வன்மை இராது. பேச்சில் குளுமை இருக்கும். தனப்புழக்கம் ஏற்பட்டு கடன் நிவாரணம் ஏற்படும். செவ்வாயுடன் சூரியன், புதன் ஆகியன சேர்ந்து கூடினால், தொழிலில் முட்டுக்கட்டை ஏற்படும். இலாபம் பயனற்ற வகையில் விரயமாகும். தொழில் விருத்தி இராது. குடும்பத்தில் ஒற்றுமை இராது. சிரசு வியாதி, வயிற்றில் நீர் சுரப்பு, வாய்வு முதலிய நோய்களால் தொல்லை ஏற்படும். செவ்வாயுடன் சனி, சுக்கிரன்

ஆகியன சேர்ந்தால், வாக்கினால் வில்லங்கம் விவகாரமும், கலைகளில் பிரியமும் இருக்கும். முழங்கால், கணுக்கால் போன்ற இடங்களில் ஏற்படும் வாதத்தாலும் சூலை நோயாலும் அவதி ஏற்படும். செவ்வாயுடன் இராகுகேதுக்கள் சேர்ந்து கூடினால், கைகளிலும், தோள்களிலும் தேமல், ஏற்படும்; பாதங்களில் வெடிப்பு உண்டாகும் விதியுண்டு. ஸ்ரீசுப்பிரமணியர்க்கு அர்ச்சனையும், செவ்வாய்க்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் செய்ய நற்பலன்கள் அடையலாம்.

விருச்சிக இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான செவ்வாய், இராசிக்கு 3ஆம் இடமான மகரத்தில் உச்சம் பெற்றிருந்தால் தைரியம், வீரியம் ஆகியன நிறைந்திருக்கும். எதிரிகளை வெல்லும் ஆற்றலும், திறமையும் இருக்கும். குடும்பத்தில் ஒற்றுமை இராது. இளைய சகோதரர்களே விரோதியாக மாறக் கூடிய சூழ்நிலை உருவாகலாம். செவ்வாயுடன் சூரியன், சனி, குரு ஆகிய இவர்கள் கூடினால், உஷ்ண சம்பந்தமான வியாதிகள், வயிற்றுவலி, உதிரப் போக்கு, சிறுநீரகங்கள் சிறுநீரில் உதிரம் ஆகியன ஏற்படும். பெண்களாய் இருந்தால் உதிரப்போக்கும், வயிற்றுத் தொல்லைகளும் கருப்பைக் கோளாறுகளும் உண்டாகும். கடன் அதிகரிக்கும். கடன்களால் தொல்லையும் அலைச்சலும் உண்டாகும். செவ்வாயுடன், சுக்கிரன், புதன் ஆகியன கூடினால் இலாபங்களை எதிர்பார்க்க முடியாத நிலை வரும். மனைவிக்குச் சுகக்கேடும் உண்டாகலாம். செவ்வாயுடன் இராகுகேதுக்கள் கூடினால் வீரிய அழிவும், சுகஸ்கலிதமும், மூலரோக வியாதிகளும் உண்டாகும். இதற்குத் தகுந்த மருந்துண்ண நலமுண்டாம். ஸ்ரீ சுப்பிரமணியருக்கு அர்ச்சனையும், செவ்வாய்க்கு யந்திர மந்திர பிரீதியும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

விருச்சிக இராசிக்கு 6க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 4ஆம் இடமான கும்பத்தில் இருப்பதால் வீடு, மனை, நிலபுலன்களால் வில்லங்க விவகாரமும், தாயாருக்கு உடல் நலக்கேடும் உண்டாகலாம். வண்டி, வாகனங்களில் பழுதடையும் நிலை உருவாகலாம். கால்நடைச் செல்வங்களில் விருத்தி இன்றி பாதிப்பு ஏற்படலாம். செவ்வாயுடன் சனி, சுக்கிரன் ஆகியன சேர்ந்திருந்தால் அழகான மாளிகைகள், வீடுகள், இரும்பு வாகனங்கள் ஆகியன நல்லபடியாக இருந்தாலும் பின்பு சேதம் விளையும்; கால்நடைகள் மடிந்து போகும் நிலையில் இருக்கும். உஷ்ண சம்பந்தமான பீடைகள் ஏற்படும். குழந்தைகளாய் இருந்தால் அம்மை, வைசூரி, கக்குவான், இளம்பிள்ளைவாதம் போன்ற நோய்களும் உண்டாகும். கடன் தொல்லைகள் அதிகமாகும். வம்பு, வழக்கு, வில்லங்கங்கள் ஆகியன வந்து மாறும்நிலை உருவாகலாம். செவ்வாயுடன், குரு, சூரியன் ஆகியன சேர்ந்தால் வலிப்பு, சுளுக்கு, பித்தத்தால் காமாலை, கண்டமாலை, இருதய நோய்கள் போன்றவை ஏற்படும். தொழில் முடக்கம், உண்டாகும். கல்வி தடைப்படும் நிலை ஏற்படும். விவசா

யப் பாதிப்பும் ஏற்படும். செவ்வாயுடன், புதன் சேர்ந்தால் இலாபங்கள் வைத்தியச் செலவுக்குப் போய்ச் சேரும் நிலை உண்டாகலாம். விபத்து, தடுமாறி விழுதல், இரத்தக் காயங்கள் ஆகியன ஏற்பட விதியுண்டாகும். செவ்வாயுடன் இராகுகேது சேர்ந்தால், மூலரோகமும், நீர்ச்சுருக்கு, பாதத்தில் வெடிப்பு, கை, தோள் ஆகியவற்றில் வலி போன்றவை ஏற்படலாம். ஸ்ரீசுப்பிரமணியருக்கு அர்ச்சனையும், செவ்வாய்க்கு பிரீதியும், யந்திர, மந்திர, பூசையும் செய்ய நற்பலன்கள் உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 6க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 5ஆம் இடமான மீனத்தில் இருந்தால் புத்திர தோஷத்தை உண்டாக்கும். கடன்கள் அதிகமாகும். அந்தக் கடனை அடைப்பதற்கு பூர்வ புண்ணியச் சொத்துக்கள் விரயமாகும் நிலை உருவாகும். கெட்ட எண்ணங்கள் உதயமாகும். பாவச் செயல்களைச் செய்யத் துண்டும். செவ்வாயுடன் குரு ஆட்சி பெற்றும் புதன் நீச்சமுற்றும் சுக்கிரன் உச்சம் பெற்றும் இருந்தால் இலாபங்களை அதிகமாக எதிர்பார்க்கமுடியாது. நோய் நொடிகளாலும், கடன்களாலும் அதிகப்பணம் விரயமாகலாம். புத்திர பாவ பரிகாரம் செய்தால் புத்திரச் செல்வம் உண்டாகும். செவ்வாயுடன் சூரியன் கூடினால் தொழில் அபிவிருத்தி இருக்கும். பிற்பகுதியில் தொழில் வேகம் தடைப்படும். அனல் சார்ந்த பிணியோடு வாழ நேரும். மனத்தில் அமைதி இல்லாத நிலை வரலாம். செவ்வாயோடு இராகுகேதுக்கள் சேர்ந்தால் மூலரோக வியாதிகளோடும் மர்மஸ்தான வியாதிகளோடும் கஷ்டத்தை அனுபவிக்க நேரிடும். இவற்றிற்குத் தகுந்த மருந்து உண்ண நலம் பெறலாம். ஸ்ரீசுப்பிரமணியருக்கு அர்ச்சனையும், செவ்வாய்க்கு யந்திர மந்திர, பிரீதியும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

# தனுசு

அசுரகுரு சுக்கிராச்சாரியை 6ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற தனுசு இராசி அன்பர்களே! 6ஆம் பாவமென்பது நோய் இடர்கள், வல்வழக்கு, வில்லங்கம் ருணவாதை, ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துர் உபாதைப் பலன்களைக் குறிப்பிடும் பாவம். மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளில் சுக்கிராச்சாரி இருந்த பலனையும், மற்ற கிரகத்துடன் கூடிய பலனையும் ஆறாம் பாவ வழியில் குறிப்பிடப்பட்டுள்ளது. அன்பர்கள் தங்கள் இராசிக்கு சுக்கிரன் எத்தனையாவது இடத்தில் உள்ளார் என்பதை அறிந்து, தங்களின் ஆறாம்

பாவ பலனை அறிந்து கொள்ளவும். சுக்கிராச்சாரி துர்கிரகங்களோடு கூடி துர்பலன்களை 6ஆம் பாவ வழியில் செய்ய நேர்ந்தால் லட்சுமி உபாசனைகளாலும், சுக்கிர கிரக யந்திர, மந்திர பூஜைகளாலும் சில துர்பலன்களைத் தவிர்க்கலாமென்று கூறப்படுகின்றது.

''வல்லதொருவெய், யம்புலிகுருவொடு கூட சுங்கனுக்கு
வழுத்ததொரு பலமதுவும் துர்பலனாய்க் கிட்டும்
அல்லலொடு ஆக்கநிலை தடைப்படுமே யென்றும்
அரிவையொடு துன்பங்கள் சல்லாபங்கள்தான்
மல்லுகளும் மயக்கங்களும் மாதுவழியே
மதிமயக்கும் தொந்தமொடு லாகிரிவஸ்து
பொல்லதொரு ஆறின் வகை தொந்தங்களும்
புவனத்திலே பிருதிசெய்ய விலகுமென்றேன்''.

சுக்கிரனோடு சூரியன், சந்திரன், குரு ஆகியன கூடினாலும், இராசி மறைவிடங்களில் மறைந்தாலும் மேற்சொன்ன கிரகங்கள் ஒன்றையொன்று பார்த்தாலும் 6ஆம் பாவ வழியில் சில முரண்பாடுகளையும், தொல்லைகளையும், கொடுக்குமென்று கூறப்படுகின்றது. கிரகப் பிரீதிகள் செய்ய நற்பலன்கள் உண்டாகுமென்று காண்ட நூல்கள் வழியாக அறியப்படுகிறது.

தனுர் இராசிக்கு 6க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 6ஆம் இடமான ரிஷபத்தில் ஆட்சி பெற்றிருப்பதால், கடன் தொல்லைகள் அதிகமாகும். சதா வியாதியின் பிடியில் சிக்கி அலைக்கழிவர். சிறைவாசம், வறுமை போன்றவற்றை அனுபவிக்கும் நிலை உண்டாகும். எதிரியால் மனத்தில் பயம் கொள்ளும் நிலை ஏற்படலாம். சுக்கிரனுடன், புதன், சனி ஆகியன கூடினால் மனைவியாலும் இளைய சகோதரர்களாலும் வில்லங்கம், விவகாரம், வழக்கு போன்றவை ஏற்படலாம். மனைவிக்கு நோய் நொடியும் வந்து மாறும்நிலை இருக்கும். அதற்காகப் பணச் செலவும் அதிகம் இருக்கும். சுக்கிரனுடன், குரு, சூரியன் ஆகியன சேர்ந்து கூடினால் விவசாய நிலபுலன்கள் இலாபத்தை தராது. அவற்றின் மூலம் கடன்கள் அதிகமாகும் நிலை உண்டாகும். கடன்களால் தொல்லையும் ஏற்படலாம். பெண் சுகத்தினால் மதுமேகம், நீரிழிவு போன்ற நோய்களும் ஏற்படும். சுக்கிரனுடன் இராகுகேதுக்கள் கூடினால் மர்மமான முறையில் வியாதிகளும், மர்மஸ்தான நோயும் மூலரோக வியாதியும், பெண் போகங்களும் ஏற்படும். மது, மாதுவினாலும் வழக்கும் வில்லங்கமும் உண்டாம். வியாதிகளுக்குத் தக்க மருந்துண்ண நலம் கிட்டும். ஸ்ரீரெங்கநாதருக்கு அர்ச்சனையும், சுக்கிரனுக்கு யந்திர, மந்திரப் பிரீதிகளும் செய்தால் நன்மையான பலன்களை அடையலாம்.

தனுர் இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு, 7ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால் மனைவியால் வம்பும் வழக்கும், உண்டாகும். குடும்பத்தில் ஒற்றுமை இராது. கடன்கள் அதிகமாகும் நிலை உண்டாகும். நீர் சம்பந்தமான வியாதியும், மர்மஸ்தான நோயினால் அவதியும் துன்பமும் உண்டாகலாம். மக்களுக்குச் சேவை செய்யும் எண்ணமும் நற்பெயரும் உண்டாகும். தாராள மனத்தால் கடன்கள் அதிகம் இருக்கும். சுக்கிரனுடன் புதன் ஆட்சி பெற்றும், சனியும் கூடி இருந்தால் இருதாரம் யோகமுண்டு. பெண்களினால் நற்சுகம் கிட்டும். பெண்ணால் வில்லங்க விவகாரம் உண்டாகும். சுக்கிரனுடன் குரு, சூரியன் ஆகியன கூடினால் வாயு, பித்தம் போன்ற வியாதிகளும், சிரசு நோயும், ஹிருதய பலஹீனமும் ஏற்படலாம். சுக்கிரனுடன் செவ்வாய் சேர்ந்தால் பெண் சுகமும், அதனால் வெள்ளை, வெட்டை போன்ற பால் நோய்கள் ஏற்படும். பூர்வ புண்ணிய விரயமும் ஏற்படும். சுக்கிரனுடன் இராகு கேதுக்கள் கூடினால் சருமத்தில், அரிப்பு, படை, சொறி, சிரங்கு மூலரோகங்கள் முதலியவை ஏற்படும். இவற்றிற்குத் தகுந்த அவிழ்தங்களை உண்டு நிவர்த்தி பெறலாம். ஸ்ரீரெங்கநாதருக்கு அர்ச்சனையும், சுக்கிரனுக்கு யந்திர மந்திர, பிரீதியும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

தனுர் இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 8ஆம் இடமான கடக இராசியில் இருந்தால், குடும்பத்தில் வறுமை, துன்பம் போன்றவற்றை அனுபவிக்க நேரிடும் தோஷமுண்டு. சதா வியாதிகளும், பீடைகளும், கஷ்டங்களும் நிறைந்து காணப்படும். கண்டங்கள், விபத்துக்கள் போன்றவையும் ஏற்பட விதியுண்டு. நீண்ட கால நோய்களான மதுமேகம், நீரிழிவு, பால்வினை நோய்கள் ஆகியவற்றின் மூலம் துன்பமும் கஷ்டமும் ஏற்படும். சுக்கிரனுடன் குரு உச்சம் பெற்றும் செவ்வாய் நீசம் பெற்றும் கூடினால், விவசாய நிலங்கள் விளைச்சலின்றிக் கிடக்கும் நிலை உண்டாகும். அவை பயனற்றவையாகவும் அவற்றை அனுபவிக்க முடியாத நிலையும் இருக்கும். சுக்கிரனுடன், சூரியன் கூடினால் சிரசு, மர்மஸ்தானங்களில் உஷ்ணாதிக்கத்தினால் பால்வினை நோய்கள் ஏற்படலாம். பிதுராஜ்ஜித சொத்துகள் இவர்களுக்குப் பயன்படாதுபோக விதி உண்டாகும். சுக்கிரனுடன் புதன், சனி ஆகியன கூடினால் மனைவிக்கு வியாதியும், வில்லங்க விவகாரமும் வழக்கும் உண்டாகும். இளைய சகோதரரால் மனஸ்தாபம் உண்டாகும். வாதரோகங்களும் உண்டு. சுக்கிரனுடன் இராகு கேதுக்கள் கூடினால் விஷநீர் சம்பந்தமான வியாதிகள், விஷ பயம், விஷத்தால் கண்டம் முதலியவை ஏற்படலாம். இவற்றிற்கு ஸ்ரீரெங்கநாதருக்கு அர்ச்சனையும், சுக்கிரனுக்கு யந்திர மந்திர பிரீதியும் செய்தால் நற்பலன்களை அடைய விதி உண்டாகும்.

தனுர் இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன், இராசிக்கு 9ஆம் இடமான சிம்ம இராசியில் பகை பெற்றிருந்தால், தந்தையார் சதா வியாதியுடன் கஷ்டத்தையும், துன்பத்தையும் அனுபவிப்பவராய் இருப்பார். பிதுராஜ்ஜிதச் சொத்துகளில் வில்லங்கமும் வழக்கும் இருக்கும். சுக்கிரனுடன் சனி, புதன் ஆகியன கூடினால் மனைவிக்கு வியாதியும் பணச்செலவும் ஏற்படும். தொழில் விருத்தியாகும். சுக்கிரனுடன் சூரியன், குரு ஆகியன கூடினால் தகப்பனால் விரோதமும், குதர்க்கமும் இருந்துவரும். நம்பிக்கைத் துரோகமும் இருந்து வரும் விதி உண்டு. சுக்கிரனுடன் இராகுகேதுக்கள் கூடினால் இனிப்பு நீர், சிறுநீரக நோய், மர்மஸ்தான நோய், மூல ரோகங்கள், பால்வினை நோய்கள் ஆகியன உண்டாகும். கடன்களால் தொல்லையும் எதிரிகளால் கவலையும் உண்டாகும். மருந்து உண்ண வியாதிகள் தீரும். இவற்றிற்கு ஸ்ரீரெங்கநாதருக்கு அர்ச்சனையும், சுக்கிரனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

தனுர் இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன், இராசிக்கு 10ஆம் இடமான கன்னி இராசியில் நீசம் அடைந்து இருப்பதால் தொழில் விருத்தியிராது. பிறர் பொருளை அனுபவிக்கும் ஆசை அதிகம் இருக்கும். தொழிலை விட்டுவிட்டுச் சோம்பேறித்தனமாய்த் திரிவார்கள். வறுமை, சிறைவாசம் ஆகியவற்றை அனுபவிக்க விதி உண்டாகும். சுக்கிரனுடன் ஆட்சி உச்சம் பெற்ற புதன் கூடினால் தொழில் விருத்தியடையும். மனைவி நல்ல திடகாத்திரமாய் இருக்க விதியுண்டு. மூத்த சகோதரர்கள் வறுமையாலும், வியாதியாலும் கஷ்டப்படுவார்கள். சுக்கிரனுடன் சனி, குரு ஆகியன சேர்ந்தால் விவசாய நிலங்களில் வில்லங்க விவகாரம் இருக்கும். நிலத்தின் பயனை அடையக்கூட கஷ்டப்படவேண்டும். எதிரிகளை வெல்லும் திறமை உண்டாகும். சுக்கிரனுடன் சூரியன் சேர்ந்தால் பிதுர் பாக்கிய சொத்துகளை அனுபவிக்கும் நிலை உண்டாகும். ஆனால் திரேகம், உஷ்ணாதிக்க வியாதிகளால் கஷ்டப்படும். சுக்கிரனுடன் இராகுகேதுக்கள் கூடினால் தொழில் ஸ்திரமின்றி இருக்கும். செய்தொழிலை விட்டுவிட நேரிடும். மர்மஸ்தான நோய்கள் உண்டாகும். இவற்றிற்கு ஸ்ரீரெங்கநாதருக்கு அர்ச்சனையும், சுக்கிரனுக்கு யந்திர மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

தனுர் இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 11ஆம் இடமான துலா இராசியில் ஆட்சி பெற்றிருந்தால், மூத்த சகோதரர்கள் வியாதியால் கஷ்டப்பட விதியுண்டு. பெரிய இலாபங்களை எதிர்பார்க்க முடியாது. மூத்த சகோதரர் எதிரியாக மாறினாலும் மாறலாம். சத்துரு பயம் இருக்கும். பெண்களின் மேல் இச்சையும் மோகமும் உண்டாகும். அதனால் பெண் போக வியாதிகளினால் கஷ்டப்பட நேரிடும். சுக்கிரனுடன் சனி, உச்சமாகி, சூரியன்

நீசமாகிக் கூடினால் இளைய சகோதரர்கள், தந்தையார் ஆகியோர் மனஸ்தா பத்துடன் இருப்பார்கள். விரோதம் உண்டாகும். வாதநோயால் அவதியுற நேரிடும். சுக்கிரனுடன் குரு, செவ்வாய் ஆகியன கூடினால் பூர்வ புண்ணியங் களான வீடு, மனை, வாகனம் போன்றவற்றால் பயன்களை அடையமுடியாத நிலை உருவாகலாம். சுக்கிரனுடன் இராகுகேதுக்கள் சேர்ந்தால், ஏவல் சூன் யம் போன்றவற்றால் பாதிப்பு இருந்துவரும். மதுவினாலும் மாதுவினாலும் வியாதியும், துன்பமும் நேரிடும். இவற்றிற்கு ஸ்ரீரங்கநாதருக்கு அர்ச்சனையும், சுக்ராச்சாரியாருக்கு எந்திர மந்திர, பிரீதிகளும் செய்தால் நன்மையான பலன் களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

தனுர் இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன், இராசிக்கு 12ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால், எதிரிகளால் பயமும் அச்சமும் இருக்கும். அகால நேரத்தில் உண்ணும் பழக்கம் ஏற்படும். சுக்கிரனுடன் செவ்வாய் ஆட்சியாகிச் சேர்ந்தால் அநாவசியச் செலவுகளும், விரயங்களும், மருத்துவச் செலவுகளும் அலைச்சலும் அதிகமாகும். உஷ்ண சம்பந்தமான பீடைகளால் திரேக மெலிவும் உண்டாகும். தூக்கமின்மையால் உடல் அசதி, கை கால்க ளில் வெட்டுக்காயம் முதலியன ஏற்படும். சுக்கிரனுடன் சனி, இராகு கேதுக் கள் ஆகியன கூடினால் இடம் விட்டு இடம் மாறும் நிலை ஏற்படும். ஏவல், பில்லி, சூன்யமும் அவற்றால் கஷ்ட நஷ்டங்களும் இருக்கும். சுக்கிரனுடன், சூரியன் புதன் ஆகியன கூடினால் தொழிலில் நஷ்டங்களும் அதன் மூலமும் விரயங்களும் ஏற்படும். பிதுராஜ்ஜித சொத்துகளை விரயம் செய்ய விதி உண்டாகும். சிரசு சம்பந்தமான வியாதிகளும், வாயுத் தொல்லைகளும் அதி கம் இருக்கும். இவற்றிற்குத் தகுந்த மருந்துண்ண நலம் நல்கும். ஸ்ரீரெங்கநாத ருக்கு அர்ச்சனையும், சுக்கிரனுக்கு யந்திர மந்திர, பிரீதிகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

தனுர் இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன், இராசியிலே (தனுசு) இருந்தால், கடன்கள் அதிகமாய் இருக்கும். எதிரிகள் விருத்தியடைவார்கள். மனத்தில் சத்துரு பயம் அதிகமாய் இருக்கலாம். எதிரிகளால் தொல்லைகள் உண்டாகலாம். இவர்கள் எதிலும் ஜாக்கிரதையுடன் நடந்து கொள்ளவேண் டும். சுக்கிரனுடன் குரு கூடினால் இராசிநாதன் ஆட்சியானபடியால், ஒருவாறு பிரச்சினைகள், வில்லங்கம், வழக்கு ஆகியவற்றைச் சமாளிக்கும் திறன் உண் டாகும். இவர்களுடன் சனி கூடினால் எதிரிகள் அஞ்சுவர். நோயால் அவதியுற நேரிடும். சுக்கிரனுடன் சூரியன், செவ்வாய் ஆகியன கூடினால், பொன், பொருள் விரயமும், கஷ்டங்களும், வியாதியால் துன்பமும் வந்து சேரலாம். சுக்கிரனுடன் புதன் கூடினால் தொழில் முதலில் நஷ்டத்தையும், பாதிக்குமேல் இலாபத்தையும் கொடுக்கலாம். சுக்கிரனுடன் இராகுகேதுக்கள் கூடினால்,

எதிலும் நெளிவுசுழிவுடன் இருப்பார்கள். மது, மாது, ஆகியவற்றால் வழக்கும் வில்லங்கமும் உண்டு. மேகநீர், விஷநீர் சம்பந்தமான வியாதிகளும், பாத வெடிப்பும் ஏற்படும். இவற்றிற்கு மருந்துண்ண நலமாகும். ஸ்ரீரெங்கநாதருக் குப் பூஜையும், அர்ச்சனையும், சுக்கிரனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய் தால் நற்பலன் கிடைக்கும்.

தனுர் இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன், இராசிக்கு 2ஆம் இடமான மகரத்தில் இருந்தால் குடும்பத்தில் ஒற்றுமை இராது. ஒவ்வொருவ ருக்கும் கருத்து வேறுபாடு இருக்கும். குடும்பத்தில் மகிழ்ச்சி, நிம்மதி ஆகியன இல்லாமல் போகலாம். பணச் செலவுகளும் வியாதிகளால் கஷ்டமும், துன்ப மும் ஏற்படும். இவர்கள் கண்களில் நோய் இருக்கும். வாக்கு, உறுதியுடன் இராது. சுக்கிரனுடன் சனி ஆட்சி பெற்று, குரு நீசம்பெற்றும் கூடிச் சேர்ந்தால் தடைப்பட்ட கல்வியைத் தொடரவும், கடன்களை அடைக்க, பணவரவும் உண்டாகும். ஆனால், வியாதியால் தொல்லைகள் உண்டாகலாம். சுக்கிரனு டன் சூரியன் செவ்வாய் கூடினால் குடும்பத்தில் கலகமும், சண்டை, சச்சரவுக ளும் ஏற்படும். எதிரிகளோடு சண்டையால் வெட்டுக்காயம், இரத்தம் ஒழுகு தல் போன்ற நிலை உருவாகலாம். சுக்கிரனும் புதனும் சேர்ந்து கூடினால் பேச்சில் திறமை இருக்கும். பேச்சினால் எக்காரியத்தையும் சாதிப்பார்கள். எனினும் பேச்சினால் வில்லங்கமும் உண்டாக விதியுண்டு. சுக்கிரனுடன் இராகு, கேது கூடினால் பொய் நிறைய பேசுபவராகவும், மது, மாமிசம் அதிகம் உண்பவராகவும் இருப்பார்கள். விஷத்தால் பீடை உண்டாகும். ஸ்ரீரெங்கநாத ருக்கு அர்ச்சனையும், சுக்கிரனுக்கு யந்திர மந்திர பிரீதியும் செய்ய நற்பலன் களை அடையலாம்.

தனுர் இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன், இராசிக்கு 3ஆம் இடமான கும்பத்தில் இருந்தால் இளைய சகோதரர்களே எதிரிகளாக மாற விதி உண்டாகும். சகோதரர்களுக்குள் ஒற்றுமை இராது. கடன்கள் அதிகமாக உண்டாகும். வழக்குகளும், சண்டைகளும் உண்டாகி அதனால் பிரச்சினைக ளையும் அனுபவிக்க விதி உண்டாகும். தான் வகிக்கும் பதவி, உத்தியோகம் முதலியவற்றில் போட்டிகள் அதிகமாக இருக்கும். அதனால் வில்லங்க விவ காரம் வரலாம். சுக்கிரனுடன் சனி, புதன் ஆகியன கூடினால், உத்தியோக மேன்மை, தொழில் விருத்தி, புகழ் போன்றவை போட்டி, கஷ்டத்தின் பேரில் கிடைக்க வாய்ப்பு உண்டாகும். சுக்கிரனுடன் சூரியன், செவ்வாய் ஆகியன கூடினால் கடன்கள் அதிகமாகி பிதுராஜ்ஜித சொத்துகளை இழக்க வழி உண்டாகும். சுக்கிரனுடன் இராகுகேதுக்கள் கூடினால் பெண் போகத்தினால் பாலியல் நோய்கள் உருவாகலாம். ஜாக்கிரதையாக நடந்துகொண்டால் இம் மாதிரியான வியாதிகளைத் தவிர்க்கலாம். ஸ்ரீரெங்கநாதருக்கு அர்ச்சனையும்,

பூஜையும் சுக்கிரனுக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் செய்ய நற்பலன்களை அடைய விதி உண்டாகும்.

தனுர் இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 4ஆம் இடமான மீனத்தில் உச்சமாகி இருப்பதால் ரோகங்கள், ருணங்கள் ஆகியவை அதிகமாகும். வீடு, மனை, கல்வி, வாகனம், நிலபுலன்கள், கால்நடை வாகனங்கள் ஆகியன இருந்தும் அனுபவிக்க முடியாத சூழ்நிலை உருவாக விதி உண்டாகும். சுக்கிரனுடன் புதன் நீசமாகி, குரு ஆட்சியாகச் சேர்ந்து கூடினால் தடைப்பட்ட கல்வியைத் தொடர விதி உண்டாகும். தாய்க்கு மேகநீர், வெள்ளை, வெட்டை போன்ற வியாதிகளால் கஷ்டமும், வீடு, மனை, கட்டடங்கள் நிலபுலன்கள், பொன், பொருள் ஆகியவற்றின் மீது வில்லங்கம், விவகாரம், வழக்கு போன்றவையும் ஏற்படும். வசதி இருந்தும் அனுபவிக்க முடியாதபடி விதி உண்டாகும். சுக்கிரனுடன் சூரியன், செவ்வாய் ஆகியன கூடினால் தாய்க்கும் உங்களுக்கும் சூலை நோய்களும், மூட்டு வலிகளும் உஷ்ண சம்பந்தமான வியாதிகளும் உண்டாகலாம். இவற்றால் பணம் அதிகமாக விரயமாக விதி உண்டாகும். சுக்கிரனுடன் இராகுகேதுக்கள், சனி ஆகியவர்கள் கூடினால் தன விரயமும், வாத ரோகங்களும் நிறைந்து, பித்த சம்பந்தமான வியாதிகளும், கடன்களால் தொல்லையும், அவதியும் உண்டாகும். விஷநீர் சம்பந்தமான வியாதிகள் உண்டாகும். ஸ்ரீரெங்கநாதருக்கு அர்ச்சனையும் சுக்கிரனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய்வதால் நற்பலன்களை அடையலாம்.

தனுர் இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் இராசிக்கு 5ஆம் இடமான மேஷத்தில் இருப்பதால் புத்திர சந்தான தோஷம் உண்டாகும். கெட்ட சகவாசம் உண்டு. இதய நோய்கள் உண்டாகும். கடன்கள் அதிகமாகும். சுக்கிரனுடன் சனி நீசமாகி, செவ்வாய் உச்சம் பெற்றுக் கூடினால், தாய்மாமனுடன், மனஸ்தாபம் உண்டாகும். அக்கினி சம்பந்தமான பீடைகளும், மாரடைப்பு இரத்த அழுத்தம், இரத்தம் கெட்டுத் தோல் உலருதல் ஆகியனவும் உண்டாகும். சுக்கிரனுடன் சூரியன், குரு ஆகியன சேர்ந்தால் கடன்களால் தொல்லைகள் அதிகமாக உண்டாகும். சுக்கிரனுடன் புதன் சேர்ந்து கூடினால் தொழிலில் நல்ல முன்னேற்றம் இருந்தாலும் அது தடைப்பட வேண்டிய சூழ்நிலை உருவாகலாம். சுக்கிரனுடன் இராகுகேதுக்கள் சேர்ந்தால், புத்திரதோஷம், சர்ப்பதோஷம், பூர்வ புண்ணியங்கள் அழிவு ஆகியன உண்டாகும். விஷநீர் சம்பந்தமான வியாதிகளும், உண்டாகும். ஸ்ரீரெங்கநாதருக்கு அர்ச்சனையும் ஆராதனையும், சுக்கிரனுக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

# மகரம்

திருமாலை அதி தேவராகப் பெற்ற புத பகவானை 6ஆம் இட அதிபதியாகப் பெற்ற மகர இராசி அன்பர்களே! 6ஆம் பாவமென்பது கடன், சத்துரு, நோயிடர்கள், வல்வழக்கு, வில்லங்கம், ருணவாதை, ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துர்பலன்களைக் குறிப்பிடும். உங்கள் இராசிக்கு 6ஆம் இடத்ததிபதி யான புதன் மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளிலும் இருந்த பலனையும் மற்ற கிரகத்துடன் கூடிய பலனையும் 6ஆம் பாவ வழியில் காண்ட நூல் வாயிலாக அறிந்து கூறப்பட்டுள்ளது.

புதன் நல்ல கிரகத்தோடு சேர்ந்தால் நல்ல பலனையும், துர்கிரகத்தோடு சேர்ந்தால் துர்பலன்களையும் செய்யும் குணம் கொண்டவராவார்.

''பாரப்பா என்மகனே ஞானதண்டி!
பண்டிதனும் பாவனொடு தானேகூட
காரணமாய்த் துர்பலன்கள் தான் செய்வான்!
கண்ணியனாய் சுபனொடுதான் தானேகூட

கூடவரும் ஆறின்வகை தொந்தம்பல
குறிப்புடனே தான்காட்டிப் பிற்பலனாய்
தேடவரும் வினைகளதும் தானேயகற்றி
தொண்டுமேல் ஆறின்வகை பலன்கள்தாமே!

தாமோதரன் தனயனவன் பிருதி செய்ய
தர்மம்மேல் அதர்மங்கள் அழிந்துபோகும்
ஆமேதான் இருடிகளின் வாக்குயெண்ணி
அறிவுடனே பிருதிசெய்ய நலமேதான்''

இவ்வாறாய் புதனுக்கு கிரகப் பிரீதிகள் செய்வதன் மூலம் உயர்வான பலன் கள் 6ஆம் பாவ வழியில் உண்டாகும். சுதர்ஸன பூஜைகளும், யாகங்களும் நடத்த மேன்மையுண்டு. மற்றும் பகைவரை வெல்லலாமென்று நாடி நூல் வாயிலாக அறியப்படுகின்றது.

மகர இராசிக்கு 6ஆம் இடத்துக்கு அதிபதி புதன், இராசிக்கு 6ஆம் இடமான மிதுனத்தில் ஆட்சி பெற்றிருப்பதால், நோய் நொடிகள், கடன்கள், அதிகமாக

வும், கடன்களால் தொல்லையும் உண்டாக விதியுண்டு. எதிரிகளினால் பயமும் கலக்கமும் உண்டாகும். வாயு ரோகங்கள் மற்றும் கழுத்துப்பகுதியில் ஏதாவது ஒரு வியாதி இருக்க விதி உண்டாகும். புதன் திசையில் கழுத்தில் சிகிச்சை மேற்கொள்ள வேண்டிய விதியுண்டு. புதனுடன் சூரியன் செவ்வாய் ஆகியன சேர்ந்து கூடினால் கண்டங்களும், விபத்துகளும், இரத்தக் காயங்களும் சிரசு நோய்களும் உண்டாகும். காடுகள், நிலபுலன்கள் ஆகியவற்றின் மேல் கடன்வாங்க விதியுண்டு. புதனுடன் சனி, சுக்கிரன் ஆகியன கூடினால் குடும்பத்தில் வில்லங்கம் சண்டை சச்சரவுகளும், பூர்வ புண்ணியச் சொத்துகளின்மேல் விவகாரமும், வழக்கும் இருக்க விதி உண்டு. தொழில் விருத்தி இராது. புதனுடன் இராகுகேதுக்கள் சேர்ந்து கூடினால் வாயுக்களினால் தொல்லைதரும் வியாதிகளும், விஷநீர் சம்பந்தப்பட்ட நோய் நொடிகளும் சரும நோய்களும் வர விதி உண்டு. புதனுடன் குரு சேர்ந்தால் மருத்துவத்துக்காக அதிகப் பணம் விரயமாகலாம். ஸ்ரீரெங்கநாதருக்கு அர்ச்சனையும், ஸ்ரீமகா விஷ்ணுவுக்கு அர்ச்சனையும் ஆராதனையும், புதனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய்ய நற்பலன்கள் கிடைக்கும்.

மகர இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியாகிய புதன், இராசிக்கு 7ஆம் இடமான கடக இராசியில் இருந்தால், மனைவிக்கு நோய் இருக்கும். இல் வாழ்க்கை சுகத்தைத் தராது போகலாம். மனைவிக்கும் உங்களுக்கும் மனஸ்தாபம் ஏற்படலாம். நண்பர்கள் எதிரிகளாக மாற வேண்டிய நிலையும் உண்டாம். புதனுடன் குரு உச்சம் பெற்றும் செவ்வாய் நீசம் பெற்றும் கூடினால், இளைய சகோதரத்தால் மனஸ்தாபமும், பகையும் மற்றும் வீடு, மனை, நிலபுலன்கள் ஆகியவற்றை விரயமாக்க வேண்டிய சூழ்நிலையும் உருவாகும். மூத்த சகோதரருக்கு வியாதியால் துன்பமும் கஷ்டமும், கண்டமும் ஏற்பட விதியுண்டு. புதனுடன் சுக்கிரன், சனி ஆகிய இவர்கள் கூடினால் கடன்கள் ஓரளவு மட்டுப்படும். எதிரிகளால் பயம் இருந்தால் விலகும் நிலை உருவாகும். வாத நோய்கள், கணுச்சூலை, மர்மஸ்தான நோய்கள் ஆகியவை ஏற்படலாம். புதனுடன் இராகுகேதுக்கள் சேர்ந்து கூடினால் எதிரிகளால் பயமும், வில்லங்க, விவகாரமும், சரீரத்தில் பீடைகளும் தொல்லைகளும் இருந்துகொண்டே வரும். ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கு அர்ச்சனையும் புதனுக்கு யந்திர மந்திர பிரீதியும் செய்ய நற்பலன்களை அடையலாம் என்று சந்திரநாடி கூறுகிறது.

மகர இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான புதன், இராசிக்கு 8ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால், விபத்து, கண்டம் முதலியவற்றை ஏற்படுத்தும் நிலை உண்டாகும். நோய் நொடிகளால் அவதியும் கடன்களால் கஷ்டமும், எதிரிகளினால் மனக்கவலையும் உண்டாகும். புதனுடன் ஆட்சி பெற்ற சூரியனும் செவ்வாயும் கூடினால், விவசாய நிலபுலன்கள், வீடு, மனை,

போன்றவைகளால் வில்லங்க விவகாரம் இருந்துகொண்டே வரும். சிறு கண்டங்கள் வியாதியால் ஏற்படும் நிலை உண்டாகும். புதனுடன், சுக்கிரன் சனி போன்ற கிரகங்கள் கூடினால் பூர்வீக சொத்துகளினால் வில்லங்க விவகாரமும் ஏற்படும். தொழிலில் மந்தகதியை ஏற்படுத்தும்.மேகநீர் விஷநீர் சம்பந்தப்பட்ட வியாதிகளால் தொல்லையும், கடன்களால் துன்பங்களும் துயரங்களும் உண்டாகும். வருமானம் குறைந்து குடும்பம் வறுமையை அடைய விதி உண்டாகும். புதனுடன் சுக்கிரன், இராகுகேதுக்கள் கூடினால் சர்மரோகமும், நீர் சம்பந்தமான ரோகங்களும் வந்து மாறும். இதற்கு ஸ்ரீ மகாவிஷ்ணுவுக்கு அர்ச்சனையும், ஆராதனையும் புதனுக்கு யந்திர, மந்திர, பிரீதியும் செய்ய நற்பலன்கள் கிடைக்கும்.

மகர இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான புதன் 9ஆம் இடத்தில் கன்னியில் ஆட்சி பெற்றும் உச்சம் பெற்றும் கூடினால் இவர்களோடு சுக்கிரன் கன்னியில் சேர்ந்து இருந்தால், பிதுராஜ்ஜித சொத்தின்மேல் வழக்கு, வில்லங்கம் உண்டு. அலைச்சல்கள், காய்ச்சல்கள் ஆகியன ஏற்பட்டு அலைந்து திரிவார்கள். புதன் ஆட்சியுச்சம் ஏறிட, சுக்கிரன் நீசமாகிக் கூடியிருந்தால், கலை சம்பந்தமான பொருள்கள் நல்ல விலைக்கு விற்கும் நிலை ஏற்படும். வாயு ரோகங்கள் ஏற்படும். கழுத்து, தோள் முதலியவற்றில் தொல்லைகளை அனுபவிக்க நேரிடும். புதனுடன், சூரியன் கூடினால் நிபுணயோகமும் பிதுராஜ்ஜித சொத்துகள் விரயமாகும் நிலையும் உண்டாகும். இனிப்பு நீர், கட்டிகள், சிலந்திகள் முதலியவை ஏற்படும். புதனுடன் இராகு கேதுக்கள் கூடினால் மர்மமான முறையில் சுமுகமான சுமைகள் உண்டாகும். ஸ்ரீரெங்கநாதருக்கு அர்ச்சனையும், ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கும் சுக்கிரனுக்கும் பிரீதியும் செய்தால் நலபலன்களை அடையலாம் என்று சந்திரநாடி கூறுகிறது.

மகர இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 10ஆம் இடமான துலாத்தில் இருந்தால், தொழிலில் வில்லங்க விவகாரம் உண்டாகும். தொழிலில் எதிரிகளால் தொல்லையும், போட்டியும் உண்டாகும். தொழில் முடக்கம் ஏற்படும். தொழிலினால் கடன்கள் அதிகமாகி தொழிலை விட்டுவிட நேரிடும். புதனுடன் சுக்கிரன் ஆட்சி பெற்றும், சனி உச்சம் பெற்றும், சூரியன் நீசம் பெற்றும் கூடிச் சேர்ந்தால் தொழில் முன்னேற்றமும். நல்ல இலாபமும் உண்டாகும். வாத பித்த ரோகங்களும், சிலேத்தும நோய்களும் உண்டாக விதியுண்டு. புதனுடன் குரு சேர்ந்தால் தொழிலில் முடக்கம் உண்டாகும். எதிரிகளால் மனக்கவலை, உண்டாக விதியுண்டு, இளைய சகோதரத்தால் மனஸ்தாபம் உண்டாகும். வாத நோய்களால் தொல்லையும் அவதியும் உண்டாகும். புதனுடன் இராகுகேதுக்கள் கூடினால் கடன்களும், பெண்களினால் வரும் வியாதிகளும் படை, பத்து, தேமல், வெண்குஷ்டம்

போன்றவையும் உண்டாக விதியுண்டு. இதற்கு மகாவிஷ்ணுவிற்கு அர்ச்சனையும், புதனுக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

மகர இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான புதன், இராசிக்கு 11ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால், நோய் நொடிகளால் மூத்த சகோதரர் அவதியுறும் நிலை உண்டாகும். அவ்வளவாக இலாபங்களை எதிர்பார்க்க முடியாது. மூத்த சகோதரர்களே எதிரியாகும் சூழ்நிலை உருவாகும். பகைவர்களால் தொல்லையும் பயமும் உண்டாகலாம். புதனுடன் செவ்வாய், குரு ஆகிய இவர்கள் சேர்ந்தால் நல்ல இலாபம் வந்தாலும், மருத்துவச் செலவிற்காக விரயம் செய்ய விதி உண்டாகும். நிலபுலன்கள் வீடு, வாசல், சொத்து சுகம் போன்றவற்றில் பாதிப்பை உண்டாக்கும். வில்லங்க விவகாரம், சச்சரவுகள் ஆகியன உண்டாகும். புதனுடன், சூரியன் கூடினால் கண்டங்கள், விபத்துகள், அனல், பிணி முதலியவை உண்டாகும். புதனுடன் சனி கூடினால் தன் பேச்சினால் வில்லங்கம் ஏற்பட விதியுண்டாகும். வாத ரோகங்கள், வாயுத் தொல்லைகள் போன்ற வியாதிகள் இருக்கும். இவற்றிற்கு மருந்துண்ண நலம் நல்கும். புதனுடன் இராகு கேதுக்கள் கூடினால் பெண்கள் மேல் இச்சையும், பெண் போகத்தால் வியாதியும், கெட்ட வழிகளில் இலாபங்களும் வரும். பின்பு அவை உடனே செலவாகும் நிலையும் உண்டாகும். இதற்கு ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கு அர்ச்சனையும் புதனுக்கு எந்திர, மந்திர பிரீதிகளும் செய்ய நலம் கிட்டும்.

மகர இராசிக்கு 6க்குடையவரான புதன், இராசிக்கு 12ஆம் இடமான தனுசில் இருந்தால் நேரம் தவறிச் சாப்பிடவும், நேரங்கெட்ட நேரத்தில் தூங்கவும், தூக்கமில்லாமல் அலையவும், படுக்கை சுகம் இல்லாமல் தவிக்கவும் நேரும். எதிரிகளினால் பயம், மனக்கலக்கம் ஆகியன உண்டாகும். நோய் நொடிகளால் பணம் விரயமாகும் நிலை உண்டாகும். புதனுடன் குரு, சூரியன் ஆகியன சேர்ந்து கூடினால் வியாதியால் பணச் செலவும், கடன்களால் தொல்லையும், கஷ்டமும், துன்பமும் அடைய நேரிடும். வாத ரோகங்களும், இருதயம் பலவீனப்படும் நிலையும் நேரும். புதனுடன், சுக்கிரன், சனி ஆகியன கூடினால் பூர்வ புண்ணியச் சொத்துகளினால் வில்லங்கமும் விவகாரமும் வழக்கும், குடும்பத்தில் ஒற்றுமை, நிம்மதி ஆகியன இல்லாமையும் நேரும். புதனுடன் செவ்வாய் கூடினால் வீடு, மனைகள் ஆகியன இருந்தும் அனுபவிக்க முடியாமல் தவிக்கும் நிலையை உண்டுபண்ணும். பெரிய இலாபங்களை எதிர்பார்க்க முடியாதநிலை உருவாகும். புதனுடன் இராகுகேதுக்கள் சேர்ந்து கூடினால், பித்தநீர் சம்பந்தமான வியாதிகளும், கால் பாதங்களில் வெடிப்பும் நீர்ச்சுரப்பும்

உண்டாகும். கடன்கள் அதிகமாகும் நிலையும் உண்டாம். ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கு அர்ச்சனையும் புதனுக்கு கிரகப் பிரீதியும், மந்திர, யந்திர, பூசையும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

மகர இராசிக்கு 6க்குடையவரான புதன் இராசியிலே இருந்தால் முன் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. எதிரிகளால் மனப்பயமும், மனத்தில் தைரியமற்ற நிலையும் தோன்றும். வியாதிகள் அதிகமாய் இருக்கும். புதனுடன் சந்திரனும், செவ்வாய் உச்சம் பெற்றும், சனி ஆட்சி பெற்றும் கூடினால் திரேக மேன்மையையும், நிலபுலன்களால் இலாபத்தையும், பலனையும் அனுபவிக்க விதி உண்டாகும். மனைவியால் அவ்வப்போது மனஸ்தாபம் ஏற்படக்கூடும். புதனுடன் சூரியனும் குருவும் கூடினால் வியாதிகளால் கண்டமும், கஷ்டமும் உண்டாகலாம். புதனுடன் இராகுகேதுக்கள் கூடினால், கடன்கள், தொல்லைகள், ரோகம், பாண்டுரோகம், நீர்ப்பிடிப்பு, சருமநோய்கள், கருந்தேமல், தேமல் படை, பத்து அண்டரோகம் போன்ற வியாதிகளினால் கஷ்டப்பட விதியுண்டு. ஸ்ரீ மகாவிஷ்ணுவிற்கு அர்ச்சனையும், புதனுக்கு எந்திர, மந்திர பிரீதிகளும் செய்ய நற்பலன்கள் உண்டாகும். வியாதிகளுக்கு மருந்துண்ண நலம் பெறலாம்.

மகர இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 2ஆம் இடமான கும்பத்தில் இருப்பதால் கண்களில் நோய் உண்டாகும். சத்துரு தொல்லைகளும், குடும்பத்தில் கலகமும் உண்டாகும். கல்வி, தடைப்படும். புதனுடன் சனி, சுக்கிரன் ஆகியன சேர்ந்து கூடினால், குடும்பத்தில் ஒற்றுமையுடன் இருந்தாலும், உள்ளுக்குள் மனஸ்தாபம், வருத்தம் முதலியன ஏற்படக்கூடும். பூர்வ புண்ணியங்களினால் அதிகம் பலன் இராது. தொழிலில் முடக்கம் ஏற்படக்கூடிய சூழ்நிலை உருவாகும். புதனுடன் சூரியன், செவ்வாய், கூடிச் சேர்ந்தால் நிலபுலன்களால் வழக்கு, வில்லங்கம் போன்றவை ஏற்படும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் ஏற்படும். உஷ்ண, பித்தநீர் சம்பந்தமான வியாதிகளினால் தொல்லைகளும் பணச்செலவும் ஏற்படும். புதனுடன் இராகுகேதுக்கள் கூடினால், ஏவலால் குடும்பத்தில் ஒற்றுமை, மனநிம்மதி ஆகியவை இல்லாமல் தவிக்கும் நிலையும், சத்துருக்களால் தொல்லையும் உண்டாகும். ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கு அர்ச்சனையும், புதனுக்கு யந்திர, மந்திர பிரீதியும் செய்ய நன்மையான பலன்களை அடையலாம்.

மகர இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான புதன், இராசிக்கு 3ஆம் இடமான மீனத்தில் நீசம் பெற்றால் நோய் நொடிகள் இருந்தாலும், கடன்களாலும், இளைய சகோதரத்தாலும் தொல்லைகள் உண்டு.

சகோதரர்களுக்குள் மன வருத்தம் ஏற்படக்கூடும். கடன் பெற்று வாழ்க்கை நடத்தும் சந்தர்ப்பம் ஏற்படக்கூடும். புதனுடன் உச்சம் பெற்ற சுக்கிரன், ஆட்சி பெற்ற குரு ஆகியன கூடினால் பூர்வ புண்ணியங்களை அனுபவிக்கலாம். தாய் மாமன்கள் ஆதரவும் கிடைக்கும். தொழிலில் விருத்தி உண்டாகும். இளைய சகோதரர்கள் எதிரிகளாய் மாறும் நிலையும் உண்டு. புதனுடன் சூரியன், செவ்வாய், கூடினால் நிலபுலன்கள், வீடு, மனை போன்றவற்றில் வில்லங்க விவகாரம் ஏற்படக்கூடும். பலனை அனுபவிக்க முடியாதபடி இருக்கும். புதனுடன் சனி கூடினால் வாக்கில் உறுதியிராது. புதனுடன் இராகுகேதுக்கள் கூடினால், சருமத்தில் நோய் நொடிகளும், குஷ்டங்களும் வெண்படை, கருந்தேமல் போன்ற வியாதிகளும் ஏற்பட விதியுண்டு. ஸ்ரீமகாவிஷ்ணுவிற்கு பூசையும், புதனுக்கு யந்திர, மந்திர, பிரீதியும் செய்தால் நன்மையான பலன்களையும் அடையலாம்.

மகர இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 4ஆம் இடமான மேஷத்தில் இருப்பதால், தாய்க்குப் பீடையும், வீடு, மனை, நிலபுலன்கள், வாகனங்கள், கால்நடைச் செல்வங்கள், ஆகியவற்றின் பலன்களை முழுமையாக அடையமுடியாத நிலையும் நேரும். எதிரிகளினால் மனக்கலக்கம் உண்டு. தாயை விரோதிக்கும் நிலை உண்டாகும். புதனுடன் சனி நீசம் பெற்றுச் செவ்வாய் ஆட்சி பெற்றுக் கூடினால், விவசாய நிலங்களை அனுபவிக்க முடியாதபடி இருக்கும். இலாபங்களை அடைய முடியாது போகும். தனங்கள் அதிகமாகச் செலவழியும் நிலை ஏற்படும். வாத ரோகங்கள், பித்த, உஷ்ண சம்பந்தமான வியாதிகள் ஏற்பட விதியுண்டு. புதனுடன், சூரியன் உச்சம் பெற்றுக் கூடினால் கடன்களால் துன்பத்தையும், வியாதியால் அவதிப்படவும் நேரிடும். கண்டமாலை, கட்டிகள், சிலந்தி, நரம்பு வியாதிகள் போன்றவை ஏற்படும். புதனுடன் சுக்கிரன், குரு ஆகியன கூடினால் வாத, சிலேத்ம நோய்களும், எதிரியால் விரயங்களும், வழக்கு வில்லங்கம், விவகாரம் போன்றவையும் உண்டாக விதியுண்டு. புதனுடன் இராகுகேதுக்கள் கூடினால் ஏவலால் பாதிப்பும், வயிற்றில் கட்டியும், பெண்களாய் இருந்தால் உதிரப் போக்கும், வயிற்று தொல்லைகளும், கருந்தேமல், வெண்குஷ்டம், போன்ற வியாதிகளும், பாலியல் நோய்களும் உண்டாகலாம். இவற்றிற்குத் தகுந்த மருந்துண்ண நலம் நல்கும். ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கு அர்ச்சனையும் புதனுக்கு எந்திர, மந்திர, பிரீதியும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

மகர இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான புதன், இராசிக்கு 5ஆம் இடமான ரிஷப இராசியில் இருந்தால் புத்திர தோஷம் உண்டாகும். தாய்மாமன் வழியில் ஆதரவு இராது. அவரே எதிரியாக மாறும் சூழ்நிலை

உருவாகலாம். பூர்வ புண்ணியச் சொத்துகளில் விவகாரம் வில்லங்கம் இருந்து வரும். புதனுடன் சுக்கிரன், சனி ஆகியோர் கூடினால் நற்பலன்கள் உண்டாகும். புத்திர விருத்தியும், பூர்வபுண்ணிய இலாபமும் உண்டாகும். புதனுடன் குரு, சூரியன், செவ்வாய் ஆகியன சேர்ந்தால் நிலபுலன்களால் வருமானம் வந்தாலும், சேமிப்பு இராது; உடனே விரயமாகும் சூழ்நிலை உருவாகும். வாத ரோகங்கள், பித்த ஜுரம், அஸ்தி ஜுரம் போன்ற நாள்பட்ட ஜுரங்கள் ஏற்பட விதியுண்டாகும். புதனுடன் இராகுகேதுக்கள் சேர்ந்தால் சர்ப்பதோஷம், வம்ச விருத்திக்குத் தடை முதலியவற்றை ஏற்படுத்தும். இதற்குத் தக்க பரிகாரம் செய்ய, நலம் நல்கும். ஸ்ரீமகாவிஷ்ணுவிற்கு அர்ச்சனையும் புதனுக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் செய்ய நற்பலன்களை அடையலாம்.

# கும்பம்

சந்திர பகவானை 6ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற கும்ப இராசி அன்பர்களே ! 6ஆம் பாவமென்பது கடன் தொல்லை, சத்துரு, நோயிடர்கள், வில்லங்கம், விவகாரம், நீதித்தீர்ப்பு, ஏவல், பில்லி, சூன்யம் போன்ற துர்பலன்களை கொடுக்கக்கூடிய அம்சங்களையும் அவற்றிற்கான நிவர்த்தியையும் குறிப்பிடும். உங்கள் இராசிக்கு 6ஆம் இடத்துக்கு அதிபதி சந்திரனாகும். சந்திரனுடன் மற்ற கிரகங்கள் கூடிய பலனையும், 6ஆம் இடமான கடகத்தில் மற்ற கிரகங்கள் இருந்த பலனையும் காணலாம்.

சந்திரன் துர்கிரகங்களுடன் கூடியோ பார்த்தோ, பலன்கள் அதமமாய் நடந்தால், உரிய கிரகப் பிரீதிகள் செய்து பலனை நல்லபடியாக அடையவேண்டும். பார்வதி தேவிக்கும் காளிதேவிக்கும் பூஜையும், உபச்சாரமும் செய்தால், சத்துரு தொல்லைகளும், கடன் உபாதைகளும் ஒழியும் என்று நாடிநூல் கூறுகின்றது.

'ஏவலுடன் பில்லி சூன்யம் ருணவாதை கடன் நொம்பல்
எய்யவரும் ஈடுநிலை சத்ருக்கள் பங்க நிலை
நோவான நோயிடரும் நொடி செய்யும் துன்பமேதான்
நாயகியை வணங்கினாலே நலம்பலவும் பெறுவான்பாரே''

என்றபடி 6ஆம் பாவ தொல்லைகளை அகற்றவும், சத்துருக்கள் பங்கத்தை நீக்கவும் பார்வதி தேவிக்கும் பிரீதிகளும், சந்திர எந்திரத்தை வரைந்து

உருக்கொடுத்து பூஜைகளும் செய்து ஆறாம்பாவ தொல்லைகளை அகற்றலாமென்று கூறப்படுகின்றது. அன்பர்கள் மேற்சொன்ன பிரீதிகளைக் கடைப் பிடித்துப் பலனை அடையும்படி நாடி நூல் கூறுகின்றது.

கும்ப இராசிக்கு 6க்குடையவரான சந்திரன், கும்ப இராசியில் இருந்தால், சிலேத்தும வியாதிகள் நிறைந்தவர்களாகவும், குளிர்ஜுரம் ஜன்னி, வலிப்பு, நீர் சுரப்பு போன்ற வியாதிகள் உள்ளவர்களாகவும், எதிரிகளால் சதா தொல்லைகள் அடைபவர்களாகவும் இருப்பார்கள். கடன்கள் அதிகமாக இருக்கும். மனத்தில் சத்ருபயம் அதிகரிக்கும் நிலை உண்டாகும். சந்திரனுடன், சுக்கிரன், புதன் ஆகியன கூடினால் சிலேத்ம, வாயுத்தொல்லை முதலிய வியாதிகளால் கஷ்டமும் துன்பமும் இருந்துகொண்டே இருக்க விதியுண்டு. விவசாய நிலபுலன்கள், காடு கழனிகள், வண்டி, வாகனங்கள் முதலியன நல்ல பலன்களைத் தராமல் போக விதியுண்டு. புத்திர தோஷத்தையும் புத்திரர்களுக்குச் சுகக் கெடுதலையும் உண்டாக்கும். தாய்மாமன் வழியில் ஆதரவு இராது. கடன், வழக்கு போன்றவற்றால் தொல்லையும், கஷ்டமும் இருந்து வரும்நிலை உண்டாகும். வலிப்பு, வாயுவினால் ஏற்படும் ரோகங்களுக்குத் தகுந்த அவிழ்தங்களை உண்டு அவற்றைப் போக்கிக்கொள்ளலாம். சந்திரனுடன் சூரியன், செவ்வாய் ஆகியன சேர்ந்திருந்தால், மனைவியால் அவ்வப்போது மனக்கசப்பும், மனவருத்தமும் ஏற்பட விதி உண்டாகும்.

இளைய சகோதரர்கள் எதிரிகளாக மாறும்நிலை உண்டாகும். கொப்புளங்கள், முகப்பரு, தலைவலி போன்ற சிரசு ரோகங்களும், வயிற்றுவலி, உதிரக்கட்டி, இரத்தம் கெடுதல், இரத்த அழுத்தம் போன்ற நோய்களும், நரம்புச் சிலந்தி, அரையாப்புக்கட்டி, பல்லில் இரத்தம் வடிதல், வெட்டுக்காயம் முதலியவற்றையும் அனுபவிக்க விதி உண்டாகும். கடன்களால் தொல்லையுண்டாகும். கடனுக்காகத் தொழிலை விட்டுவிட நேரிடலாம். தொழில் முடக்கமாகி விட்டு விட்டுத் தொடர விதியுண்டாகும்.

சந்திரனுடன் குரு சேர்ந்தால் இலாபங்கள் அவ்வளவாகக் கிடைக்காது. கிடைத்தாலும், அவை பயன்படாமல் உடனே கடனுக்காக கைமாறும் விதி உண்டாகும். பணப்புழக்கம் தாராளமாய் இருக்கும். பேச்சில் குளறுபடி ஏற்படும். நிதானமாய் இருந்தால் நல்லது. சந்திரனுடன் சனி சேர்ந்தால் விரயங்களை அதிகமாக ஏற்படுத்தும் நிலை உண்டாம். இளமையானவர்களுக்கு இளம்பிள்ளைவாதமும், முடக்குவாதமும், முழங்கால், கணுக்கால், தொடை போன்றவற்றில் அவதியும் துன்பமும் இருந்துவர விதியுண்டாகும். கடன்களை அதிகமாக வாங்கவேண்டிய சூழ்நிலையை உருவாக்கும்.

கும்ப இராசியில் சந்திரனுடன் இராகுகேதுக்கள் கூடினால் குடும்பத்தில் கலகமும் ஒற்றுமைக் குறைவும், மனநிம்மதியற்ற நிலையும் ஏற்பட விதியுண்டாம். கிரகண தோஷம் சத்துருக்களினால் ஏவல், பில்லி, சூன்யம் வைப்பதுபோன்ற தொல்லைகளும், கடன்காரர்களால் அவமதிப்பும், தொல்லை துன்பங்களும் உண்டாகும். தாய் வழி ஆள்களுடன் எதிர்ப்பும், வழக்கும், விவகாரமும் தொடர விதி உண்டாகும். விஷநீர் சம்பந்தமான வியாதிகளான காலில் நீர் வடிதல், பாதங்களில் வெடிப்பு ஏற்படுதல் ஆகியனவும் உப்புச்சத்து போன்ற வியாதிகளும் மூலரோகம், பித்தம் சம்பந்தமான நோய்களும் ஏற்படும். இவற்றிற்குத் தக்க மருந்துண்ண நலம் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 6ஆம் இடத்தில் கடக இராசியில் சூரியன் இருந்தால் மனைவிக்கும், கணவனுக்கும் கருத்துவேறுபாடுகளும் மனஸ்தாபங்களும், உஷ்ண சம்பந்தமான வியாதிகளும் உண்டாகும். பித்தம், வைசூரி, அம்மை, காமாலை, கண்டமாலை ஆகிய கொடிய நோய்களும் உண்டாக விதியுண்டு. ஆனால், எதிரியை வெல்லும் திறமை உண்டாகும். கடன்கள் அடைய விதி உண்டு. நண்பர்களால் உதவியும், நன்மையும் உண்டு. வழக்கில் வெற்றிகிட்டும் யோகமுண்டாகும்.

கும்ப இராசிக்கு 6ஆம் இடத்தில் கடக இராசியில் செவ்வாய் நீசமானால், இளைய சகோதரர்களால் மனக்கசப்பும் மன வருத்தமும் ஏற்படும். தொழிலில் நன்மை உண்டாகாது. உத்தியோக உயர்வுகளைப் பெற பகீரதப்பிரயத்தனம் செய்ய வேண்டிய நிலை உண்டாகும். அனல் சம்பந்தமான பிணி உண்டாகும். புற்று நோய், இராஜப் பிளவை, நரம்புச் சிலந்தி போன்றவை ஏற்பட விதியுண்டு. பட்டம், பதவி, புகழ் ஆகியவை மங்கும் நிலை உருவாகும். கடன்கள் அதிகமாகும் நிலை உண்டாகும். எதிரிகளின் தொல்லை அதிகமாகும்.

கும்ப இராசிக்கு 6ஆம் இடத்தில் 5ஆம் இட அதிபதியான புதன் இருந்தால் (கடக இராசியில்) புத்திரர்களே எதிரியாகும் நிலை ஏற்படும். வாயு ரோகங்கள் முதலிய நோய்களினால் தொல்லையும், தொண்டை, கழுத்து ஆகியவற்றில் வியாதியும் அவ்வப்போது வந்து மாறும். கண்டங்கள், விபத்துகள் போன்றவையும் ஏற்பட விதியுண்டு. எதிரிகளினால் தொல்லை வந்து மாறும். பதவி சுகம், வெற்றியும் கிட்டும். பூர்வ புண்ணியச் சொத்துகளில் வில்லங்கம், விவகாரம், வழக்குகள் இருக்க விதி உண்டாகும். தாய் மாமன்கள் மனஸ்தாபத்துடன் இருப்பார்கள். கடன்களால் மனத்தில் கவலை உண்டாகும்.

கும்ப இராசிக்கு 6ஆம் இடத்தில் கடக இராசியில் குரு உச்சம் பெற்றால் மூத்த சகோதரர் உறவுடன் இருக்கமாட்டார். குடும்பம், ஒற்றுமையுடன் இருக்கும். தனப்புழக்கம் அதிகம் இருக்கும். பேச்சுக்கு மதிப்பும், மரியாதையும் உண்டாகும். தேகம் வாத ரோகத்தால் அவதியுற விதியுண்டாகும். கடன்கள் நிவாரணமாகும். வல்வழக்குகள் சுமுகமாக நடக்கும் நிலை உண்டாகும். வியாதிகளுக்கு அதிகம் பணம் செலவாகும் நிலை உண்டாகும்.

கும்ப இராசிக்கு 6ஆம் இடமான கடக இராசியில் சுக்கிரன் இருப்பதால் வண்டி வாகனங்களில் பழுதுகள் ஏற்படலாம். வியாதிகளால் கஷ்டமும் நஷ்டமும் உண்டாகும். தாய்க்கு நீர் சம்பந்தமான வியாதிகளும் உண்டாகும். தாய், விரோதமாக இருப்பார்கள். தந்தைக்கும், மன வருத்தம் ஏற்படும். பிதுர் பாக்கியச் சொத்துக்களில் விவகாரம் வில்லங்கம் ஏற்பட விதியுண்டாகும். எதிரிகளால் அச்சுறுத்தல் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 6ஆம் இடமான கடக இராசியில் சனி இருப்பதால் விரயங்கள் அதிகமாகும். வாத ரோகங்களும், ஏற்படும். எதிரிகளை வெல்லும் திறமை உண்டாகும். தைரியம், வீரியம் உண்டாகும். சூன்யத்தினால் உபாதை ஏற்பட்டு, பின் நிவாரணம் ஏற்படும்.

கும்ப இராசிக்கு 6ஆம் இடமான கடக இராசியில் இராகுகேதுக்கள் இருந்தால் பித்தரோக வியாதிகளும், பில்லி, ஏவலால் துன்பங்களும் உண்டாகும். கடன்கள் அதிகமாகும். வழக்கில் வெற்றிகிட்டும் நிலை உருவாகும். சத்துருக்களை வெல்லும் நிலை உருவாகும். கால்களில் வெடிப்பும், மூல ரோகங்களும், வயிற்று உபாதைகளும் இருக்க விதியுண்டாகும். இவற்றிற்குத் தகுந்த மருந்துண்ண நலமாகும். பார்வதி தேவிக்கும் சந்திரனுக்கும் அர்ச்சனையும், யந்திர, மந்திர, பிரீதியும் செய்ய நற்பலன்களை அடையலாம் என்று சந்திர நாடியில் ஸ்ரீமகரிஷி பதஞ்சலி கூறுகிறார்.

# மீனம்

**சூரிய பகவானை 6ஆம் இடத்ததிபதியாகப் பெற்ற மீன இராசி அன்பர்களே! ஆறாம்பாவமென்பது கடன், தொல்லை, ருணவாதை, நோயிடர்கள், ஏவல், பில்லி, சூன்யம், சத்துரு வகையிலான உபாதைகள்**

போன்றவற்றைக் குறிப்பிடும் உங்கள் இராசிக்கு 6ஆம் இடத்ததிபதியான சூரியன் மேஷம் முதல் மீனம் வரை 12 இராசிகளிலும் இருந்த பலனையும், மற்ற கிரகங்களுடன் சேர்ந்தால் 6ஆம் பலனை எப்படிச் செய்வார் என்பதையும் அறிந்து உங்கள் ஆறாம்பாவம், நாடி வாயிலாக சாரத் தொகுதியிலிருந்து எடுத்துக் கூறப்படுகின்றது.

சூரிய பகவான் தன் மித்துருக்களோடு கூடுவாரானால் ஆறாம் பாவ வழியில் துர்பலன்கள் உண்டெனினும் தனக்குச் சாதகமான பலன்கள் உண்டாகும். சூரியன் சனியோடு தன் வீட்டிலோ சனி வீட்டிலோ, மறைவிடங்களிலோ கூடுவாரானால் 6ஆம் பாவ வகையில் துர்பலனை அனுபவிக்க வேண்டியதுவரும்.

''கதிரோனும் மறைவிடத்தில் சத்ருவொடு கூட
கண்ணியம் போம் கடனாலே தொந்தமுண்டாம்
மதியிடத்தில் தன்மகனோடு கூடத்தானும்
மைந்தனுக்கு நோய்நொடி துயர்மேலாய்
துயர்கண்டு துன்பமேல் துன்மார்க்கம்
தனயனுக்கு அல்லல்பின் அரட்டலுண்டு
முயலவரும் கிரகப்பிருதி தெய்வப்பிருதி
மைந்தனுக்கு உயர்பலனும் சாதகமே

சிவபூஜைகளும் வீரபத்திர உச்சாடனங்களும் செய்வதால் சத்துருக்கள், கடன் தொல்லை, ஏவல், பில்லி, சூன்யம் போன்ற ருணவாதைகளிலிருந்து தப்பலாம். சூரியபகவானுக்கு எந்திர, மந்திர, பிரீதிகள் செய்தால் நன்மை அடையலாம்.

மீன இராசிக்கு 6ஆம் அதிபதியான சூரியன், இராசிக்கு 6ஆம் இடமான சிம்மத்தில் ஆட்சி பெற்றிருந்தால், உஷ்ணம் சம்பந்தமான ரோகங்கள், அம்மை, வைசூரி, மஞ்சள் காமாலை, கண்டமாலை, காலரா, கட்டிகள், இரத்தப்புற்று நோய், இரத்த அழுத்தம் போன்ற நோய் நொடிகளால் அவதியுற நேரிடும். கடன்கள் எங்குகேட்டாலும் தாராளமாய்க் கிடைக்கும். எதிரியை வெல்லும் திறமை உண்டாகும். எதிலும் வெற்றி கிட்டும். வழக்குகளிலும், வியாஜ்ஜியங்களிலும் வெற்றியும், நன்மையும் ஏற்படும். சூரியனுடன் புதன் சேர்ந்தால் மனைவிக்கு பீடையும் ரோகமும் உண்டாகும். குரு, செவ்வாய் சேர்ந்தால் வாத, பித்த ரோகங்களும், எதிரியால் மனப்பயம் இருந்தாலும் பின் தைரியமேற்பட்டு எதிரியை வெல்லும் திறமையும் உண்டாகும். சூரியனுடன் சுக்கிரன், சனி ஆகியன சேர்ந்தால், எதிரியால் மனக்கவலையும்,

கண்டங்களும், வியாதிகளால் துன்பமும், சிறுநீரக நோயினால் அவதியும், கஷ்டமும் உண்டாகும். சூரியனுடன் இராகுகேதுக்கள் சேர்ந்தால் கிரகணதோஷம் உண்டாகும். விஷ ரோகம், விஷநீர், மேகநோய் போன்ற வியாதிகள் ஏற்படும். எதிரியை அடக்கும் திறமையும் உண்டாகும். சிவபூஜையும், சூரியனுக்கு யந்திர, மந்திர, பிரீதியும் செய்ய நலமுண்டாகும்.

மீன இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சூரியன், இராசிக்கு 7ஆம் இடமான கன்னி இராசியில் இருந்தால், மனைவிக்கும் கணவனுக்கும் கருத்து வேறுபாடு நிலவும். துஷ்டச் செய்கையினால், மன வருத்தமும், மனக் கசப்பும் ஏற்பட்டுப் பிரிய நேரிடலாம். சூரியனுடன் செவ்வாய், சனி ஆகியன சேர்ந்தால், களத்திர தோஷமுண்டாகும். சதா வியாதியுடன் இருக்கும் மனைவியை அடைய விதியுண்டு. சத்துரு ஜெயமும், வழக்கில் வெற்றியும் நன்மையும் உண்டாகும். சூரியனுடன் குரு சேர்ந்தால் வாதரோகமும், அதனால் வைத்தியச் செலவும், செய்தொழிலில் முடக்கமும் ஏற்படலாம். சூரியனுடன் சுக்கிரன் நீசமாகிப் புதன் ஆட்சி உச்சம் பெற்றால் நல்ல மனைவியும், கடன் நிவாரணமும் மனமகிழ்ச்சியும் அமையும். வாத நோய்களும், வாயு ரோகங்களினால் பணச்செலவும் அதிகம் உண்டாகும். கண்டம் தவறுதலும் உண்டாகும். சூரியனுடன் இராகுகேதுக்கள் கூடினால் மனைவி நல்ல குணங்களுடன் இருக்கமாட்டாள். மனைவிக்கு தோஷம் ஏற்படும். இதற்குத் தகுந்த பரிகாரம் செய்தால், மனைவிக்கு ஆயுளும், ஆரோக்கியமும் உண்டு. ஸ்ரீ சிவ பூஜையும் சிவ ஆராதனையும், சூரியனுக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும், செய்தால் நற்பலன்களை அடையலாம்.

மீன இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதி சூரியன், இராசிக்கு 8ஆம் இடமான துலாத்தில் நீசமானால், சத்துரு விருத்தியுண்டு. குளிர் ஜுரம் போன்ற உஷ்ண சிலேத்தும வியாதிகளால் அவதி ஏற்பட விதியுண்டு. கண்களில் வியாதி உண்டாகும். வியாதிகளால் கண்டங்கள் உண்டு. குடும்பத்தில் மனஸ்தாபம் ஏற்படும். சூரியனுடன், சுக்கிரன் ஆட்சி பெற்று, சனி உச்சம் பெற்றும் கூடினால் ஆயுள் விருத்தியும், எதிரியை வெல்லும் உபாயமும் உண்டாகும். இளைய சகோதரர்கள் வலுத்திருப்பார்கள். அவர்களுடன் மனஸ்தாபமும் உண்டாக விதியுண்டு. சூரியனுடன் குருவும் புதனும் கூடினால் தொழிலில் நஷ்டமும், மனைவியால் மனவருத்தமும் உண்டாகும். வண்டி, வாகனங்களில் பழுது ஏற்படும். கால்நடைகளுக்குப் பீடையும் உண்டாகும். வாதம், வாயு போன்ற வியாதிகளால் கஷ்டமும் துன்பமும் உண்டாகும். சூரியனுடன் இராகுகேதுக்கள் கூடினால் விஷத்தால் பயமும், விஷநீர் சம்பந்தப்பட்ட ரோகமும், எதிரியினால் துன்பமும் உண்டாகும். இதற்கு சிவ பூஜையும், சூரியனுக்கு யந்திர, மந்திர, பிரீதியும் செய்தால் நன்மையான பலன்களை அடையலாம்.

மீன இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 9ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால் நல்ல குணங்களுடன், வசதி வாய்ப்புடன் இருப்பார். பிதுர்களுக்குப் பீடையும் அவர்களுடன் மனஸ்தாபமும் ஏற்பட விதியுண்டு. ஒற்றுமை குறையும். கோபங்களும், மன வருத்தமும் உண்டாகும். சூரியனுடன் செவ்வாய் ஆட்சியாகிக் கூடினால் பிதாவுக்குக் கஷ்ட நஷ்டங்களும், பிதுராஜ்ஜித சொத்துகளுக்கு சேதமும் ஏற்படும். மனத்தில் குதர்க்க எண்ணங்கள் உண்டு. அனல் சாந்த பிணியுடன் வாழவேண்டிய சந்தர்ப்பத்தை ஏற்படுத்தும். சூரியனுடன் சனி, குரு ஆகியன சேர்ந்தால் பந்துக்களினால் பகையும் விரோதமும் ஏற்படும்; வாத ரோகங்களும் உண்டு. சத்துரு நாசங்கள் உண்டு. தொழிலில் மேன்மையுண்டாகும். நல்ல புத்தி உண்டாகும். தந்தைக்குக் கண்டமுண்டு. சூரியனுடன், புதன் இராகுகேதுக்கள் சேர்ந்தால், பூமி, காணி, நிலம், நகை போன்றவற்றினால் தொல்லையும், வியாதியும் ஏற்படக்கூடும். பூமியால் இலாபமுண்டாம். பிதுர்பாக்கியங்களுக்குப் பீடை உண்டாகும். தகப்பனாருக்கு அந்த புத்திகளில் கடன் நிவாரணம் ஏற்படும். இதற்கு சிவ பூஜையும், சூரியனுக்கு யந்திர, மந்திர, பிரீதியும் செய்ய நற்பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

மீன இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சூரியன், இராசிக்கு 10ஆம் இடமான தனுர் இராசியில் இருந்தால், தொழிலில் மேன்மை உண்டாகும். தைரியம், வீரியம், தன வருமானம் ஆகியன கூடும். வழக்கில் வெற்றியும், எதிரியை வெல்லும் யோகமும் திறமையும் உண்டாகும். சூரியனுடன் குரு சேர்ந்தால் உத்தியோகத்தில் உயர்வும், நல்ல புகழும், சுகமும் உண்டாகும். வாதரோகம் உண்டாகும். சூரியனுடன் புதன், சுக்கிரன் ஆகியன கூடினால், புத்திரயோகம், சகல விதங்களிலும் ஞானம், ஆராய்ச்சி போன்ற தொழில் மேன்மைகளும் ஏற்படும். எதிரியால் கஷ்ட நஷ்டமும் உண்டாகும். இளைய சகோதரத்தாலும் மனைவியாலும் மனஸ்தாபம் வரும். தொழிலில் போட்டி பொறாமையும் உண்டாகும். சூரியனுடன் சனி சேர்ந்தால் வாத நோய்கள், ஜன்னி, வலிப்பு, குன்மம் போன்ற நோய்களால் அவதியையும் கஷ்டத்தையும் அடைய விதி உண்டாகும். சத்துருவால் தொல்லை இருந்தாலும் மாறும் நிலை உண்டாகும். வழக்கில் வெற்றியும் கிட்டும். சூரியனுடன் இராகு கேதுக்கள் சேர்ந்தால் மேகநீர், விஷநீர், போன்ற நோய்களால் அவதியும் துன்பமும் ஏற்படும். எதிரியை விவேகத்தால் வெல்லும் திறமையும், தானதர்மங்கள் செய்வதில்

பிரியமும் உண்டாகும். சிவபூஜையும், சூரியனுக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் செய்ய நற்பலன்கள் கிட்டும்.

மீன இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சூரியன், இராசிக்கு 11ஆம் இடமான மகரத்தில் இருந்தால், சத்துருவை வெல்லுதல், வம்பு, வழக்கு வில்லங்கம் போன்றவற்றில் வெற்றியும் நன்மையும் உண்டாகும். பிதாவுக்குப் பீடை உண்டு. மூத்த சகோதரரும் வியாதியால் கஷ்டப்பட விதியுண்டாம். உஷ்ண ரோக பீடை உண்டாகும். சூரியனுடன் செவ்வாய், உச்சமாகி குரு நீசமாகிக் கூடினால் குடும்பத்தில் மகிழ்ச்சியும் சத்துரு நாசமும், பணவருமானமும் உண்டாகும். இரத்தப் புற்று, கன்னப் புற்று போன்ற நோய்கள் ஏற்படும்,. உஷ்ணப்பீடைகளும் உண்டாகும். இதற்குத் தகுந்த மருந்துண்ண நலம் நல்கும். சூரியனுடன் புதன், சுக்கிரன், மற்றும் ஆட்சிபெற்ற சனி ஆகியன கூடினால் தீர்க்காயுளும், நற்சுகமும், பெண் போகத்தினால் மர்மஸ்தான நோய்களும், சகோதரர்களுடன் மனஸ்தாபமும் ஏற்படும். சூரியனுடன் இராகுகேதுக்கள் கூடினால் தந்தைக்கு கண்டமும், சத்துருநாசமும், வழக்கில் வெற்றியும் உண்டாகும். சிவபூஜையும், சூரியனுக்கு யந்திர, மந்திர, பிரீதியும் செய்ய நற்பலன்கள் உண்டாகும்.

மீன இராசிக்கு 6மிடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 12 இடமான கும்பத்தில் இருந்தால், தந்தைக்குக் கண்டமும், தைரிய வீரியமும், நிறைந்திருக்கும். நயனத்தில் ரோகமுண்டாகும். உஷ்ணத்தினால் சுகக் கெடுதலும், சிரசு நோய்களும் உண்டாகும். சூரியனுடன் சனி ஆட்சி பெற்றுக் கூடினால், சத்துருக்கள் நாசமும், கடன் நிவாரணமும் உண்டாகும். வாதரோகியாக இருப்பார்கள். சூரியனுடன் செவ்வாய், குரு ஆகியன சேர்ந்தால் பாவ காரியங்களைத் துணிந்து செய்வார்கள். யாரையும் விரோதிக்கும் மனப்பான்மை உண்டாம். நல்ல புத்தியும் நல்ல யோகமும் உண்டாகும். அனல் சார்ந்த பிணிகளோடு சேர்ந்து வாழவேண்டிய விதியுண்டு. சூரியனுடன் சுக்கிரன், புதன், சனி ஆகியன சேர்ந்து கூடினால் பெண்களினால் போக சுகமும், படுக்கை சுகமும் அதனால் ஆண் உறுப்பில் நோயும் உண்டாகும். சூரியனுடன் இராகு கேதுக்கள் கூடினால் தண்ணீரால் கண்டம், சர்ப்பத்தால் கண்டம் முதலியவை ஏற்படும். ஆனால், நல்ல புத்தியும், அறிவும் உண்டாகும். 12இல் கேது மட்டும் இருந்தால் மோக்ஷபிராப்தி உண்டாகும். இதற்கு சிவ பூஜையும், சூரியனுக்கு யந்திர, மந்திர பிரீதியும் செய்ய நற்பலன்கள் உண்டாகும்.

மீன இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சூரியன், இராசியிலே மீனத்தில் இருந்தால் கண்பார்வை மங்குதலும் முன் கோபமும் மற்றவரிடத்தில்

சண்டையிடுவதில் பிரியமும் உண்டாகும். உஷ்ண சம்பந்தமான நோய்கள் உண்டாகும். கடன்கள் மட்டுப்படும். சூரியனுடன் சுக்கிரன் உச்சம் பெற்றும், புதன் நீசம் பெற்றும் கூடினால் ஆயுள் விருத்தியும், சாஸ்திரங்களில் தேர்ச்சியும் உண்டாகும். சூரியனுடன் சனி, குரு கூடினால், வாதரோகங்களில் அவதியும், துன்பமும் உண்டாகும். ஞாபக மறதி, போகக் குறைவு போன்றவை உண்டாகும். சூரியனுடன் இராகுகேதுக்கள் கூடினால் சத்துரு ஜெயமும், விஷநீர், மேகநீர் போன்ற தொந்தரவால் அவதியும் துன்பமும் உண்டாகும். இவற்றிற்குத் தகுந்த மருந்துண்ண நலம் நல்கும். இதற்குச் சிவ பூசையும், சூரியனுக்கு யந்திர, மந்திர பிரீதியும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும் என்று சந்திரநாடியில் ஸ்ரீபதஞ்சலி மகரிஷி கூறுகிறார்.

மீன இராசிக்கு 6ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 2ஆம் இடமான மேஷத்தில் உச்சம் பெற்றால் பொய் பேசுபவர்களாகவும் சிறிது ஞாபக மறதியுள்ளவர்களாகவும் இருக்க விதி உண்டாகும். முன் கோபம் உண்டாகும். வாக்கில் கடுமை இருக்கும். கண்பார்வை மங்கும். சிரசு நோய்களும், வாய், தொண்டை முதலிய இடங்களில் புண்கள் வரவும் விதி உண்டாகும். அதிகமாகக் கடன்கள் வாங்கிச் செலவழிப்பார்கள். இவர்களது பேச்சினால் பகை உண்டாக விதி. வழக்குகளில் வெற்றிகிட்டும் யோகமுண்டாகும். சூரியனுடன் சனி நீசமாகி, செவ்வாய் ஆட்சியாகிக் கூடினால் கடுமையான வாக்கும் முன்கோபமும் அதிகமுண்டாகும். பொய்யான வாக்குகளும், மனத்தில் குரோதமும் உண்டாகும். குடும்பத்தில் கஷ்டமான சூழ்நிலை நிலவும். சூரியனுடன் சுக்கிரன், புதன் ஆகியன கூடினால் பேச்சில் குளுமையும், அடுத்த வரை நயந்து பேசி எதையும் சமாளிக்கும் திறனும் உண்டாகும். தனப் புழக்கமும் ஏற்படும். நல்ல மனைவி அமையக் கூடிய விதியும், குடும்பத்தில் ஒற்றுமையும் மகிழ்ச்சியும் நிலவும். கண்கள் நோயுடன் காணப்படலாம். சூரியனுடன் குரு கூடினால் பணப்புழக்கமும், இனிமையான சொல், சத்துருக்கள் தொல்லையினின்று விடுதலை ஆகியவை கிடைக்கும். இதயப் பலவீனம் உண்டாகும். சூரியனுடன் இராகுகேதுக்கள் கூடினால் விஷநீர் சம்பந்தப்பட்ட வியாதிகள், மேகநீர், மதுமேகம், நீரிழிவு, சொறி, படை, பத்துக்கள், தேமல் போன்றவற்றை ஏற்படுத்தும். இதற்கு சிவபூஜையும், சூரியனுக்கு யந்திர, மந்திரப் பிரீதிகளும் செய்ய நற்பலன்கள் உண்டாகும்.

மீன இராசிக்கு 6க்குடையவரான சூரியன் இராசிக்கு, 4ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால் தாய்க்கு நோய் நொடியும், தாய் தந்தையர் ஒற்றுமை இல்லாமலும் இருப்பார்கள். தாயாருடன் மன வருத்தமும் சொந்த பந்தங்களு' ன் பகையும் உண்டாக விதி உண்டாகும். சூரியனுடன் புதன்

ஆட்சியாகிக் கூடினால், கல்வியில் நல்ல தேர்ச்சியைத் தரும். வீடு, மனை ஆகியவற்றைக் கடனுக்காக அடமானம் வைக்கும் நிலையை உருவாக்கும். சுகக்கெடுதலும் உண்டாகும். பேச்சில் இனிமை இருக்கும். சூரியனுடன் சுக்கிரன் சேர்ந்தால் வீடு, நிலபுலன்கள், வண்டி, வாகனங்கள் முதலியவை இருந்தும் அவ்வப்போது பழுது ஏற்படும். இதைச் சரி செய்யப் பணம் அதிகம் செலவாக விதியுண்டாகும். சூரியனுடன் சனி சேர்ந்தால் படிப்பு தடைப்படும். கடனுக்காகப் பூமி, நிலம், காணி, வீடு, மனை ஆகியவற்றை விரயமாக்க நேரிடும். வாத நோய்களும் உண்டாகும். தாயுடனும், பந்து மித்திரர்களுடனும் விரோதம் இருக்கும். சூரியனுடன் குரு சேர்ந்தால் வித்தை, கல்வி, போன்றவற் றைக் கற்க ஆர்வம் ஏற்படும். நல்ல சௌக்கியம் ஏற்படும். சூரியனுடன் இராகுகேதுக்கள் சேர்ந்தால், பகைவரால் பயமும், வழக்கு, வில்லங்கம் போன் றவையும் இருந்து வர விதி உண்டு. சுகக் கெடுதல் உண்டாகும். வியாதிக ளால் கஷ்டமும் துன்பமும் ஏற்பட விதி உண்டாகும். இதற்கு சிவபூசையும், சூரியனுக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் செய்தால் நற்பலனும் நன்மையும் அடையலாம்.

மீன இராசிக்கு 6க்குடையவரான சூரியன் இராசிக்கு 5ஆம் இடமான கடகத்தில் இருந்தால், புத்திரதோஷம் ஏற்படும். பூர்வ புண்ணியச் சொத்துகளி னால் வில்லங்க விவகாரம், வழக்கு போன்றவை இருக்கும். தாய் மாமனின் ஆதரவு இராது. சூரியனுடன் செவ்வாய், குரு ஆகியன சேர்ந்து கூடினால் புத்திர சோகமுண்டு. கடன்கள் அதிகமாகும். உடல் நலக்குறைவும், பித்த, வாத சம்பந்தமான நோய்களுமுண்டாகும். சூரியனுடன் புதன், சுக்கிரன், ஆகியன கூடினால் தாயின் அல்லது தாய்மாமனின் ஆதரவும் உதவியும் இராது. இனிப்பு நீர், உப்புச்சத்து போன்ற நோய்கள் வரலாம். சூரியனுடன் சனி சேர்ந்தால், புத்திரரால் சோகமும், பூர்வபுண்ணியச் சொத்துகளில் விரயமும் ஏற்படலாம். சூரியனுடன் இராகுகேதுக்கள் கூடினால் கிரகணதோஷம், புத்திர தோஷம் ஆகியன ஏற்படக்கூடும். சாஸ்திரத்தைக் கற்பதில் ஆர்வம் ஏற்படும். தான, தர்மங்கள், புண்ணியங்கள் ஆகியன இருக்கும். சிவபூஜையும், சூரிய னுக்கு யந்திர, மந்திரப் பிரீதிகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

# ஏழாம் பாவம்

## மேஷம்

அசுர குரு சுக்கிராச்சாரியை 7ஆம் இட அதிபதியாகப் பெற்ற மேஷ இராசி அன்பர்களே!

சந்திர இராசிக்கு களத்திர ஸ்தானாதிபதியாகச் சுக்கிரன் வந்தாலே மனைவி யானவள் ரூப லாவண்யங்கள் நிறையப் பெற்றவளாகவும், நளின குணங் களை உடையவளாகவும். சற்று மமதைக் குணங்களைக் கொண்டவளாகவும் இருப்பாள். நல்ல உடல்வாகுடனும் ஒளி வீசும் கண்களைக் கொண்டவளாக வும் நல்ல கீர்த்தி, செல்வாக்கு தயாள குணங்கள் ஆகியவற்றைக் கொண்டவ ளாகவும் இருப்பாள்.

பதஞ்சலி மகரிஷியின் நாடி நூல்படி, ஒவ்வோர் இராசிக்காரரின் 7ஆம் இடமும், மனைவியின் ரூப லாவண்யங்களை அறிந்தவரை உங்கள் இராசிக் குரிய பலன்களை அறியும்போது,

''சுக்கிரனும் சப்தமனாய் தான்வரவே
சுந்திரியாள் வனப்புக்கும் ஏதுசொல்ல!
உக்கிரமாய் உடன்மேறிப் புன்னகையும்
உள்ளமொடு மமதைகுணம் தானுண்டாம்!

உண்டப்பா அறிவுகுண யூகமெத்த
உரைக்க, கேள் அத்துணையும் தானிருந்தும்
கண்டிடவே வேண்டியது தான்காணா
காட்டலாம் தேடியதும் வராகாண்!

காணமேல் சுங்கரவர் நல்லில்லம்
கருத்துடனே மித்ருவொடு கூடிநிற்கப்
பேணவரும் வருபெண்டாள் யோகம்மெத்த
பெருமையுடன் மாண்புறவே வாழலாமே''

சுக்கிரன் 7ஆம் இடத்ததிபதியாக வந்தாலே வரக்கூடிய பெண் நல்ல வனப்பு, நல்ல நிறம், அழகு, பிரகாச கண்கள், கீர்த்தி, செல்வாக்கு ஆகியன

பெற்றவளாக இருப்பாள், மமதை குணமுண்டு, ஆனால், உள்ளபடி, உள்ளத்தில் வெளிப்படுத்தத் தெரியாத பாச உணர்வுண்டு. சுக்கிரன் இராசிக்கு மறைவிடங்களில் இல்லாமலும், தன் சத்துரு கிரகங்களுடன் கூடாமல் சுபகிர கங்களுடன் கூடி இருந்தாலும், நீசமாகாமலும், நீசக் கிரகத்துடன் கூடாமலும் இருந்தால் வரக்கூடிய பெண்ணால் யோகமுண்டாம்.

சுக்கிரன் துர் கிரகச் சேர்க்கையால் திருமணப்பலன்களில் இடர் செய்தாலோ இராசிக்கு 12ஆம் இடமான மீனத்தில் உச்சம் பெற்று, பெண்வகையான தொல்லைகளைச் செய்தாலோ சுக்கிரனுக்கு உரிய பிரீதிகள் செய்து பலனை நல்லமுறையில் அடைய வேண்டும்.

மஹாலட்சுமிக்கும், லட்சுமியின் அவதாரங்களுக்கும் பிரீதிகள் செய்வதாலும், சுக்கிர யந்திர, மந்திர பூஜைகளை மேற்கொள்ளுவதாலும் உயர்பலனை அடையலாமென்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது.

சுக்கிரன் மேஷ இராசியிலேயே இருக்க ஸ்திரீகள் மீது மோகமும் தன் மனைவி மீது இச்சையும் அதிகமாக உண்டாகும். காமம் அதிகமாகத் தலை தூக்கும். மற்ற வகையில் நாட்டம் குறையும். சுபகிரகங்கள் கூடியிருந்தால் நலமுண்டாகும். வரக்கூடிய பெண், தான் விரும்புபவளாகவும், தன் இச்சை யையும் இஷ்டத்தையும் நிறைவேற்றுபவளாகவும் இருப்பாள்.

சுக்கிரன் ரிஷப இராசியில் இருந்தால், மனைவி ரூப லாவண்யமுடனும் ஸ்திரமான சொத்துகளுக்கும் தனங்களுக்கும் அதிபதியாகவும் சற்றுக் கர்வம் கொண்டவளாகவும், கோபகுணங்களைக் கொண்டவளாகவும் இருப்பாள். இருப்புக்குத் தென்கிழக்கு மூலையில் மனைவி அமையும் விதியுண்டாகும். களத்திர பிரீதி செய்யப் பலனுண்டு.

சுக்கிரன் இராசிக்கு 3ஆம் இடமான மிதுன இராசியில் இருக்க, சில தோஷங் கள் உண்டாகக்கூடும். கிரகப்பிரீதிகள் செய்தால் களத்திர பலனை அடைய லாம். தாரதோஷமாயிருந்தால் கஷ்டம். மறு விவாகம் செய்ய விதியுண்டு. விதி, மதி, கதி மூன்றையும் கணக்கிட்டுக் களத்திர பலனை அறியவேண்டும். களத்திர வகையில் பற்றுதல் குறைவு. இருப்புக்கு வடக்கில் மனைவி அமைய விதியுண்டாம்.

சுக்கிரன் கடக இராசியில் 4ஆம் இடத்தில் இருக்க, சுப பலமாயிருந்தால் மனைவியால் பூரண சுகம் கிட்டும். அழகான வதனத்தையுடைய நங்கை மனைவியாக அமைவாள். நிலம், மனை வகையில் அவளுக்கு ஆளுமைகள் ஏற்படும் இருப்புக்கு வடமேற்கு மூலையில் மனைவி அமைய விதியுண்டா கும். சுக்கிரன் சிம்ம இராசியில் இருக்கச் சில தோஷங்கள் உண்டாகும்.

கலையம்சம் கூடிய மனைவி வாய்க்க விதியுண்டாகும். சூரியன் வலுத்திருந் தால் களத்திர தோஷத்தை நிவர்த்திக்கலாம்.

சுக்கிரன் கன்னி இராசியில் இருக்க ரோகமுள்ள பெண்ணை மணக்க வேண்டியது வரலாம். மனைவியிடம் உடல் சுகங்கள் பூரணமாக பெற முடியா மலும். சதா சண்டை, சச்சரவுகளுடனும் இருக்கும் நிலையுண்டு. இலட்சுமி தேவிக்கு அர்ச்சனைகளும், சுக்கிர கிரக பிரீதிகளும் செய்ய நன்மையுண்டு.

சுக்கிரன் இராசிக்கு ஏழாமிடமான தன்னுடைய வீட்டிலேயே இருந்தால் மனைவி சர்வ அலங்கார பூசிதையாக இருப்பாள். கலையமிசத்தில் ஈடுபாடு இருக்கும். எந்த நிறத்தில் இருந்தாலும் நல்ல அழகோடு உடல் அமைப்பு கொண்டவளாய் இருப்பாள். மனைவியின் கை எப்பொழுதும் ஓங்கியிருக்கும்.

சுக்கிரன் இராசிக்கு எட்டாமிடமான விருச்சிக இராசியில் இருக்க, மனைவி யால் தொல்லைகள் உண்டாகும். மனைவி தைரிய, வீரிய குணங்களைப் பெற்றிருப்பாள். நல்ல குணங்கள் இருந்தாலும் பொறுப்பில்லாத பெண்ணாக நடந்துகொள்வாள், ஆசை அதிகம் உண்டு.

சுக்கிரன் இராசிக்கு ஒன்பதாமிடமான தனுசு இராசியில் இருக்க, முரண்பா டான நிலையில் திருமணம் நடக்க விதியுண்டாம். தன் போக்கிலும் தன் வீட்டார் போக்கினை வெறுத்தும் மணமுடிக்க நிலைகள் உண்டாகும். வரக்கூ டிய பெண் நல்ல குணவதியாகவும், ஆனால், முரண்பாட்டுக் குணங்களைக் கொண்டவளாகவும் இருப்பாள். இருப்புக்கு வட கிழக்கிலும் தென்மேற்கு மூலையிலும் மணப்பெண் அமைய விதியுண்டாகும்.

சுக்கிரன் மகர இராசியில் இருக்க, வரக்கூடிய பெண்ணால் ஜீவன பலமும், பொருள் வரவும் தொழில் நிலைகளும் உண்டாகும். சுக்கிரனுடன் இரண் டுக்கு மேற்பட்ட சுபகிரகங்கள் கூடினால் வரும் பெண்ணால் யோகமுண்டு. ஓரளவு இலட்சணமும், குணங்களும், மந்தமான செயலும் கொண்ட நங்கை கிடைப்பாள். இருப்புக்கு மேற்கில் பெண் கிடைக்கக்கூடிய விதியுண்டாகும்.

சுக்கிரன் கும்ப இராசியில் மேஷ இராசிக்கு 11ஆம் இடத்தில் இருக்க, வரக்கூடிய பெண்ணால் யோகமுண்டு, கீர்த்தியுண்டு. சுக்கிரன் தனித்திருந் தால் மத்திமம். இரண்டுக்கு மேற்பட்ட கிரகங்களுடன் கூடினால் மேன்மை யுண்டு. பெண்ணைவிட அதனால் வரக்கூடிய வரவுகள் சிறப்பாய் இருக்கு மென்று கூறப்படுகின்றது.

சுக்கிரன் மீன இராசியில் இருக்க மனைவி அழகாயிருப்பாள். மேட்டுக்குடி போல வாழ ஆசையுண்டாகும். இதனால் பல வகையில் இம்சைகள் உண் டாம். அவளின் அழகால் கணவருக்கு இன்பமும், துன்பமும் கலந்தே வரும்.

அதனால் பொருள் விரயமும் உண்டாகும். சுக்கிரனுக்கு யந்திர, மந்திர, பிரீதிகள் செய்வதால் உயர்பலன்கள் உண்டென்று நாடி வாயிலாக அறியப்படுகின்றது.

மேஷ இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன், இராசிக்கு 7ஆம் இடமான துலாத்தில் ஆட்சிபெற்றால், மனைவி அழகானவளாகவும், ரூப லாவண்யங்கள் நிறைந்தவளாகவும் இருப்பாள். செல்வம், செல்வாக்கு ஆகியன நிறைந்தும் காணப்படுவாள். வாலிபப் பருவத்தில் திருமணம் நடக்க விதி உண்டு. வாழ்க்கை, வசதியுடன் இருக்கும். இருப்புக்குக் கிழக்கு தென்கிழக்கில் பெண் அமைய விதி உண்டு. அவள் நல்ல சிவப்பு வண்ணத்தில் இருப்பாள். தன் மனைவியின் வீட்டிலேயே வாசம் செய்ய விதி உண்டு. மனைவி, இனிமையாகப் பேசுபவளாகவும், நல்ல குணங்களும் சௌந்தர்யமும் கொண்டவளாகவும் இருப்பாள்.

7ஆம் இடத்தில் சூரியன் இருந்தால் தனக்கும், மனைவிக்கும் பீடை நோய்கள் உண்டாகும். மனைவி முன் கோபம் உள்ளவளாக இருப்பாள். சிலருக்கு இரு மனைவியர் வாய்க்க விதி உண்டாகும். 7ஆம் இடத்தில் செவ்வாய் இருந்தால், மேஷ இராசிக்கு தோஷமில்லை என்றும் கூறலாம். ஆனால், தோஷத்தின் பாதிப்பு இருக்கக்கூடும். திருமணம் தடைப்படும். தோஷத்திற்குப் பரிகாரம் செய்தால், செவ்வாய் தோஷம் விலகி, திருமணம் நடைபெறும். கோபமுள்ள மனைவி அமைய விதி உண்டு.

7ஆம் இடத்தில் புதன் இருந்தால், மனைவி, நல்ல அழகாகவும் சிக்கனம், சேமிப்பு உள்ளவளாகவும், நற்சுகம் தருபவளாகவும் இருப்பாள்.

7ஆம் இடத்தில் குரு இருந்தால் நல்லவளாகவும் பொறுமைசாலியாகவும், அழகுள்ளவளாகவும், இனிமையான வாக்குள்ளவளாகவும் இருப்பாள். நற்சுகமும், புத்திர பாக்கியமும் உண்டாகும்.

7ஆம் இடத்தில் சனி இருந்தால் குரூர சுபாவம் கொண்டவளாகவும். காயாம்பு வண்ணம் கொண்டவளாகவும் இருக்க விதி உண்டு. திருமணத் தடைஏற்படும்.

7ஆம் இடத்தில் இராகுகேதுக்கள் கூடினால் வேசிமேல் பிரியம் இருக்கும். சர்ப்பதோஷம் உண்டாம். திருமணம் தள்ளிக்கொண்டே போகும். கிரக சாந்தி செய்தால் தோஷம் நீங்கித் திருமணம் நடைபெறும். சுக்கிரனுக்கு யந்திர மந்திர, பிரீதியும், ஸ்ரீரெங்கநாதருக்கு அர்ச்சனையும் ஆராதனையும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும் என்று ஸ்ரீபதஞ்சலி மகரிஷி, சந்திரநாடியில் கூறுகிறார்.

# ரிஷபம்

உங்கள் இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியாகச் செவ்வாய் பகவானைப் பெற்ற ரிஷப இராசி அன்பர்களே!

வரக்கூடிய களத்திரத்திற்குச் செவ்வாய் பகவானைப் போலவே பராக்கிர மங்களும் தைரிய, வீரிய குணங்களும், கோபதாபங்களும் உண்டாகும். உடல் வீரியங்களும், மனத் தைரியங்களும் பலமாகவே உண்டு. பதஞ்சலி நாடி நூலில் கண்டபடி,

''சேயவனுங் களத்திரமதிபனுமாக குணங்கேளாய்
செல்வாக்கு கீர்த்தி புகழ் மிகுந்தே காணும்
நேயமுடன் சேர்ந்து வாழும் கோபதாபமுண்டாம்.
நொம்பலுமே தன்வழியில் பலவுஞ் செய்யும்.

செய்யுமது சேய்பாபரொடு சேர்ந்திடினும்
சப்தம மட்டம வியத்தில் சனியோடு கூடிடினும்
உய்வில்லை பாவபலன் மத்திமமே காட்டும்
உரைக்கவரும் பிருதி செய்ய பலனேயாகும்.''

இவ்வாறாய் செவ்வாய் 7ஆம் இடத்து அதிபதியாக வர, வரக்கூடிய பெண் ணுக்குச் செல்வாக்கு, கீர்த்திபுகழ், ஐஸ்வர்யங்கள் போன்ற அம்சங்கள் இருக் கும். அதேபோல், மமதைக் குணங்களும் கோபதாபக் குணங்களும் இருக்கும்.

செவ்வாயானவர் உயிருக்கோ உடலுக்கோ அதாவது, இலக்கினத்திற்கோ இராசிக்கோ 7,8,12 போன்ற இடங்களில் இருந்தாலும் செவ்வாயோடு சனி கூடி நின்றாலும் மத்திமமான பலன்கள் ஏற்படுவதோடு, இருந்த இடத்தின் பலனையும் முரணாக கொடுக்கும் என்று கூறப்படுகிறது. இதனால் திரும ணத் தடைகளும் குறைவான மாங்கல்ய பாக்கியங்களும் உண்டாகும் என்று நாடி வாயிலாக அறியப்படுகிறது. செவ்வாய் தோஷங்கள் இருந்தாலும், செவ் வாய் பலவீனமடைந்து காணப்பட்டாலும் செவ்வாய் பகவானுக்கும், சுப்பிரம ணிய தேவருக்கும் கடுமையான முறையில் எந்திர, மந்திர, பிரீதிகள் செய்வ தன்மூலமும், அன்னதானங்கள் தர்மங்கள் செய்வதன் மூலமும் நல்ல பலன் களை அடையலாம்.

ரிஷப இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் ரிஷப இராசியிலே இருக்க, வரக்கூடிய களத்திரத்திற்குத் தைரிய, வீரிய குணங்களும் மூர்க்க குணங்களும் உண்டு. ஆனால் அவள் அன்பு, சுயநலம் ஆகிய குணங்கள் கொண்டவளாகவும், நல்ல பிரகாசமான நிறமுள்ளவளாகவும், இருப்புக்குத் தெற்கில் அமைவாள்.

செவ்வாய் இராசிக்கு 2ஆம் இடமான மிதுனத்தில் இருக்க, குடும்ப வகையில் சிக்கல்கள் மனைவியால் ஏற்படும். தனவகையில் இடர்ப்பாடு வந்து விலகும். இருப்புக்கு வடக்கில் பெண் அமைய விதி உண்டென்று கூறப்படுகிறது.

செவ்வாய் இராசிக்கு 3ஆம் இடமான கடகத்தில் இருக்கச் சில தோஷங்கள் உண்டாகி விலகும். செவ்வாய்க்குப் பிரீதிகள் செய்வதன் மூலம் நற்பலன்கள் உண்டாம். இருப்புக்குத் தெற்கே மற்றும் வடமேற்குத் திசையில் களத்திரம் அமைய விதி உண்டாகும்.

செவ்வாய் இராசிக்கு 4ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால், மனைவி நல்ல பிரகாசமும், இலட்சணமும், அறிவு குண யூகங்களும், நல்ல கௌரவமும் விடாப்பிடியான குணங்களும் கொண்டுமிருப்பாள். இருப்புக்குத் தெற்கிலும், கிழக்கிலும் பெண் அமைய விதியுண்டு.

செவ்வாய் இராசிக்கு 5ஆம் இடமான கன்னியில் இருந்தால் மனைவி நல்ல படித்த குணமுள்ளவளாகவும், தெய்வபக்தியில் ஈடுபாடுள்ளவளாகவும் இருப்பாள். களத்திர தோஷம் நிவர்த்தி செய்தால் நற்பலன்களுண்டாகும். அதனால் தொல்லைகள் விலகும். இருப்புக்கு வடக்கிலும் தெற்கிலும் பெண் அமைய விதி உண்டென்று கூறப்படுகிறது.

செவ்வாய் இராசிக்கு 6ஆம் இடமான துலாத்திலிருந்தால், மனைவி ரோக முள்ள ஸ்திரீயாக இருப்பாள். செவ்வாய் சுப பலமானால் பிற்கால நன்மைகள் உண்டாகும். செவ்வாய் துலாத்தில் அசுப பலமாய் இருந்தால் மனைவியால் நொம்பலும் அல்லலும் உண்டாகுமென்று கூறப்படுகிறது.

செவ்வாய்க்குப் பீரிதி செய்ய மேன்மை உண்டாகும். இருப்புக்குத் தென் கிழக்கிலும், தெற்கிலும் முக்கியமாய்க் களத்திரம் அமைய விதி உண்டென்று நாடி நூல் வாயிலாக அறியப்படுகின்றது.

ரிஷப இராசிக்கு 7க்குடையவரான செவ்வாய் இராசிக்கு 7ஆம் இடமான விருச்சிகத்திலே இருந்தால், மணப்பெண் மிகவும் துடுக்குள்ள பெண்ணாய் இருப்பாள். அவள் நல்ல சிவந்த நிறமுள்ளவளாகவும் சுமாரான உயரமுள்ளவ

ளாகவும் இருப்பாள். சிடுசிடுக்கும் குணமும் உண்டு. பெண் தெற்குத் திக்கிலிருந்து வர விதி உண்டாகும். 7இல் செவ்வாய் இருப்பது தோஷம் என்றாலுங்கூட விருச்சிகத்தில் ஆட்சி பெற்றிருப்பதால் நல்ல பெண்ணாக அமைய விதி. அதற்கு அங்காரகப் பிரீதியும் செவ்வாய் தோஷ நீக்கப் பரிகாரம் செய்வது நல்லது. திருமணம் தடைப்பட்டுப் பின் நடக்க விதியும் உண்டாகும்.

7ஆம் இடத்தில் சூரியனிருந்தால் உஷ்ண சம்பந்தமான பீடைகள் நோய் நொடிகள் உண்டாகும். நல்ல குணம் இராது. முன் கோபம் உள்ள பெண்ணாக இருப்பாள்.

7ஆம் இடத்தில் புதன் இருந்தால், மனைவி நல்ல அழகுள்ளவளாகவும் குடும்பத்தை நன்றாக நிர்வகிக்கும் திறமை உள்ளவளாகவும் இருப்பாள்.

7ஆம் இடத்தில் குரு இருந்தால் நல்ல தெய்வ பக்தி, அழகு, அடக்கம் ஆகியன உள்ள மனைவியாக வாய்க்க விதியுண்டாகும். நல்ல பொறுமைசாலியாகவும் இருப்பாள். இப்பெண்ணால் வாகன சுகமும், பொன் பொருள் வரவும் உண்டாக விதியுண்டு.

7ஆம் இடத்தில் சுக்கிரனிருந்தால் நல்ல அழகும், இளமையும், டாம்பீகப் பேச்சும் இருக்கும் பெண்ணாக அமைய விதியுண்டு. கலா இரசனையும், கலை உணர்வும் அதிகமாய் இருக்கும். வண்டி, வாகனங்கள், பொன், பொருள், பூஷணாதி, நற்சுகம் ஆகியன உண்டாக விதி.

7ஆம் இடத்தில் சனியிருந்தால் பொறாமை, கோபம் அதிகம் உள்ள பெண்ணாகவும், உள் ஒன்று வைத்துப் புறம் ஒன்று பேசுபவளாகவும் இருப்பாள்.

7ஆம் இடத்தில் இராகுகேதுக்களிலிருந்தால் களத்திர தோஷமும் களத்திர அரிஷ்டமும் உண்டாகலாம். பெண்களை அதிகம் நேசிக்கும் குணம் உள்ளவனாக விளங்குவார்கள். களத்திரதோஷ பரிகாரமும் இராகுகேதுக்குப் பிரீதியும் செய்தால் நல்ல பலனுண்டாகும். ஸ்ரீசுப்பிரமணியருக்கு அர்ச்சனையும் பிரீதியும் செய்ய நல்ல பலனுண்டாகும்.

செவ்வாய் இராசிக்கு 8ஆம் இடமான தனுசில் இருந்தால் வருமானக் குறைவானவராகவும் குடும்பத்தை நிருவகிக்கும் திறமையற்றவராகவும், மனைவியினால் துன்பங்களையும், தரித்திர நிலையையும் அனுபவிப்பவராகவும் இருக்க விதியுண்டாகும். மானத்தைப் பெரிதாக மதிக்காதவராய் இருப்பார். தெற்கிலும், வடகிழக்கிலும் பெண் அமைய விதியுண்டு.

செவ்வாய் இராசிக்கு 9ஆம் இடமான கும்பத்திலிருக்கப் பருவத்தில் திருமணம் நடைபெற விதியுண்டாகும். சொத்து சுகங்களும் [illegible]

சேர்க்கையும் உண்டாகுமென்று கூறப்படுகிறது. ஆனால், செவ்வாயுடன் சனி கூடியிருந்தால் திருமண வகையிலும் களத்திர வகையிலும் பல தொல்லைக ளைச் சந்திக்க வேண்டிவரும். இருப்புக்கு மேற்கிலும், தெற்கிலும் பெண் அமைய விதியுண்டாகும்.

செவ்வாய் இராசிக்கும் 11-இடமான மீனத்திலிருக்க வரக்கூடிய களத்திரத் தால் இலாபமும், அதனால் யோகமும் உண்டாகும். பொதுவாக நற்பலன்கள் உண்டு. செவ்வாய் சுபபலமாய் இருக்க நன்மை. வடகிழக்கிலும், தெற்கிலும் பெண் அமைய விதியுண்டாகும்.

செவ்வாய் இராசிக்கு 12ஆம் இடமான மேஷத்திலிருக்க வரக்கூடிய களத்தி ரத்தால் முன் நட்டமும், பின் யோகமும் உண்டாகும். நல்ல குணங்கள் பொருந்திய ஆனால் தைரிய, வீரியமான, பெண் அமைவாள். இருப்புக்குத் தெற்கில் பெண் அமைய விதி உண்டாகும்.

## செவ்வாய் தோஷங்கள்

7ஆம் இடத்தில் இராகுகேதுக்களிருக்கத் திருமணத் தடைகள் உண்டு. அந்தந்தக் கிரகங்களுக்கு யந்திர, மந்திரப் பிரீதிகள் செய்வதாலும். சந்நியாசிக ளுக்கு செய்வதாலும். செவ்வாய் கிரகத்தின் காரகஸ்தலமான பழனிக்குச் சென்று இறைவனை வணங்கி வருவதாலும் தோஷம் நீங்கித் திருமணம் நடைபெறும்.

## செவ்வாய் தோஷநிவர்த்திகள்

ஒரு செப்புத் தகட்டில் திரிகோண அச்சரமிட்டு, செவ்வாயுடைய கிரக பீஜமெழுதி, செவ்வாய் கிரக மந்திரம் 1008 ஜெபித்து, குங்குமத்தால் நனைத்து சிகப்புப் பட்டு வஸ்திரத்தால் யந்திரத்தை வைக்கவேண்டும்.

அத்துடன் சிவப்பு வண்ணத் துவரைப்பயறு, பவளம், சண்பகப்பூ, கருங் காலி கட்டை போன்றவற்றை வைத்துத் தோஷமுள்ளவர்களின் கையில் கொடுக்கவேண்டும். அதை அவர்கள் ஓடுகின்ற நீரிலோ அல்லது கடலிலோ விட்டு, 7 முறை நீரில் மூழ்கி எழுந்திருந்து, திரும்பிப்பாராமல் வந்து 7 சன்னியாசிகளுக்கு வஸ்திர தானம், அன்னதானம், நாணய தானம் போன்ற வற்றைச் செய்யவேண்டும். சித்தர் முறையில் பூரணமாய் தோஷம் விலகும் என்று கூறப்பட்டுள்ளது.

# மிதுனம்

தேவ குருவை 7-ஆம் இடத்து அதிபதியாகப் பெற்ற மிதுன இராசி அன்பர்களே!

தேவகுரு 7ஆம் இடமான தனுசு இராசியில் ஆட்சி பெற்றால் நல்ல சௌந்தர்யம் அழகு தெய்வபக்தி, நற்குணங்கள், நற்செய்கை, நல்லொழுக்கம், நற்பண்பு போன்றவற்றுடன் நல்ல இங்கிதங்கள் உள்ள பெண்ணாக இருக்க விதி உண்டாகும். வடகிழக்குத் திசையில் பெண் அமைய விதி உண்டாகும்.

''தேவகுரு சப்தமத்தோன் ஆகவேதான்
தொண்டுசெய் களத்திரங்கள் அமையவரும்.
மேவமேல் அறிவுகுண யூகமேலாய்
மெச்சவரும் சொர்ணரூபம் அழகேயெண்ணி

எண்ணியே பலமாந்தர் நிற்குமாறே
எண்ணம்போல் களத்திரமும் அமையுமென்றே
திண்ணமாய்க் காலங்கடந்தேதான் யிவருக்குமே
துலங்கவரும் மணம்மேலாய் வாழ்வுதானே.''

7-க்குடைய குரு இராசியிலே இருந்தால் மனைவி நல்ல அன்புள்ளவளாகவும் நற்குணங்களுள்ளவளாகவும் இருப்பாள். இவள் மூலம் போக பாக்கியங்களை அனுபவிக்கும் நிலையும் பொன், பொருள், பூஷணாதிகளும் உண்டாகும். கலையார்வம் உண்டாகும். சிக்கனமும் செல்வாக்கும் உண்டாகும். வடகிழக்கிலும் வடக்கிலும் பெண் அமைய விதியுண்டாகும்.

7க்குடைய குரு இராசிக்கு 2ஆம் இடமான கடகத்தில் இருந்தால் வரக்கூடிய பெண்ணால் குடும்பத்தில், சௌக்கியமும், ஒற்றுமையும் உண்டாகும். செல்வமும் செல்வாக்கும் அந்தஸ்தும் உண்டாகும். பெண்ணிடம் அடக்கமும் அறிவும் உண்டு. வடகிழக்கு, வடமேற்கிலும் பெண் அமைய விதி உண்டாகுமென்று கூறப்படுகிறது.

7க்குடைய குரு இராசிக்கு 3ஆம் இடமான சிம்ம இராசியில் இருந்தால் வரக்கூடிய பெண் நோய் நொடிகளால் அவதியுற நேரிடலாம். இதற்குப்

பரிகாரம் செய்தால் நல்ல ஆரோக்கியமும், ஆயுளும் உண்டாகுமென்று கூறப் படுகிறது. வரக்கூடிய மனைவியால் பதவி, புகழ் ஆகியவை ஏற்பட விதியுண் டாம். வடகிழக்குத் திசை மற்றும் கிழக்குத் திசைகளிலிருந்து பெண் அமைய விதியுண்டாம்.

7க்குடைய குரு 4ஆம் இடமான கன்னியில் இருக்க நற்பண்பும் கற்பொழுக் கமும் நிறைந்த பெண்ணாகவும், அமைதி, அடக்கம் உள்ள பெண்ணாகவும் இருப்பாள். மனைவியால் சொத்து சுகம், ஆபரணச் சேர்க்கையும் உண்டாகும். வடக்குத் திசை மற்றும் வடகிழக்குத் திசைகளிலிருந்து பெண் அமைய விதியுண்டு.

7க்குடைய குரு 5ஆம் இடமான துலாத்தில் இருக்க, கலையார்வம் உள்ள பெண்ணாகவும், அழகும், அமைதியும் உடைய பெண்ணாகவும் இருக்க விதியுண்டாகும். 5க்குடையவன் 7க்குடையவன் பலம் பெற்றிருந்தால் நற்ப லன்கள் உண்டாகும். வடகிழக்கு மற்றும் தென்கிழக்குத் திசையில் பெண் அமைய விதி உண்டாம்.

7க்குடைய குரு 6ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால் வரும் களத்திரத் திற்கு வியாதிகளும் தொல்லைகளும் உண்டாகும். இதற்கு சாந்தி பரிகாரம் செய்தால் நற்பலன்களும், நல்ல மனைவியும் வாய்க்க விதியுண்டாகும். வடகி ழக்கு மற்றும் தெற்கிலும் பெண் அமைய விதியுண்டாகும்.

7க்குடைய குரு 8ஆம் இடமான மகரத்திலிருக்க பெண் ரோஷமற்றவளாக வும் தைரிய, வீரியங்கள் குறைந்தவளாகவும் இருப்பாள். வரக்கூடிய மனைவி யால் துன்பமுண்டாகும். வெகுளிப் பெண்ணாகவும் இருக்க விதி உண்டா கும். மேற்கு மற்றும் வடகிழக்கிலிருந்து பெண் அமைய விதியுண்டாகும்.

7க்குடைய குரு இராசிக்கு 9ஆம் இடமான கும்பத்திலிருக்க பருவ வய திலே திருமணம் நடைபெற விதியுண்டாகும். குடும்பம் நல்ல சௌகரியங்க ளுடனும், நிம்மதி மற்றும் செல்வாக்கு, அந்தஸ்துகளுடனும் இருக்க விதியுண் டாகும். பிதுராஜ்ஜித சொத்துகளைப் பெறும் யோகமுண்டாகும். மேற்கு மற்றும் வடகிழக்கிலிருந்து பெண் அமைய விதியுண்டாகும்.

7க்குடைய குரு இராசிக்கு 10ஆம் இடமான மீனத்திலிருந்தால், அடக்கம், பதிபக்தி, பொறுமை, தெய்வபக்தி, ஒழுக்கம், நிறைந்தவளாக, வரக்கூடிய பெண் இருப்பாள். அவளால் சொத்துகளும், சுகங்களும் இலாபங்களும் உண் டாகும். வடகிழக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதியுண்டாகும்.

7க்குடைய குரு இராசிக்கு 11ஆம் இடமான மேஷத்திலிருந்தால், வரும்

மனைவியால் நல்ல இலாபங்களும், சொத்து சுகங்கள் ஆடையாபரணச் சேர்க்கை, நல்ல கௌரவத்துடன் தொழிலில் முன்னேற்றம் முதலிய பலன் களை அடைய விதியுண்டாகும்.

7க்குடைய குரு இராசிக்கு 12ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால் வரக்கூடிய பெண் நோய் நொடியுள்ளவளாய் இருப்பாள். அதனால் பண விரயம் ஏற்படும். காலதாமதத் திருமணமும் நடைபெற விதியுண்டாகும். வடகிழக்கு, தென்கிழக்குத் திசைகளிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

மிதுன இராசிக்கு 7க்குடையவரான குரு, இராசிக்கு 7ஆம் இடமான தனு சிலே ஆட்சி பெற்றிருந்தால், வரும் மனைவி, நல்ல சாந்த குணமும் பொறு மையும், அமைதியும் உடையவளாய் இருப்பாள். பெண்ணின் வரவால் பொன், பொருள்கள், வீடு, அலங்காரம், நற்குணம், நற்செய்கை ஆகியன உண்டாகும். நல்ல பிரம்ம வண்ணத்தில் இருப்பாள். வடகிழக்கில் பெண் அமைய விதியுண்டு. வாலிப வயதில் திருமணம் நடைபெறும். கேந்திராதி பத்ய தோஷமுண்டு. இதற்கு தோஷ பரிகாரம் செய்தால் நற்பலன் உண்டாம்.

7ஆம் இடத்தில் சூரியன் இருந்தால் நற்பலன் உண்டாகாது. களத்திரத் திற்கு நோய் நொடி தொல்லைகள் உண்டு. தைரிய, வீரியம் நிறைந்த கோபக் குணமுள்ள பெண்ணை மணக்க விதியுண்டு.

7ஆம் இடத்தில் செவ்வாயிருந்தால் செவ்வாய் தோஷ பரிகாரம் செய்தால் நல்ல பலனுண்டாகும். விதவைப் பெண்ணை மணக்கும் யோகமுண்டாம்.

7ஆம் இடத்தில் புதனிருந்தால் தாய்மாமன் வழியிலும் பெண் அமைய விதியுண்டு. அவள் நல்ல குணமுள்ளவளாகவும் சௌக்கியமான வாழ்க்கை அமையப் பெற்றவளாகவும் இருப்பாள். கலை, காவியம் போன்றவற்றில் இரசனை இருக்கும்.

7ஆம் இடத்தில் சுக்கிரனிருந்தால் பெண் படிக்க, சங்கீதம் பாட, பரத நாட்டியம் ஆடத் தெரிந்த பெண்ணாக இருக்க விதியுண்டு. அவள் கலாரச னையும் கலை உணர்வும் கொண்டவளாக இருக்க விதி உண்டாகும். பல பெண்களின் மேல் இச்சையும் உண்டாகும். களத்திரதோஷம் உடையவனாக வும் இருப்பான். தோஷம் நிவர்த்தி செய்தால் நற்பலன்கள் உண்டு.

7ஆம் இடத்தில் சனி இருந்தால், வரும் பெண்ணால் கலகமும் குழப்பமும், மனவருத்தமும் உண்டாகும். அவள் கோபம் உள்ளவளாய் இருப்பாள்.

7ஆம் இடத்தில் இராகுகேதுக்கள் கூடினால் தோஷம் உண்டாகும். இதற்குத் தோஷபரிகாரம் செய்தால் நல்ல பெண்ணாக அமையவிதி உண்டாகும். இரு மனைவியும் அமைய விதியுண்டாகும். ஸ்ரீதட்சிணாமூர்த்திக்கு அர்ச்சனையும், குருவுக்குப் பிரீதியும், எந்திர, மந்திர பூசையும் செய்தால் நலமுண்டாகும்.

# கடகம்

சனீஸ்வர பகவானை 7ஆம் இடத்து அதிபதியாகப் பெற்ற கடக இராசி அன்பர்களே!

கடக இராசிக்கு 7க்குடைய சனி மகரத்தில் ஆட்சி பெற்றால் வரக்கூடிய பெண் வாழ்க்கை வசதிகள், செல்வம், அழகு, சௌந்தர்யம், ஒழுக்கம், தெய்வ பக்தி, நற்குணங்கள் ஆகியன வாய்க்க விதியுண்டாகும். மமதையும், மந்த புத்தியும் உள்ள பெண்ணாக இருக்க விதியுண்டு.

''முடகாரி ஏழோனுமாக குணங்கேளாய்
மெச்சியே பலதிறனு மிருந்தாலுந்தான்
திடமுடனே முரணான குணமுண்டாம் அட்டியில்லை
தள்ளவில்லா மந்தமான குணமுங்குற்றம்

குற்றமெத்த களத்திர வகையுண்டே யென்றெண்ணி
காரியுடன் தகப்பனொத்து ஆரல்சேரின்
மற்றெல்லாம் போய்த்தானும் களத்திர குணமுமில்லா
மைந்தனுக்கு பிருதியென்னும் பலனேதக்கும்''.

இராசிக்கு 7க்குடைய சனி இராசியிலே இருந்தால் வரும் மனைவியால் நல்ல அதிர்ஷ்டமுண்டாகும். செல்வமும், செல்வாக்கும் அந்தஸ்தும் அடைய விதியுண்டு. அவள் முன் கோபமும், மமதையும் மந்த புத்தியுடனும் கொண்டவளாய் இருப்பாள். வடமேற்கு, மேற்குத் திசைகளிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய சனி இராசிக்கு 2 இடமான சிம்மத்திலிருக்க, குடும்பத்தில் ஒற்றுமையின்மையும், அடிக்கடி கணவன் மனைவியிடையே பே

கருத்து வேறுபாடு உண்டாகும். கிழக்கு மற்றும் மேற்கிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய சனி இராசிக்கு 3ஆம் இடமான கன்னியிலிருக்க வரும் மனைவி சிக்கனமுள்ளவளாகவும் கோபம் ஏற்படக் கூடிய பெண்ணாக வும், இருக்க விதியுண்டாகும். இதற்கு களத்திர பரிகாரம் செய்தால் நல்ல பெண்ணாக கிடைக்க விதியுண்டாகும். மேற்கு மற்றும் வடக்கிலும் பெண் அமையும் என்று கூறப்படுகிறது.

இராசிக்கு 7க்குடைய சனி இராசிக்கு 4 இடமான துலாத்தில் இருந்தால், மனைவியின் வருகையின் மூலம், சொத்துச் சுகங்கள், வாழ்க்கை வசதி, குடும்ப ஒற்றுமை, வண்டி, வாகனங்களில் இலாபங்கள் ஆகியன அமையும். மேற்கு மற்றும் தென் கிழக்குத் திசைகளிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய சனி இராசிக்கு 5ஆம் இடமான விருச்சிகத்தில் இருக்க களத்திர தோஷத்தையுண்டாக்கும். கெட்ட எண்ணங்கள், முன்கோ பம், தைரியம் போன்றவை இருக்கும். புத்திர தோஷங்கள் உண்டாகும். இதற்குப் பரிகாரம் செய்தால் நல்ல பலன்களும் நல்ல மனைவியும் வாய்க்க விதி உண்டாகும். அப்பெண் மேற்கு அல்லது தெற்கில் அமைய விதி உண்டா கும்.

இராசிக்கு 7க்குடைய சனி இராசிக்கு 6ஆம் இடமான தனுசில் இருக்க வரும் மனைவி ரோகம், ருணம் ஆகியன கொண்டவளாக இருக்க விதி உண்டாகும். இதற்குப் பரிகாரம் செய்தால் நல்ல மனைவி அமைய விதி உண்டாகும். மேற்கு மற்றும், வடகிழக்கில் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய சனி இராசிக்கு 8ஆம் இடமான கும்பத்தில் இருக்க வரக்கூடிய மனைவிக்கு நோய் நொடிகளும், அதனால் அதிகமான செலவுக ளும் இருக்கும். சிரமத்துடன் வாழ்க்கையை வாழ வேண்டியிருக்கும். மேற்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய சனி இராசிக்கு 9ஆம் இடமான மீனத்திலிருந்தால் வரக்கூடிய மனைவிக்குப் புத்தி சாதுரியம், செல்வம், பிதுர் வர்க்கத்தாரின் ஆசி, பருவத்தில் திருமணம் போன்றவை அமைய விதி உண்டாகும். மேற்கு மற்றும் வடகிழக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய சனி இராசிக்கு 10ஆம் இடமான மேஷத்திலிருந்தால் மனைவி மூலம் சொத்து சுகங்கள், ஆடை ஆபரணச் சேர்க்கைகள், நல்ல

செல்வாக்கு அந்தஸ்து ஆகியன உண்டாக விதி உண்டாகும். மேற்கு மற்றும் தெற்கிலிருந்து பெண் அமைய விதியுண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய சனி இராசிக்கு 11ஆம் இடமான ரிஷபத்தில் இருக்க, வரும் மனைவியால் சொத்து, சுகம், இலாபங்கள், புத்திர இலாபம், ஆடை ஆபரணச் சேர்க்கைகள் மூலம் இலாபம் கிடைக்க விதியுண்டாகும். மேற்கு மற்றும் தென் கிழக்கில் பெண் கிடைக்க விதியுண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய சனி இராசிக்கு 12ஆம் இடமான மிதுனத்தில் இருக்க, வரக்கூடிய மனைவியால் சொத்து சுக விரயமும், அதன் மூலம் கடன்களும் அதிகமாகும் நிலை உண்டாம். மேற்கு மற்றும் வடக்கிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

கடக இராசிக்கு 7க்குடையவரான சனி பகவான் இராசிக்கு 7ஆம் இடமான மகர இராசியில் ஆட்சி பெற்றிருந்ததால், வரும் பெண் குரூர குணமும், கருமை சார்ந்த, காயாம்பு மேனி வண்ணமும், கொண்டவளாய் இருப்பாள். மேற்குத் திக்கில் பெண் அமைய விதி உண்டாகும். அவள் பிடிவாத குணமும், வைராக்கியமும் நிறைந்த பெண்ணாய் இருப்பாள். திருமணத் தடை ஏற்படும். இதற்கு தோஷ பரிகாரம் செய்தால் வாலிப வயதில் திருமணம் ஏற்படும். இப்பெண் வரவால் பொன், பொருள், பூஷணாதி உண்டாகும்.

7ஆம் இடத்தில் இராகு கேதுக்கள் நின்றால் களத்திர தோஷமும், சர்ப்ப தோஷமும் உண்டாகும். இதற்குத் தோஷ பரிகாரம் செய்தால் தோஷம் நீங்கிச் சுகமும் உண்டாகும். நீசப்பெண்கள் சேர்க்கையும் உண்டாகும்.

7ஆம் இடத்தில் சுக்கிரன் இருந்தால் வரக்கூடிய பெண் நல்ல குணம், சௌந்தர்யம், இளமை ஆகியன நிறைந்தவளாக இருப்பாள். பொன் பொருள் வரவும், வண்டி வாகனச் சேர்க்கையும், கலாரசனையும், கலை உணர்வும் கொண்ட பெண்ணாக அமைய விதி உண்டாகும்.

7ஆம் இடத்தில் குரு இருந்தால் வரக்கூடிய பெண் நல்ல சாந்த குணமுள்ளவளாகவும் இங்கிதத்துடன் அனைவரிடமும் நடந்து கொள்ளுப வளாகவும் இருப்பாள். புத்திர இலாபமும், நற்சுகமும் அமையும்.

7ஆம் இடத்தில் புதனிருந்தால் நற்குணம், நற்செய்கை ஆகியன உண்டாகும். கபில நிறம், சாந்தம், சௌந்தரியம் ஆகியன உண்டாகும். தாய் வழியில் இரத்த சம்பந்தமுள்ள பெண்ணாக அமைய விதியுண்டு. பொன், பொருள், பூஷணாதியும் உண்டாகும்.

7ஆம் இடத்தில் செவ்வாயிருந்தால் தோஷமுண்டாகும். விதவையை மணக்கும் எண்ணமும், விதவை ஸ்திரியோகமும் உண்டாகும். இதற்கு தோஷ பரிகாரம் செய்தால் நற்பெண் வாய்க்க விதி உண்டாகும்.

7ஆம் இடத்தில் சூரியனிருந்தால் தலைவலி, கண் நோய் உள்ள பெண் அமைய விதி உண்டாகும். கோபமும், அகங்காரமும் உள்ள பெண்ணாக அமைய விதி உண்டாகும். ஸ்ரீவிநாயகருக்கு அர்ச்சனையும், சனீஸ்வரருக்கு பூசையும், எந்திர, மந்திர, பிரீதியும் செய்ய நற்பலன்கள் உண்டாகும்.

# சிம்மம்

சனீஸ்வர பகவானை 7ஆம் இடத்து அதிபதியாகப் பெற்ற சிம்ம இராசி அன்பர்களே!

சிம்ம இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதி சனி இராசிக்கு 7ஆம் இடமான கும்பத்தில் ஆட்சி பெற்றால் வரக்கூடிய மனைவி, முன்கோபமும், மமதைக் குணங்களும் மந்த புத்தியும் உள்ள பெண்ணாக இருப்பாள். அவள் மூலம் செல்வமும், செல்வாக்கும், சொத்து சுகங்களும் கிடைக்க விதியுண்டாகும். மேற்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாம்.

'முடகாரி ஏழோனுமாக குணங்கேளாய்
மெச்சியே பலதிறனு மிருந்தாலுந்தான்
திடமுடனே முரணான குணமுமுண்டாம் அட்டியில்லை
தள்ளவில்லா மந்தமான குணமுங்குற்றம்

குற்றமெத்த களத்திர வகையுண்டே யென்றெண்ணி
காரியுடன் தகப்பனொத்து ஆரல்சேரின்
மற்றெல்லாம் போய்த்தானும் களத்திர குணமுமில்லா
மைந்தனுக்கு பிருதி பின்னும் பலனே தக்கும்.''

சிம்ம இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியான சனி இராசியிலே இருந்தால் மூர்க்க குணம், மந்தபுத்தி, செல்வாக்கு, செல்வம் ஆகியன உள்ள பெண்ணாக இருப்பாள். வண்டி, வாகனங்கள் சேரும் நிலை உண்டாம். மேற்குத் திசையில் பெண் கிடைக்க விதியுண்டாகும்.

சிம்ம இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 2ஆம் இடமான கன்னியில் இருந்தால் குடும்பத்தில் கணவன் மனைவியிடையே ஒற்றுமை குறையும். வரக்கூடிய மனைவிக்கு வியாதியால் துன்பங்களும், அல்லலும் அதிகமாக உண்டாக விதியுண்டு. வடக்குத் திசையிலிருந்து பெண் அமையலாம்.

இராசிக்கு 7க்குடையவரான சனி இராசிக்கு 3ஆம் இடமான துலாத்தில் இருந்தால் வரக்கூடிய பெண் செல்வாக்கும், செல்வமும் கொண்டவளாய் இருந்தாலும், வியாதியால் அல்லல்பட விதியுண்டு. அதற்குச் சாந்திகள், பிரீதிகள் ஆகியவற்றின் மூலம் நிவர்த்தி செய்யலாம். மேற்கு மற்றும் தென் கிழக்கில் பெண் அமைய விதியுண்டு என்று கூறப்படுகின்றது.

இராசிக்கு 7க்குடைய சனி இராசிக்கு 4ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால் வரக்கூடிய மனைவிக்கு முன் கோபம், மூர்க்க குணம் மந்தபுத்தி ஆகியன உண்டாகும். மனைவி வருகையால், சொத்து, சுகம், செல்வம், செல்வாக்கு ஆடையாபரணம், வண்டி, வாகனங்கள் ஆகியன சேரும். தெற்கு மற்றும் மேற்குத் திசையிலிருந்து பெண் அமைய விதியுண்டு.

இராசிக்கு 7க்குடைய சனி இராசிக்கு 5ஆம் இடமான தனுசு, இராசியில் இருக்க, களத்திர தோஷத்தை ஏற்படுத்தும். வரும் மனைவி நல்லொழுக்கம், நற்பண்பு, சம்பத்து, சௌபாக்கியம் ஆகியவற்றைக் கொண்டவளாய் இருக்க விதியுண்டு. வடகிழக்கு மற்றும் மேற்குத் திசையிலிருந்து பெண் கிடைக்க விதியாகும்.

இராசிக்கு 7க்குடைய சனி, இராசிக்கு 6ஆம் இடமான மகர இராசியில் ஆட்சி பெற்றிருந்தால் நல்ல யோகம் உண்டாகும். வரக்கூடிய பெண்ணால் வீடு, மனை, வாகனங்கள் ஆகிய இவற்றின்மேல் கடன்பட நேரிடும். பிற்பகுதியில்தான் நல்லயோகம் உண்டாகும். மேற்குத் திசையிலிருந்து பெண் அமைய விதியுண்டு.

இராசிக்கு 7க்குடைய சனி, இராசிக்கு 8ஆம் இடமான மீனத்திலிருந்தால் வரக்கூடிய மனைவி அழகு, ஒழுக்கம், நற்பண்பு இருந்தாலும், நோய்வாய்ப் பட நேரிடும். இதற்குப் பரிகாரம் செய்தால் தோஷம் நிவர்த்தியாகும். வடகிழக்கு மற்றும் மேற்குத் திக்கில் பெண் அமைய விதியுண்டு.

இராசிக்கு 7க்குடைய சனி, இராசிக்கு 9ஆம் இடமான மேஷத்திலிருந்தால் மனைவி வருகையால் சொத்து, சுகம், மற்ற பாக்கியங்கள் ஆகியவற்றை அனுபவிக்க யோகம் உண்டாகும். மேற்கு மற்றும் தெற்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய சனி, இராசிக்கு 10ஆம் இடமான ரிஷபத்திலிருக்க வரும் மனைவியால் நல்ல யோகங்களும், வீடு, மனை, வாகனங்கள், ஆடை ஆபரணங்கள், சொத்து சுகம் ஆகியன சேர்தலும் உண்டாகும். கலையார்வமும், நற்பண்பும், தெய்வபக்தியும் நிறைந்த பெண்ணாக அமைய விதி உண்டாகும். தென் கிழக்கு மற்றும் மேற்கில் பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய சனி, இராசிக்கு 11ஆம் இடமான மிதுனத்திலிருக்க வரும் மனைவியால் பொன், பொருள், சொத்து சுகம் இலாபம் ஆகியன உண்டாகும். வண்டி, வாகனங்கள் சேரும். வீடு, மனை ஆகியவற்றால் நல்ல இலாபங்கள் உண்டாகும். வடக்கு மற்றும் மேற்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய சனி, இராசிக்கு 12ஆம் இடமான கடகத்திலிருந்தால் வரும் மனைவியால் பொன் பொருள் விரயமாகும். குடும்பத்தில் கஷ்டமும், நஷ்டமும் உண்டாக விதியுண்டு. வடமேற்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 7க்குடையவரான சனீஸ்வர பகவான் இராசிக்கு 7ஆம் இடமான கும்ப இராசியில் ஆட்சி பெற்றிருந்தால், வரக்கூடிய பெண் அதிக முன் கோபமும், பிடிவாத குணமும் கொண்டவளாய் இருக்க, விதி உண்டாகும். அவள் சுடுசொல்லால் மற்றவர்களைப் புண்படுத்தும் குணம் உள்ளவளாக இருப்பாள். காயாம்பு மேனி வண்ணம் நிறைந்தவளாக இருப்பாள். மேற்குத் திசையில் பெண் வர விதியுண்டாம். தோஷ நிவர்த்தி செய்தால் நற்பெண் அமைய விதியுண்டு.

சிம்ம இராசிக்கு 7ஆம் இடத்தில் இராகுகேதுக்கள் கூடினால் களத்திர இடர் உண்டு. களத்திர தோஷ பரிகாரம் செய்தால் நற்பெண் அமைய விதி உண்டு. சதா வியாதியுடன் மனைவியிருக்க விதியிருந்தபோதிலும், பரிகாரம் செய்தால் நற்பெண் அமைவாள்.

இராசிக்கு 7ஆம் இடத்தில் சுக்கிரனிருந்தால், நல்ல, சௌந்தர்யமான பெண் கிடைக்க விதியுண்டு. அவள் கலா ரசனையும் கலை உணர்வும் கொண்டவளாகவும் அலங்காரப் பிரியையாகவும் இருக்க விதி உண்டாகும். பல பெண்களின் சிநேகமும் பெண்களால் நற்சுகமும் உண்டாகும்.

இராசிக்கு 7ஆம் இடத்தில் சூரியனிருந்தால் களத்திரத்திற்கு, வியாதியால் கஷ்டமும் துன்பமும் நேரும். கோபதாபமுள்ள பெண்ணாய் அமைவாள்.

இராசிக்கு 7ஆம் இடத்தில் செவ்வாயிருந்தால் செவ்வாய் தோஷம் உண்டாகும். இதற்குப் அங்காரகப் பிரீதியும், தோஷ பரிகாரமும் செய்தால் நற்பெண்ணாக வாய்க்க விதி உண்டாகும்.

இராசிக்கு 7ஆம் இடத்தில் புதனிருந்தால் சிக்கனமும், சேமிப்பும், நாணயமும், நேர்மையும் உள்ள பெண்ணாக அமைய விதியுண்டு. நற்குணமும், நற்சேர்க்கையும் நற்சுகமும் கிடைக்க விதி உண்டாகும்.

இராசிக்கு 7ஆம் இடத்தில் குரு இருந்தால் களத்திரத்தால் நற்சுகம் கிடைக்க விதி உண்டாகும். சாந்தம், சௌமியம் முதலியனவும் உண்டாகும். கிரக பரிகாரத்திற்கு ஸ்ரீவிநாயக மூர்த்திக்கு அர்ச்சனையும் ஆராதனையும், சனீஸ்வர பகவானுக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் செய்தால், நல்ல மனைவியாக வாய்க்க விதி உண்டாகும்.

# கன்னி

தேவகுருவை 7ஆம் இடத்தோனாகப் பெற்ற கன்னி இராசிஅன்பர்களே!

கன்னி இராசிக்கு 7க்குடையவரான குரு, இராசிக்கு 7ஆம் இடமான மீனத்தில் ஆட்சி பெற்றால், வரக்கூடிய மனைவி, நல்லஅழகு, சௌந்தர்யம், நற்பண்பு, அமைதி, ஒழுக்கம், நல்ல புத்திக்கூர்மை ஆகியவை கொண்டவளாய் இருப்பாள். இப் பெண் வரவால் செல்வாக்கு, புகழ், கீர்த்தி, ஆஸ்தி, அந்தஸ்து ஆகியன ஏற்பட விதியுண்டு. வடகிழக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதியுண்டாம்.

"தேவ குரு சப்தமத்தோன் ஆகவேதான்
தொண்டுசெய் களத்திரங்கள் அமையவரும்!
மேவமேல் அறிவுகுண யூகமேலாய்
மெச்சவரும் சொர்ணரூபம் அழகே யெண்ணி!

எண்ணியே பலமாந்தர் நிற்குமாறே
எண்ணம்போல் களத்திரமும் அமையுமென்றே
திண்ணமாய் காலங்கடந்தே தான் யிவருக்குமே
துலங்கவரும் மணம்மேலாய் வாழ்வுதானே.-"

கன்னி இராசிக்கு 7க்குடைய குரு, இராசியிலே இருந்தால், வரக்கூடிய பெண்ணால் பொன், பொருள் ஆகியன வரவும் நல்ல குணமும், சௌந்தர்யமும், தெய்வ பக்தியும், பதி பக்தியும் கொண்ட பெண்ணாகவும் இருப்பாள். வடக்குத் திசையிலிருந்தும் வடகிழக்கிலிருந்தும் பெண் அமைய விதி உண்டாகும்.

கன்னி இராசிக்கு 7க்குடைய குரு, இராசிக்கு 2ஆம் இடத்திலிருந்தால் (துலாம்) வரக்கூடிய மனைவி ரூப லாவண்யம், தெய்வபக்தி, குடும்பத்தை நிர்வகிக்கக்கூடிய திறம் ஆகியவற்றைக் கொண்ட பெண்ணாக அமைய விதி உண்டாகும். வடகிழக்கு மற்றும் தென் கிழக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய குரு, 3ஆம் இடமான விருச்சிகத்திலிருந்தால், வரக்கூடிய மனைவிக்கு நோய் நொடிகளும், அவற்றிற்கான செலவுகளால் அல்லலும் அவதியும் உண்டாம். தைரிய வீரியம் குறைந்து காணப்படும். தெற்கு மற்றும் வடகிழக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதியுண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய குரு 4ஆம் இடமான தனுசில் இருந்தால், வரக்கூடிய மனைவியால் சொத்து, சுகம், பொன் பொருள்கள் ஆகியன சேரும். குடும்பத்தில் சௌக்கியமும், நிம்மதியும் உண்டாகும். தெய்வபக்தி பதிபக்தி, ஒழுக்கம், நற்பண்பு, ஆகியவை கொண்ட பெண்ணாக அமைய விதி உண்டாகும். வடகிழக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய குரு, 5ஆம் இடமான மகரத்தில் இருந்தால், வரக்கூடிய பெண்ணின் மூலம் புத்திர தோஷம் உண்டாகும். புத்திர தோஷ நிவர்த்தி செய்தால் நல்ல பலன்களுண்டாகும். பெண் வரவால், அந்தஸ்து, கௌரவம், மதிப்பு ஆகியன உண்டாக விதியுண்டு. வடகிழக்கு, மற்றும் மேற்குத் திசையிலிருந்து பெண் கிடைக்க விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய குரு, 6ஆம் இடமான கும்பத்தில் இருக்க, வரும் மனைவிக்கு வியாதிகளால் அல்லலும், தொல்லையும் உண்டாகும். வரும் பெண்ணினால் அதிகச் செலவுக்கு ஆளாகி கடன்கள் அதிகமாகும். மேற்கு மற்றும் வடகிழக்குத் திக்கிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய குரு, 8ஆம் இடமான மேஷத்திலிருக்க, வரும் பெண்ணுக்குக் கண்டமும், வியாதிகளும் உண்டாகும். மருத்துவச் செலவுகளும், கஷ்டமும் உண்டாகலாம். இவற்றிற்குப் தோஷப் பரிகாரம் செய்ய நிவர்த்தியாகும். வடகிழக்கு மற்றும் தெற்குத் திசையிலிருந்து பெண்

வர விதியுண்டாம்.

இராசிக்கு 7க்குடைய குரு 9ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால் வரக்கூடிய பெண் அழகும், இளமையும், சௌந்தர்யமும், நற்குணங்கள் நற்செய்கை, அன்பு, ஆதரவு ஆகியன கொண்டவளாய் இருப்பாள். இப்பெண் வரவால் சொத்து, அந்தஸ்து, கௌரவம், வண்டி, வாகனச் சேர்க்கை, பாக்கியங்கள் ஆகியன வந்து சேரும். வடகிழக்கு, தென்கிழக்குத் திசைகளிலிருந்து பெண் வர விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய குரு, 10ஆம் இடமான மிதுனத்தில் இருக்க வரக்கூடிய பெண்ணால் சொத்து சுகங்களும், ஆடை ஆபரணச் சேர்க்கையும், வண்டி வாகனங்கள் சேர்க்கையும், தொழில் யோகங்களும் உண்டாக விதியாம். தோஷநிவர்த்தி செய்தால் நற்பலன்களை அடையலாம். வடக்கு மற்றும் வடகிழக்கு திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாம்.

இராசிக்கு 7க்குடைய குரு, 11ஆம் இடமான கடகத்திலிருக்க, வரக் கூடிய பெண்ணின் மூலம், பொன், பொருள், பூஷணாதிகள், ஆஸ்தி, அந்தஸ்து, சொத்து சுகங்கள் ஆகியன வந்து சேர விதியுண்டாகும். வடமேற்குத் திசையிலிருந்து பெண் கிடைக்க விதியுண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய குரு, 12ஆம் இடமான சிம்மத்திலிருக்க, வரக் கூடிய பெண்ணின் மூலம், அதிகமான பணம் செலவாகும் நிலை உண்டாம். இதனால் கடன்கள் அதிகமாகும். போகசுகங்கள் அதிகமாக அனுபவிக்கும் எண்ணமுள்ள பெண்ணாக அமைய விதி உண்டாகும். கிழக்கு மற்றும் வடகிழக்குத் திசையிலிருந்து பெண் கிடைக்க விதி உண்டாகும் என்று சொல்லப்படுகிறது.

கன்னி இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியான குரு, இராசிக்கு 7ஆம் இடமான மீனத்தில் இருந்தால் நற்பலன்கள் உண்டாகும். அழகு, சாந்தம், சௌந்தர்யம், இனிமையான பேச்சுகள், இங்கிதங்கள் ஆகியன தெரிந்த பெண்ணாகவும் இருக்க விதி உண்டாகும். இப்பெண்ணால் பொன், பொருள் வரவுகள் உண்டாகும். ஈசான்ய (வடகிழக்கு) திசையில் பெண் அமைய விதி உண்டு. நற்சுகம், புத்திர இலாபம் ஆகியவை உண்டாகும். ஆனால், கேந்திராதிபத்திய தோஷம் உண்டு. இதற்கு கேந்திராதிபத்ய தோஷப் பரிகாரம் செய்ய வேண்டியிருக்கும்.

7ஆம் இடத்தில் சுக்கிரனிருந்தால் நற்பெண் அமைவாள். அழகு, இளமை, கலா இரசனை ஆகியவை உண்டாகும். பெண்ணால் நற்சுகமும் நற்செய்கையும் உண்டாகும். பொருள் சேர்க்கையும், பொன், வரவும் உண்டு.

நளினம், அலங்காரம் ஆகியன உண்டாகும். பல பெண் சேர்க்கையும் உண்டாகும்.

7ஆம் இடத்தில் சனி இருந்தால் கோப குணமுள்ள பெண்ணாகவும், குரூரபுத்தியும், பிடிவாத குணமும் கொண்டவளாகவும் இருப்பாள். வியாதியால் மனைவி கஷ்டப்பட வேண்டியிருக்கும். நற்சுகம் கிடைக்காது.

7ஆம் இடத்தில் இராகுகேதுக்களிருந்தால் களத்திரதோஷம், உண்டாகும். களத்திர பரிகாரம் செய்தால் நல்ல மனைவி அமைய விதி உண்டாகும். நீச ஸ்திரிகள் சிநேகமும் உண்டாகும்.

7ஆம் இடத்தில் சூரியனிருந்தால் களத்திரத்திற்கு வியாதியும் முன் கோபமும் உண்டாகும். காரசாரமாய்ப் பேசும் பெண்ணாக அமைய விதியுண்டு.

7ஆம் இடத்தில் செவ்வாயிருந்தால் டாம்பீகப் பேச்சும், அகங்காரம் உள்ள பெண்ணாகவும், மற்றவர்களைத் துடுக்குத்தனமாகப் பேசும் சுபாவமும் கொண்டவளாகவும் இருப்பாள். பரிகாரம் செய்தால் தோஷம் நீங்கி நல்ல பெண் அமைய விதியுண்டு. சிம்ம இராசிக்கும் கன்னிக்கும் தோஷமில்லை என்றாலும், கணவன் மனைவியரிடையே கருத்து வேறுபாடு, சுகக் குறைவு ஆகியவை ஏற்படும். அங்காரகப் ப்ரீதி செய்தால் நல்ல பெண்ணாய் அமைவாள்.

7ஆம் இடத்தில் புதனிருந்தால் நற்குணம், நற்செய்கை, சிக்கனம், சேமிப்பு, பொறுமை, சாந்தம் ஆகியன கொண்ட பெண்ணாக அமைய விதியுண்டு. ஸ்ரீதட்சிணாமூர்த்திக்கு அர்ச்சனையும் ஆராதனையும் குருவுக்கு யந்திர, மந்திர, பிரீதியும் செய்தால் நற்பலனுண்டாகும்.

# துலாம்

7ஆம் இடத்து அதிபதியாகச் செவ்வாய் பகவானைப் பெற்ற துலா இராசி அன்பர்களே!

துலா இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 7ஆம் இடமான மேஷ இராசியில் ஆட்சி பெற்றிருந்தால், வரக்கூடிய மனைவியால் நல்ல அதிர்ஷ்டமும், நற்பலனும் உண்டாகும். செல்வம், செல்வாக்கு, கீர்த்தி, புகழ், அந்தஸ்து, கௌரவம் [illegible] ஆனால்,

பெண்ணுக்கு முன் கோபமும், சுடு சொல்லும் இருக்க விதி உண்டாகும். தெற்குத் திசையில் பெண் அமைய விதியுண்டாகும்.

''சேயவனுங் களத்திரமதிபனுமாக குணங்கேளாய்
செல்வாக்கு கீர்த்திபுகழ் மிகுந்தே காணும்!
நேயமுடன் சேர்ந்துவாழும் கோபதாபமுண்டாம்
நொம்பலுமே தன்வழியில் பலவுஞ்செய்யும்!

செய்யுமது சேய்பாபரொடு சேர்ந்திருந்தாலும்
சப்தம மட்டம வியத்தில் சனியோடு கூடிடினும்
உய்வில்லை பாவபலன் மத்திமமே காட்டும்
உரைக்கவரும் பிருதி செய்ய பலனேயாகும்.''

துலா இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியான செவ்வாய், இராசியிலே இருந்தால் வரும் பெண்ணால், பொன், பொருள், பூஷணாதிகளும், சொத்து சுகங்களும், கிட்டும். அவள் அமைதி, நற்பண்பு உள்ள பெண்ணாகவும் அமைய விதி உண்டாகும். அப்பெண்ணால் ஐஸ்வர்யம் கிடைக்க விதி உண்டாகும். தெற்கு மற்றும் தென் கிழக்குத் திசையிலிருந்து பெண் கிடைக்கும் என்று கூறப்படுகிறது.

இராசிக்கு 7க்குடைய செவ்வாய், இராசிக்கு 2ஆம் இடமான விருச்சிகத்தில் ஆட்சி பெற்றால் வரக்கூடிய பெண்ணால் குடும்பம் நல்ல சுபிட்சமுடனும், ஒற்றுமையுடனும் இருக்கும். குடும்பத்தை நிர்வகிக்கும் திறமையுள்ள பெண்ணாகவும், இருக்க விதி உண்டாகும். பணம், பொருள், செல்வம் ஆகியவை சேர விதியுண்டாகும். தெற்குத் திசையிலிருந்து பெண் அமைய விதியுண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய செவ்வாய், இராசிக்கு 3ஆம் இடமான தனுசில் இருக்க, வரக்கூடிய பெண்ணின் உடல் நலம் கெடுவதனால் மருத்துவச் செலவுகள் உண்டாகும். தைரியம், வீரியம், ஆகியவை கெட்டு இருக்க விதி உண்டாகும். பரிகாரம் செய்தால் தோஷ நிவர்த்தி ஏற்படும். வடகிழக்கு மற்றும் தெற்குத் திசையிலிருந்து பெண் கிடைக்க விதியுண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய செவ்வாய், இராசிக்கு 4ஆம் இடமான மகரத்தில் உச்சம் பெற்றிருக்க, வரும் பெண்ணால் பொன், பொருள். பூஷணாதிகள் ஆகியன கிட்டும். செல்வம் செல்வாக்கு கௌரவம், அந்தஸ்து ஆகியன உயரும் நிலையுண்டாகும். வீடு, மனைகள், விவசாய நிலம் ஆகியவற்றால் இலாபமும், [illegible] சேர்க்கையும் உண்டாகும். நற்சுகமும், சுக

போஜனமும் அடைய விதியுண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய செவ்வாய் இராசிக்கு 5ஆம் இடமான கும்பத்தில் இருந்தால் புத்திர தோஷத்தையும், களத்திர தோஷத்தையும் அடைய விதியுண்டு. பிரீதிகள் செய்தால் தோஷ நிவர்த்தியாகி நல்ல பலனுண்டாகும் எனக் கூறப்படுகிறது. மேற்கு மற்றும் தெற்குத் திசையிலிருந்து பெண் கிடைக்க விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய செவ்வாய், இராசிக்கு 6ஆம் இடமான மீனத்தில் இருக்க, வரும் பெண்ணால் வியாதியும், தொல்லைகளும் கஷ்டங்களும், அதிகமான பணச்செலவுகளும் உண்டாகும். பிரீதிகள் செய்தால் நற்பலன்கள் அடையலாம். தெற்கு மற்றும் மேற்குத் திசையில் பெண் வர விதியுண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய செவ்வாய், இராசிக்கு 8ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால் வரும் மனைவியால் அதிகச் செலவும், வியாதிகளால் அல்லலும் அவதியும் ஏற்படவும் விதி உண்டாகும். தெற்கு மற்றும் தென்கிழக்கில் பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய செவ்வாய், இராசிக்கு 9ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால் வரும் பெண்ணால் சொத்து சுகங்கள், மற்றும் பாக்கியங்கள் சேரவும், பாக்கியங்களை அனுபவிக்கவும் விதியுண்டாகும். தான தருமச் செலவுகள் செய்வதில் பிரியம் உண்டாகும். தெற்கு மற்றும் வடக்குத் திசையில் பெண் கிடைக்க விதியுண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய செவ்வாய், இராசிக்கு 10ஆம் இடமான கடகத்தில் இருந்தால் வரும் பெண்ணினால் நல்ல செல்வமும், செல்வாக்கும் உண்டாகும். தொழில் மூலம் இலாபங்களும், வண்டி, வாகனம் சேர்தலும் உண்டாகும். தெற்கு மற்றும் வடமேற்கில் பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய செவ்வாய், இராசிக்கு 11ஆம் இடமான சிம்மத்தில் இருக்க, வரும் பெண்ணால் பொன் பொருள், வண்டி, வாகனச் சேர்க்கை, திடீர்ப் பணவரவுகள், செல்வாக்கு ஆகியன உண்டாக விதி. கிழக்கு மற்றும் தெற்குத் திசையில் பெண் வாய்க்க விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய செவ்வாய், இராசிக்கு 12ஆம் இடமான கன்னியில் இருக்க, வரக்கூடிய பெண்ணினால் அதிகமான செலவுகள் குடும்பத்தில் ஏற்படும். பொன், பொருள், விரயங்களும் ஏற்படக் கூடுமென விதி. தெற்கு மற்றும் வடக்குத் திசையில் பெண் அமைய விதியுண்டு.

துலா இராசிக்கு 7க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 7ஆம் இடமான மேஷத்தில் ஆட்சி பெற்றிருந்தால், வரும் பெண் நல்ல சிவப்பு நிறத் தேகமும்

கொண்டவளாகவும், கோபமும், துணிச்சலும் உள்ள பெண்ணாகவும் இருப்பாள். டாம்பீகப் பேச்சும், அதிகாரம் செலுத்துதல் போன்ற குணமும், இரக்கமற்ற தன்மை ஆகியன கொண்ட பெண்ணாக இருப்பாள். தெற்குத் திசையிலிருந்து பெண் அமைய விதியுண்டாகும். செவ்வாய் மேஷத்தில் ஆட்சி பெற்றிருப்பதால் தோஷ நீக்கப் பரிகாரமும், அங்காரகப் பிரீதியும் செய்ய வேண்டும். விதவை மணம் உண்டாகலாம்.

7ஆம் இடத்தில் புதனிருந்தால் புத்தி சாதுர்யம் உள்ள பெண்ணாகவும், நற்சுகமும், நற்செய்கையும், சௌமிய குணமும் உள்ள பெண்ணாகவும் வாய்க்க விதியுண்டாகும். சௌந்தர்யமும் அழகும், வினயமும், நளினமும் உள்ள பெண்ணாக அமையவும் விதியுண்டாகும்.

7ஆம் இடத்தில் குரு இருப்பதால் பொறுமை, அழகு, புத்திர பாக்கியம் ஆகியன உள்ள பெண்ணாகவும், அடக்கம், பெரியோரிடத்தில் பணிவு, ஒழுக்கம், தெய்வ பக்தி ஆகியன உள்ள பெண்ணாகவும் கிடைக்க விதி உண்டாகும்.

7ஆம் இடத்தில் சுக்கிரனிருந்தால் அலங்காரம் செய்வதில் அதிகம் பிரியம் உள்ளவளாகவும், கலைநயமும், கலை நுணுக்கமும் கொண்டவளாகவும் வீடு, வாசல் துணிகள் போன்ற எந்தப் பொருளையும் கலை ரசனையோடு பராமரிக்கும் தன்மையும் உள்ள பெண்ணாகவும் அமைய விதியுண்டு. பொன் பொருள் வரவும் உண்டார்கும். பல பெண்கள் சிநேகம் ஏற்படும்.

7ஆம் இடத்தில் சனி இருந்தால் வக்கிர புத்தியும், சட்டெனத் தூக்கி எறிந்து பேசும் குணமும் அதிகாரம், டாம்பீகம் ஆகியன உள்ள பெண்ணாக அமைய விதி உண்டாகும்.

7ஆம் இடத்தில் இராகுகேதுக்களிலிருந்தால், அங்கஹீனமும் வியாதியும் கபடும் உள்ள பெண்ணை மணக்க விதி உண்டாகும். களத்திர தோஷமும், சர்ப்பதோஷமும் உண்டு. ஸ்ரீசுப்பிரமணியர்க்கு அர்ச்சனையும், செவ்வாய்க்கு யந்திர, மந்திர ப்ரீதியும் செய்தால் நற்பலனுண்டாகும்.

7ஆம் இடத்தில் சூரியனிருந்தால் வியாதியுள்ள களத்திரம் அமைய விதி உண்டாகும். கோபதாபமுள்ள துணிச்சலான, துஷ்டத்தனமுள்ள பெண்ணாக வாய்க்க விதியுண்டாகும்.

# விருச்சிகம்

7ஆம் இடத்து அதிபதியாக சுக்கிராச்சாரியாரைப் பெற்ற விருச்சிக இராசி அன்பர்களே!

விருச்சிக இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன், இராசிக்கு 7ஆம் இடமான ரிஷப இராசியில் ஆட்சி பெற்றிருந்தால், நல்ல அழகும் சௌந்தர்யமும், சொத்து சுகமும் செல்வாக்கும் நிறைந்த பெண்ணாக அமைய விதியுண்டு. சுகபோஜனமும், பெண்களால் சுகமும், கௌரவமும், அந்தஸ்தும் உண்டாகும். தென்கிழக்குத் திசையில் பெண் அமைய விதி உண்டாகும்.

''சுக்ரனும் சப்தமனாய் தான்வரவே
சுந்தரியாள் வனப்புக்கும் ஏதுசொல்ல
உக்கிரமாய் உடன்மேறிப் புன்னகையும்
உள்ளமொடு மமதைகுணம் தானுண்டாம்!

உண்டப்பா அறிவுகுண யூகமெத்த
உரைக்கக்கேள் அத்துணையும் தானிருந்தும்
கண்டிடவே வேண்டியது தான்காணா
காட்டலாம் தேடியதும் வாராகான்!

காணமேல் சுங்கரவர் நல்லில்லம்
கருத்துடனே மித்ருவொடு கூடிநிற்கப்
பேணவரும் வருபெண்டாள் யோகம்மெத்த
பெருமையுடன் மாண்புறவே வாழலாமே!

விருச்சிக இராசிக்கு 7க்குடைய சுக்கிரன், இராசியிலே இருந்தால் செல்வம், செல்வாக்கு, சொத்து, சுகங்கள், போஜன சுகம், பெண்களால் நற்சுகம் ஆகியன உண்டாகும். இலாபங்களும் உண்டாகும். பெண்களின் மேல் இச்சை அதிகமுண்டாகும். கலையார்வம் கொண்டவர்களாக இருக்க விதியாகும். தெற்கு மற்றும் தென் கிழக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதியுண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய சுக்கிரன், இராசிக்கு 9ஆம் இடமான கடகத்தில் இருக்க, வரக்கூடிய பெண் செல்வம், செல்வாக்கு, அந்தஸ்து, கௌரவம் ஆகியன உள்ள குடும்பத்துப் பெண்ணாக அமைய விதி உண்டாகும். பிதுர் பாக்கியங்களை அனுபவிக்கும் யோகம் அப்பெண்ணின் மூலம் ஏற்பட விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய சுக்கிரன், இராசிக்கு 10ஆம் இடமான சிம்ம இராசியில் இருந்தால், வரக்கூடிய பெண்ணின் மூலம் தொழில் விருத்தியும், சொத்து சுகங்களும், ஆஸ்திகளும் உண்டாகும். அந்தஸ்து, கௌரவம் வாய்ந்த பெண்ணாகவும் இருக்க விதியாகும். ஆனால் களத்திர தோஷமுண்டு. பிரீதி செய்தால் நற்பலன்கள் கிட்டும். தென்கிழக்கு, கிழக்கு திசைகளிலிருந்து பெண் அமைய விதியுண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய சுக்கிரன், இராசிக்கு 11ஆம் இடமான கன்னி இராசியில் இருக்க, வரக்கூடிய பெண்ணால் நன்மையான பலன்களும் இலாபமும் உண்டாகும். தோஷமுண்டு, தோஷ பரிகாரம் செய்தால், நல்ல மனைவி அமைய விதியுண்டாகும். தென்கிழக்கு, வடக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகலாம்.

இராசிக்கு 7க்குடைய சுக்கிரன், இராசிக்கு 12ஆம் இடமான துலா இராசியில் இருக்க, வரக்கூடிய பெண்ணினால் அதிகப் பணம் விரயமாகலாம். சுகமும், நித்திரையும் உண்டாகும். கடன்கள் அதிகம் இருக்க விதி உண்டாகும் என்று கூறப்படுகிறது. தென்கிழக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 7க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 7ஆம் இடமான ரிஷபத்தில் ஆட்சி பெற்றிருந்தால், வரக்கூடிய பெண் அழகு, இளமை, சௌந்தர்யம், கலாரசனை, சங்கீதம், இசை, கலை உணர்வு கூடிய பெண்ணாக இருப்பாள். அவள் இனிமையாகப் பேசுபவளாகவும், நல்ல சிவந்த நிறம், கொண்டவளாகவும் கோபம் வாய்ந்தவளாகவும் இருப்பாள். தன்னை அலங்காரப்படுத்துதல் போன்றவற்றில் பிரியம் அதிகம் உள்ள பெண்ணாகவும் அமைய விதி. தென்கிழக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும். பொன், பொருள் வரவும் உண்டாகும்.

7ஆம் இடத்தில் சனியிருந்தால் வக்கிரபுத்தியுள்ள, துஷ்டத்தனம் நிறைந்துள்ள பெண்ணாக அமைய விதி உண்டாகும். வியாதிகளால் கஷ்டமும் உண்டு.

7ஆம் இடத்தில் இராகுகேதுக்கள் இருந்தால் களத்திர தோஷமும், அங்கஹீனமுள்ள பெண்ணை மணக்கவும் விதியுண்டாகும். இதற்குப் பரிகாரம் செய்தால் நற்பலனுண்டு.

7ஆம் இடத்தில் சூரியனிருந்தால் இரு தாரம் அமைய விதியும், 7ஆம் இடத்து அதிபதியின் நிலையின்படி வியாதியும், பீடையும் உண்டாகும்.

7ஆம் இடத்தில் செவ்வாயிருந்தால் தோஷ பரிகாரம் செய்ய வேண்டும். கோபதாபம், அரக்க குணம், துஷ்டத்தனம், மிகுந்த துணிவு கொண்ட பெண்ணாக அமைய விதி உண்டாகும்.

7ஆம் இடத்தில் புதனிருந்தால், நல்ல புத்தியும், இரக்க சிந்தனையும், குடும்பத்தை நன்றாக நிர்வகிக்கும் திறமையும் அழகும் சோபனமும் உள்ள பெண்ணாக அமைய விதி உண்டாகும்.

7ஆம் இடத்தில் குரு இருந்தால், அழகு, சௌந்தர்யம், பொறுமை, விட்டுக் கொடுக்கும் மனப்பக்குவம் போன்றவை சிறந்து இருக்கின்ற பெண்ணாக அமைய விதி. வண்டி, வாகனம் சேரும். பெரியோரிடத்தில் பக்தியும், ஒழுக்கமுள்ள களத்திரம் வாய்க்க விதி உண்டாகும்.

ஸ்ரீரெங்கநாதருக்கு அர்ச்சனையும் ஆராதனையும் சுக்கிரனுக்கு யந்திர, மந்திர, பிரீதியும் செய்தால் நல்ல களத்திரம் வாய்க்க விதி உண்டாகும்.

# தனுசு

புதன் பகவானை 7ஆம் இடத்து அதிபதியாகப் பெற்ற தனுசு இராசி அன்பர்களே!

தனுசு இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியான புதன் இராசிக்கு 7ஆம் இடமான மிதுனத்தில் ஆட்சி பெற்றிருந்தால், வரக்கூடிய பெண்ணால் செல்வமும், பொன், பொருள், ஆடை, ஆபரணங்கள் ஆகியனவும் சேரும். நற்சுகம், நற்பண்பு, சிக்கனம், சேமிப்பு ஆகியவற்றைக் கொண்ட பெண்ணாகவும், பக்தியுள்ள பெண்ணாகவும் இருக்க விதி உண்டாகும். வடக்குத் திசையில் இருந்து பெண் அமைய விதியுண்டு என்று கூறப்படுகின்றது.

''சபதமத்தோன் மாலோனாகிட பலனைக் கேளாய்
சுந்தரியர் அறிவுகுண யூகமுள்ளோள்
ஒப்பமேல் மணம் பின்னும் மார்க்கமாகும்
உள்ளபடி பெண்டாளே யோகமாகுமென்றே!

யோகமெத்த வித்தையொத்து தொழிற்பலன்கள்
யௌவனமாய் பெண்டவளும் நல்ரூபமாகும்
வாகுடனே வருபின்னும் வாழ்வு நலமென்றே
வல்லவனாய் வாழ்வானென்றே விளம்பினேனே.''

தனுசு இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியான புதன் இராசியிலே இருந்தால், வரக்கூடிய பெண் நல்ல அழகும், சௌந்தர்யமும் உள்ளவளாகவும், சிக்கனமாகச் செலவு செய்து பழக்கம் உள்ள பெண்ணாகவும் இருப்பாள். அப்பெண்ணின் வரவால் சொத்து சுகங்களையும் நற்சுகத்தையும் அனுபவிக்க விதி உண்டாகும். வடக்குத் திசையிலிருந்தும், வட கிழக்குத் திசையிலிருந்தும் பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய புதன், இராசிக்கு 2ஆம் இடமான மகரத்தில் இருந்தால் வரக்கூடிய பெண்ணால் குடும்பத்தில் சுபிட்சமும் ஒற்றுமையும் உண்டாகும். குடும்பத்தில் பணச் சிக்கனமும் உண்டாம். குடும்பத்தை நிர்வகிக்கும் திறமை கொண்ட பெண் அமைய விதியுண்டு. மனைவி வரவினால் வருமானம் உண்டாகும். வடக்கு மற்றும் மேற்குத் திசையில் இருந்து பெண் கிடைக்க விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய புதன், இராசிக்கு 3ஆம் இடமான கும்பத்தில் இருந்தால், வரக்கூடிய பெண்ணால் அந்தஸ்து குறைவாகும். மனைவிக்கும் உங்களுக்கும் இடையே மனஸ்தாபம் இருந்து வரும். பிரீதி செய்தால் நற்பலன்கள் உண்டாகும். வடக்கு மற்றும் வடகிழக்குத் திசையிலிருந்து பெண் வர விதியுண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய புதன், இராசிக்கு 4ஆம் இடமான மீனத்தில் நீசமாகி இருந்தால், வரக்கூடிய பெண்ணினால் சொத்து, சுகம், வண்டி, வாகனங்கள், நற்சுகம், நற்பண்பு, செல்வம், செல்வாக்கு ஆகியன இருந்தாலும், களத்திர தோஷ பரிகாரம் செய்தால் நற்பலன்களை அடையலாம். வடக்கு மற்றும் வடகிழக்குத் திசையிலிருந்து பெண்வர விதியாகும்.

இராசிக்கு 7க்குடைய புதன், இராசிக்கு 5ஆம் இடமான மேஷத்தில் இருந்தால், வரக்கூடிய பெண்ணினால், புத்திரதோஷம், நல் ஒழுக்கம், நற்பண்பு, செல்வம், செல்வாக்கு ஆகியன உண்டாகும். பிரீதி செய்தால் நல்ல பலன்கள் உண்டாகும். வடக்கு மற்றும் தெற்கு திசையிலிருந்து பெண் அமைய விதியுண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய புதன், இராசிக்கு 6ஆம் இடமான ரிஷபத்தில் இருக்க, வரக்கூடிய பெண்ணுக்கு வியாதியால் கஷ்டமும் துன்பமும் உண்டாகும். கடன்கள், தொல்லைகள், அல்லல்கள் ஆகியன உண்டாம். வடக்கு மற்றும் தென்கிழக்கில் பெண் வர விதி உண்டாகும் எனக் கூறப்படுகிறது.

இராசிக்கு 7க்குடைய புதன், இராசிக்கு 8ஆம் இடமான கடகத்தில் இருக்க வரக்கூடிய பெண்ணுக்கு நோய் நொடியும், பணச்செலவும் கண்டங்களும் வர விதியாகும். வடக்கு மற்றும் வடமேற்கு திசையில் பெண் அமைய விதியாகும். பிரீதிகள் செய்தால் நல்ல பலன் உண்டாக விதியுண்டு.

இராசிக்கு 7க்குடைய புதன், இராசிக்கு 9ஆம் இடமான சிம்மத்தில் இருக்க வரக்கூடிய பெண்ணுக்கு நல்ல செல்வமும், செல்வாக்கும் உண்டாகும். சொத்து சுகம், பாக்கியங்களை அனுபவிக்கும் யோகமும், புகழ், கீர்த்தி ஆகியவையும் உண்டாம். வடக்கு மற்றும் கிழக்கு திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய புதன், இராசிக்கு 10ஆம் இடமான கன்னி இராசியில் இருக்க, வரக்கூடிய பெண்ணுக்குச் சொத்து சுகமும், செல்வமும் செல்வாக்கும், அந்தஸ்து, கௌரவம் முதலியவை இருக்கும். மனைவியின் வரவால் தொழிலில் நல்ல இலாபமும், பொன் பொருளும் கிடைக்க விதி உண்டாகும். வடக்கு திசையிலிருந்து பெண் அமைய விதியாகும்.

இராசிக்கு 7க்குடைய புதன், இராசிக்கு 11ஆம் இடமான துலா இராசியில் இருக்க, வரக்கூடிய பெண் நல்ல அழகு சௌந்தர்யம், செல்வம், செல்வாக்கு, நல்ல புத்தி ஆகியவற்றைக் கொண்டவளாய் இருப்பாள். அவளால் இலாபங்கள் உண்டாகும். வடக்கு மற்றும் தென் கிழக்குத் திசைகளில் பெண் வர விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய புதன், இராசிக்கு 12ஆம் இடமான விருச்சிக இராசியிலிருக்க, வரக்கூடிய பெண்ணின்மூலம் கடன், கப்பு, தொல்லைகள் ஆகியன உண்டாக விதியாகும். அவள் கோபமுள்ள பெண்ணாகவும் சுகவாசியானவளாகவும் இருக்க விதி உண்டாகும். வடக்கு மற்றும் தெற்குத் திசைகளிலிருந்து பெண் வர விதியுண்டாகும் என்று கூறப்படுகிறது.

தனுர் இராசிக்கு 7ஆம் இடத்து ... புதன், இராசிக்கு 7ஆம்

இடமான மிதுனத்தில் ஆட்சி பெற்றால், புத்தி சாதுர்யமுள்ள பெண்ணாகவும், இளமை, சௌந்தர்யம் ஆகியவை உள்ள பெண்ணாகவும், நம்பிக்கை, நாணயம், பணிவு, அடக்கம், தெய்வ பக்தி, நிறைந்தவளாகவும், ஒழுக்கமும் கல்வியும் ஒருங்கே அமையப் பெற்றவளாகவும் வாய்க்க விதி உண்டாகும். வடக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதியுண்டு. அவளால் நற்சுகம் உண்டு. கேந்திராதி தோஷமுண்டாகும். தோஷத்தை நீக்கவும்.

7ஆம் இடத்தில் குரு இருந்தால் பொறுமை, அடக்கம், சௌந்தர்யம், நல்ல புத்தி, தெய்வபக்தி, பணிவு, அடங்கி நடத்தல் ஆகியவற்றைக் கொண்ட பெண்ணாக வாய்ப்பாள். அவள் பாக்கியங்கள் நிறைந்தவளாவாள்.

7ஆம் இடத்தில் சுக்கிரனிருந்தால் டாம்பீகம், கலாரசனை, சிடுசிடுக்கும் குணம், ஒழுக்கம் ஆகியவற்றைக் கொண்ட பெண்ணாக அமைய விதி உண்டு.

7ஆம் இடத்தில் சனி இருந்தால், நோயுள்ள பெண் மனைவியாக வாய்க்க விதியுண்டு. துஷ்டத்தனம், அசட்டுத்தனம், மந்தபுத்தி ஆகிய குணங்களைக் கொண்ட பெண்ணாக வாய்க்க விதி உண்டாகும்.

7ஆம் இடத்தில் இராகுகேதுக்கள் கூடினால் களத்திர தோஷமுள்ள பெண்ணாக அமைய விதியுண்டு. சர்ப்பதோஷமும், களத்திர தோஷமும் உண்டாகும். இவற்றிற்குப் பரிகாரம் செய்து தோஷத்தை நீக்க வேண்டும்.

7ஆம் இடத்தில் சூரியன் நின்றால் தகப்பனார் வழியில் தூர சொந்தமுள்ள பெண்ணாகவும், வியாதிகள் உள்ள பெண்ணாகவும் அமைய விதி உண்டு.

7ஆம் இடத்தில் செவ்வாய் நின்றால் செவ்வாய்தோஷம் ஏற்படும். தோஷத்தை நீக்க நற்பலன்கள் உண்டாகும். விதவை ஸ்திரீ மணமும் கோபதாபமுள்ள பெண்ணாகவும் அமைய விதி உண்டாகும்.

7ஆம் இடத்தில் கேந்திராதிபத்திய தோஷத்தை விலக்கினால் நற்பலன்களைக் கொண்ட நல்ல பெண்ணாக வாய்க்க விதி உண்டாகும். ஸ்ரீ மகாவிஷ்ணுவிற்குப் பூசையும், ஆராதனையும், புதனுக்கு யந்திர, மந்திர, பிரீதியும், செய்தால் நல்ல மனைவியாக அமைய விதி உண்டாகும்.

# மகரம்

சந்திர பகவானை 7ஆம் இடத்து அதிபதியாகப் பெற்ற மகர இராசி அன்பர்களே!

மகர இராசியில் 7ஆம் இடத்து அதிபதியான சந்திரனிருந்தால், நல்ல சௌந்தர்யமும், அழகும், கலையார்வமும் கொண்ட பெண்ணாக அமைவாள். அவள் சிவந்த மேனி, செல்வம், செல்வாக்கு அந்தஸ்து, கௌரவம், பொன், பொருள், பூஷணாதிகள் ஆகியன கொண்டவளாய் இருப்பாள். தாய் வகையில் தொடர்புடைய பெண்ணாக அவள் இருப்பாள். அவளால் பணச்சேர்க்கை உண்டாக விதியாகும். வடமேற்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

''ஆமேதான் அம்புலியும் ஏழோனாக
அரிவையவள் பூரண சந்திர ரூபம்
போமேதான் பெண்டாளே துஷ்ட சேர்க்கை
பொறுமையுடன் சாந்த குணம் தானுண்டு!

உண்டப்பா நோயுண்டு பெண்டவட்கு
உள்ளபடி பிரீதிமேலாய் நற்பலன்கள்
கண்டிடவே பொன்னுண்டு பொருளுண்டு
குமரனுக்கு அதனாலே சிலயிடர்கள்!

இடர்மேலாய் இயக்கமது செய்யலாகும்
இல்லாத குறையொன்று மெத்தவுண்டு
திடமுடனே பரிகாரம் தான்மேலாய்
தனயனுக்கு மணபலன்கள் மெத்தத்தானே''

மகர இராசிக்கு 7க்குடையவர் சந்திரன் இராசியிலே இருந்து, தம் ஸ்தானத்தைப் பார்ப்பதால் நல்ல அழகும், சௌந்தர்யமும் உள்ள பெண்ணாகவும், வளர்பிறைச் சந்திரனாக இருந்தால் நல்ல அறிவும், நல்ல புத்தியும் கொண்டவளாய் இருப்பாள். சிவந்த நிறம் வாய்ந்தவள். பொன், பொருள் வரவுண்டாகும். (வாயு மூலை) வடமேற்குத் திசையில் பெண் அமைய விதியுண்டாகும்.

7ஆம் இடத்தில் செவ்வாய் நீசமாகி இருந்தால் டாம்பீகப் பேச்சும், முன் கோபமும் உள்ள பெண்ணாக அமைய விதியாகும். தோஷ பரிகாரம் செய்தால் நற்பெண்டாக அமைவாள்.

7ஆம் இடத்தில் புதனிருந்தால் அழகு சௌந்தர்யம், புத்திக் கூர்மை நல்ல நிபுணத்துவம் ஆகியன வாய்ந்த பெண்ணாக அமைய விதியுண்டு. நற்சுகமும் உண்டாகும்.

7ஆம் இடத்தில் குரு இருந்தால் பொறுமை, அடக்கம், பணிவு, நற்குணம், சௌமியம், ஆகியன உள்ள பெண்ணாக அமைய விதியாகும். தெய்வ பக்தி, பதிபக்தி ஆகியன நிறைந்த பெண்ணாக இருக்க விதி உண்டாகும்.

7ஆம் இடத்தில் சுக்கிரனிருந்தால் அழகு, சௌந்தர்யம், இளமை ஆகியவை கொண்டவளாகவும் இருப்பாள். ஆடை, ஆபரணங்கள்மேல் பிரியமும், கலா ரசனையும் கலையார்வமும் கொண்ட பெண்ணாகவும் இருக்க விதியுண்டாகும்.

7ஆம் இடத்தில் சனியிருந்தால் குரூர புத்தியும், வக்கிரமான எண்ணங்களும், துஷ்ட குணமும் கொண்ட பெண்ணாக இருக்க விதி உண்டாகும். நோய் நொடி கொண்ட பெண்ணாகவும் அமைய விதி உண்டாகும்.

7ஆம் இடத்தில் இராகுகேதுக்கள் இருந்தால் வியாதி ஸ்திரீயை மணக்க விதியுண்டாகும். களத்திர தோஷமும் உண்டாகும். இதற்கு சர்ப்பதோஷப் பரிகாரம் செய்தால் நல்ல களத்திரம் அமைய விதியுண்டு.

7ஆம் இடத்தில் சூரியன் இருந்தால் களத்திர தோஷமும், மணத்திற்குத் தடையும் ஏற்படும். சிலருக்கு இரு தாரம் இருக்க விதியுண்டாகும். மனைவி கோபக் குணமுள்ள பெண்ணாக இருப்பாள். இதற்கு ஸ்ரீ பராசக்தி, அல்லது பார்வதி தேவிக்குப் பூசையும் அர்ச்சனையும், சந்திரனுக்கு யந்திர, மந்திரப் பிரீதியும் செய்தால் நல்ல மனைவி வாய்க்க விதி உண்டாகும்.

# கும்பம்

சூரிய பகவானை 7ஆம் இடத்து அதிபதியாகப் பெற்ற கும்ப இராசி அன்பர்களே!

7ஆம் இடத்து அதிபதியான சூரியன், இராசிக்கு 7ஆம் இடமான சிம்ம இராசியில் ஆட்சி பெற்றால் வரக்கூடிய பெண் முன் கோபம், செல்வம், செல்வாக்கு, நல்ல புத்தி ஆகியன கொண்டவளாய் இருப்பாள். ஆனால் வியாதி, சரீரபீடை ஆகியவையும் உண்டு. அவளால் செல்வம் சேரும். ஆனால் அவள் துடுக்குத் தனமான பேச்சும், துஷ்ட செய்கையுமுள்ள பெண்ணாக இருக்க விதி உண்டாகும். கிழக்குத் திசையிலிருந்து பெண் அமையவாள்.

''கம்பீரம் கவுரவமாய் இருப்பாள் பாரு!
கல்போலே நெஞ்சத்தோள் இறுக்கம்மெத்த
வம்புமேல் வல்லத்தனம் செய்யலாகும்
வருந்தியே சிலகாலும் இருக்கத் தோன்றும்!!

தோன்றுமப்பா உடல் நோவு தானுண்டு!
தனயனுக்கு வருபெண்டாள் தொண்டுமெத்த
சான்றோரின் அருளினாலே மணமுண்டாம்
சொல்லியதோர் கிரகபிருதி செய்ய பலனுந்தானே''

கும்ப இராசிக்கு 7க்குடைய சூரியன், இராசியிலே இருந்தால் பொன், பொருள், பூஷணாதிகளுடன் வசதியான வாழ்க்கையை அனுபவிக்கக் கூடிய பெண்ணாக வாய்க்க விதி உண்டாகும். அப்பெண்ணின் வரவின்மூலம் அந்தஸ்து, கௌரவம் ஆகியன உயரும். மேற்கு மற்றும் கிழக்குத் திசையிலிருந்து பெண் வர விதியுண்டாகும்.

இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியான சூரியன், இராசிக்கு 2ஆம் இடமான மீனத்திலிருந்தால், குடும்பத்தை நிருவகிக்கும் நல்ல பெண்ணாக, வரக்கூடிய மனைவி இருப்பாள். குடும்பத்தில் ஒற்றுமை குலையும், கொடுஞ்சொல்லும், முன்கோபமும் உள்ள பெண்ணாக இருப்பாள். சிரசுநோய் உண்டாகும். வடகிழக்கு, கிழக்குத் திசையிலிருந்து பெண் கிடைக்க விதியுண்டாகும்.

இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியான சூரியன், இராசிக்கு 3ஆம் இடமான மேஷத்திலிருந்தால் வரக்கூடிய பெண்ணுக்கு நோய்நொடிகளால் அதிகச் செலவுகளும் உண்டாகும். தோஷ பரிகாரம் செய்தால் நல்ல பெண்ணாக வர விதி உண்டாகும். தெற்கு மற்றும் கிழக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியான சூரியன், இராசிக்கு 4ஆம் இடமான ரிஷபத்திலிருக்க, வரக்கூடிய பெண்ணினால் சொத்து, சுகங்களும், பொன், பொருள், பூஷணாதிகளும், செல்வமும், வண்டி, வாகனங்களும் சேர விதியுண்டாகும். நல்ல அழகும், சௌந்தர்யமும் இளமையும், கலையார்வமும் கொண்ட பெண்ணாக அமைவாள். தென்கிழக்கு மற்றும் கிழக்குத் திசையில் இருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியான சூரியன், இராசிக்கு 5ஆம் இடமான மிதுனத்திலிருக்க, வரக்கூடிய பெண் நல்ல புத்திக் கூர்மை, சிக்கனச் சேமிப்பு, தெய்வ பக்தி, புத்திர தோஷம் ஆகியன கொண்டுள்ள பெண்ணாக அமைய விதி உண்டாகும். கிழக்கு மற்றும் வடக்குத் திசையிலிருந்து பெண் வர விதியுண்டாகும் என்று கூறப்படுகிறது.

இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியான சூரியன், இராசிக்கு 6ஆம் இடமான கடகத்திலிருக்க, வரக்கூடிய பெண்ணுக்கு வியாதிகளும், துன்பங்களும் இருக்கும். செலவு செய்யக் கூடியவளாகவும், முன் கோபமுள்ளவளாகவும் துஷ்டத்தனமுள்ளவளாகவும் இருப்பாள். வடமேற்கு மற்றும் கிழக்குத் திசையில் பெண் அமையலாம்.

கும்ப இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியான சூரியன் 7ஆம் இடமான சிம்ம இராசியிலே ஆட்சி பெற்றிருந்தால். கோபமும் துர் குணமுள்ள பெண் அமைய விதி. வரக்கூடிய பெண்ணுக்குச் சதா நோய் நொடிகள் உண்டாகும். துடுக்குத்தனமுண்டாம். சிலருக்கு இருதாரம் ஏற்பட விதியுண்டு. கிழக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதியுண்டு. மனைவியின் பேச்சைக் கேட்கக் கூடியவராய் இருப்பார்.

7ஆம் இடத்தில் செவ்வாயிருந்தால் டாம்பீகக் குணமும், துடுக்குத் தனமான பேச்சும், செய்கையும், கோபதாபமும் உண்டாம். செவ்வாய் தோஷத்திற்குப் பரிகாரம் செய்ய நலமுண்டாகும். விதவைப் பெண்ணை மணக்க நேரலாம்.

7ஆம் இடத்தில் புதனிருந்தால், மனைவிக்கு வாக்கு சாதூர்யமும், நல்ல குணமும் சௌமியமும் அழகும், உண்டாம். பொறுமை, சகிப்புத் தன்மை

இனிமையான வாக்கு ஆகியன கொண்ட பெண்ணாக அமைய விதியுண்டு. தாய்மாமன் வகையில் இரத்தபந்தமாகயிருக்க விதி உண்டாம்.

7ஆம் இடத்தில் குரு இருந்தால் நல்ல அழகும், சௌமியமும் வாய்ந்த நற்பெண்டாக அமைய விதியுண்டு. பொறுமையும் தெய்வபக்தியும் பதிபக்தியும் அப்பெண்டுக்கு உண்டு. பொன், பொருள் வரவுண்டாகும். தரும குணமும், இரக்கமும் உள்ள பெண்ணாக அமைய விதியுண்டு.

7ஆம் இடத்தில் சுக்கிரனிருந்தால் நல்ல சௌந்தர்யம், அழகு, இளமை, இனிமையான பேச்சு, ஆடம்பரத்தில் பிரியம் ஆகியன கொண்டிருப்பாள். வண்டி, வாகனச் சேர்க்கையும் உண்டாகும். பொன் பொருள் வரவும் உண்டாகும். பல பெண்களின் சேர்க்கையும் பெண்களின் மேல் இச்சையும் உண்டாகும்.

7ஆம் இடத்தில் சனியிருந்தால் கோபதாபமும், பிடிவாதமும் கொண்ட பெண்ணாக அமைய விதி உண்டாகும். வியாதியும், நோய் நொடியும், வக்கிர புத்தியும், மந்தப் புத்தியுமுள்ள பெண்ணாக அமைய விதி உண்டாகும்.

7ஆம் இடத்தில் இராகுகேதுக்கள் இருந்தால் களத்திரதோஷம் உண்டாகும். களத்திர தோஷநிவர்த்தி செய்தால் நல்ல பலனுண்டாகும். அந்நிய சம்பந்தமான பெண் அமைய விதி உண்டாகும். தினமும் பெண் போகத்தை அனுபவிக்கும் குணமும் உண்டாகும். இதற்குச் சிவபூசையும், சூரியனுக்கு யந்திர, மந்திர, பிரீதியும் செய்ய நற்பலன்கள் உண்டாகும்.

இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 8ஆம் இடமான கன்னியிலிருக்க, கஷ்டங்களும், தொல்லைகளும், சிரசு நோய்களும் உள்ள பெண்ணாக வாய்க்க விதியுண்டாம். வடக்கு மற்றும் கிழக்குத் திசையில் இருந்து பெண் அமைய விதியுண்டாகுமென்று கூறப்படுகிறது.

இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதி சூரியன் இராசிக்கு 9ஆம் இடமான துலாத்திலிருந்தால் நல்ல அழகும் சௌந்தர்யமும், இளமையும் பொன், பொருள், தனவரவு பாக்கியங்கள் ஆகியவற்றை அனுபவிக்கும் பெண்ணாகவும் அமைய விதியுண்டாகும். கிழக்கு மற்றும் தென் கிழக்குத் திசையில் பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதி சூரியன் இராசிக்கு, 10ஆம் இடமான விருச்சிகத்தில் இருக்க; வரக்கூடிய பெண் முன்கோபமுள்ள பெண்ணாகவும், துஷ்டச் செயல்களும் துடுக்குத்தனமுள்ள பெண்ணாகவும் வாய்க்க விதியுண்டாகும். பொன், பொருள், செல்வம் ஆகியன உண்டாகுமென்று

கூறப்படுகிறது. கிழக்கு மற்றும் தெற்குத் திசையில் பெண் அமைய விதியுண்டாகும்.

இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதி சூரியன், இராசிக்கு 11ஆம் இடமான தனுசிலிருக்க வரக்கூடிய பெண்ணின் மூலம் பொன், பொருள், இலாபங்கள் ஆகியன உண்டாகும். தெய்வ பக்தியும் புத்திக்கூர்மையும் உண்டாகும். கிழக்கு மற்றும், வடகிழக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7ஆம் இடத்து அதிபதி சூரியன், இராசிக்கு 12ஆம் இடமான மகரத்திலிருக்க வரக்கூடிய பெண்ணின்மூலம் அதிகமான பணம் செலவாகும். பொன், பொருள், விரயமாகும். கடன்கள் அதிகமாகும். கிழக்கு மற்றும் மேற்குத் திசையில் பெண் அமைய விதி உண்டாகும்.

# மீனம்

புதன் பகவானை 7ஆம் இடத்து அதிபதியாகப் பெற்ற மீன இராசி அன்பர்களே!

7க்குடைய புதன், இராசிக்கு 7ஆம் இடமான கன்னியில் உச்சம் பெற்றிருக்க, வரக்கூடிய பெண்ணின் மூலம், சொத்து, சுகங்கள், வாய்க்கும். பொன், பொருள், பூமி, அந்தஸ்து, கௌரவம், சிக்கனம், சேமிப்பு ஆகியன கொண்டு உள்ள பெண்ணாக இருப்பாள். அவள் கபில நிறமும், எடுப்பான தோற்றமும், சாந்தகுணமும், புத்திக்கூர்மையும் உள்ள பெண்ணாக இருக்க விதி உண்டாகும். வடக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

''கற்றதொரு மடந்தையவள் யிவனுக்குமே
குணமுடனே குற்றங்காண்பாள் வல்லாள்பாரே!
பற்றுமேல் காந்தன் வகை மெத்தவுண்டு
பல்லாக்கு சுகங்களதும் கிடைக்கும்பாரே!

பாரப்பா குணவதியாள் நல்லோளாய்
பகன்றிடுவேன் கிரகவிதி மேன்மைசெய்ய

காரணமாய் மணபலன்கள் தீர்க்கமாகும்
குமரனுக்கு மணபின்னே யோகம்பாரே''

இராசிக்கு 7க்குடைய புதன், இராசியிலே இருந்தால் நீசம் பெற்றிருப்பதால் தோஷ பரிகாரம் செய்தால் நல்ல பலன் உண்டாகும். பொன், பொருள் ஆகியன வாய்க்கும். அமைதி, அடக்கம், ஒழுக்கம் ஆகியன கொண்ட பெண்ணாகவும் வாய்க்க விதியுண்டு. வடக்கு மற்றும் வடகிழக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய புதன், இராசிக்கு 2ஆம் இடமான மேஷத்தில் இருக்க வரக்கூடிய மனைவியால் குடும்பத்தில் நல்ல ஒற்றுமை உண்டாகும். பொன், பொருள், பணம், வருமானம் ஆகியன உன்டாகும். சிக்கனம், சேமிப்பு ஆகியன கொண்ட பெண்ணாக வர விதியாகும். வடக்கு மற்றும் தெற்குத் திசையிலிருந்து பெண் கிடைக்க விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய புதன், இராசிக்கு 3ஆம் இடமான ரிஷபத்திலிருக்க, வரும் மனைவியால் கஷ்டங்களும், துன்பங்களும் உண்டாகும். அவற்றிற்குத் தோஷ பரிகாரம் செய்தால் நல்ல பலன் உண்டாகும். மனைவிக்கு கண்டம் வந்து மாற விதியுண்டாகும். வடக்கு மற்றும் தென் கிழக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதியுண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய புதன், இராசிக்கு 4ஆம் இடமான மிதுனத்திலிருக்க வரும் மனைவியால் சொத்து சுகங்களும், வண்டி வாகனங்கள் சேர்தலும், பெண்களினால் நற்சுகங்களும், வீடு, மனை, வாகனங்கள் போன்றவை சேரும். நிலபுலன்கள், ஆடை, ஆபரணங்கள் சேர்தலும் உண்டாகும். வடக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடைய புதன், இராசிக்கு 5ஆம் இடமான கடகத்திலிருக்க, வரும் மனைவியால் பொன், பொருள், பூமி ஆகியன சேரும். புத்திர பாக்கிய இடருண்டாகும். இதற்குப் பரிகாரம் செய்யத் தோஷம் நீங்கி புத்திர சந்தானம் ஏற்பட விதியாகும். வடமேற்குத் திசையிலிருந்து பெண் அமைய விதியுண்டு.

இராசிக்கு 7க்குடைய புதன், இராசிக்கு 6ஆம் இடமான சிம்மத்திலிருந்தால், வரும் மனைவிக்கு உஷ்ண ரோகப் பீடைகளும், சித்த சுவாதீனம் போன்ற நோயால் அவதியும் சிரசு நோய்களால் தொல்லையும் கஷ்டங்களும் உண்டாக விதியாகும். வடக்கு மற்றும் கிழக்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டாகும்.

மீன இராசிக்கு 7க்குடையவரான புதன், இராசிக்கு 7ஆம் இடமான கன்னி இராசியில் ஆட்சி உச்சம் பெற்றால் நல்ல குணமும் புத்தி சாதுர்யமும் நிபுணத்துவமுள்ள பெண்ணாகவும் இருக்க விதி, பக்தி, ஒழுக்கம், பதிபக்தி, பொறுமை, அடக்கம், பணிவு ஆகியன உண்டாகும். பொன் பொருள் வரவு உண்டாம். தாய்வழியிலும், மாமன் வழியிலும் இரத்தசம்பந்தம் உள்ள பெண்ணாகவும் அமைய விதி உண்டாகும். வடக்குத் திசையிலிருந்து பெண் கிடைக்க விதியுண்டு. வண்டி வாகன சுகமும் நற்சுகமும் உண்டாகும். கேந்திராதிபத்திய தோஷத்திற்குப் பரிகாரம் செய்தால், நற்பெண்ணாக அமைய விதி உண்டாகும்.

7ஆம் இடத்தில் குரு இருந்தால் வரும் பெண் நல்ல அழகும் சௌந்தர்யமும் சௌமிய குணமும் கொண்ட பெண்ணாக அமைவாள். அவள் அடக்கமும் பணிவும் புத்திரபாக்கியமும் நற்சுகமும் கொண்டவளாகவும் இருப்பாள்.

7ஆம் இடத்தில் சுக்கிரனிருந்தால் நல்ல அழகும், இளமையும் கோபகுணமும் உண்டாம். வண்டி, வாகனங்களும், பொன் பொருள் பூஷணாதியும் உண்டாகும். பல பெண்களின் சேர்க்கையும் உண்டாகும். ஆடம்பரத்திலும் அழகு சாதனங்களிலும் அதிகப் பிரியம் உண்டாகும். கலை உணர்வும் கலாரசனையும் இருக்கும். நற்சுகமும் வாய்ந்த பெண்ணாக இருக்க விதியுண்டு.

7ஆம் இடத்தில் சனி இருந்தால் துஷ்ட குணமுள்ள, துடுக்குத்தனமான பேச்சுக் கொண்ட பெண் அமைய விதி உண்டாகும். நோய் நொடியுள்ள களத்திரம் வாய்க்கலாம்.

7ஆம் இடத்தில் இராகுகேதுக்கள் இருந்தால் களத்திரதோஷமும், அங்கஹீனமுள்ள பெண்ணாக அமைய விதி உண்டு. களத்திர தோஷ பரிகாரம் செய்தால் நல்ல பலனுண்டாகும். அனுதினமும் பெண் போகத்தில் ஈடுபாடு உண்டாகும்.

7ஆம் இடத்தில் சூரியனிருந்தால் பிதுர் வழி இரத்த பந்தம் உள்ள பெண்ணாகவும், துஷ்டத் தனம், துடுக்குத்தனம், நோய் நொடி ஆகியன உள்ள பெண்ணாக இருக்க விதியுண்டு. ஸ்ரீமகாவிஷ்ணுவிற்கு அர்ச்சனையும் ஆராதனையும் புதனுக்கு யந்திர, மந்திர, பிரீதியும் செய்ய நற்பலன்கள் உண்டாகும்.

இராசிக்கு 7க்குடையவர் புதன், 8ஆம் இடமான துலா இராசியில் இருக்க, வரக்கூடிய பெண்ணுக்கு நோய் நொடிகளும், குடும்பக் கஷ்டங்களும், துன்பங்களும் ஏற்படும். வருமானம், தொழில் ஆகியன இல்லாமல்

வருத்தமுற்று இருக்க விதியுண்டாகும். இதற்குப் பரிகாரம் செய்தால் நற்பலன்கள் உண்டாகும். வடக்கு மற்றும் தென்கிழக்குத் திசையிலிருந்து பெண் கிடைக்க விதியுண்டாகும்.

இராசிக்கு 7க்குடையவர் புதன் 9ஆம் இடமான விருச்சிகத்திலிருந்தால், வரக்கூடிய பெண்ணின் மூலம் பொன், பொருள், பூமி ஆகியனவும் மற்ற பாக்கியங்களும் சேரும். சொத்து, சுகங்களும், ஆடை, ஆபரணங்களும் கிடைக்க விதியாகும். வடக்கு மற்றும் தெற்குத் திசையிலிருந்து பெண் கிடைக்க விதி உண்டாகும்.

இராசிக்கு 7க்குடையவர் புதன் 10ஆம் இடமான தனுசில் இருந்தால் வரக்கூடிய பெண், நல்ல அமைதியான குணமும், நல்ல ஒழுக்கமும், தெய்வ பக்தியும் உள்ளவளாய் இருப்பாள். பொன், பொருள்களும், தொழிலால் நல்ல இலாபங்களும் உண்டாக விதியாகும். வடக்கு மற்றும் வடகிழக்குத் திசையிலிருந்து பெண் கிடைக்க விதியுண்டாகும்.

இராசிக்கு 7க்குடையவர் புதன் இராசிக்கு 11ஆம் இடமான மகரத்தில் இருக்க, வரக்கூடிய பெண் துடுக்குத்தனமும் கோபமும் உள்ள பெண்ணாக இருப்பாள். பொன், பொருள், நிலம் ஆகியவற்றால் நல்ல இலாபமும் உண்டாகும். வடக்கு மற்றும் மேற்குத் திசையிலிருந்து பெண் அமைய விதி உண்டு.

இராசிக்கு 7க்குடையவர் புதன், இராசிக்கு 12ஆம் இடமான கும்பத்தில் இருக்க, வரக்கூடிய பெண்ணுக்குக் கோபதாபங்களும் நிறைய உண்டாகும். துஷ்டச் செயல்களும், துடுக்குத்தனமும், மந்த புத்தியும் உண்டாகும். இப்பெண்ணால் அதிகம் பணம் விரயமாக விதியுண்டாகும். வடக்கு மற்றும் மேற்குத் திசையிலிருந்து பெண் அமைய விதியுண்டு என்று கூறப்படுகிறது.

# எட்டாம் பாவம்

## மேஷம்

மேஷ இராசிக்கு அட்டமாதிபதியான செவ்வாய் சனியுடன் சேர்ந்தால் முரண்பாடான பலன்களும், கொடிய பலன்களும் கொடுப்பார். இதனால் பல இன்னல்களை அடைய வேண்டி வரலாம். செவ்வாய் சுப ஸ்தானங்களில்

இருந்தாலும், அசுப பலம் பெற்றாலும், சில கண்டங்களும், ஜீவனபங்கமும் உண்டாகுமென்று கூறப்படுகிறது. 1 முதல் 12 இடங்கள் வரை அட்டமாதிபதி இருந்த இடங்களெல்லாம் பாதிக்கப்படும் என்று கூறப்படுகிறது. இதற்குப் பலன் கூறுவதைவிட, துர் பலன்களைத் தவிர்ப்பது, எப்படி என்று நாடி வாயிலாக அறிந்ததில், அட்டமாதிபதி செவ்வாய்க்கு எந்திர, மந்திர, பிரீதிகள் செய்வதாலும், செவ்வாய்க்கு அதிதேவதையான சுப்பிரமணிய சுவாமியை வணங்குவதாலும் விதி தீர்க்கங்கள் ஏற்பட்டு வாழ்க்கை சுகசௌக்கியத்தை அடையலாம். ஜாதக ரீதியான பீடை, பிணி, கண்டங்கள் ஏற்பட்டால் கிரகப் பிரீதிகள் மூலமும், தெய்வப் பிரீதிகள் மூலமும் யாகங்கள் வளர்ப்பதன் மூலமும் நல்ல ஆயுளைப் பெறலாம்; உடல் பங்கத்தைத் தவிர்க்கலாம் என்றும் நாடி வாயிலாக அறியப்படுகின்றது.

# ரிஷபம்

ரிஷப இராசிக்கு 8ஆம் இடத்து அதிபதியான குருவுடன் சத்துரு கிரகங்கள் சேர்ந்தால், முரணான பலன்களையும், துன்பங்களையும் கஷ்டங்களையும் அடைய நேரிடலாம். குரு சுப ஸ்தானங்களில் இருந்தாலும், அசுப பலம் பெற்றாலும், சில கண்டங்களும் கஷ்டங்களும் உண்டாகுமென்று கூறப்படுகின்றது. 1 முதல் 12 வரை 8க்குடையவர் இருந்த இடங்களெல்லாம் பாதிக்கப்படும் என்று கூறப்படுகின்றது. துர்பலன்கள் நடப்பதை தவிர்க்க பின்வருமாறு செய்ய வேண்டுமென்று நாடி நூல் கூறுகிறது 8க்குடையவருக்கு (குரு) யந்திர, மந்திர, பிரீதிகளும் குருவுக்கு அதிதேவதையான தக்ஷிணாமூர்த்திக்கு அர்ச்சனையும் செய்வதால் விதி தீர்க்கம் ஏற்பட்டு, வாழ்க்கையையும், சுக சௌகரியத்தையும் அடையலாம். சாதகப்படி பீடை, பிணி, கண்டங்கள் ஆகியன ஏற்பட்டால் கிரகப் பிரீதிகள், தெய்வப் பிரீதிகள் ஆகியன மூலமும், யாகங்கள் வளர்ப்பது மூலமும் நல்ல ஆயுளைப் பெறலாம் என்றும் உடல் பங்கத்தையும் ஊனத்தையும் தவிர்க்கலாம் என்றும் நாடி நூல் வாயிலாக அறியப்படுகின்றது.

# மிதுனம்

மிதுன இராசிக்கு அட்டமாதிபதியான சனியுடன் பகைக் கிரகங்கள் சேர்ந்தால் முரணான பலன்கள் உண்டாகும். சனி அசுப பலம் பெற்றிருந்தால், சில கண்டங்களும் ஊனங்களும் கொடுப்பாரென்று கூறப்படுகின்றது. 1

முதல் 12 வரை 8க்குடையவர் இருந்த இடங்களெல்லாம் பாதிக்கப்படும் என்ற கூறப்படுகிறது. துர்பலன்களை நடப்பதைத் தவிர்க்க பின்வருமாறு செய்யுமாறு நாடி நூல் கூறுகிறது. 8க்குடைய சனிக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் சனிக்கு அதிதேவதையான ஸ்ரீவிநாயகர் அல்லது, அய்யனார், ஐய்யப்பன் போன்ற தெய்வங்களுக்கு பூஜை செய்வதன் மூலம் விதி தீர்க்கம் ஏற்பட்டு, சௌகரியத்தை அடையலாம். கிரக ரீதியாக நோய் நொடிகள், பிணி, பீடைகள் ஆகியன ஏற்பட்டால், கிரகப் பிரீதிகள், தெய்வப் பிரீதிகள், யாகங்கள் வளர்த்தல் ஆகியவற்றின் மூலம் நல்ல ஆயுளைப் பெறலாம்; உடல் ஊனத்தைத் தவிர்க்கலாம் என்று நாடி நூல் வாயிலாக அறியப்படுகின்றது.

# கடகம்

கடக இராசிக்கு 8க்குடைய சனியுடன் பகைக் கிரகங்கள் சேர்க்கை பெற்றால் முரணான பலன்கள் உண்டாகும். சனி அசுப பலம் பெற்றிருந்தால், சில கண்டங்களும், விபத்துகளும் உண்டாம். 1 முதல் 12 வரை 8க்குடையவர் இருந்த இடங்களெல்லாம் பாதிக்கப்படும் என்று கூறப்படுகிறது. கெட்ட பலன்கள் நடப்பதைத் தவிர்க்க நாடி நூல் கூறுகிறபடி செய்யலாம். 8க்குடைய சனிக்கு, யந்திர, மந்திர பிரீதிகளும், சனிக்கு அதிதேவதையான ஸ்ரீவிநாயகர், அல்லது ஐயனார், ஐயப்பன் போன்ற தெய்வங்களுக்கு பூஜை புனஸ்காரம் செய்வதன் மூலம் விதி தீர்க்கம் ஏற்பட்டு, சௌகரியத்தை அடைய விதி உண்டாகும். கிரக ரீதியாக நோய் நொடிகள் ஏற்பட்டால், அவற்றிற்கு கிரக சாந்திகள், பிரீதிகள் ஆகியவற்றைச் செய்வதன் மூலம் பிணிகள் தீர விதியுண்டாகும். தெய்வப் பிரீதிகள் யாகங்கள் வளர்த்தல் மூலம் நல்ல ஆயுளைப் பெறலாம். உடல் பங்கத்தையும், உடல் ஊனத்தையும் தவிர்க்கலாம் என்று நாடி நூல் வாயிலாக அறியப்படுகின்றது.

# சிம்மம்

சிம்ம இராசிக்கு 8க்குடைய குருவுடன் பகை கிரகங்கள் கூடினால் கெடுதலான பலன்கள் உண்டாகும். குரு அசுப பலம் பெற்றால், சில விபத்துகள், கண்டங்கள் ஆகியன ஏற்பட விதியுண்டாகும். நாடி நூலின் படி நல்ல பலன்கள் அடைய 8க்குடைய கிரகமான குருவுக்கு அதிதேவதையான,

ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்குப் பூசையும், குருவுக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் செய்தால் நற்பலன்களை அடைந்து, ஆயுளைப் பெற விதி உண்டாகுமென்று கூறப்படுகிறது. கிரக ரீதியான நோய், துன்பங்கள் ஏற்பட்டால் கிரக சாந்திகள், பிரீதிகள், பூசைகள் ஆகியன செய்தால் நற்பலன்களை அடைய விதியுண்டாகும். தெய்வங்களுக்குப் பூசைகள், யாகங்கள், ஹோமங்கள் ஆகியன செய்தால் விபத்துக்களினாலும் வியாதிகளினாலும் ஏற்படக்கூடிய தொல்லைகளைக் குறைக்கலாம் என்று நாடிநூல் கூறுகிறது.

# கன்னி

கன்னி இராசிக்கு 8க்குடைய செவ்வாய் சனியுடன் கூடினாலும் மற்ற பகைக் கிரகங்களுடன் கூடினாலும், கெட்ட பலன்கள் உண்டாகும். நல்ல பலன்களைப் பெற 8க்குடைய கிரகமான செவ்வாய்க்கு அதிதேவதையான ஸ்ரீசுப்ரமணிய சுவாமிக்கு அர்ச்சனை, ஆராதனையும் செவ்வாய்க்கு யந்திர, மந்திர, பிரீதிகளும், செய்தால் நற்பலன்களை அடையலாம். கிரக ரீதியாக நோயும், துன்பங்களும் ஏற்பட்டால் கிரக சாந்திகள், பிரீதிகள், பூசைகள் ஆகியன செய்தால் நற்பலன்களை அடையலாம். தெய்வங்களுக்குப் பூசைகள், யாகங்கள், ஹோமங்கள் ஆகியன செய்வதாலும், விபத்துக்களினாலும் வியாதிகளினாலும் ஏற்படக்கூடிய தொல்லைகளைக் குறைக்கலாம் என்று நாடி நூல் கூறுகிறது.

# துலாம்

துலா இராசிக்கு 8க்குடைய சுக்கிரனுடன், சத்துரு கிரகங்கள் சேர்ந்தால் துன்பங்களும், கஷ்டங்களும் உண்டாகலாம். நல்ல பலன்களைப் பெற 8க்குடைய கிரகமான சுக்கிரனுக்கு அதி தேவதையான ஸ்ரீரெங்கநாதருக்கும் அர்ச்சனையும், ஆராதனையும், சுக்கிரனுக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம். விதி தீர்க்கமும், சௌக்கியமும் உண்டாகும். கிரக ரீதியான நோய், நொடிகள், பிணி பீடைகள் ஆகியன ஏற்பட்டால் கிரக சாந்திகள், பிரீதிகள், பூசைகள் ஆகியன செய்யலாம். தெய்வ பிரீதிகளாலும், யாகங்கள், ஹோமங்கள் ஆகியன செய்வதாலும், விபத்துக்களினாலும், வியாதிகளினாலும் ஏற்படக்கூடிய துன்பங்கள் குறைய விதியுண்டு என்று நாடி நூல் கூறுகிறது.

# விருச்சிகம்

விருச்சிக இராசிக்கு 8க்குடைய புதனுடன் சத்துரு கிரகங்கள் சேர்ந்தால் முரண்பாடான பலன்களும், கஷ்டங்களும் உண்டாகலாம். நல்ல பலன்களை அடைய 8-க்குடைய கிரகமான புதனுக்கு அதிதேவதையான ஸ்ரீமகாவிஷ்ணுவிற்கு அர்ச்சனையும், ஆராதனையும், புதனுக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம். கிரக ரீதியாக நோய் நொடி, துன்பங்கள், பிணி, பீடைகள் ஆகியன வந்தால், கிரக பரிகாரமும் தெய்வங்களுக்குப் பூசைகளும், யாகங்களும் செய்தால் கண்டங்களினால் ஏற்படக்கூடிய கஷ்ட, நஷ்டங்கள் குறைய விதியாகும் என்று நாடி நூல் கூறுகிறது.

# தனுசு

தனுசு இராசிக்கு 8க்குடைய சந்திரனுடன் சத்துரு கிரகங்கள் கூடினால் கெட்ட பலன்கள் ஏற்பட விதியாகும். நல்ல பலன்களைப் பெற 8க்குடைய கிரகமான சந்திரனுக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் சந்திரனுக்கு அதிதேவதையான ஸ்ரீபராசக்தி அல்லது கணபதிக்கு அர்ச்சனையும், ஆராதனையும் செய்தால் நல்ல பலன்கள் உண்டாகும். கிரகத்தினால் நோய், நொடி, பிணி, பீடைகள் ஆகியன ஏற்பட்டால் கிரக சாந்திகள், யாகங்கள் ஆகியன செய்தால் நற்பலன்களை அடையலாம். தெய்வங்களுக்குப் பூசைகள், யாகங்கள் ஆகியன செய்தால் கெட்ட பலன்கள் நீங்கி நற்பலன்களை அடையலாம் என்று நாடி நூலில் கூறப்படுகிறது.

# மகரம்

மகர இராசிக்கு 8க்குடைய சூரியனுடன் சத்துரு கிரகங்கள் கூடினால் கெட்ட பலன்கள் ஏற்பட விதியுண்டாகும். நல்ல பலன்களை அடைய 8க்குடைய கிரகமான சூரியனுக்கு யந்திர, மந்திர, பிரீதிகள் செய்தாலும், கிரக அதிதேவதையான சிவனுக்கு அர்ச்சனையும், ஆராதனையும், செய்தால் நல்ல

பலன்களும், விதி தீர்க்கமும், சுக சௌக்கியங்களும் ஏற்படும். கிரகக்கோளாறு காரணமாக நோய், நொடி துன்பங்கள் ஆகியவற்றினால் வரும் கஷ்டங்களுக்கு, கிரக பரிகாரம் செய்தால் நல்ல பலன்களை அடையலாம். தெய்வங்களுக்குப் பூசைகள், யாகங்கள், ஹோமங்கள் ஆகியன செய்வதாலும் கெட்ட பலன்களைத் தவிர்த்து நல்ல பலன்களை அடையலாம் என்று நாடி நூல் கூறுகிறது.

# கும்பம்

கும்ப இராசிக்கு 8க்குடைய புதனுடன் பகைக் கிரகங்கள் கூடினால் முரண்பாடான பலன்களும், கஷ்டங்களும், துன்பங்களும் ஏற்பட விதியுண்டாகும். 8க்குடைய புதனுக்கு அதிதேவதையான ஸ்ரீமகாவிஷ்ணுவிற்கு அர்ச்சனையும் ஆராதனையும், புதனுக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் செய்தால் நல்ல பலன்களை அடைய விதியுண்டாகும். விதி தீர்க்கமும், சுக சௌக்கியங்களும் உண்டாகுமென்று கூறப்படுகின்றது. கிரக ரீதியாக நோய் நொடிகள் ஏற்பட்டால் அதற்குக் கிரகப் பிரீதிகளும், தெய்வங்களுக்குப் பூசைகளும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம். ஹோமங்கள், யாகங்கள் ஆகியன செய்தால் துர்பலன்களைத் தவிர்த்து நற்பலன்களை அடையலாம் என்று நாடி நூல் கூறுகிறது.

# மீனம்

மீன இராசிக்கு 8க்குடைய சுக்கிரனுடன் சத்துரு கிரகங்கள் கூடினால் கெட்ட பலன்களும், முரண்பட்ட பலன்களும், கஷ்டங்களும் உண்டாகலாம். 8-க்குடைய சுக்கிரனுக்கு அதிதேவதையான ஸ்ரீரெங்கநாதருக்கு அர்ச்சனையும் ஆராதனையும், சுக்கிர பகவானுக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் செய்வதால் நல்ல பலன்களும், நல்ல சுகசௌக்கியங்களும், விதி தீர்க்கமும் உண்டாகும். கிரகத்தினால் வரக்கூடிய நோய் நொடிகளுக்கும், பிணிகளுக்கும், கிரக சாந்திகளும் தெய்வங்களுக்குப் பூசைகளும் யாகங்களும் ஹோமங்களும் செய்வதாலும், நற்பலன்களையும் நற்சுகத்தையும் அடையலாம்; கெட்ட பலன்களைத் தவிர்க்கலாம் என நாடி நூல் கூறுகிறது.

# ஒன்பதாம் பாவம்

## மேஷம்

மேஷ இராசிக்கு 9ஆம் இடத்து அதிபதியான குரு, இராசிக்கு 9ஆம் இடமான தனுசில் ஆட்சி பெற்றிருந்தால், தகப்பனார் நல்ல ஆயுளுடன் இருப்பார். பிதுர் பாக்கியங்களை அனுபவிக்கக் கூடியவராக விளங்குவார்கள். பிதுர் வர்க்கத்தார்களும் நல்ல நிலையில் இருப்பார்கள். நற்குருவும் இருக்க விதியுண்டு. குருவின் மூலம் உபதேசமும் உண்டாகும். தான தர்மம் செய்வதில் நல்ல புகழ் உண்டாகும். தெய்வீக வழிபாடுகளில் சிறந்து விளங்க விதி உண்டாகும். தகப்பனாருடைய சொத்துகளை ஸ்திரமான நிலையில் அனுபவிக்க விதி உண்டு. பிள்ளைகளால் நற்பெயரும் புகழும், இலாபங்களும் ஏற்பட விதியுண்டு. வேலையாள்களிடமும், பெரியோர்களிடத்திலும் அன்புடன் பழகுதல் போன்ற செயல்களால் நல்ல பெயரும் கிடைக்க விதியுண்டு. சுற்றத்தாரின் ஆதரவும் உண்டாகும். பால் பாக்கியங்களையும் அனுபவிக்க விதியுண்டு.

குருவுடன் சூரியன், செவ்வாய் ஆகியன சேர்ந்தால் தார்மீகக் குணம், புத்திர இலாபமும் உண்டாகும். பித்ரு வர்க்கம், தகப்பனார் ஆகியோருக்கு நோய் நொடிகள் உண்டாகும். பித்ரு சொத்துகள், பெரியோர்கள் தேடி வைத்த சொத்துகள் ஆகியன நாசமாகும் நிலை உண்டாகும். வக்கிர எண்ணங்களும் உண்டாகும்.

குருவுடன், சுக்கிரன், புதன், சனி ஆகியவர்கள் கூடினால் நல்ல சௌந்தர்யமும் இளமையும் கொண்ட மனைவி மூலம் நற்சுகமும் உண்டாகும். பாக்கியங்களையும், போகங்களையும் அனுபவிக்க விதியுண்டாகும். இலட்சுமி கடாட்சம் உண்டாகும். பிதுர் பாக்கியச் சொத்துகள் அழியும். பிறர் இவர்களை ஏமாற்றி விடும் நிலையை ஏற்படுத்தும். வித்வத் தன்மை, பணம் சேர்தல் புகழ் ஆகியன உண்டாகும். தகப்பனாருக்குக் கண்டம் உண்டாகும். அற்ப குணமுண்டாகும்.

குருவுடன் இராகுகேதுக்கள் கூடினால் பொன், பொருளால் இலாபமும் தகப்பனாருக்கு வியாதியால் கஷ்டமும், புத்திரரால் நஷ்டமும், அழியாச் செல்வமும் உண்டாகும். பித்ரு பாக்கியத்திற்கு தோஷம், தரித்திர நிலை ஆகியவற்றை உண்டாக்கும். இவற்றிற்கு ஸ்ரீதட்சிணாமூர்த்திக்கு

அர்ச்சனையும் ஆராதனையும், குருவுக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# ரிஷபம்

ரிஷப இராசிக்கு 9ஆம் இடத்து அதிபதி, சனி இராசிக்கு 9-ஆம் இடமான மகர இராசியில் ஆட்சி பெற்றிருந்தால், பிதாவுக்கு நல்ல ஆரோக்கியம் உண்டாகும். போக பாக்கியங்களையும், பிதுர்பாக்கியங்களையும் அனுபவிக்க விதியுண்டாகும். குருவால் உபதேசம் பெறும் நிலையும் தான தர்மங்களைச் செய்யும் குணமும், அறக்கட்டளை ஏற்படுத்தும் நிலையும், சிவாலயங்களில் திருப்பணி செய்வதில் ஆர்வமும் ஏற்படும். பால் பாக்கியங்களை அனுபவிக்க விதியுண்டு. குடும்பம் மகிழ்ச்சியாக இருக்கும். புத்திரரால் பேரும் புகழும் உண்டாகும். தகப்பனாருடைய சொத்துகள் கிடைக்க விதியுண்டு. பணியாட்கள், சுற்றத்தார், பெரியோர்கள் ஆகியோர் ஆதரவுடன் இருக்க விதியாகும். தகப்பனாருக்குக் கண்டமிருந்தாலும் அது நீங்க விதியுண்டு.

சனியுடன் புதன் கூடி 9ஆம் இடத்திலிருந்தால் சகல கலைகளை அறிந்துகொள்ளும் திறன் உண்டாகும். புலமையும், புகழும் உண்டாகும்.

சனியுடன் சுக்கிரன் கூடி 9ஆம் இடத்திலிருந்தால் தகப்பனாருக்கு வியாதியால் கஷ்டமும், பெண்களால் போக சுகமும், பாக்கியங்களும் பொன் பொருளும் வாய்க்க விதியுண்டு.

குரு 9ஆம் இடத்தில் தனித்துக் கூடினால் புத்திரரால் நற்பெயருண்டாகும். நல்ல புத்தியுண்டாகும். ஆசார அனுஷ்டான குருவிடம் உபதேசம் பெறுவர். நல்ல குணவானாகவும், புலனடக்கம் உள்ளவராகவும், தபசியாகவும் இருக்க விதியாகும்.

சூரியன் தனித்து 9ஆம் இடத்தில் மகர இராசியில் இருந்தால், நல்ல குணமும் முன் கோபமும், தகப்பனாருக்கு வியாதியால் துன்பமும் உண்டாகும். 9இல் செவ்வாய் மகரத்தில் உச்சம் பெற்றால் மனைவியால் போக பாக்கியங்களைப் பெறலாம். பித்ரு சொத்துக்கள் கண்ட வழிகளில் விரயமாகி அவற்றை இழக்க விதியுண்டாம். தகப்பனாருக்குக் கஷ்டமுண்டாகும். கெட்ட எண்ணங்களும் இருக்க விதி உண்டாகும்.

இராகு 9ஆம் இடத்தில் இருந்தால், பூமி பொருளால் இலாபத்தையும்

புன்செய் விவசாயத்தால் நல்ல பலன்களையும் அடையலாம். செல்வம் கொழிக்கும் நிலை உண்டாகும்.

கேது 9ஆம் இடத்தில் இருந்தால் பித்ரு பாக்கியங்களை அனுபவிக்கத் தடையும், தரித்திர நிலையும் உருவாக்கும். இதற்கு ஸ்ரீவிக்னேஷ்வரருக்குப் பூசையும், சனீஸ்வரருக்கு யந்திர, மந்திர, பூசையும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# மிதுனம்

மிதுன இராசிக்கு 9ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 9ஆம் இடமான கும்பத்தில் ஆட்சி பெற்றிருந்தால், தகப்பனாருக்குப் பீடை வந்து விலகும். பிதுர் பாக்கியங்களை அனுபவிக்கும் நிலை உண்டாகும். குருவிடம் உபதேசம் பெறுதல், நற்கல்வி மற்றும் அறக்கட்டளை போன்ற தரும காரியாலாயத்தை ஏற்படுத்தும் நிலை ஆகியன உண்டாகும். பிதுர் சொத்துகளான பூமிகளால் நல்ல இலாபம் உண்டாகும். தகப்பனாரின் சொத்தாகிய வீடு, நிலபுலன்களை அனுபவிக்க உதவி கிட்டும். பால்பாக்கியங்கள் இருக்க விதி உண்டாகும். தெய்வீக வழிபாடு, சிவாலயத் திருப்பணி, சிவசொத்து பராமரிப்பு போன்றவை நிகழும். பொதுப்பணி சமூகநலச் சேவைகள் ஆகியவற்றைச் செய்வதில் பிரியமும், அரசியல் கட்சித்தலைவர் பதவியை அனுபவிக்க விதி உண்டாகும்.

9ஆம் இடமான கும்பத்தில் இராகு இருந்தால் பூமி, நஞ்சை, புஞ்சை ஆகியவற்றினால் இலாபமும், புத்திரரால் நஷ்டமும், கணதனங்கள் சேர்தலும் உண்டாகும்.

9ஆம் இடமான கும்பத்தில் கேது இருந்தால் பித்ரு பாக்கியங்களை அனுபவிக்கத் தடை உண்டாகும். புண்ணியங்கள், தருமம் ஆகியன செய்யத் தடைகளை ஏற்படுத்தும்.

9ஆம் இடமான கும்பத்தில் சூரியனிருந்தால் தைரியம், வீரியம், புகழ், அரசியல் கட்சிப்பணி, பக்தி, விசுவாசம் ஆகியன இருக்கும். தகப்பனாருக்குப் பீடை உண்டாகும்.

9ஆம் இடமான கும்பத்தில் செவ்வாயிருந்தால், கடன்கள், கஷ்டங்கள் ஆகியன அதிகமாகும். இலாபம் இருந்தாலும் அனுபவிக்கத் தடை ஏற்படும். தகப்பனார் தொழிலைச் செய்யும் யோகம் உண்டாகும். பிற்காலத்தில் நல்ல யோகத்தை அனுபவிக்க விதி உண்டாகும். உயர் பதவிகளும் உண்டாகும்.

9ஆம் இடமான கும்பத்தில் புதன் இருந்தால் தகப்பனாரின் அன்பையும் ஆசீர்வாதத்தையும் நல்ல கல்வியில் புலமையையும் கொண்டவராக இருப்பார். பால் பாக்கியம் உண்டாகும். தாயன்பும் இருக்கும்.

9ஆம் இடமான கும்பத்தில் குரு கூடினால் சிறுவயதில் திருமணம் நடக்கும். மனைவி நல்லபுத்தியுள்ள பெண்ணாக இருப்பாள். பொன்பொருள் பூஷணாதிகளையும் குரு உபதேசத்தையும் பெறுவார்கள். தொழில் விருத்தியாகும்.

9ஆம் இடமான கும்பத்தில் சுக்கிரன் கூடினால் புத்திர விருத்தியும் பிதுர் பாக்கியச் சொத்துக்களை அனுபவிக்கும் யோகமும் உண்டாம். ஸ்ரீவிக்னேஷ்வரருக்குப் பூசையும் சனிக்கு யந்திர, மந்திரப் பிரீதியும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# கடகம்

கடக இராசிக்கு 9ஆம் இடத்து அதிபதியான குரு இராசிக்கு 9ஆம் இடமான மீனத்தில் ஆட்சி பெற்றிருந்தால் தகப்பனார் நல்ல ஆரோக்கியத்துடன் இருப்பார். பிதுர் பாக்கியச் சொத்துகளை அனுபவிக்கும் யோகம் உண்டாகும். ஆசார அனுஷ்டானங்கள், தெய்வபக்தி ஆகியன நிறைந்த குருவிடம் கல்வி கற்பார்; உபதேசம் பெறுவார். மந்திரங்கள் சித்தி பெறும் தான தர்மங்கள் செய்வதில் பிரியமும் உண்டாகும். பிதுர் பாக்கியங்களான பூமி, மனைகள் போன்றவற்றினால் நல்ல இலாபம் உண்டாகும். தெய்வ வழிபாடும், பக்தியும், ஒழுக்கமும் நிறைந்து இருக்கும். சிவாலயப்பணிகள், ஆசிரமங்கள், ஆலயங்கள் ஆகியவற்றை நிர்மாணிக்கும் சூழ்நிலை உண்டாகும்.

9ஆம் இடமான மீனத்தில் சுக்கிரன் உச்சமாகவும், புதன் நீசமாகவும் கூடினால் தாய் நல்ல அன்புடன் ஆதரவுடனும் இருப்பார். பித்ரு பாக்கியச் சொத்துகளை அனுபவிக்கும் யோகமும் உண்டாகும். கல்வி, புகழ், வீடு, மனை, வாகனம் ஏவலாட்கள் ஆகியவை யாவும் நல்ல நிலையில் இருக்க விதியுண்டு. இளைய, மூத்த சகோதரர்களுக்குப் பீடை உண்டாகும்.

9ஆம் இடமான மீனத்தில் சனி இருந்தால் நல்ல மனைவி அமைவாள். அவளுக்கு வியாதி உண்டாகும். பிதுர் பாக்கியச் சொத்துக்கள் நாசமாகும். புத்திரர்களால் கடன் ஏற்படும்.

9ஆம் இடமான மீனத்தில் சூரியனிருந்தால் பிதுர் பாக்கியச் சொத்துக்களை அனுபவிக்கும் யோகமுண்டு. நல்ல அதிகாரப் பதவிகள், அந்தஸ்துகள், அரசியல் கட்சிப் பதவிகள் ஆகியவற்றைப் பெறும் யோகமும் உண்டு.

9ஆம் இடமான மீனத்தில் செவ்வாய் கூடினால் புத்திரர்களால் மகிழ்ச்சியும், நற்சுகமும், பிதுர்பாக்கியங்களை அனுபவிக்கும் திறனும் உண்டாம்.

9ஆம் இடமான மீனத்தில் இராகு கூடினால் பூமி, பொருள் ஆகிய இலாபங்களும் மற்றும் திடீரென்று அதிர்ஷ்டங்களும் உண்டாக விதியுண்டு.

9ஆம் இடமான மீனத்தில் கேது கூடினால் பித்ருக்களுக்கு கஷ்டமும், துன்பங்களும் உண்டாகும். வறுமை இருக்கும். புண்ணியங்களை அனுபவிக்கத் தடை உண்டாகும். ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு அர்ச்சனையும், குருவுக்கு யந்திர, மந்திர, பிரீதிகள் செய்ய நற்பலன்கள் உண்டாகும்.

# சிம்மம்

சிம்ம இராசிக்கு 9க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 9ஆம் இடமான மேஷத்தில் ஆட்சி பெற்றால், தகப்பனார் நல்ல நிலையில் இருப்பார். தருமங்கள் செய்வதில் பிரியமுண்டாகும். புத்திரர்களும் தாய் தந்தையரும் நல்ல அன்புடன் இருப்பார்கள். தகப்பனாருடைய சொத்துகளை அனுபவிக்க யோகமுண்டு. பிதுர் பாக்கியச் சொத்துகளான, பூமி, நஞ்சை, புஞ்சை ஆகிய நிலங்களிலிருந்து இலாபமும் பலனும் உண்டாகும். சமூகப் பணிகள், தெய்வீக வழிபாடுகள், துர்க்கை, முருகன் போன்ற கோவில்களில் திருப்பணிகள், ஆகியவற்றை மேற்கொள்வார். குடும்பத்தில் நல்ல ஒற்றுமை உண்டாகும். பால் பாக்கியங்கள் உண்டாகும்.

9ஆம் இடமான மேஷத்தில் புதன் வீற்றிருந்தால் வித்தையில் ஆர்வமும் கல்வியில் புலமை உண்டாகும். நல்ல இலாபமும் கிட்டும்.

9ஆம் இடமான மேஷத்தில் குரு இருந்தால் புத்திரரால் நன்மையும் நல்ல குருவிடம் உபதேசமும் உண்டாகும். பூர்வ புண்ணியத்தையும் பிதுர்பாக்கியத்தையும் அனுபவிக்க வேண்டிய யோகமும் உண்டு.

9ஆம் இடமான மேஷத்தில் சுக்கிரனிருந்தால் களஸ்திரத்தினால் நன்மையும், போக பாக்கியமும் உண்டாகும். கல்வி நல்லபடியாக இருக்கும்.

9ஆம் இடமான மேஷத்தில் சனியிருந்தால், நீசமானபடியால், தொழில் மந்தமாகவும் இருக்கும். பிதாவுக்குப் பீடை, வக்கிர புத்தி ஆகியன உண்டாகும்.

9ஆம் இடமான மேஷத்தில் இராகு இருந்தால் நஞ்சை, புஞ்சைகளால் இலாபமும், புத்திர இலாபமும், தனவரவும் உண்டாகும்.

9ஆம் இடமான மேஷத்தில் கேது இருந்தால், புத்திர பாக்கியத்தடையும் வறுமையும் தரித்திரமும் உண்டாகும். பிதுர் பாக்கியங்களை அடைய விடாமல் தடை செய்ய விதி உண்டாகும்.

9ஆம் இடமான மேஷத்தில் சூரியன் உச்சம் பெற்றிருந்தால் நல்ல புத்திக் கூர்மையும், நிபுணத்துவமும், தகப்பனார்க்குப் பீடையும் உண்டாகும். அரசியல் கட்சியில் தலைமைப் பதவியும், கிடைக்க விதி உண்டாகும். ஸ்ரீசுப்பிரமணியருக்குப் பூசையும் அர்ச்சனையும், செவ்வாய்க்கு யந்திர, மந்திர பிரீதியும் செய்ய நற்பலன்கள் உண்டாகும்.

# கன்னி

கன்னி இராசிக்கு 9ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன், இராசிக்கு 9ஆம் இடமான ரிஷபத்தில் இருந்தால் தந்தை நல்ல ஆரோக்கியத்துடன் இருப்பார். பிதுர் பாக்கியங்களுடன் நல்ல சுகத்துடன் இருக்க விதி. பால் பாக்கியம் உண்டு. பொருள் சேர்க்கையும் வண்டி, வாகனச் சேர்க்கையும் உண்டாகும். பெண்களால் நற்சுகம் உண்டாகும். அசுர குருவால் உபதேசம் பெறும் நிலை வாய்க்கும். தான தர்மங்கள் செய்வர். அறக்கட்டளைகள், கல்வி நிலையங்கள், ஆசிரமங்கள், சேவை நிறுவனங்கள் முதலியவை உண்டாகும். வீடு, மனை, கட்டிடம் ஆகியவற்றால் நல்ல பலன் உண்டாகும். தெய்வீக வழிபாடும், பக்தியும், ஒழுக்கமும் உண்டாகும்.

9ஆம் இடமான ரிஷபத்தில் சனியிருந்தால் பிதுர்பாக்கியத்தை பாதி நாள் அனுபவித்தும் சில நாள் அனுபவிக்கத் தடையும் உண்டாம். தகப்பனாருக்கு வியாதியால் கஷ்டமுண்டு.

9ஆம் இடமான ரிஷபத்தில் இராகுகேதுக்கள் இருந்தால், பிதுர் பாக்கியங்களை இழக்கும் நிலை உண்டாம். வறுமை தரித்திரம் ஆகியவை உண்டாக்கும்.

9ஆம் இடமான ரிஷபத்தில் சூரியனிருந்தால், பிதுர்பாக்கியங்களை விரயம் செய்யவேண்டிய நிலை ஏற்படும். தகப்பனாருக்குப் பீடையும் வறுமையும் உண்டாகும்.

9ஆம் இடமான ரிஷபத்தில் செவ்வாய் இருந்தால், பிதுர் பாக்கியமும் தகப்பனார் வகையில் நல்ல இலாபமும் உண்டாகும். இளைய சகோதர வழியில் பிரச்சினைகளும், கண்டங்களும், விபத்துகளும் உண்டாகும்.

9ஆம் இடமான ரிஷபத்தில் புதனிருந்தால் கல்வியில் புலமையும் பிதுர் பாக்கிய தோஷங்களினால் விரயமும் ஏற்படும். புத்திர விருத்தியும் புத்திரர்களால் மகிழ்ச்சியும் உண்டாகும்.

9ஆம் இடமான ரிஷபத்தில் குரு இருந்தால், நல்ல ஒழுக்கமுள்ள மனைவியும், மனைவியால் நற்சுகமும் உண்டாகும். குடும்பம் ஒற்றுமையுடன் இருக்கும். மனைவியால் சொத்து சுகமும் உண்டாகும். பால் பாக்கியம் உண்டாகும். ஸ்ரீதட்சிணாமூர்த்திக்கு பூசையும், அர்ச்சனையும் குருவுக்கு எந்திர, மந்திர, பிரீதியும் செய்ய நலமுண்டாகும்.

# துலாம்

துலா இராசிக்கு 9ஆம் இடத்து அதிபதியான புதன், இராசிக்கு 9ஆம் இடமான மிதுனத்தில் ஆட்சி பெற்றிருந்தால், பிதுர் பாக்கியங்களை அனுபவிக்க விதியுண்டாகும். தந்தையார் நல்ல தீர்க்க ஆயுளுடன் இருப்பார். தெய்வீக வழிபாடுகளும், பக்தியும் இருக்கும். வண்டி வாகனச் சேர்க்கையும் உண்டாகும். புத்திரர்களால் நல்ல லாபமும், பேரும் புகழும் உண்டு. பால் பாக்கியங்களை அனுபவிக்க யோகமுண்டு. பொதுச் சேவைகளும் ஆலயப்பணிகளும் செய்ய ஆர்வமும் உண்டாகும். வீடு, வாகனங்கள் ஆகியவற்றை அனுபவிக்க விதியுண்டு.

9ஆம் இடமான மிதுனத்தில் குரு இருந்தால் சகோதரர்களாலும் புத்திரர்களாலும், பிதுர்பாக்கியங்களை அனுபவிக்க இடையூறு உண்டாகும். குரு உபதேசம் பெறுதலும் உண்டாகும். பேரும் புகழும், உண்டாகும். பக்தி, விசுவாசம் ஆகியவை உண்டாகும்.

9ஆம் இடமான மிதுனத்தில் சுக்கிரனிருந்தால் ரோகமுள்ள களத்திரம் வாய்க்கும். பிதுர் பாக்கியச் சொத்துகளுக்கு நாசமும் உண்டாகும். சுற்றங்களால் பகையும், விரோதமும் உண்டாகும்.

9ஆம் இடமான மிதுனத்தில் சனி இருந்தால் வீடு, மனை, முன்னோர்கள் தேடி வைத்த பொருள்கள் ஆகியவற்றை அனுபவிக்கும் யோகமுண்டாகும். வண்டி வாகனங்கள் சேர்க்கையும், புத்திரர்களால் இலாபமும் உண்டாகும். பால் பாக்கியங்களும் உண்டாகும். சுகமும், பக்தியும் விசுவாசமும் ஏற்பட விதியுண்டாகும்.

9ஆம் இடமான மிதுனத்தில் இராகுகேதுக்கள் கூடினால் பிதுர் பாக்கியத்திற்கு தோஷமும் உண்டாகும். தகப்பனாருக்கு வியாதிகள் உண்டாகும். வறுமையான நிலைகளை உண்டாக்கும்.

9ஆம் இடமான மிதுனத்தில் சூரியனிருந்தால் நல்ல இலாபமும் பிதுர் வர்க்க விருத்தியும் உண்டாகும். பிதுர் பாக்கியங்களை அனுபவிக்கும் யோக முண்டாகும்.

9ஆம் இடமான மிதுனத்தில் செவ்வாயிருந்தால் பணம் பொருள் சேர்க்கையும், பிதுர் பாக்கியங்களால் நல்ல இலாபமும் உண்டாகும். கல்வியில் ஊக்கமும், பால் பாக்கியங்களும், பூமி, நிலபுலன்களால் நல்ல இலாபமும் உண்டாகும். ஸ்ரீமகாவிஷ்ணுவிற்கு அர்ச்சனையும், பூசையும், புதனுக்கு யந்திர, மந்திர பிரீதியும் செய்ய நற்பலன்களும் அடையலாம்.

# விருச்சிகம்

விருச்சிக இராசிக்கு 9ஆம் இடத்து அதிபதியான சந்திரன், விருச்சிக இராசியில் நீசமாகி இருப்பதால், பிதுர் பாக்கியச் சொத்துக்களுக்கு சேதமும், விரயமும் உண்டாகும். தந்தைக்கு கண்டமும், பூமி, கழனிகள், வீடு, மனை, வாகனங்கள் ஆகியவையெல்லாம் கைவிட்டுப் போகும் நிலையுமுண்டாகும். தர்மங்களில் பற்றுதல் இல்லாதவராகவும் இருக்கக்கூடும். சிரம வாழ்க்கையை அனுபவிக்கும்படி இருக்கும்.

விருச்சிக இராசிக்கு 9ஆம் இடத்தில் கடக இராசியில் செவ்வாய் இருந்தால், தகப்பனாருக்கு வியாதியால் கஷ்டமுண்டாகும். பித்துரு பாக்கியச் சொத்துகளினால் வில்லங்க, விவகாரம் உண்டாகும். உஷ்ண சம்பந்தமான பீடைகளை அனுபவிக்க நேரிடும்.

இராசிக்கு 9ஆம் இடமான கடகத்தில் புதனிருந்தால் தகப்பனாருக்கு சிறு சிறு கண்டங்கள் வந்து மாறும். முன்னோர்கள் தேடி வைத்ததை தகப்பனாரே விரயம் பண்ணும் நிலை இருந்துவரும். பூர்வ புண்ணியங்களிலும், பிதுர் பாக்கியச் சொத்துகளிலும் நல்ல இலாபம் உண்டாக விதியுண்டு.

இராசிக்கு 9ஆம் இடமான கடகத்தில் குரு உச்சம் பெற்றிருப்பதால், நல்ல வாக்கு அமையும். தந்தை நல்ல ஆயுளுடன் இருப்பார். குடும்பம் நல்ல ஒற்றுமையுடன் விளங்கும். மந்திரா உபதேசம் பக்தி, தெய்வீக வழிபாடு, ஆசார அனுஷ்டானம், பிராமணத்துவம் ஆகியன நிறைந்து காணப்படும்.

இராசிக்கு 9ஆம் இடமான கடகத்தில் சுக்கிரன் இருந்தால் மனைவிக்கு நற்சுகமும், தெய்வ பக்தியும், பொன் பொருள் வரவுமுண்டாகும். பிதுர் பாக்கியங்களை அனுபவிக்கும் யோகமுண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடமான கடகத்தில் சனி இருந்தால் இளைய சகோதரத்தால் துன்பமுறுவர். பாக்கியத்தை இழக்க நேரும். வீடு, மனை, வாகனம் போன்றவற்றை அனுபவிப்பார்கள்.

இராசிக்கு 9ஆம் இடமான கடகத்தில் இராகுகேதுக்கள் கூடினால், நற்பலன்கள் உண்டாகும். பூமிசேர்க்கையும், பொன், பொருள் வரவும் உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடமான கடகத்தில் சூரியனிருந்தால் தொழில் விருத்தியடையும். தகப்பனார் தொழிலையே சிறப்புடன் நடத்தி இலாபம் ஈட்டுவதற்கு யோகமுண்டாகும். ஸ்ரீபார்வதிக்கு அர்ச்சனையும், சந்திரனுக்கு யந்திர, மந்திர, பூசைகளும் செய்ய நலமுண்டாகும்.

# தனுசு

தனுசு இராசிக்கு 9ஆம் இடத்து அதிபதியான சூரியன், இராசிக்கு 9ஆம் இடத்தில் ஆட்சி பெற்றிருந்தால் தந்தைக்கு உஷ்ணம் சம்பந்தமான வியாதிகள் பீடித்திருக்க விதியுண்டு. தோஷமுண்டாகும். நஞ்சை புஞ்சைகளால் இலாபமும் உண்டாகும். பால்பாக்கியம் உண்டாகும். குரு உபதேசம் உண்டாகும். தான தர்மங்கள் செய்வதிலும், அறக்கட்டளை, கல்வி நிலையங்கள், ஆசிரமங்கள் சிவாலயப் பணிகள், பல கோயில் திருப்பணிகள் ஆகியவற்றில் ஆர்வமுண்டாகும். அரசியல் கட்சித் தலைமைப் பதவி கிட்டும்.

இராசிக்கு 9ஆம் இடத்தில் சிம்மத்தில் செவ்வாயிருந்தால், புத்திரர்களால் நன்மையும், பிதுர் பாக்கியத்தையும், பூர்வ புண்ணியத்தையும் அனுபவிக்க விதியுண்டாகும். புத்திர, தோஷமும் உண்டாம்.

இராசிக்கு 9ஆம் இடமான சிம்மத்தில் புதனிருந்தால் கல்வியில் புலமையும், வித்துவமும், சாஸ்திர ஆராய்ச்சிகளில் தேர்ச்சியும் உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடமான சிம்மத்தில் குரு இருந்தால் தாய், தந்தையின் அன்பும், ஆதரவும் உண்டு. குரு உபதேசம் உண்டு. ஆன்மிக நாட்டமும் உண்டு. ஆலயங்கள் அமைத்தல், அறச்சாலை, ஆசிரமம் ஆகியவற்றில் நாட்டமுண்டு. வீடு, மனை, வாகனங்களால் நல்ல பலனும் இலாபமும் உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடமான சிம்மத்தில் சுக்கிரனிருந்தால் தந்தைக்கு ரோகமும், பீடையும் உண்டாகும். பிதுர் பாக்கியங்களை அனுபவிக்கும் யோகமும் உண்டாகும். பால் பாக்கியமும், தான தர்மச் சிந்தனைகளும் உண்டாகும். மூத்த சகோதரருக்கு நல்ல ஆயுள், ஆரோக்கியம் உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடமான சிம்மத்தில் சனி இருந்தால் தந்தைக்கு கண்டமுண்டாகும். கனதனச் பொருள் சேர்க்கையும், இளைய சகோதரத்தால் நல்ல நன்மையும் உண்டாகும். புகழுக்கு இழுக்கும் உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடமான சிம்மத்தில் இராகுகேதுக்கள் இருந்தால் புத்திர தோஷமும், சோபனங்கள் ஆவதில் தடையும் ஏற்படும். இதற்குப் பரிகாரம் செய்ய நற்பலன்களாகும். சிவ பூசையும், சூரியனுக்கு யந்திர, மந்திர, பிரீதியும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

மகர இராசிக்கு 9ஆம் இடத்து அதிபதியான புதன், இராசிக்கு 9ஆம் இடமான கன்னியில் உச்சம் பெற்றிருந்தால், தகப்பனார் நல்ல திரேகத்துடன் நல்ல ஆயுளுடனும் இருப்பார். பிதுர் பாக்கியச் சொத்துக்களை அனுபவிக்கும் யோகமுண்டு. பூமி, காணி, நிலபுலன்கள் சேர்க்கை ஆகியவற்றால் இலாபமும் நன்மையும் உண்டாகும். வண்டி, வாகனம், நிலபுலன்கள் சேர்க்கை ஆகியன உண்டாகும். கல்வியில் புலமை உண்டாகும். ஆசிரமங்கள், மடங்கள் ஆலயங்கள், அறக்கட்டளைகள், சமூகப்பணி நிறுவனங்கள், பொதுச் சேவை மையங்கள் ஆகியவை அமைக்கும் யோகம் உண்டாகும். பால் பாக்கியங்களும் உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடத்தில் குரு சேர்ந்தால், இளைய சகோதரர்கள் மூலம் நன்மையும் இலாபமும் உண்டாகும். பிதுர் பாக்கியத்தை அழிக்கும் நிலையோ, கைவிட்டுப் போகும் நிலையோ, நிலபுலன்களை அடைமானம் வைக்கும் நிலையோ ஏற்படக்கூடும்.

இராசிக்கு 9ஆம் இடத்தில் சுக்கிரன் சேர்ந்தால் தந்தைக்கு ரோக ருணம் உண்டாகும். தொழிலில் நல்ல விருத்தியாகும். பிதுர் பாக்கியங்களை அனுபவிப்பதில் வில்லங்க விவகாரம் உண்டாகும். பால்பாக்கியங்களும் [illegible] உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடத்தில் சனி சேர்ந்தால் கனதனச் (பொருள்) சேர்க்கையும் தந்தைக்கு நல்ல ஆயுளும், குடும்ப ஒற்றுமையும், பிதுர் பாக்கியங்களை அனுபவிக்கும் யோகமும் உண்டு. பால் பாக்கியம் உண்டாகும். தெய்வாலயப் பணிகள் உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடத்தில் இராகுகேதுக்கள் கூடினால் பூமி, பொருள் சேர்க்கையும், பிதுர் பாக்கியங்களை அனுபவிக்கும் யோகமும் உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடத்தில் சூரியனிருந்தால் கண்டங்களும் விபத்துகளும் பிதுர் வர்க்கத்தாருக்குப் பீடையும், துன்பமும உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடத்தில் செவ்வாயிருந்தால் நிலபுலன்கள் சேர்க்கையும் பிதுர் பாக்கியத்தை அனுபவிக்கும் யோகமும் உண்டு. பால் பாக்கியமும் உண்டாகும். பொன், பொருள், நிலபுலன்களால் அதிக இலாபமும் உண்டாகும். ஸ்ரீ மகாவிஷ்ணுவிற்குப் பூசையும், ஆராதனையும் புதனுக்கு யந்திர மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# கும்பம்

கும்ப இராசிக்கு 9ஆம் இடத்து அதிபதியான சுக்கிரன் 9ஆம் இடமான துலாத்தில் ஆட்சி பெற்றிருந்தால் தகப்பனார்க்கு நல்ல ஆயுள் ஆரோக்கியமும் உண்டாகும். பிதுர் பாக்கியங்களை அனுபவிக்கும் நிலை உண்டாகும். குருவின் உபதேசம் உண்டாகும். தான தர்மங்கள். பெண் போக பாக்கியங்கள் ஆகியவையும் உண்டாகும். புத்திர பாக்கியம் உண்டாகும். பால் பாக்கியங்களும் இளம் வயதில் சோபனமும் உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடத்தில் சனியிருந்தால் பிதுர் பாக்கியங்களை அனுபவிக்கும் யோகமுண்டாகும். பால் பாக்கியங்களும் நீச ஸ்திரீகளின் யோகமும் உண்டாகும். தகப்பனாருக்கு கண்டமுண்டு.

இராசிக்கு 9ஆம் இடத்தில் இராகுகேதுக்கள் இருந்தால் பிதுர் வர்க்கத்தாருக்குத் தோஷமுண்டு. புத்திர இலாபங்களும், பால் பாக்கியங்களும் உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடத்தில் சூரியனிருந்தால் மனைவியால் சுகயோகமும். நற்சுகமும் உண்டாகும். பிதுர் பாக்கியங்களை அனுபவிக்கும் யோகமும் உண்டாகும். தகப்பனாருக்குப் பீடையும் வியாதியும் உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடத்தில் செவ்வாயிருந்தால் இளைய சகோதரர்கள் நல்ல ஆரோக்கியத்துடனும், ஆயுளுடனும் இருப்பார்கள். தகப்பனார் விட்ட தொழிலையே செய்ய வேண்டியதிருக்கும். நல்ல இலாபமும் உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடத்தில் புதனிருந்தால் கல்வியில் நல்ல வித்வமும், புலமையும் உண்டாகும். சிறு கண்டங்களும் விபத்துகளும் உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடத்தில் குரு இருந்தால் மூத்த சகோதரர்களால் நல்ல இலாபம் உண்டாகும். குரு உபதேசம், பிதுர் பாக்கியங்கள் ஆகியவற்றை அனுபவிக்கும் யோகம் உண்டாகும். கனதன(பொருள்)ச் சேர்க்கையும் உண்டாகும். நல்வாக்கும் உண்டாகும். வாலிப வயதில் திருமணம் நடைபெறும். ஸ்ரீரெங்கநாதருக்கு அர்ச்சனையும், சுக்கிரனுக்கு யந்திர, மந்திரப் பிரீதிகளும் செய்தால் நல்ல பலனுண்டாகும்.

# மீனம்

மீன இராசிக்கு 9ஆம் இடத்து அதிபதியான செவ்வாய், இராசிக்கு 9ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால், தகப்பனார் நல்ல ஆயுளுடன் இருப்பார். பிதுர் பாக்கியச் சொத்துகளான பூமி, நிலபுலன்கள் ஆகியவை உண்டாம். குருவின் உபதேசமும் தெய்வபக்தியும், வாய்க்கும். சுப்பிரமணியருக்கு, ஆலயமும் மற்றும் ஆசிரமமும் அமைப்பர். பால்பாக்கியம் உண்டாகும். கன தனச் (பொருள்) சேர்க்கையும், குடும்பத்தில் ஒற்றுமையும் உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடத்தில் புதனிருந்தால், பிதுர் பாக்கியங்கள் உண்டாகும். மனைவிக்கு கண்டமுண்டு. பூமியால் நஷ்டங்களும், கஷ்டங்களும் உண்டாகும். வீடு, மனை, வாகனங்கள் ஆகியவற்றால் இடருண்டு.

இராசிக்கு 9ஆம் இடத்தில் குரு இருந்தால், தகப்பனாருக்கு நல்ல புத்தி சாதுர்யம் இருக்கும். பிதுர் பாக்கியச் சொத்துகளும் உண்டாகும். தபஸ்வியாகவும் இருப்பார். தொழிலில் சிரத்தையும் உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடத்தில் சுக்கிரனிருந்தால் இளைய சகோதரம் விருத்தி அடையும். லக்ஷ்மி கடாட்சம் உண்டாகும். ஆனால் சிறு விபத்துகளும், கண்டங்களும் உண்டாகும்.

இராசிக்கு 9ஆம் இடத்தில் சனியிருந்தால் பிதுர் பாக்கியச் சொத்துகளினால் நல்ல இலாபமும், பலனும் உண்டாகும். தகப்பனாருக்குக் கண்டமுண்டு.

இராசிக்கு 9ஆம் இடத்தில் இராகுகேதுக்கள் இருந்தால் பிதுர் பாக்கியங்களை அனுபவிக்க விதியும், தகப்பனாருக்குப் பீடையும், புத்திரங்களால் நஷ்டமும் ஏற்படும்.

இராசிக்கு 9ஆம் இடத்தில் சூரியனிருந்தால் முன் கோபமும் தகப்பனாருக்குப் பீடையும் உண்டாகும். பிதுர் பாக்கியச் சொத்துக்களில் வில்லங்கமும், விவகாரமும் உண்டாகும். ஸ்ரீசுப்பிரமணியருக்கு அர்ச்சனையும் ஆராதனையும், செவ்வாய்க்குப் பிரீதியும் செய்தால் நற்பலன் உண்டாகும்.

# பத்தாம் பாவம்

## மேஷம்

மேஷ இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 10ஆம் இடமான மகரத்தில் ஆட்சி பெற்றிருந்தால், உழவுத்தொழில், எருமை மாடுகள், நிறைய வைத்து வளர்க்கும் தொழில், மற்றும் புஞ்சைக் காடுகளாயிருந்தால் எள், உளுந்து போன்ற விவசாயங்கள் செய்தல், அடிமை வேலை செய்தல், கைத்தொழில், தச்சுத் தொழில், இரும்புத் தொழில், வண்டி வாகனங்கள் செய்தல், அவற்றை இயக்குதல், பொறியியல், நிலம் தோண்டுதல் ஆகியன வாய்க்கும். தாழ்ந்த தொழில், மற்றும் புதை பொருள் ஆராய்ச்சி, பிளம்பர் இயந்திரத் தொழிலும், இரும்புத் தொழில் முதலியன செய்யவும் விதியுண்டு.

இராசிக்கு 10ஆம் இடமான மகரத்தில். சனியுடன் புதன் சேர்ந்தால் (வயர்மேன்) தந்தி மரங்கள், மின் கம்பங்கள் நடும் வேலை, அட்டெண்டர், தட்டச்சு, எழுத்தர் போன்ற வேலைகளில் அமர்வார். பிரிண்ட்டிங் பிரஸில் வேலை செய்வார் அல்லது அதைக் கவனிப்பர். ஜோதிடம், கணிதம், கணக்கு வேலை ஆகியவற்றில் அமர்வார். கர்ம பரிகாரம் செய்யும் புரோகிதத் தொழில் செய்வார். நிபுணத் தொழில்களும் கைத்தொழில்களுமான பூ வேலைப்பாடு, சித்திரம், காவியம் எழுதுதல் முதலியவற்றைச் செய்வார். இந்த நிறுவனங்களில் அடிமை வேலைகளில் இருக்கவும் விதியுண்டு.

இராசிக்கு 10ஆம் இடமான மகரத்தில் சனி இருந்து அதனுடன் குரு கூடினால், குரு சண்டாள யோகம் உண்டாகும். பெரியோர்களை நிந்திப்பார். மந்திரிகளாகவும், ஆலோசகர்களாகவும் லேவாதேவி தொழில் செய்பவராகவும் இருக்க விதியுண்டு. அட்டெண்டர், கணக்கர், எழுத்தர் ஆகிய தொழில்களிலும், நிதி நிறுவனங்கள், கல்விச் சாலைகள், அறக்கட்டளை, அநாதை இல்லங்கள், சிவாலயப்பணிகள், கோயில் திருப்பணிகள், வரி நிறுவனங்கள், வேதங்கள் கற்றறிதல், புரோகிதம் ஆகியவற்றிலும் நல்ல தொழில் செய்து வருமானமும் வர விதி உண்டு. அரசு உத்தியோகம், நீதி சாஸ்திரங்கள் ஆகியவற்றில் ஈடுபாடு உண்டாகும்.

இராசிக்கு 10ஆம் இடமான மகரத்தில் சனியுடன் சுக்கிரன் கூடினால் சங்கீதங்களில் பிரியம் இருக்கும். பாடுதலிலும் பரதம் ஆடுதலிலும் விருப்பம் உண்டாகும். அரசு உத்தியோகத் துறைகளான செய்தி மக்கள் தொடர்பு, விளம்பரம், தொலைக்காட்சி, வானொலி நிலையங்கள் ஆகியவற்றில் பணிபுரிய வாய்ப்புக் கிட்டும். கதை, காவியம், கவிதைகள், பாட்டுகள் எழுதுதல் மற்றும் சினிமா, நாடகம் ஆகியவை துறைகளில் வாய்ப்புகள் உண்டாகும். குதிரைகள் நிறைய வைத்திருக்க யோகமுண்டு, வண்டி, வாகனங்கள் போன்றவற்றை வைத்திருக்க யோகமுண்டு. கணிப்பொறி இயந்திரத் தொழிலிலும் கலா இரசனை, விவசாயத் தொழிலிலும் ஈடுபாடு உண்டாகும். வெள்ளி வியாபாரம், கப்பல் தொழில், இனிப்புத் தன்மை வாய்ந்த பதார்த்தங்கள் செய்தல், வியாபாரம், பால் பண்ணைகள் நடத்துதல், பரிமள சுகந்தங்கள் விற்பனை, ஜவுளி வியாபாரம் கண்ணாடிப் பேன்ஸிப் பொருள் விற்றல் முதலியன வாய்க்கும். அழகான வாகனங்களும் உண்டாகும்.

இராசிக்கு 10ஆம் இடமான மகரத்தில் சனியுடன் இராகுகேதுக்கள் கூடினால், சாராயம், வெளிச்சந்தைகளில் கிடைக்கும் மதுக்கள் தயாரிக்கும் தொழிற்சாலைகளையும், விற்பனை நிலையத்தையும் நடத்துவர். அழுகிய பொருள்களை விற்றல், கருவாடு, மீன் ஆகியவற்றை விற்றல், அழுக்கடைந்த காகிதங்கள், பழைய துணிகள் விற்றல் போன்ற தொழில்கள் செய்வர். மேஜிக், அடிமைத் தொழில், மாமிச வியாபாரம், சிறையில் சேவகம் செய்தல் போன்ற தொழில் செய்வர். அடிமைத்தொழில் செய்வர். மந்திர, தந்திரவாதியாகவும் இருப்பர். இரசாயன மார்க்கங்களை அறிந்திருப்பார். ஆன்மிக நாட்டமுண்டு. செய்யும் தொழிலை விட்டுவிட்டு வேறு வேறு தொழிலுக்கு மாறிப்போகும் நிலை உண்டாகும். தான தர்மங்கள் செய்வதில் பிரியமுண்டாகும். பொது நலச் சேவை மையங்களில் வேலை செய்யவும் ஆசிரமம், மடங்கள், ஆலயங்களில் பணிபுரியவும் விதியுண்டு. தபஸ்வியாகவும், ஞானிகளாகவும் சிலர் இருப்பர்.

இராசிக்கு 10ஆம் இடத்தில் இருக்கும் சனியுடன் செவ்வாய் கூடினால் மந்திரிக்குச் சமமான அதிகாரப் பதவி கிட்டும். ராணுவத்திலும் யுத்த களத்திலும் உத்தியோகம் வாய்க்கும். காவல் துறை, சுரங்கத் தொழில் ஆகியவற்றில் அதிகாரியாகவும் இருப்பார்கள். கட்டிடம், சாலை, பொதுப் பணித் துறை, ஆடு, மாடு போன்ற பண்ணைகள் ஆகியவற்றை நிருவகிக்கும் பொறுப்புண்டாகும். வியாபாரம், மாமிசம் விற்பவராகவும் அறுவைச் சிகிச்சை செய்யும் மருத்துவர்களாகவும் இருக்க விதி உண்டாகும். பொற்கொல்லர், இரும்பு உலைகளில் வேலை செய்பவர், வேட்டுவத் தொழில் செய்பவர், வாகன ஓட்டுநர் ஆகியோராய் இருக்க விதி உண்டாகும்.

இராசிக்கு 10ஆம் இடத்தில் சனியுடன் சூரியன் கூடினால் அரசியலில் கட்சித் தலைவர் பதவி வகிப்பர். மருத்துவர்களாகவும் பள்ளிகளை நடத்தும் நிருவாகியாகவும், ஆலயங்கள், ஆசிரமங்கள், மடங்கள் ஆகியவற்றை நிருவகிப்பவராகவும் மின்சார வாரியத்தில் அதிகாரியாகவும் பொறியியல் வல்லுநர்களாகவும் கல் உடைப்பவர்களாகவும் அரசாங்கத்தில் அடிமை வேலை செய்பவராகவும் இருப்பார்கள். கண் வைத்தியர்கள், நாட்டு மருந்து செய்பவர்கள், வியாபாரம், கோட்டையைப் பாதுகாப்பவர்கள், அரசை ஆள்பவர்கள் அரசு தொடர்புடைய அலுவலர்கள், கோவிலில் பூஜை செய்பவர்கள், வழக்கறிஞர்கள் எனப் பணிபுரிய பல்வேறு வாய்ப்புகள் உண்டாம்.

இனி 10ஆம் இடத்து அதிபதியான சனி 11இல் கும்ப இராசியில் ஆட்சி பெற்றால் பொது நலச் சேவை செய்வர். சுரங்கத் தொழில், பிளம்பிங், கொல்லன் பட்டறை, ஆலைகள், உலைகள், இரும்பு எஃகுத் தொழில்கள், வாகன உதிரிப் பாகம் தயாரித்தல் வியாபாரம், எள் நெய், பிண்ணாக்குகள் மற்றும் டீசல், ஆயில் பெட்ரோலியப் பொருள்கள் முதலியவற்றால் வேலை வாய்க்கும்.

10ஆம் இடத்து அதிபதி சனி 12ஆம் இடமான மீனத்திலிருந்தால் சிவாலயப் பணிகள் செய்யவும் மடம் ஆன்மிக நாட்டமுள்ளவராகவும் ஆலயங்கள், ஆசிரமம் ஆகியவற்றில் பணிகள் செய்யவும் வாய்ப்புண்டாகும். இவர்களுள் சிலர் சந்நியாசியாகவும் இருக்க விதி உண்டாகும்.

இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான சனி மேஷத்தில் நீசம் பெற்றால், செய்தொழிலில் நஷ்டம் ஏற்படும். இரும்பு, எஃகு தொழில், உருக்கு ஆலை முதலியவற்றில் பணிபுரிய வாய்ப்புண்டாகும். பொதுப்பணித்துறை, சாலைப் பராமரிப்பு, ஆடு, மாடு மேய்த்தல், பண்ணைகளை நிர்வகித்தல் ஆகியன வாய்க்கும். அடிமைத் தொழிலையும் வில், அம்பு முதலியவற்றைப் பயன்படுத்தும் தொழிலைச் செய்யக் கூடியவராகவும் இருப்பார்கள்.

இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதி சனி, ரிஷபத்தில் இருந்தால் கணிப்பொறியியல் ஆகியவற்றிலும் வாய்ப்புக் கிட்டும். திரைப்படத் துறையில் நடிப்பு, தொழில் நுட்பம், கதை, காவியம், ஆடல், பாடல் ஆகியவற்றிலும் மற்றும் தொலைக்காட்சி, மின்சார நிலையங்கள், அழகு சாதனங்கள் ஆகியவற்றிலும் சித்திரம், விளம்பர நிறுவனங்கள், பெயர்ப் பலகை ஆகியவற்றில் எழுதும் தொழிலும், சுவரில் வண்ணம் தீட்டுதலிலும் வேலை வாய்ப்பு உண்டாகும்.

இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதி சனி, இராசிக்கு 3ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால், வானொலி, கம்பியில்லாத் தந்தி, கவிதை எழுதுதல், சிற்பம், சிந்தனைச் சிற்பியாகத் வாழ்தல், கனரக எந்திரங்கள், வாகனங்கள், மின்சாரக் கருவிகளை உற்பத்தி செய்தல், பொறியியல் கல்வி, வாகனங்களின் பழுது நீக்குதல் ஆகிய வேலைகள் வாய்க்கும்.

இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 4ஆம் இடமான கடகத்தில் இருந்தால், பால் பண்ணைகள், பசு, கால் நடை வளர்ப்பு, பயிர்த்தொழில், கப்பல்கள், உப்பு, வண்டி வாகனங்கள், மீன் பிடிக்கும் தொழில், வியாபாரம், போன்றவற்றில் தொழில் அமையும். கடத்தல் வியாபாரம், கோவில் சிப்பந்தி வேலை வாய்க்கும்.

இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 5ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால், கட்சித் தலைமைப் பதவி கிட்டும். சொந்த முயற்சியால் மிகவும் கஷ்டப்பட்டுப் பணக்காரர் ஆவார். மின் தொழில், கோவில் பூசை, சிவாலயத் திருப்பணிகள், ஆலயங்கள், ஆசிரமங்கள், மடங்கள் ஆகியவற்றிலும் பொதுநலச் சேவை மையங்களிலும் பணி ஏற்படும்.

இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 6ஆம் இடமான கன்னியில் இருந்தால், சித்திர வேலைப்பாடுகளுடன் கூடிய கைத்தொழில், மரவேலைப்பாடு, விஷ்ணு கோவிலில் பூஜை செய்தல், கட்டிடக்கலை, அச்சு இயந்திரப் பணி, ஜோதிடம் ஆகியவற்றில் நாட்டமும் உண்டாகும்.

இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதி சனி, இராசிக்கு 7ஆம் இடமான துலாத்தில் உச்சம் பெற்றால், கதை, காவியம், கட்டுரை ஆகியவற்றை வரைதல் மற்றும் சுரங்கத் தொழில், எருமைப் பண்ணைகள், இரும்பு, எஃகு ஆலைகள், தொலைக்காட்சி, புகைப்பட நிலையங்கள், இரசாயனக் கலவை, சங்கீதம், நாட்டியம், போக்குவரத்து வாகனங்களைப் பராமரித்தல், மின் அணுக் கருவிகள் போன்றவற்றில் தொழில்கள் வாய்க்கும்.

இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதி சனி, இராசிக்கு 8ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால் போக்குவரத்தைச் சரிசெய்யும் வேலையும்,

இராணுவம், காவல்துறை, சுரங்கம் ஆகியவற்றில் அதிகாரியாக இருக்கும் வேலையும் அமையும். பிளம்பர்கள், கிராம அதிகாரிகள், பயிர்த்தொழிலில், ஈடுபடுபவர்கள், கசாப்புக் கடை வைத்திருப்பவர்கள், அறுவை சிகிச்சை செய்யும் மருத்துவர்கள் ஆகியோராகவும் பணி புரிய விதி உண்டு.

இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதி சனி, இராசிக்கு 9ஆம் இடமான தனுசில் இருந்தால் அரசாங்கத்தில் வேலையும், வணிக வரித்துறை, வங்கி, நீதி மன்றங்கள் ஆகியவற்றில் பணிபுரிய விதி உண்டாகும். மடங்கள், ஆலயங்கள், ஆசிரமங்கள் ஆகியவற்றில் பணிபுரிய விதியுண்டு. சிட்பண்ட்ஸ் சீட்டுக் கம்பெனிகளில் பணி புரியவும், லாட்டரி சீட்டு ஏஜென்ஸிகளாக இருக்கவும் வாய்ப்பு உண்டு.

இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதி சனி, இராசிக்கு எந்தெந்த வீட்டிலிருந்தாரோ அந்தந்தப் பலன்களை அறிந்தீர்கள். 10ஆம் இடத்தை எந்தெந்தக் கிரகங்களின் பார்வை படுகிறதோ அந்தந்தக் கிரகங்களின் பலனாக முதற்பகுதியில் கிரகச் சேர்க்கையில் சொல்லியுள்ள பலன்களை அறியவேண்டும்.

# ரிஷபம்

ரிஷப இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 10ஆம் இடமான கும்ப இராசியில் இருந்தால், எருமைப் பண்ணைகள் வைத்துச் சம்பாதித்தலிலும், பயிர்த்தொழில் செய்வதிலும், பணி வாய்க்கும். கைத்தொழில்கள், சுரங்க வேலைகள், புதைபொருள் ஆராய்ச்சிகளில் பணி, எள், உளுந்து, நல்லெண்ணெய் வியாபாரம், பிண்ணாக்கு, மரச் சாமான்கள், மோட்டார் உதிரிப் பாகங்கள் செய்தல் ஆகிய பணிகள் வாய்க்கும். வாகனம் ஓட்டுதல், காவல் காக்கும் தொழில், வயற்காட்டு வேலை, ஆடு, மாடு மேய்த்தல், கால்நடை அபிவிருத்தி ஆகியவற்றில் .வனம் உண்டாகும். இரும்பு உருக்காலைகள், தொழிற்சாலைகள், ஆகியவற்றில் பணி உண்டாகும். நகர சுத்தித் தொழிலும் வாய்க்கும்.

இராசிக்கு 10ஆம் இடமான கும்பத்தில் சனியுடன் இராகுகேதுக்கள் கூடினால் மந்திர தந்திரங்கள் செய்தல், சேவகத் தொழில் செய்தல், வித்தை விநோதங்கள் செய்தல் ஆகியன வாய்க்கும். மாமிசம், மது, போதைப் பொருள்கள் ஆகியன உற்பத்தி செய்தலும், விற்றலும் அமையும். கருவாடு, மீன், குப்பைகள், இரும்பு, பிளாஸ்டிக், தகரம் போன்ற பொருள்களை விற்கும்

தொழில் அமையும். சிலர் வைத்தியம், சூன்யங்கள் வைத்தல் போன்ற தொழில் செய்வர். நாடுவிட்டு நாடு போய்ச் சம்பாதிக்கும் தொழிலிலோ கபடு செய்யும் தொழிலிலோ, அக்னி முகமாய்ச் செய்யும் தொழிலிலோ, சிறைத் தொழிலிலோ சிலர் ஈடுபடுவார்கள்.

இராசிக்கு 10ஆம் இடமான கும்பத்தில் சனியுடன் சுக்கிரன் கூடினால் சங்கீதம், நாட்டியம், கலை உணர்வு, தொலைக்காட்சி, சினிமா, நாடகம், கவிதை, கதை, ஜவுளி, அழகு சாதனப் பொருள்கள், வெள்ளி வியாபாரம், கப்பல் தொழில், அழகு, அலங்காரப்படுத்தும் தொழில், அழகு நிலையங்களில் பணி, ஆசிரியத் தொழில், சுற்றுலாத் துறை, இரத்தினப் பரீட்சை செய்தல், வாசனை திரவியசாலை, ஆகியவற்றில் பணிபுரிய விதி உண்டாகும். சிலர், பசுக் கூட்டங்கள், பால் பண்ணைகள் வைத்து நடத்துவார்கள்.

ரிஷப இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான சனி, இராசிக்கு 10ஆம் இடமான கும்பத்தில் குருவுடன் சேர்ந்திருந்தால், வணிக வரித்துறை, வங்கிகள், ஆலயங்கள், மடங்கள், ஆசிரமங்கள் ஆகியவற்றில் பணிபுரிவர். பொது நலச் சேவைகளிலும் ஈடுபடுவார்கள். நீதி ஸ்தலங்களிலும் சீட்டுக் கம்பெனிகளிலும், பணி புரிய விதியுண்டு. அரசாங்க உத்தியோகம் புரிவர். சிலர் சந்நியாசியாகவும் வாழ விதியுண்டு. ஆசிரியத் தொழில் உபதேசத் தொழில், மந்திரிக்குச் சமமான பதவி ஆகியவற்றில் இருக்க விதியுண்டாகும். வேதம் ஓதுதலும், கற்பிக்கும் தொழிலும் உண்டாகும்.

இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான சனியுடன் புதன் சேர்ந்தால் கணக்கு வேலை, அச்சகத் தொழில், கட்டிடக் கலை, வியாபாரம் வேட்டையாடுதல் ஆகிய வேலைகளைச் செய்வார்கள். வானொலி, தந்தி, தகவல் தொடர்பு போன்றவற்றில் உத்தியோகமும் செய்வர். விஷ்ணு கோவிலில் சேவார்த்திகளாகவும், இயந்திரங்களையும், மின்சாரக் கம்பிகளையும் உற்பத்தி செய்பவர்களாகவும், வங்கிகளில் எழுத்தர்களாகவும், கதை, காவியம் போன்றவற்றை எழுதுபவர்களாகவும், இருப்பார்கள். இரத்தினக் கற்களைப் பரிசோதிப்பவர்களாகவும் இருக்க விதி உண்டாகும். காகித வியாபாரமும் உண்டாகும்.

இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான சனியுடன் செவ்வாய் கூடினால் இரும்பு எஃகு ஆலைகள், உலைகள், விண்வெளிக் கலங்கள் முதலியவற்றில் பணி புரிவர். துப்பாக்கிச் சுடுதல், பொன் தொழில், கொல்லன் பட்டறை கசாப்புக் கடை, காவல் தொழில், நிலக்கரிச் சுரங்கம், பொதுப்பணித் துறைகள், ஆடு, மாடு வளர்ப்புப் பண்ணைகள், இராணுவத்தில் எல்லைப் பாதுகாப்புப் படையில் உத்தியோகம் ஆகிய தொழில்களைச் செய்வர்.

இராசிக்கு 10ஆம் இட அதிபதியான சனியுடன் கும்பத்தில் சூரியனிருந்தால், அரசியல் கட்சித் தலைவராகவும், மூளை, நரம்பு மருத்துவர்களாகவும், பொது மக்கள் சேவை நிறுவனத்தில் பணிபுரிபவராகவும், அரசாங்கத்தில் பெரிய அதிகாரியாகவும், கல் உடைப்பவர்களாக, விறகுக் கடைக்காரர்களாகவும், நாட்டு மருந்து வியாபாரம் மற்றும் மூலிகைகள், நூல் உற்பத்தி செய்பவர்களாகவும் நிர்வாகியாகவும், இருக்க விதி உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 10க்குடையவர் சனி, 11ஆம் இடமான மீன இராசியில் இருந்தால் தேவாலய வழிபடுமிடம், ஆலயங்கள், ஆசிரமங்கள் ஆகியவற்றில் பணிபுரிவார்கள். வேதாந்தம் பேசுவதும் சிவாலயத் திருப்பணிகள் செய்வதும், அரசாங்கத்தில் கீழ்நிலை உத்தியோகம் செய்வதும், மந்திரிக்குச் சமமான பதவியில் இருப்பதும், நீதி மன்றங்கள், வட்டாட்சி அலுவலகம், வணிகவரித்துறை அலுவலகங்கள், தொழில் பயிற்சிக் கல்வி நிலையங்கள் ஆகியவற்றில் பணிபுரிவதும் உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 10க்குடையவர் சனி 12ஆம் இடமான மேஷத்தில் நீசம் பெற்றிருந்தால், சுரங்கத்தில் அடிமைகளாகவும், பயிர்த் தொழிலில் கூலி வேலை செய்பவராகவும், ஆடு மேய்ப்பவராகவும், பண்ணைகளில் வேலை செய்யும் தொழிலாளிகளாகவும் இருக்க விதி உண்டாகும். மரம் வெட்டுபவர்களாகவும் வண்டி, கார் போன்றவற்றை ஓட்டுபவர்களாகவும், சிலர் சமையல் வேலை செய்பவராகவும், இரயிலில் இன்ஜின் பழுது பார்ப்பவர்களாகவும், கொத்தனாராகவும், ஆராய்ச்சி மையங்களில் பூமியைத் தோண்டுபவர்களாகவும் பணி செய்ய விதி உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 10க்குடையவர் சனி, இராசியிலே இருந்து இவருடன் சந்திரன் கூடுவதால், பயிர்த்தொழில் செய்பவராகவும், நீர்மூழ்கிக் கப்பல்களில் வேலை செய்பவராகவும், ஹோட்டல் வைத்து நடத்துபவர்களாகவும், பாலைக் கடைந்தெடுக்கும் பண்ணைகளில் உத்தியோகம் பார்ப்பவராகவும், மீன், கருவாடு போன்ற வியாபாரங்கள் செய்பவர்களாகவும், கோவில் சிப்பந்திகளாகவும் பொருள்களுக்குத் தரகர்களாகவும், மனநல மருத்துவர்களாகவும் இருக்க விதியுண்டு. வியாபாரிகளாகவும் அழகு சாதனப் பொருள்கள் விற்பவர்களாகவும் இருப்பார்கள்.

ரிஷப இராசிக்கு 10க்குடையவர் சனி, இராசிக்கு 2ஆம் இடத்தில் (மிதுனம்) இருந்தால், கவிதை எழுதுபவராகவும் வங்கிகள், வணிகவரித் துறை, வருமான வரித்துறை, விற்பனை வரித்துறை மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகம் ஆகியவற்றில் பணிபுரிபவர்களாகவும் இருப்பார்கள்.

மேடைப் பேச்சு பேசுபவர்களாகவும், வேதாந்தம், சித்தாந்தம் போன்றவற்றை அறிந்தவர்களாகவும் வைத்தியர்களாகவும் சிலர் இருப்பார்கள். ஓவியம், கம்பியில்லாத் தந்தி, வாகனம் பழுதுபார்த்தல், மின்சாரம், வானொலி, ஆகியவற்றில் உத்தியோகம் பார்ப்பவர்களாக இருப்பார்கள்.

ரிஷப இராசிக்கு 10க்குடையவர் சனி, இராசிக்கு 3ஆம் இடமான கடகத்திலிருந்தால், இயந்திரங்களில் வேலை செய்வர். கப்பல்கள், துறைமுகங்கள், பயிர்த் தொழில்கள் ஆகியவற்றின் மூலம் சம்பாதிப்பார்கள். கடல் கடந்த வியாபாரமான ஏற்றுமதி இறக்குமதி, கோழிப் பண்ணைகள், மாட்டுப் பண்ணைகள், ஆடு வளர்த்தல் உப்பு வியாபாரம், சலவைத் தொழில், மீன் வளர்ப்பு, பால், வெண்ணெய் போன்ற வியாபாரங்கள் ஆகியவற்றில் தொழில் அமைய விதியுண்டு.

ரிஷப இராசிக்கு 10க்குடையவர் சனி, இராசிக்கு 4ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால் கோட்டைகளைப் பாதுகாப்பவர்களாகவும், மருத்துவர்களாகவும், மின்சார வாரியம், குடிசைமாற்று வாரியம், வீடுகட்டும் தொழில் ஆகியவற்றில் நிர்வாகிகளாகவும் இருப்பார்கள். அரசாங்கத்தில் நல்ல பதவியில் இருந்து நற்பெயர் பெறுவார்கள். கோவில் பூசைகள் செய்வர். நாட்டு மருந்து வியாபாரம் பொது நலச் சேவைகள் அரசியல் கட்சித் தலைவர் பதவி ஆகியவற்றில் இருப்பார்கள்.

ரிஷப இராசிக்கு 10க்குடையவர் சனி, இராசிக்கு 5ஆம் இடமான கன்னியில் இருந்தால். வங்கியிலும் ஆட்சியாளர் அலுவலகங்களிலும் பணிபுரிய விதி உண்டாகும். கதை, காவியம், எழுதுவர். அச்சகத் தொழில், தட்டெழுத்துக் கல்வி நிலையங்கள், நிர்வாகத் துறை, பேச்சுத் துறை, சிற்பம் செதுக்குதல், ஜோதிடம் பார்த்தல், வானியல் ஆராய்ச்சி மையங்கள் ஆகியவற்றில் பணிபுரிவர். மின்சார வாரியத்தில் எழுத்தர் மற்றும் பொறியியல் வல்லுநர்களாகவும் இருப்பர். மந்திரிக்குச் சமமான பதவியிலும், ஆலோசகர்களாகவும் இருப்பார்கள்.

ரிஷப இராசிக்கு 10க்குடையவர் சனி, இராசிக்கு 6ஆம் இடமான துலாத்தில் உச்சம் பெற்றிருப்பதால், எருமைகள் நிறைய வைத்துப் பால் பண்ணைகள் நடத்துவர். தொலைக்காட்சி நிலையங்கள், டேப் ரிக்கார்டர்கள் உதிரிப்பாகங்கள், வாகன உதிரிப்பாகங்கள், சொகுசு அழகு வாகனங்கள், சர்க்கரை ஆலைத் தொழில்கள், புகைப்படத் துறை, திரைப்படத்துறை பாடல் பதிவு, எடிட்டிங் மற்றும் தொழில் நுட்பத்துறை முதலியவற்றில் பணிபுரிவர். வெள்ளி, இரும்பு, எவர்சில்வர் பண்ட பாத்திரம், இனிப்பு, வெல்ல கமிஷன்

வியாபாரம் மண்டி முதலியவற்றிலும், மற்றும் எண்ணெய்கள், தைலங்கள், வாசனைத் திரவியங்கள் தொடர்பானவற்றிலும் பணி புரிவார்கள்.

ரிஷப இராசிக்கு 10க்குடையவர் சனி, இராசிக்கு 7ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால் மரம் வெட்டும் தொழில், விறகுக் கடை, மர வேலைப்பாடுகள் நிறைந்த தொழில், மாமிச வியாபாரம், உருக்கு ஆலைகள், ஃபிட்டர், கட்டிட வேலைகள் முதலியவற்றைச் செய்வர். காவல் துறை, எல்லைப் பாதுகாப்புப் படையில் உயர் அதிகாரிகளாக இருப்பார்கள். அறுவை சிகிச்சை செய்யும் மருத்துவராகவும், கசாப்புக் கடைக்காரராகவும், துப்பாக்கித் ஏந்திக் காவல் செய்பவராகவும், அக்கினி சம்பந்தப்பட்டுள்ள அனைத்துத் தொழில்களிலும் பணிபுரியும் தொழிலாளிகளாகவும் இருக்க விதி உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 10க்குடையவர் சனி, இராசிக்கு 8ஆம் இடமான தனுசில் இருந்தால், அரசுத் துறை, நிதி நிறுவனங்கள், நீதி மன்றங்கள், வேதம் ஓதுதல், ஆசிரியத் தொழில், ஆலயங்கள், மடங்கள், ஆசிரமங்கள், அநாதை இல்லங்களை நிர்வகிக்கும் பொறுப்பு, சேவை மையங்கள் ஆகியவற்றில் பணிபுரிவர். சிவாலயத் திருப்பணிகளும் கைங்கர்யங்களும் செய்வர். சிலர் பிரம்மச்சாரியாக இருப்பார்கள். ஆன்மிகத் துறைகளில் சிறந்து விளங்க விதியுண்டு.

ரிஷப இராசிக்கு 10க்குடையவர் சனி, இராசிக்கு 9ஆம் இடமான மகரத்தில் இருந்தால் தகப்பனார் செய்த தொழிலைச் செய்வர். எருமை மாடுகள், பால்பண்ணைகள், விவசாயம், பயிர்த்தொழில்கள் ஆகியவற்றில் ஈடுபடுவர். புஞ்சைக் காடுகளில் எள், உளுந்து ஆகியவற்றைப் பயிரிடுவர். இரும்பு, எஃகு, இயந்திரம் சம்பந்தப்பட்ட தொழில்கள், வாகனத் தொழில்கள், கொல்லன் பட்டறை, வயற்காடு சிவாலயத் திருப்பணிகள், நிர்வாகப் பொறுப்பு, அடுத்தவர் சொத்தைக் கவனிக்கும் பொறுப்பு, ஆலைகள், தொழிற்கூடப் பணி ஆகியவற்றைச் செய்வர்.

# மிதுனம்

மிதுன இராசிக்கு 10க்குடையவரான குரு இராசிக்கு 10ஆம் இடமான மீன இராசியில் ஆட்சி பெற்றிருந்தால், சிறந்த வேதாந்தியாகவும், அனுஷ்டான, ஆசாரத்துடன் வேதம் ஓதும் விற்பன்னர்களாகவும் ஆசிரியத் தொழிலில் செய்பவர்களாகவும் [illegible] பெரிய

உத்தியோகஸ்தராகவும், மதப்பிரச்சாரகர்களாகவும் இருப்பார்கள். வட்டாட்சியர் அலுவலகம், மாவட்ட ஆட்சியாளர் அலுவலகம், நிதித்துறை, நீதித்துறை, வணிக வரித்துறை ஆகியவற்றில் ஆலோசகர்களாக இருப்பார்கள். வீட்டுவசதி வாரியம், வங்கிகள் கஜானாக்கள் முதலியவற்றில் பணிபுரிவர். ஆலயங்களிலும் மடங்களிலும் ஆசிரமங்களிலும், பணிகள் உண்டாக விதியுண்டு.

மிதுன இராசிக்கு 10க்குடையவரான குருவுடன் சுக்கிரன் சேர்ந்தால், திரைப்படத்துறை, நாடகத்துறை ஆகியவற்றில் ஈடுபடுவர். கதை, காவியம், கவிதை ஆகியன புனைவர், அழகு சாதனப் பொருள்களை வியாபாரம் செய்வர். வெள்ளி, புஷ்பராகம், வைரம் போன்றவற்றையும் இரத்தினத்தையும் பரீட்சை செய்பவராய் இருப்பர். அரசியல் கட்சித் தலைவர் பதவிகள் நாட்டை ஆளக்கூடிய பதவிகள், ஆகியன வாய்க்கும். ஜவுளி வியாபாரம், வாசனைத் திரவியசாலை, நிதி நிறுவனங்கள், நீதித் துறைகள் தனம் புரளும் கேந்திரங்கள் ஆகியவற்றில் பணிபுரிவர். சங்கீதம், பரத நாட்டியம், இசை ஆகியவற்றிலும் வல்லுநர்களாக இருப்பார்கள். அழகிய சொகுசு வாகனங்கள் வாய்க்கும். வெள்ளி, தங்கம், பொன் வியாபாரத்தில் ஈடுபடுவர். கப்பல் தொழில் செய்வர். இனிப்புப் பதார்த்தங்கள் செய்வர். கோயில் அர்ச்சகர்களாகவும், பூசாரிகளாகவும் இருக்க விதி உண்டாகும். மதப்பிரச்சாரகர்களாக இருப்பார்கள். மடங்கள், ஆலயங்கள், ஆசிரமங்கள் ஆகியவற்றை நிர்வகிக்கும் பொறுப்பும் தலைமைப் பதவியும் வாய்க்க விதியுண்டு.

மிதுன இராசிக்கு 10க்குடையவரான குரு, சனியுடன் கூடிச் சேர்ந்தால் அரசாங்கத்தில் கடைநிலை ஊழியர்களாகவும், ஆசிரமத்தில் அடியார்களாகவும், கோயில்களில் சேவார்த்திகளாகவும், தொழிலாளிகளாகவும் இருக்க விதி உண்டாகும். எருமைகள் விருத்தியாகும். பால் பண்ணைகள் நடத்துவர். விவசாயத்தில் ஈடுபடுவர். கடலை, எள்ளு போன்ற எண்ணெய் வித்துக்கள் விளைவிக்கும் தொழிலில் ஈடுபடுவர். வேதாந்திகளாகவும், ஞானிகளாகவும், சாஸ்திரங்களில் தேர்ச்சி பெற்ற ஆச்சாரியர்களாகவும் இருப்பார்கள். தொழிலுக்காகச் சதா அலைந்து கொண்டிருத்தல் (ரெஃப்ரசன்டேடிவ்) போன்ற பணிகளில் இருக்க விதி உண்டாகும்.

மிதுன இராசிக்கு 10ஆம் இடமான மீனத்தில் குருவுடன் இராகு கேதுக்களிருந்தால் ஞானிகளாக இருப்பார்கள். சேவகத் தொழிலும், வைத்தியம் பார்க்கும் தொழிலும் உண்டாகும். வேடத் தொழிலும் உண்டாம். வெளி நாடுகளில் போய் பணம் சம்பாதிக்க ஆசை உண்டாகும். சிலர் போய்

சம்பாதித்து வருவார்கள். வைத்தியம் செய்ய விதியுண்டு. அழுகின பொருள்கள், மது, மாமிசம் ஆகியவற்றை விற்பார்கள். கச்சாப் பொருள் வியாபாரமும் உண்டாகும். நகர சுத்தித் தொழிலாளிகளாகவும், மந்திரவாதிகளாகவும், ஏவல், பில்லி, சூன்யம் வைப்பவர்களாகவும் இருக்க விதியுண்டு. சிறைத்துறை அதிகாரிகளாகவும், காவலாளிகளாகவும் இருப்பார்கள்.

மிதுன இராசிக்கு 10ஆம் இடமான மீனத்தில் குருவுடன் சூரியனிருந்தால் இரசவாதம் செய்பவராகவும் மருத்துவராகவும், சித்த மருந்துகள், விற்பவராகவும், பள்ளி நிர்வாகிகளாகவும் அரசுத் துறைகள் அதிகாரிகளாகவும் கோயில் அர்ச்சகர்களாகவும், கண் வைத்தியர்களாகவும், எலும்பு, மூளை, நரம்பு வைத்தியர்களாகவும் இருக்க விதியுண்டு. நூல் உற்பத்திச்சாலை, ஆலயம், ஆசிரமங்கள், பொதுச் சேவை நிறுவனங்கள், வேதப் பாட சாலைகள், அறக்கட்டளைகள், தர்ம ஸ்தாபனங்கள் ஆகியவற்றை நிருவகிக்கும் பொறுப்பும் உண்டாகும். சொந்த முயற்சியில் பணம் சம்பாதித்து முன்னேற்றமான தொழில்களைச் செய்ய விதி உண்டாகும்.

மிதுன இராசிக்கு 10ஆம் இடமான மீனத்தில் குருவுடன் செவ்வாய் சேர்ந்தால் பயிர்த்தொழில், ரோடு, பொது நிறுவனங்கள், நிதி நிறுவனங்கள், நீதி ஸ்தலங்கள், அற நிலையங்கள் ஆகியவை தொடர்பானவற்றில் பணிபுரிவர். அரசுத் துறையில் உயர்ந்த பதவிகளை வகிப்பர். அதிகாரம், கட்டளையிடுதல் போன்ற பதவி வாய்க்கும். காவல்துறை, இராணுவம், பாதுகாப்புப் படைகள், பண்ணைகள் ஆகியவற்றை நிருவகிக்கும் பொறுப்பு வாய்க்கும். பொதுப்பணிகள், சமூக நல நிறுவனங்கள் ஆகியவற்றில் ஈடுபடுவர். பொன், தங்கம், செம்பு ஆகியவற்றை வியாபாரம் செய்வர். இனிப்புப் பதார்த்தங்கள் தயாரிப்பர். பேக்கரி, ஹோட்டல்கள் ஆகிய தொழில்களை நடத்துவார்கள்.

மிதுன இராசிக்கு 10க்குடையவரான குருவுடன் புதன் கூடினால் தனம் புரளுகின்ற கேந்திரங்களில் உத்தியோகம் செய்வர். கதை, காவியம் இயற்றுவார்கள். எழுத்தராக, பதிவு அலுவலர்களாகப் பணி செய்வர். டெலிபோன், வயர்லஸ், வானொலி ஆகியவற்றில் பணி செய்வர். மேடைப்பேச்சாளராகவும் கிராம அதிகாரிகளாகவும் இருப்பார்கள். இயந்திரங்களையும் மின்கருவி உதிரி பாகங்களையும் தயாரித்து விற்பனை செய்யும் தொழில் செய்வர். தாந்திரீகம் செய்வதில் வல்லவராவார். கட்டடக்கலை, வைத்தியத் தொழில், ஆசிரமங்கள், ஆலயங்கள், மடங்கள்

போன்றவற்றில் உத்தியோகம் உண்டாகும். அச்சகக் கலைஞர்களாகவும் வேதாந்திகளாகவும் இருப்பார்கள்.

மிதுன இராசிக்கு 10க்குடையவரான குரு, இராசிக்கு 11ஆம் இடமான மேஷத்தில் இருந்தால் அரசுத்துறையில் அதிகார பதவியும், போலீஸ், இராணுவம் போன்ற துறைகளில் அந்தஸ்தும், கௌரவமும் வாய்க்கும். சாலைப் பராமரிப்பு, உலை வேலை, கொல்லன் பட்டறை வேலை ஆகியவை வாய்க்கும். பொன், வியாபாரம் செய்வர். மந்திரிக்குச் சமமான பதவியில் இருப்பர். வேதங்கள், யாகங்கள் செய்யும் புரோகிதர்களாகவும், ஹோமங்கள், பூசைகள் செய்பவர்களாகவும் இருக்க விதியுண்டு. அறுவை சிகிச்சை மருத்துவர்களாகவும் விண்வெளிக் கலங்கள் செலுத்துபவர்களாகவும் இருப்பார்கள்.

மிதுன இராசிக்கு 10க்குடையவரான குரு, இராசிக்கு 12ஆம் இடமான ரிஷபத்தில் இருந்தால், திரைப்படத்துறை, அழகு நிலையங்கள் இனிப்புப் பதார்த்தங்கள் விற்பனை விநியோகம், தனம் புரளும் கேந்திரங்கள், பொன், வெள்ளி வியாபாரங்கள், கப்பல் கட்டும் தொழில், ஆடு, மாடு, பால்பண்ணைகள் வைத்து நடத்துதல் ஆகியவற்றில் ஈடுபடுவர். ராஜாங்கத்தில் அதிகாரப் பதவி வாய்க்கும். யோகாப்பியாசம், யாகங்கள், ஹோமங்கள், பூசைகள் ஆகியன செய்வார்கள். கோயில்களில் அர்ச்சனை செய்யும் வேலைகிட்டும். வாசனை திரவிய சாலைகள் வைப்பர். பசு, பால், தயிர் ஆகியவற்றையும் கட்டில், மெத்தை ஆகியவற்றையும் பட்டு, பீதாம்பரம் ஆகியவற்றையும் விற்பனை செய்வார்கள். சங்கீத வாத்தியம், பரதநாட்டியம் நாடகம், கடல் வாணிகம் ஆகியவற்றில் ஈடுபடுவார்கள்.

மிதுன இராசிக்கு 10க்குடையவர் குரு, இராசியிலே சந்திரனுடன் கூடி இருந்தால், பொன் தொழில், வியாபாரம், கதை, காவியம், எழுத்தர் உத்தியோகம், கற்பித்தல், சோதிடம், காகித வியாபாரம், நவதானிய வியாபாரம், தூது முதலிய தொழில் புரிவார்கள். சிலர் தபால் துறை, கம்பியில்லாத் தந்தி, டெலிபோன் உப்பு வியாபாரம், கடல் கடந்த வியாபாரம் செய்வர். வேறு சிலர் கப்பல் துறைமுக வேலை, மதப் பிரசங்கம், கிராம அதிகாரம், ஹோட்டல், பொன், முத்தாபரண வியாபாரம், பால் பண்ணைகள், சமையற்கலை, சலவைத்தொழில், பயிர் நிலங்கள், பழவகைகள் ஆகியவற்றில் தொழில்களைச் செய்ய விதியுண்டு.

மிதுன இராசிக்கு 10க்குடையவர் குரு 2ஆம் இடமான கடகத்திலிருந்தால் மீன்பிடிக்கும் இயந்திரப்படகுகள், இசை, நாட்டியம் ஆகியவற்றில் ஈடுபடுவார். தனம்புரளும் கேந்திரங்களில் உத்தியோகம் செய்வார்கள். சிலர்

தபஸ்விகள் ஆவர். சிலருக்கு ஆலயங்களில் பணிபுரியும் வாய்ப்புகள் கிட்டும். கற்பித்தல், விவசாயம், மந்திரிக்குச் சமமான பதவி, கௌரவப் பதவி, கட்டிடத் தொழில், உப்பு வியாபாரம், அரசு உத்தியோகம் ஆகியவற்றை மேற்கொள்வர். ரிஷிகளாகவும் ஆன்மிகவாதிகளாகவும் இருக்கச் சிலருக்கு விதியுண்டு.

மிதுன இராசிக்கு 10க்குடையவர் குரு, 3ஆம் இடமான சிம்மத்திலிருந்தால் ஆசார, அனுஷ்டானங்களில் பற்றுதல் உள்ள ஞானிகளாகவர். அரசியலில் கட்சித் தலைவர் பதவியும், மந்திரிக்குச் சமமான பதவியும் வாய்க்கும். பொது நலச் சேவை மையங்கள், சமூக நலச் சேவை, ஆசிரமங்கள், அறக்கட்டளை நிலையங்கள், வாரியம், சித்த மருத்துவம், மூலிகை மருத்துவங்கள் விற்பனை ஆகியவற்றில் பணி வாய்க்கும். கோயில் அர்ச்சகர், மூளை-நரம்பியல் மருத்துவர், கல் உடைக்கும் தொழிலாளியாகவும் சிலர் இருப்பர்.

மிதுன இராசிக்கு 10க்குடையவர் குரு, இராசிக்கு 4ஆம் இடமான கன்னியிலிருந்தால், தனம்புரளும் கேந்திரங்களில் உத்தியோகம் புரிவர். அச்சக வேலை, ஸ்கிரீன் பிரிண்டிங், திரை ஓவியம் வரைதல், சுவரில் சித்திரம் வரைதல், விளம்பர போர்டுகள் எழுதுதல், மர வேலை செய்தல், நகைச் சுவையாக எழுதுதல், மின்சாரத்துறைப் பணி போன்றவற்றில் ஈடுபடுவர். இரத்தினங்களைப் பரிசோதிப்பர். வியாபாரம் செய்வர். கட்டடக் கலைஞராக, சிற்பிகளாக ஆன்மிக நாட்டமுள்ளவராக, கோயில்களில் அர்ச்சகராக விளங்குவர். பூவேலைப்பாடுகள் மேற்கொள்வர். வேதாந்தத்தில் ஈடுபடுவார்கள். வங்கிகளிலும், தாலுகா அலுவலகங்களிலும் உத்தியோகம் செய்வார்கள். நீதிமன்றங்களில் வழக்குரைஞர்களாகவும் நீதிபதிகளாகவும் இருக்க விதியுண்டு.

மிதுன இராசிக்கு 10க்குடையவரான குரு, இராசிக்கு 5ஆம் இடமான துலாத்தில் இருந்தால், சங்கீதம், நாட்டியம், இசை, பாட்டு, கதை, கவிதைகள், எழுத்துத் துறை எனப் பலவற்றில் ஈடுபடுவர். ஜவுளி, இனிப்பு, அழகு சாதனப் பொருள்கள், பரிமளாதி வாசனைப் பொருள்கள் போன்றவற்றை விற்பர். வெள்ளி, தங்கம், பொன் போன்ற வியாபாரத்தில் ஈடுபடுவர். அரசுத்துறையில் அதிகாரப் பதவி வகிப்பர். கலை உணர்வு இருக்கும். தொலைக்காட்சி, விளம்பர இலாகா, சுற்றுலாத்துறை, வானொலி நாடகங்கள் ஆகியவற்றில் பதவி பங்கு கொள்வார்கள். மேடை, நாடகம், இரத்னப் பரீட்சை யாகங்கள், ஹோமங்கள், பூசைகள், புரோகிதம் ஆகிய தொழில்களைச் செய்வர்.

மிதுன இராசிக்கு 10க்குடையவரான குரு, இராசிக்கு 6ஆம் இடமான விருச்சிகத்திலிருந்தால், செங்கல் சூளை, சேம்பர், உருக்கு ஆலைகள் பெரிய அதிகாரம் கொண்ட பதவிகளாக போலீஸ், இராணுவம், சிறைத் துறை,

உளவுத் துறை ஆகியவற்றில் வகிப்பர். கோவிலில் சேவார்த்திகளாக இருப்பார்கள். ஆடு, மாடுகள் பண்ணையில் நிர்வாகியாக இருப்பார்கள். கொல்லன் பட்டறையிலும் தீயால் செய்யப்படும் தொழிலிலும் ஈடுபடுவர். சேனைத் தலைவர்களாகவும், வஸ்தாத்துக்களாகவும் இருக்க விதி உண்டு.

மிதுன இராசிக்கு 10க்குடையவரான குரு, இராசிக்கு 7ஆம் இடமான தனுசு இராசியிலிருந்தால் ஆசிரியர்களாகவும், வேதபாட சாலை வைத்து நடத்துபவர்களாகவும், ஆசிரமங்கள், மடங்கள், ஆலயங்கள் ஆகியவற்றின் தலைவர்களாகவும், ஆன்மிகச் செல்வர்களாகவும், அரசுத் துறையில் உத்தியோகம், அதிகாரப் பதவிகள் ஆகியவற்றை அனுபவிப்பவராகவும், சொற்பொழிவாளர்களாகவும், மந்திரிக்குச் சமமான பதவி போன்றவற்றிலும் இருப்பார்கள்.

மிதுன இராசிக்கு 10க்குடையவரான குரு, இராசிக்கு 8ஆம் இடமான மகரத்தில் நீசமானால் எந்தத் தொழிலிலும் சிரத்தை இராது. கீழ் நிலைத் தொழிலாளியாகவும், வேலை செய்யப் பிரியம் இல்லாதவராகவும், பொது நல ஊழியராகவும், கோயில்களில் சேவார்த்தியாகவும், மின்சாரத் துறையில் கடைநிலை ஊழியராகவும், புதை பொருள் ஆராய்ச்சியில் மண்ணைத் தோண்டும் வேலை செய்பவராகவும், தனியார் துறைகளில் அட்டெண்டராகவும் இருப்பார்கள்.

மிதுன இராசிக்கு 10க்குடையவரான குரு, இராசிக்கு 9ஆம் இடமான கும்பத்திலிருந்தால், பொது நல ஊழியராகவும், சமூக சேவை செய்யும் நிறுவனங்களை ஏற்படுத்தி நடத்துபவராகவும் இருப்பார்கள். அரசியல் கட்சித் தலைவர் பதவி வாய்க்கும். அறக்கட்டளை, ஆசிரமங்கள், சிவாலயத் திருப்பணிகள் ஆகியவற்றில் நாட்டமிருக்கும். பால் பண்ணைகள், எருமைகளைப் பராமரிப்பு செய்தல், விவசாயத் தொழில் ஆகியவற்றில் ஈடுபடுவார்கள். கடுகு, உளுந்து, எள், எண்ணெய் போன்ற பொருள்களை வியாபாரம் செய்வார்கள். மரவேலைப்பாட்டில் ஈடுபடுவார்கள். வக்கீல்களாகவும், நீதிபதிகளாகவும், சிறைத்துறை அதிகாரிகளாகவும், தனம்புரளும் கேந்திரங்களில் உத்தியோகமும் உண்டாக விதி.

# கடகம்

கடக இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 10ஆம் இடமான மேஷத்தில் ஆட்சி பெற்றால் போலீஸ் இராணுவம், சிறைத்துறை ஆகியவற்றில் அதிகாரிகளாய் இருப்பார்கள். பொதுப்பணித்துறை, சாலைப் பராமரிப்புத் துறை, உருக்கு ஆலை ஆகியவற்றில் வேலை செய்வர். செங்கல் சூளையில் பணி செய்வர். மந்திரிப் பிரதானிகளாகவும், அறுவை சிகிச்சை செய்யும் நிபுணர்களாகவும், கசாப்புக் கடைக்காரர்களாகவும் கிராம அதிகாரிகளாகவும், மரம் வெட்டும் தொழிலில் ஈடுபடுபவர்களாகவும் மந்திர தந்திரங்கள் செய்பவர்களாகவும், துப்பாக்கி சுடும் தொழிலில் ஈடுபடுபவர்களாகவும், வண்டி, வாகனம், கார், இரயில் ஆகியன ஓட்டுபவர்களாகவும் வேட்டையாடும் தொழிலினராகவும், ஆடு, மாடு வளர்ப்பவர்களாகவும் இருக்க விதியுண்டு.

கடக இராசிக்கு 10க்குடையவரான செவ்வாயுடன் சூரியன் கூடினால் அரசுத்துறையில் அதிகாரப்பதவியும், மந்திரிப் பதவியும் வாய்க்க விதியுண்டு. மருத்துவர்களாகவும், மருந்தாளுநர்களாகவும், இரசாயன மருந்துகள், மூலிகை மருந்துகள் ஆகியவற்றை வியாபாரம் செய்பவர்களாகவும் இருப்பார்கள். மூளை நரம்பு வைத்தியர்களாகவும், வக்கீல்களாகவும், கோவில் அர்ச்சகர்களாகவும் இருப்பார்கள். மின்சார வாரியம், வியாபாரம், அரசு உத்தியோகம் அறக்கட்டளைகள், ஆசிரமங்கள், ஆகியவற்றில் பணிபுரிவார்கள். ஆன்மிக நாட்டமும், தானதருமச் சிந்தனையும் இருக்கும். சமூக நல ஊழியர்களாகவும் இருக்க விதியுண்டு.

கடக இராசிக்கு 10க்குடையவரான செவ்வாயுடன் புதன் கூடினால் மொழி பெயர்ப்பாளர்களாகவும் கவிதைபாடும் திறனுள்ளவர்களாகவும், சிந்தனைச் சிற்பிகளாகவும், ஜோதிடர்களாகவும் மேடைப்பேச்சு பேசுபவர்களாகவும், வழக்கறிஞர்களாகவும், பொது வைத்தியர்களாகவும், வேட்டையாடுபவர்களாகவும், பொறியியல் துறையில் வல்லுநர்களாகவும் இருப்பார்கள். மின்சாரத்துறை, ஆலைகள், ஆட்சியாளர் அலுவலகம், வட்டார அலுவலகங்கள் ஆகியவற்றில் உத்தியோகஸ்தர்களாகவும், வல்லுநர்களாகவும், நிபுணர்களாகவும் இருக்க விதி உண்டாகும். கட்டடங்களை நிர்மாணிக்கும் ஆற்றலுள்ளவராகவும் அச்சகத்துறையில் வேலை புரிபவர்களாகவும் இருப்பர்.

கடக இராசிக்கு 10க்குடையவரான செவ்வாயுடன் குரு கூடினால் ஆச்சாரியத்துவம், அரசுத்துறையில் உத்தியோகம், அதிகாரப் பதவிகள் ஆகியன வாய்க்கும். பேக்கரி, ரொட்டிக்கடை, உணவுப் பண்டங்கள், செங்கல் சூளை, கிராம அதிகாரப் பதவி, தங்கம், பொன், கற்கள் வியாபாரம் மந்திரிக்குச் சமமான பதவிகள், ஆலோசனை கூறுதல், வேதங்கள் ஓதுவித்தல், யாகங்கள் ஹோமங்கள் அக்கினி வளர்த்தல், ஆடு, மாடுகள் கொண்ட பண்ணைகள் நிர்வாகம் ஆகியவற்றில் ஈடுபடுவர். முருகன், தக்ஷிணாமூர்த்தி, சிவன் ஆகிய தெய்வங்கள் உள்ள ஆலயங்களில் சேவை புரிவர். கட்ட வேலைகள், பொது சேவைகள், வெளிநாட்டில் வேலை செய்து சம்பாதிக்கும் தொழில் ஆகியவற்றில் ஈடுபடுவர். இரத்தினங்களைப் பரிசோதிக்கும் திறன் இருக்கும்.

கடக இராசிக்கு 10க்குடையவரான செவ்வாயுடன் சுக்கிரன் கூடினால் கவிபாடுதல், சங்கீதம், இசை, நாட்டியம் ஆகியவற்றில் திறமை வாய்க்கும். அரசுத்துறையில் அதிகாரப்பதவி கிட்டும். கப்பல் கட்டும் தொழில், வாசனைத் திரவிய சாலைகள், அழகு சாதனப் பொருள்கள், பட்டு, அலங்கார ஊர்திகள், ஆடு, மாடுகள் கொண்ட பண்ணைகள், கோழிப் பண்ணைகள், பால்பண்ணைத் தொழில், சுற்றுலாத் துறை, விளம்பரத்துறை, இனிப்புப் பலகார விற்பனை, ஜவுளி, தங்கம், வெள்ளி வியாபாரம் ஆகிய தொழில்களில் ஈடுபடுவர்.

இராசிக்கு 10க்குடையவரான செவ்வாயுடன் சனி கூடினால் மாமிச வியாபாரம், சுரங்கத் தொழில், செங்கற் சூளை, கனிப்பொறியியல், இயந்திரங்கள், ஆலைகள், உழவுத் தொழில், வில், அம்பு, துப்பாக்கி ஆகியவற்றைக்கொண்டு வேட்டையாடுதல், கார், இரயில், ஆகியவற்றை ஓட்டுதல். கனரக இயந்திரங்கள், எந்திர உதிரிப்பாகங்கள், ஆகிய தொழில்களில் ஈடுபடுவர். கிராம அதிகாரிகளாய் இருப்பர். மது, சாராயம் போன்ற போதைப் பொருள்களை விற்பனை செய்வர் அல்லது உற்பத்தி செய்வர். தொழிற் கல்வி நிலையங்கள் நடத்துவர். மோட்டார் வாகனங்களை பழுதுபார்க்கும் தொழிலில் ஈடுபடுவர். எள், நெய், எண்ணெய் ஆகியன விற்கும் வியாபாரிகளாகவும் மந்திரவாதிகளாகவும் சேவகத் தொழில் செய்பவராகவும் இருப்பர்.

கடக இராசிக்கு 10க்குடையவரான செவ்வாயுடன் இராகுகேதுக்கள் கூடினால் மாமிச வியாபாரம், செப்பிடு வித்தை, பாம்பாட்டுதல் வேட்டுவத் தொழில், மீன், கருவாடு, மது, சாராயம் ஆகியவற்றை விற்றல் அல்லது காய்ச்சி வடித்தல் ஆகிய தொழில்களைச் செய்வர். வெளிநாட்டில் ஜீவனம்

செய்யவோ தொழில்தொடர்பு கொள்ளவோ விதியுண்டு. இரசாயனப் பொருள்கள் வண்ணக் கலவைகள் ஆகிய தொழில்களில் ஈடுபடுவர். ஆன்மிகத்தில் நாட்டம் உண்டாகும்.

கடக இராசிக்குப் 10க்குடையவரான செவ்வாய் இராசிக்கு 11ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால் ஆடு, மாடு, இறைச்சி வியாபாரம், பண்ணை வைத்து நடத்தும் தொழில், சாக்கரை ஆலைகள், செங்கல் சூளைகள், மற்றும் கார் இரயில், போன்றவற்றை ஓட்டுதல் போன்ற தொழிலில் ஈடுபடுவர். மந்திரவாதிகளாகவும் பேக்கரி, இனிப்புப் பதார்த்தங்கள் ஆகியவற்றைச் செய்பவராகவும் விற்பனையாளராகவும் இருப்பார்கள். வெள்ளி வியாபாரம் செய்பவர்களாகவும் கட்டட ஒப்பந்தக்காரர்களாகவும் வீடு கட்டும் கொத்தனார்களாகவும் சாலைகள் பராமரிப்பாளர்களாகவும் பூங்கா அமைப்பாளர்களாகவும் இருப்பர்.

கடக இராசிக்கு 10க்குடைக்குடையவரான செவ்வாய், இராசிக்கு 12ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால் கணித ஆச்சாரியார்கள், கதை, மற்றும் கவிதை, எழுதுபவர்கள், நகைச் சுவை எழுத்தாளர்கள், சிற்பி, வேதாந்திகள், தோல் வியாதிகள் நீக்கும் மருத்துவர்களாகவும் மரவேலை செய்பவர்கள் இரத்தினங்களைப் பரிசோதிப்பவர்கள், வியாபாரிகள், கோவிலில் சேவார்த்திகள், பொற்கொல்லர்கள், மின்சார உதிரிப் பாகங்களை உற்பத்தி செய்வோர் வள்ளல் ஆகியோர்களாக இருப்பார்கள்.

கடக இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய் இராசியிலே இருந்தால் பொது ஸ்தாபனங்களில் வேலை செய்வர். வெள்ளி, முத்து வியாபாரம், தரகர், சலவைத் தொழில், சமையற் கலை, மனநல மருத்துவம், பயிர்த் தொழில்கள், பால் பண்ணைகள் ஆகியவற்றை மேற்கொள்வர். சிலர் தபஸ்வி ஆவர்.

கடக இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 2ஆம் இடமான சிம்ம இராசியிலிருந்தால், அறுவைச் சிகிச்சை மருத்துவம், கட்சித் தலைவர் பதவி, கௌரவப் பதவிகள், பொதுநலச் சேவை மையங்கள், அறக்கட்டளைகள், பள்ளி நிர்வாகம், அரசாங்கத்தில் உயர்ந்த பதவிகள், அதிகாரம், அந்தஸ்துடன் கூடிய வேலைகள், மின்சார வாரியம், கோவில் தக்கார்கள், நாட்டு மருந்து வியாபாரம், போலீஸ், இராணுவம் போன்றவற்றில் உத்தியோகம் பார்க்க விதி உண்டு.

கடக இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 3ஆம் இடமான கன்னி இராசியிலிருந்தால், குதிரை ஏற்றம், வங்கிகளில் வேலை,

தனம்புரளும் கேந்திரங்களில் உத்தியோகம் ஆகியன வாய்க்கும். சிலர் வேதாந்திகளாகவும், வேட்டையாடுபவர்களாகவும் மரவேலை செய்பவர்களாகவும், கட்டடக் கலைஞர்களாகவும் பொறியியல் வல்லுநர்களாகவும் அணை, ஆறு, பாலம், சாலை, கட்டிடம், போன்றவற்றை நிர்மாணிப்பவர்களாகவும், குழந்தை மருத்துவர்களாகவும், மேடைப் பேச்சாளர்களாகவும் இருப்பார்கள்.

கடக இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய் இராசிக்கு 4ஆம் இடமான துலா இராசியிலிருந்தால், தித்திப்பு வகைகள், ரொட்டி, பன் போன்றவற்றை விற்கும் வியாபாரிகளாய் இருப்பார்கள். கவிதை, காவியம், சினிமா, சங்கீதம் ஆகியவற்றில் ஈடுபடுவர். கோவில்களில் சேவார்த்திகளாகவும் வீடு கட்டும் கொத்தனார்களாகவும் கணிப்பொறியாளர்களாகவும் தங்கம், வெள்ளி, வியாபாரம் செய்பவர்களாகவும் மந்திரிக்குச் சமமான பதவி வகிப்பவர்களாகவும் காடு, கழனி, வயற்களம் முதலியவற்றில் வேலை செய்பவர்களாகவும் இருப்பார்கள்.

கடக இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய் இராசிக்கு 5ஆம் இடமான விருச்சிகத்திலிருந்தால், போலீஸ், இராணுவங்களில் அதிகார, அந்தஸ்து, கௌரவம் சார்ந்த பதவி வகிப்பவர்களாகவும், ஆலைகள், உலைகள் ஆகியவற்றில் உத்தியோகம் செய்பவர்களாகவும், கசாப்புக் கடைக்காரர்களாகவும், வில், அம்பு, துப்பாக்கி ஆகியவற்றை ஏந்திக் காவல் செய்யும் வீரர்களாகவும், மரம்வெட்டும் தொழில் செய்பவர்களாகவும், அறுவைச் சிகிச்சை மருத்துவர்களாகவும் வேடர்களாகவும் கிராம அதிகாரிகளாகவும் இருப்பார்கள். இரசாயனப் பொருள்கள், செங்கல் சூளை, பொதுப்பணித்துறைக் கட்டடங்கள் கட்டுதல் போன்றவற்றில் உத்தியோகமுண்டாகும்.

கடக இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய் இராசிக்கு 6ஆம் இடமான தனுசில் இருந்தால் ஆசார, அனுஷ்டானங்களில் பற்றுதல் ஏற்படும். யாகங்கள், ஹோமங்கள், செய்வர். கோயில் அர்ச்சகர், சேவார்த்திகளாக இருப்பர். போலீஸ், இராணுவம் போன்ற துறைகளில் உயர்பதவிகள் வகிப்பர். மத போதகர்கள் ஆவர். தங்கம், வெள்ளி, வியாபாரத்தில் ஈடுபடுவர். இரத்தினங்களைப் பரிசோதிப்பர். தபஸ்விகளாகவும், வேதங்கள் கற்றுத் தேர்ந்தவர்களாகவும் இருக்க விதி உண்டாகும்.

கடக இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 7ஆம் இடமான மகரத்தில் உச்சம் பெற்றிருந்தால், அதிகாரம் உள்ள பதவியிலும் உத்தியோகத்திலும் இருப்பார்கள். எஃகு, இரும்பு போன்ற உருக்காலைகள்,

கனரக வாகனங்கள், நவீன தொழிற்சாலைகள், தொழில் பயிற்சிக் கல்லூரிகள், பள்ளிகள் ஆகியவற்றில் பணியாற்றுவர். எருமை வைத்திருப்பர். இரும்பு, வண்டி, வாகனங்கள், செங்கல் சூளை, விறகுக் கடை, கச்சாப் பொருள் முதலியவை தொடர்பான வியாபாரத்தில் ஈடுபடுவர். அதிக நிலபுலன்களைக் கொண்டவர்களாகவும், நிலப்பிரபுக்களாகவும் இருக்க விதி உண்டாகும்.

கடக இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய் இராசிக்கு 8ஆம் இடமான கும்பத்தில் இருந்தால் உழவுத் தொழில், வயற்களம், தோட்டம், காய்கறி வியாபாரம், மர வேலை ஆகியவற்றில் ஈடுபடுவர். சிறைத்துறையில் உத்தியோகம் புரிவர். மனநோய் மருத்துவராவர். சாராயம், போதைப் பொருள்கள் ஆகியவற்றில் வியாபாரம் செய்ய சிலருக்கு விதியுண்டு. ஆடு, மாடுகள் கொண்ட பண்ணையில் அடிமையாக இருக்கவும் சிலருக்கு வாய்ப்புண்டு.

கடக இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய் இராசிக்கு 9ஆம் இடமான மீனத்திலிருந்தால், நீதிமன்றங்கள், நிதி நிறுவனங்கள், அடகுக்கடைகள், வட்டிக்குவிடும் தொழில், மந்திரிக்குச் சமமான பதவிகள், வட்டாட்சியர், மாவட்ட ஆட்சியர் நிர்வாகம், கிராமப் பஞ்சாயத்துத் தலைவர் பதவிகள் ஆகியவற்றில் பணி இருக்க விதி உண்டாகும். ஹோமங்கள், யாகங்கள், புரோகிதம் ஆகியவற்றைச் சிலர் செய்வர். நல்லவற்றைக் கூறும் ஆசிரியத் தொழிலில் ஈடுபடுவர். மத பிரச்சாரப் போதகர்கள், மடத்து நிர்வாகிகள் போன்ற பதவிகளில் இருக்க விதி உண்டாகும்.

# சிம்மம்

சிம்ம இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 10ஆம் இடமான ரிஷப இராசியிலிருந்தால் கால்நடைச் செல்வங்கள் பராமரிப்பு, பால் பண்ணைகள், தயிர், நெய், வெண்ணெய், வியாபாரம் ஆகியவற்றில் ஈடுபடுவர். அரசு உத்தியோகம், சங்கீதம், நாட்டியங்கள், கலாரசனை, திரைப்படத்துறைகள் ஆகியவற்றில் ஈடுபடுவர். ஜவுளி, வெள்ளி வியாபாரத்தில் ஈடுபடுவர். இசை நாடகம் மற்றும் தொலைக்காட்சியிலும் ஆர்வமேற்படும். இரத்தினம் வைரம் வியாபாரம் செய்வர். அழகு சாதனப் பொருள்கள், கப்பல், பேக்கரி, இனிப்பகங்கள், பட்டு, மெத்தை, நூல்கள், துணிகள், டெக்ஸ்டைல்கள், பஞ்சு, பருத்தி ஆகிய வியாபாரத்தில் ஈடுபடுவர்.

கணிப்பொறி இயந்திரங்கள், எலக்ட்ரானிக்ஸ் உபகரணங்கள், ஆடம்பரப் பொருள்கள் ஆகியவை தொடர்பான வியாபாரத்தில் ஈடுபடுவர். வாசனைத் திரவிய சாலைகள் நடத்துவர். மின்சார விளக்குகள், அரசு சேவைகள், மின் சாதனப் பொருள்கள், அரசியலில் பொதுத் தொண்டு, வண்ணக் கலவைகள், புகைப்படக் கலை ஆகியவற்றில் ஈடுபடுவர். வேதம் ஓதும் ஆச்சாரியர்கள், ஆசிரியர், அர்ச்சகர், மதபோதகர்கள் ஆகியோராய் விளங்குவர். யோகங்களும் யாகங்களும் ஹோமங்களும் செய்வர்.

சிம்ம இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரனுடன் சூரியன் சேர்ந்தால் அரசுத் துறையில் அதிகாரப் பதவியும், அரசியல் கட்சிகளையும், பொதுநிறுவனங்களையும் நிர்வகிக்கும் பொறுப்பு வாய்க்கும். வைத்தியம் செய்வர். சமூக சேவை நிறுவனங்களில் பணிபுரிவர். பூஜை செய்வார்கள். கோயில் அர்ச்சகர்களாக இருப்பார்கள். நாட்டு மருந்து, விறகு, மரவேலைப் பொருள்கள், மூலிகைகள், புல்கள் ஆகியன விற்கும் வியாபாரிகளாக இருப்பார்கள். கல் உடைப்பவர்களாகவும் மின் துறையில் பணிபுரிபவர் களாகவும், ஆன்மிக நாட்டமுள்ளவர்களாகவும் இருப்பார்கள்.

சிம்ம இராசிக்கு 10-க்குடையவரான சுக்கிரனுடன் செவ்வாய் சேர்ந்தால் காவல்துறை, இராணுவம் ஆகியவற்றில் பணிபுரிவர். ஆடு, மாடுகளை வைத்துப் பராமரிப்பர். வீடு கட்டும் கொத்தனார், மந்திரவாதி, வேடர் ஆகியோராய் விளங்குவர். அலங்கார வண்டி வாகனங்களில் வேலை செய்வர். பொதுப்பணித்துறை, சாலைகள் பராமரிப்பு, தங்கம், வெள்ளி வியாபாரம் ஆகியவற்றில் ஈடுபடுவர். பண்ணைகள் வைத்து நடத்துவர். மந்திரிக்குச் சமமான பதவிகள் அனுபவிக்க விதி உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரனுடன் புதன் சேர்ந்தால் ஜோதிடம், வைத்தியம், கதை, கவிதை, பாட்டு, காவியம் ஆகியவற்றில் ஈடுபடுவர். குதிரை ஏற்றம், ஆச்சாரியர்கள், மொழிபெயர்ப்பாளர்கள், கட்டடக் கலைஞர்கள், சிற்பிகள், மேடைப்பேச்சாளர்கள், வைத்தியர்கள், சாஸ்திர ஞானம் அறிந்தவர்கள், வேதம் ஓதுபவர்கள், புரோகிதர், விஷ்ணுகோவில் அர்ச்சகர்கள், மரவேலைகள் செய்பவர்கள், மருத்துவர்கள், தனம் புரளும் கேந்திரங்களில் உத்தியோகம் புரிபவர்கள் ஆகியோராக விளங்குவர்.

சிம்ம இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரனுடன் குரு சேர்ந்தால், உபதேசம் செய்வர். மந்திரிக்குச் சமமான பதவி வகிப்பர். ஆசிரியர் உத்தியோகம் புரிவர். அரசுத் துறையில் அதிகாரமுள்ள பதவியில் இருப்பர். போதகராகவும் பிரசங்கியாகவும் விளங்குவர். தங்கம், வெள்ளி வியாபாரத்தில்

ஈடுபடுவர். ஹோமங்களும், யாகங்களும் செய்வார்கள். புரோகிதர்களாக இருக்க விதியுண்டு. தனம் புரளும் வருமானவரி, நிதித்துறை, சீட்டுக் கம்பெனி போன்றவற்றில் உத்தியோகம் உண்டு.

சிம்ம இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரனுடன் சனி சேர்ந்தால் கனிப்பொறிகள், கனரக வாகனங்கள், எருமை, இரும்பு வாகனங்கள், சுமை தூக்கும் எந்திரம், வாகனங்கள் ஆகியவை தொடர்பான தொழில்களில் ஈடுபடுவர். தையல், தட்டச்சு, எலக்ட்ரானிக்ஸ், இயந்திரங்களின் உதிரிப் பாகங்கள், கால்நடைப் பண்ணைகள் ஆகியவை வைத்துத் தொழில் நடத்துவர். உழவுத்தொழிலும் கூலித் தொழிலும் செய்ய விதி உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரனுடன் இராகு கேதுக்கள் கூடினால் பிறர் பொருள்களை அனுபவிக்க எண்ணம் உண்டாகும். அடிமைத் தொழில் செய்ய விதி உண்டாகும். மது, மயக்கம் தரும் போதைப் பொருள்கள், சாராயம், மாமிசம் கசாப்புக் கடை, நகர சுத்தி ஆகியவற்றில் ஈடுபடுவர். வெளி மாநிலங்கள், வெளிநாடுகளில் சென்று தொழில் செய்வர். இரசாயனக் கலவைகள், வித்தை, வேடிக்கை ஆகியன செய்து பிழைப்பார்கள், சிறைகளில் உத்தியோகம் பார்க்கலாம்.

சிம்ம இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 11ஆம் இடமான மிதுனத்திலிருந்தால், கணக்கு வேலை பார்ப்பர். கதை, காவியம், இயற்றுவர். எழுத்தர், எழுத்தாளர், பேராசிரியர், தூதுவர், காரோட்டி ஆகியோராய் இருப்பர். சோதிடம், வியாபாரம், அச்சுத் தொழில், காகித வியாபாரம் சிற்பக் கலை, வக்கீல் தொழில், இரத்தினப் பரீட்சை, விஷ்ணுகோயில் சேவை மற்றும் ஆராதித்தல் ஆகியவற்றில் ஈடுபடுவர்.

சிம்ம இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 12ஆம் இடமான, கடகத்திலிருந்தால் பால் பண்ணை, கால்நடைப் பண்ணை, தானிய வியாபாரம், கப்பல் வியாபாரம் உழவுத் தொழில், உப்பு வியாபாரம், இராஜாங்க உத்தியோகம் கிராமத் தலைவர் பதவி, வானொலி, கம்பியில்லாத் தந்தி ஆகியவற்றில் உத்தியோகம் அமையும். நாட்டாண்மையாகவும் ஹோட்டல் மற்றும் பள்ளிக்கூடத்திற்கு வேண்டிய சேவைகள் செய்பவராயும், அறுவைச் சிகிச்சை செய்பவராயும் உபாசகம் செய்பவராகவும் இருப்பார்.

சிம்ம இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசியிலே இருந்தால் கட்சித்தலைவர் பதவி வகிப்பர். ஆன்மிகத்தில் நாட்டமும் கொள்வர். கோவிலில் பூசை, பொதுச் சேவைகள், சமூக சேவைகள், கல் உடைத்தல், எலும்பு, தந்தம் ஆகியவற்றின் வைத்தியம் போன்ற தொழிலில் ஈடுபடுவர். வழக்கறிஞர்களா

கவும், அறிஞர் பெருமக்களாகவும், ஆன்மிகச் சொற்பொழிவாளர்களாகவும், அரசு அதிகாரப் பதவியில் உள்ளோர்களாகவும், மின்சார நிலையங்களில் பணிபுரிபவர்களாகவும் இருப்பர்.

சிம்ம இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 2ஆம் இடமான கன்னி இராசியிலிருந்தால், தபால் தந்தித் துறை, வானொலி, அச்சுக்கூடங்கள், டைப்அடித்தல், வங்கிகள், கார் ஓட்டுதல், ஆகியவற்றில் பணியாற்றுவர். குதிரை ஏறுபவர்கள், குதிரை வண்டிக்காரர்கள். மேடைப் பேச்சாளர்கள் சிற்பிகள் ஆகியோராகப் பணியாற்றுவர். பொதுப்பணித்துறை, பத்திரப் பதிவுத்துறை, பதிவு அலுவலகங்கள், வருமான வரி அலுவலகங்கள் ஆகியவற்றில் பணியாற்றுவர். வானொலி நாடக நடிகர்கள், எழுத்தாளர்கள், ஜோதிடர்கள், மருத்துவர்கள், விஷ்ணு கோவில் அறங்காவலர்கள், மின் சாதனப் பொருள்கள் உற்பத்தியாளர்கள் எனப் பணியாற்றுபவர்.

சிம்ம இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 3ஆம் இடமான துலாத்தில் ஆட்சி பெற்றால், புதைபொருள் ஆராய்ச்சி மையங்கள், சுற்றுலாத் துறை ஆகியவற்றில் பணியாற்றுவர். அலங்கார ஊர்திகள் மூலம் இலாபம் பெறுவர். தொலைக்காட்சி நாடகங்கள், ஆடல், பாடல், கதை, காவியம் போன்ற துறைகளில் நிலையான வாய்ப்பு கிடைக்கும். வெள்ளி வியாபாரம் சிறந்து விளங்கும். பசு, எருமை ஆகியன கொண்ட பால்பண்ணைகள் உண்டாகும். சங்கீதம், பரத நாட்டியம் ஆகியவையும் வாய்க்கும்.

சிம்ம இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 4ஆம் இடமான விருச்சிகத்திலிருந்தால், செங்கல் சூளை, ஆலைகள், சர்க்கரை ஆலைகள், சாலை அமைத்தல், கட்டடம் கட்டுதல், பொதுப்பணித்துறை, ஆகியவற்றில் பணிபுரிவர். பேக்கரி, இனிப்பு பலகார வகைகள், ஆடு, மாடு மேய்த்தல் ஆகிய பணிகளைச் செய்வர். மரச் சாமான்களைச் செய்து விற்பனை செய்வார்கள். அரசுத்துறையில் அதிகாரப்பதவி வாய்க்கும். மந்திர, தந்திரவாதிகளாய் இருப்பார்கள். கிராம அலுவல்கள், பொதுச் சேவைகள், வேட்டுவத்தொழில் ஆகிய தொழில்களைச் செய்வார்கள்.

சிம்ம இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 5ஆம் இடமான தனுசில் இருந்தால் ஆச்சாரியர்களாகவும், உபதேசக் குருக்களாகவும், விவகார ஆலோசனையாளர்களாகவும், அரசருக்குச் சமமான பதவிகள் வகிப்பவர்களாகவும் வேதங்கள் கற்றுத் தெரிந்தவர்களாகவும், தங்கம், வெள்ளி வியாபாரங்கள் செய்பவர்களாகவும் பூ, சித்திர, வேலைப்பாடுகள் தெரிந்தவர்களாகவும் தனம் புரளும் கேந்திரங்களில் உத்தியோகம் செய்பவர்களாகவும் இருக்க விதி உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 6ஆம் இடமான மகரத்தில் இருந்தால் புதைபொருள் ஆராய்ச்சி மையங்கள், சுற்றுலாத்துறை, இரும்பு, எஃகுத் தொழிற்சாலைகள், எருமை மாடுகள் மற்றும் கால்நடைகள் வளர்த்தல், விவசாயம், கூலி வேலைகள், சிறைத்துறை, சேவகத் தொழில், மரவேலை, வெளியூர்களுக்குச் சென்று வேலை செய்தல் ஆகியன அமையும். தைல வியாபாரமும் உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 7ஆம் இடமான கும்பத்திலிருந்தால் இரும்பு, எஃகுத் தொழில்கள், இயந்திரங்கள், மோட்டார் மற்றும் வாகனங்கள் பழுது பார்த்தல், அலங்கார ஊர்திகள் ஆகியவற்றில் ஈடுபட யோகம் உண்டாகும். வாசனைத் திரவிய சாலைகள், எண்ணெய் மற்றும் தைலங்கள் வியாபாரமும் செய்வர். தொழிற்சாலைகள், சர்க்கரை ஆலைகள், பொதுப்பணித்துறை, கனரக எந்திரங்கள், ஆழ்துளைக் கிணறு, விவசாயத் தொழில்கள் ஆகியவற்றில் ஈடுபடுவர்.

சிம்ம இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 8ஆம் இடமான மீனத்திலிருந்தால் யோகாப்பியாசம், சங்கீத வாத்தியம், பரத நாட்டியம், திரைப்படத்துறை, நாடகத்துறை, மக்களைக் கவரும் நடிப்பு, பாட்டு, இசை, கவிதை போன்றவற்றில் புலமை பெற்றிருப்பார்கள். வாசனைத் திரவியங்கள் வியாபாரம், கட்டில், மெத்தை பட்டு, தங்கம், வெள்ளி ஆகியவற்றை விற்கும் வியாபாரத்திலும் ஈடுபடுவர். கப்பல் தொழிலில் ஈடுபடுவர். வக்கீல்கள், நீதிபதிகள், வருமான வரி அதிகாரிகள் ஆகியோராய்த் திகழ்வர்.

சிம்ம இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 9ஆம் இடமான மேஷத்திலிருந்தால் அரசுத்துறையில் அதிகாரப் பதவி, கட்டளையும், கண்டிப்பும் உள்ள இராணுவம் மற்றும் போலீஸ் துறை, கல்வித் துறை ஆகியவற்றில் பணி புரிவர். கிராம அதிகாரி, பொற்கொல்லர், மருத்துவர், வேத சாஸ்திர விற்பன்னர் ஆகியோராய் விளங்குவர். உருக்காலை, பேக்கரி, இனிப்பான பலகார பண்டங்கள் செய்தல், செங்கல் சூளை, சமையல் ஆகிய தொழில்களில் ஈடுபடுவர்.

ஸ்ரீரெங்கநாதருக்கு அர்ச்சனையும் ஆராதனையும் சுக்கிரனுக்கு யந்திர மந்திர பூஜைகளும் பிரீதிகளும் செய்தால் தொழில் விருத்தி ஏற்பட்டு நற்பலன்களை அடையலாம்.

# கன்னி

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 10ஆம் இடமான மிதுனத்திலிருந்தால், கணக்கு வேலைகள், மொழி பெயர்ப்பு, கதை, காவியம், வரலாறு ஆகியவற்றைப் போதிப்பவர்கள் மற்றும் எழுதுபவர்கள், எழுத்தாளர்கள், வானொலி, நிலையங்களில் பணி புரிபவர்கள், அச்சகத் தொழில் உடையவர்கள், ஜோதிடர்கள், வியாபாரிகள், மருத்துவர்கள் ஆகியோராய் இருப்பார்கள். தபால், தந்தி, கம்பியில்லாத் தந்தி, தோல் நோய்களைக் குணப்படுத்தும் வைத்தியம் ஆகிய துறைகளில் பணியாற்றுவர். வேதாந்தம் பேசுபவர்களாகவும், மேடைப் பேச்சாளர்களாகவும் இருப்பார்கள். மர வேலைப்பாடுகள், காகிதத் தொழில், பூ வேலைப்பாடு, மின்சாதன உதிரிப் பாகங்கள் உற்பத்தியும் விற்பனையும், அரசுத்துறையில் சார்பதிவாளர் அலுவலகங்கள் ஆகியவற்றில் பணிபுரிவர். வட்டாட்சியர் அலுவலகம், மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகம், வணிக வரித்துறை ஆகிய அலுவலகங்களில் அதிகாரமிக்க பதவியில் இருக்க விதியுண்டு. இரத்தினப் பரிசோதகராகவும், நிபுணத் தொழில் அறிந்தவராகவும் இருப்பார்கள்.

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதனுடன் குரு சேர்ந்தால், வேத பாட சாலைகளில் ஆசிரியர்களாகவும் பணி செய்வர். கணக்கு வேலை, நீதி மன்றங்கள், நிதித்துறை நிறுவனங்கள், வணிக வரி, வருமான வரி ஆகிய அலுவலகங்களில் பணி புரிவார்கள். அரசுத் துறைகளில் அதிகாரமிக்க பதவியில் இருப்பர். சீட்டுக் கம்பெனிகளிலும் வங்கிகளிலும் உத்தியோகம் புரிவர். புரோகிதம் செய்வர். மறை ஓதுவர்.

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதனுடன் சுக்கிரன் சேர்ந்தால் நிபுணயோகமும் நுண்கலைகளும் வாய்க்கும். தையல் கலை, கதை, கவிதை, காவியம், கணக்குவேலை, வானொலி, தொலைக்காட்சி ஆகிய பணிகளில் ஈடுபடுவர். விளம்பரங்களில் பணி செய்பவராகவும் பள்ளி, கல்விச் சாலைகள் நிர்வாகியாகவும், ஓவியம் அறிந்தவராகவும் விளம்பர போர்டுகள் எழுதுபவர்களாகவும் இருப்பார்கள். கட்டடக் கலைஞர்களாகவும், சிலை வடிக்கும் சிற்பியாகவும், சிரிக்க, சிரிக்க மக்களை மனம் கவர வைக்கும் நகைச்சுவை எழுத்தாளர்களாகவும் இருக்க விதியுண்டு. பாலின நோய்களைக் குணப்படுத்தும் மருத்துவர்களாகவும் இருப்பர்.

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதனுடன் சனி சேர்ந்திருந்தால், அச்சகம், இரும்புத் தொழிற்சாலைகள், பெயிண்ட் வார்னீஸ் போன்ற

தொழில்களில் ஈடுபடுவர். அலுவலகங்களில் அட்டெண்டராகவும், சுரங்க வேலை மற்றும் விவசாயக் கருவிகளைக் கொண்டு மண்ணில் வேலை செய்பவராகவும் இருப்பர். எருமைத் தொழில் விருத்தியடையும். சாராயம், மது, போன்ற மயக்கப் பொருள்கள் தொழிலில் ஈடுபட விதியுண்டு. மோட்டர் வாகன பழுது பார்க்கும் கடைகளில் பணியாற்றுவர். மோட்டார், வாகன டிரைவர்களாகவும், கூலி வேலை செய்பவராகவும் இருக்க விதியுண்டாகும்.

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதனுடன் இராகு கேதுக்கள் கூடினால், மயக்க வஸ்துகளை விற்பனை செய்வர். விகட வினோத வித்தைகள், சாராயம் காய்ச்சி வடித்தல், கச்சாப் பொருள் விற்பனை, மாமிச வியாபாரம், ஆடு விற்பனை ஆகியவற்றில் ஈடுபடுவர். மீன் வியாபாரம், கீழ்க்குலத் தொழில் ஆகியவற்றில் ஈடுபடுவர். வெளிநாடு சென்று உத்தியோகம் பார்க்கும் நிலை உண்டாகலாம்.

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதனுடன் சூரியன் சேர்ந்தால் நிபுணத் தொழில்கள், நூதனத் தொழில் ஆகியன உண்டாகும். அரசுத் துறையில் அதிகாரப் பதவியில் இருப்பர். தாசில்தார் அலுவலகங்களிலும், மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகங்களிலும், அரசாங்க கஜானாக்களிலும் உத்தியோகம் செய்ய விதியுண்டு. நூல் உற்பத்தி செய்வர். பள்ளி நிர்வாகம், ஏஜென்ஸி, மருந்துக்கடை, நாட்டு மருந்துகள் விற்பனை, விறகு விற்றல் ஆகிய தொழில்களில் ஈடுபடுவர்.

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதனுடன் செவ்வாய் கூடினால், மருத்துவர்கள், அறுவைச் சிகிச்சை செய்யும் மருத்துவர்கள், மருந்தாளுநர்கள் ஆகியோராய் இருப்பார்கள். மந்திரிக்குச் சமமான பதவிகள் வாய்க்கும். மேடைப் பேச்சில் ஈடுபடுவர். குதிரை ஏறுபவர்கள், கட்டடக் கலைஞர்கள், சிற்பிகள், ஜோதிடர்கள், சர்ம நோய் மருத்துவர்கள், விஷ்ணு ஆலயங்களில் பூசை செய்பவர்கள், மர வேலை செய்பவர்கள், அக்கினி முகமாகச் செய்யும் தொழிலினர், மொழி பெயர்ப்பாளர்கள், வியாபாரிகள் முதலானோராய் இருக்க விதி உண்டாகும்.

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதன் இராசிக்கு 11ஆம் இடமான கடகத்திலிருந்தால் விவசாயம், பயிர்த்தொழில், கப்பல் வியாபாரம், தங்க வியாபாரம், நெய் - வெண்ணெய் வியாபாரம், காய்கறித் தோட்டம், பால் பண்ணை, பச்சைப் பயறு, வெந்தயம் போன்ற புஞ்சைத் தானிய விவசாயம், மீன் பிடித்தல், சமையல் ஆகிய தொழில்களில் ஈடுபடுவர். கோவில் சிப்பந்திகள், கணக்கு வேலை செய்பவர்களாகவும், ஹோட்டல் வைத்திருப்பவர்களாகவும், வெள்ளி, முத்து, வியாபாரம் செய்பவர்களாகவும்

முத்துக் குளிப்பவர்களாகவும், மனநல மருத்துவர்களாகவும் சங்கீதம், இசை, கலைப்பிரியர்களாகவும் இருக்க விதியுண்டு.

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதன் இராசிக்கு 12ஆம் இடமான சிம்மத்திலிருந்தால் வேதாந்திகளாகவும், சிற்பிகளாகவும், வைத்தியர்களாகவும் இருப்பார்கள். சித்தாந்தத்தில் தொடர்பும் உண்டாகும். கிராம அதிகாரிகளாகவும் அரசு அதிகாரிகளாகவும் பள்ளி நிர்வாகிகளாகவும், கண் வைத்தியர்களாகவும், சிற்பிகளாகவும் ஆன்மிக நாட்ட முள்ளவர்களாகவும் மடங்கள், ஆலயங்கள் ஆசிரமங்களில் கணக்கு வேலை செய்பவர்களாகவும் மின்சாரத் துறையில் தொழில் புரிபவராகவும் இருக்க விதி உண்டாகும்.

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதன் இராசியிலே இருந்தால் கட்டடக் கலைஞர்களாகவும், பொறியியல் வல்லுநர்களாகவும் கணிப்பொறியியல், வானொலி, கம்பியில்லாத் தந்தி, தூதரகம், தபால் துறை, மின்சாரத் துறை, வங்கிகள், வருமான வரி, விற்பனை வரி அலுவலகங்கள், வட்டாட்சி, அலுவலகங்கள், அரசு கஜானாக்கள், தனம் புரளும் கேந்திரம் ஆகியவற்றில் உத்தியோகம் உண்டாகும். மருத்துவர்கள், இரத்தினப் பரிசோதகர், சிற்பிகள், ஜோதிடர், வானியல் ஆராய்ச்சி நிபுணர்கள், வேதாந்திகள், விஷ்ணுகோயில் அர்ச்சகர்கள் ஆகியோராய்த் தொழில் செய்ய விதி உண்டாகும்.

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 2ஆம் இடமான துலாத்திலிருந்தால், எழுத்தாளர்களாகவும், காவியம், கதை இயற்றுபவராகவும், வண்ணக்கலவையில் ஓவியம் தீட்டுபவராகவும், வானொலி-தொலைக்காட்சி நடிகர்களாகவும் விளங்குவர். தந்தி, தபால்துறை, கம்பியில்லாத் தந்தி, சித்திரப் பூ வேலைப்பாடுகள், கணக்குவேலை, மரத்தில் சித்திரங்கள் செதுக்குதல் ஆகிய துறைகளில் பணிபுரிவர். மிக்ஸி, கிரைண்டர் போன்ற இயந்திரங்களையும், காமிரா போன்ற உபகரணங்களையும், கடிகாரம், கால்குலேட்டர் ஆகியவற்றையும் பழுதுபார்க்கும் தொழிலில் ஈடுபடுவர்.

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 3ஆம் இடமான விருச்சிகத்திலிருந்தால், செங்கல் சூளை, சேம்பர், ஓடு, மரம் முதலிய வியாபாரத்தில் ஈடுபடுவர். கியாஸ் ஸ்டவ் அடுப்புகள், மண்ணெண்ணெய் அடுப்புகள், மிக்ஸி, கிரைண்டர், குக்கர் போன்றவற்றை விற்கவும் பழுது பார்த்துத் தரவும் வாய்ப்புண்டாகும். செய்யும் தொழிலால் நல்ல பேரும் புகழும் அடைய விதியுண்டு. காது ஒலி வாங்கும் கருவியையும், மைக், ஆம்பிளிபையர் போன்ற கருவிகளையும், எலக்ட்ரானிக்ஸ் பொருள்கள்

போன்ற நுண்கலைப் பொருள்களையும், பழுது பார்த்துத் தரும் தொழில் உண்டாகும்.

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 4ஆம் இடமான தனுசில் இருந்தால், வேதம் ஓதுவர். பள்ளி, அறக்கட்டளை, ஆலயங்கள், மடங்கள் ஆகியவற்றில் உத்தியோகம் ஏற்பர். அவற்றின் தலைமை அல்லது நிர்வாகப் பொறுப்புகளை ஏற்பார்கள். புரோகிதம் கோயில் அர்ச்சனை, சிவவிஷ்ணு பூசை செய்தல், அரசுத் துறையில் மந்திரிக்குச் சமமான பதவி, அதிகாரமுள்ள பதவி ஆகியன வாய்க்கும். தங்கம், பொன் வியாபாரமும் வாய்க்கும்.

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 5ஆம் இடமான மகரத்திலிருந்தால் சேவக விருத்தியுண்டாகும். இரும்பு, எஃகு மற்றும் இயந்திரச் சாலைகளில் உத்தியோகம் கிட்டும். பராமரிப்பு, சித்திர வேலைப்பாடு உடைய மரவேலைகள், வாகனங்கள் பழுது பார்த்தல், விவசாயக் கருவிகள் பழுது பார்த்தல் ஆகியவற்றில் ஈடுபடுவர். தொழிற்பயிற்சி கல்வி நிலையங்கள், பால் பதனிடும் இயந்திரச் சாலை ஆகியவற்றில் பணி கிட்டும். அரசு அலுவல்களில் கடைநிலை ஊழியர்களாக இருப்பர். எருமை விருத்தியாகும். மதுவகை தயாராகும் தொழிற்சாலைகளில் பணிபுரிவர். வெளிநாட்டு மதுவகைகள் ஏஜென்ஸீயும், விற்பனை உரிமையும் வாய்க்கும்.

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 6ஆம் இடமான கும்பத்திலிருந்தால் சிறையில் உத்தியோகம் பார்க்கும் விதி உண்டாகும். எருமை மாடுகள், மற்றும் பண்ணைகளை நிர்வகிக்கும் பொறுப்புண்டாகும். அங்கு கணக்கு வேலை செய்ய வாய்ப்புக் கிட்டும். விவசாய எந்திரங்கள் பராமரிப்பு, மது விற்பனைகள், ஏஜென்ஸிகள், இரும்பு மற்றும் எஃகு உருக்காலைகள், எண்ணெய் ஆட்டும் செக்கு, மற்றும் அதைச் சார்ந்த இயந்திரங்கள், நெய், வெண்ணெய், எண்ணெய் வியாபாரம் ஆகியவற்றில் ஈடுபட விதி உண்டு.

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 7ஆம் இடமான மீனத்திலிருந்தால், ஓதுவார்களாகவும், ஆலயங்களில் சேவார்த்திகளாகவும் கோயில் அர்ச்சகர்களாகவும், அறங்காவலர்களாகவும், நிர்வாகிகளாகவும் இருக்க விதியுண்டு. மடங்கள், ஆசிரமங்கள் ஆகியவற்றின் நிர்வாகம் பார்க்க விதி உண்டாகும். புரோகிதர்களாகவும் வேதம் ஓதுபவர்களாகவும், சித்தாந்திக ளாகவும் சாஸ்திரிகளாகவும், பண்டாரங்களாகவும், மடத்தலைவர்களாகவும் இருப்பர். அரசுத்துறையில் மதிப்பும் மரியாதையும் உள்ள பதவியில் இருப்பர்.

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதன் இராசிக்கு 8ஆம் இடமான மேஷத்திலிருந்தால் மண்பாண்டங்கள் செய்வார்கள். அக்கினி முகமாய்ச் செய்யும் நுண்கலைகளில் ஈடுபடுவர். தங்கம், வெள்ளி வேலைகள், சரிகை வேலைகள், சிற்பம் செதுக்குதல், வளர்ப்புப் பொம்மைகள் செய்தல், அரசுத்துறையில் அதிகாரமிக்க பதவி ஆகியவற்றில் ஈடுபடுவார்கள். இராணுவத்தளம், ஆகாய விமானங்கள் ஆகியவற்றில் பணி செய்வர். தூதுவர்களாகவும் கவிஞர்களாகவும் காகிதத் தொழில், வியாபாரம் செய்பவர்களாகவும் மோட்டார் வாகனத்தொழில் செய்பவர்களாகவும் இருப்பார்கள்.

கன்னி இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 9ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால், கதை, கவிதை, எழுதுபவர்களாகவும், ரேடியோ, தொலைக்காட்சி, நடிகர்களாகவும் தொழில் நுட்பக்கலைஞர்களாகவும் இருப்பர். சினிமா, நாடகம் போன்ற துறைகளில் சிறந்து விளங்க விதியுண்டு. பஞ்சு, பருத்தி, நூல், பட்டு மெத்தை, டெக்ஸ்டைல்ஸ் வியாபாரத்தில் ஈடுபடுவர். திரைப்பட விநியோகத்தில் ஈடுபடுவர். சுவைமிகு பானங்கள், அழகு சாதனப் பொருள்கள் ஆகியவற்றை விற்பவர்களாகவும் உற்பத்தியாளராகவும் இருப்பர். சலவை சோப்புகள், தபால், தந்தி, இரயில், பூ வியாபாரம் காய்கறி வியாபாரம், ஏஜென்ஸி ஆகிய தொழில்களில் ஈடுபடுவர். ஆயுள் பாதுகாப்பு நிறுவன நிதியிலும், தனம்புரளும் கேந்திரங்களிலும் உத்தியோகம் கிடைக்க விதியுண்டு. ஸ்ரீரங்கபெருமானுக்கு அர்ச்சனையும், புதனுக்கு யந்திர, மந்திர, பிரீதியும் செய்ய உத்தமப் பலனுண்டு.

# துலாம்

துலா இராசிக்கு 10க்குடையவரான சந்திரன் இராசியிலே இருப்பதால், கல்வி, ஞானம், கலை ஆகியவீற்றில் ஈடுபாடும், ரசனையும் உண்டாகும். கதை, காவியம், கவிதை ஆகியன எழுதுபவர்களாகவும் சினிமா, நாடக நடிகர்களாகவும் தொழில் நுட்பக் கலைஞர்களாகவும், ஆசிரியர்களாகவும், திரைப்பட விநியோகஸ்தர்களாகவும் மற்ற ஏஜென்ஸிகளாகவும், பொருள்களின் தரகர்களாகவும், இரத்தினப் பரிசோதகர்களாகவும், இசை, நாட்டியம், ஆடல், பாடல், சங்கீதம் ஆகியவற்றில் தேர்ச்சி பெற்றவர்களாகவும் இருப்பார்கள். பால் பண்ணைகள், வாசனைத் திரவிய சாலைகள், கப்பல் வியாபாரம், ஏற்றுமதி இறக்குமதி, ஜவுளி உற்பத்தி,

விற்பனை, பட்டு, மெத்தை, நவரத்தினக் கற்கள், வியாபாரம் ஆகிய துறைகளில் ஈடுபடுவர்.

நவதானிய வியாபாரிகள், பூ வியாபாரிகள், சித்திரப் பூ வேலைப்பாடுகள் செய்பவர்கள், பெயிண்டர்கள், ஓவியர்கள், மனநோய் மருத்துவர்கள் ஆகியோராகவும் விளங்குவார்கள். பயிர்த்தொழில், விவசாயம், கடத்தல் வியாபாரம், நெய், வெண்ணெய், வியாபாரம் ஆகியவற்றில் ஈடுபடுவர். பொது நிறுவனங்களில் கௌரவ உத்தியோகம் பார்ப்பர். குதிரை வண்டிக்காரர்கள், சமையற்காரர்கள், மீன் விற்பவர்கள், சலவை செய்பவர்கள் பெரிய தபஸ்விகள் ஆகியோராகவும் இருக்க விதி உண்டாகும்.

துலா இராசிக்கு 10ஆம் இடமான கடக இராசியில் சூரியனிருந்தால் அரசியல் கட்சிகளுக்குத் தலைமை ஏற்கவும், பொது சேவை மையங்கள், சமூக சேவைகள், ஆசிரமங்கள், ஆலய அர்ச்சனை, சிவாலயப் பணிகள் ஆகியவற்றை ஏற்பர். பள்ளிக்கூட, கல்லூரி நிர்வாகிகளாகவும், மின்சார வாரியத்தில் வேலை செய்பவர்களாகவும், வைத்தியர்களாகவும் நாட்டு மருந்து வியாபாரம் செய்பவர்களாகவும், மூலிகை மருத்துவர்களாகவும், கோட்டை கொத்தளங்களில், ரோந்துப் பணியில் ஈடுபடும் காவலர்களாகவும் இருப்பார்கள். பாதுகாப்புப்படையில் உத்தியோகம் உண்டாகும். சொந்தத் தொழிலால் முன்னேற்றம் உண்டாகும். சிரசு மருத்துவர்களாகவும் பல மருத்துவம் தெரிந்தவர்களாகவும், தத்துவ ஞானிகளாகவும், தபசிகளாகவும், கிராமப் பஞ்சாயத்துத் தலைவர் பதவி வகிப்பவர்களாகவும் இரசவாதம், தெரிந்தவர்களாகவும் இருக்க விதி உண்டாகும்.

துலா இராசிக்கு 10ஆம் இடமான கடக இராசியில் செவ்வாய் நீசமாகி இருந்தால், அக்கினி, கொல்லன் பட்டறையில் கூலியாளாக வேலை செய்யும் நிலை உண்டாகலாம். செங்கற்சூளை, மண்பாண்டங்கள் செய்யும் வேலை, யுத்தகளத்தில் வீரர்களுக்கு ஆயுதம் மற்றும் உணவு வழங்கும் வேலையும், அரசுத்துறையில் கடைநிலை ஊழியர் பணியும், வாய்க்கும். நஞ்செய், புஞ்சைகளில் கூலி வேலை செய்வர். மாமிச வியாபாரம், நர்ஸ், ரோடு - பாலங்கள் கட்டுதல் போன்ற பணிகளும் வாய்க்கும். ஆடு மாடு மேய்ப்பர். இரும்பு எஃகு ஆலைகளில் பணிபுரிவர்.

துலா இராசிக்கு 10ஆம் இடமான கடக இராசியில் புதன் இருந்தால் குதிரை வண்டிக்காரர்கள், ஆசிரியர்கள், புரோகிதர்கள், விமான ஓட்டிகள், கப்பல் ஓட்டிகள், சிற்பிகள், ஜோதிடர்கள், நகைச்சுவை எழுத்தாளர்கள், சிந்தனைச் சிற்பிகள், கவிஞர்கள், கைத்தொழிற் கலைஞர்கள் ஆகியோராய் விளங்குவர். சித்திர வேலைப்பாடு, பின்னல்கள், மரவேலை மற்றும் கடிகாரம், ரேடியோ,

டி.வி போன்ற நுண் பொருள்களைப் பழுது பார்த்தல் வானிலை ஆராய்ச்சி மற்றும் வானவியல் சாஸ்திரம் போன்றவற்றில் உத்தியோகம் வாய்க்கும்.

துலா இராசிக்கு 10ஆம் இடமான கடக இராசியில், குரு உச்சம் பெற்று இருந்தால் நல் ஒழுக்கமுள்ள வேதம் ஓதும் அந்தணர்களாகவும், சிறந்த தபஸ்விகளாகவும், அரசுத் துறையில் அந்தஸ்தும் அதிகாரமும் உள்ள பதவியில் உள்ளவர்களாகவும், பொது நிறுவனங்களில் கௌரவ உத்தியோகம் பார்ப்பவர்களாகவும் இருப்பார்கள். தங்கம், பொன், நவரத்தினம், தேன், பால், வெண்ணெய், நெய், நவதானியங்கள், கமிஷன் மண்டி வியாபாரங்கள் போன்றவற்றில் ஈடுபடுவர். வெல்லம், கடலை, சீரகம் போன்ற வியாபாரமும் உண்டாகும். பச்சை, வெள்ளை, மஞ்சள் நிறங்களில் உள்ள பழம், காய் வியாபாரங்களில் ஈடுபடுவார்கள். மதப்பிரசங்கம் செய்வர். கடல் உப்பு, வியாபாரம் உண்டாம்.

துலா இராசிக்கு 10ஆம் இடமான கடக இராசியில் சுக்கிரனிருந்தால், சங்கீதம், பரத நாட்டியம் ஆகியவற்றில் தேர்ச்சியுண்டாகும். பயிர்த்தொழில் கிராம அதிகாரப் பதவிகள், பசு, பால், நெய் போன்ற வியாபாரங்கள் ஆகியன உண்டாம். குதிரை வண்டி ஓட்டுபவர்களாகவும் இருக்க விதி உண்டாகும். கப்பல் வியாபாரம், ஏற்றுமதி இறக்குமதி போன்றவையும் உண்டாகும். பள்ளிக் கூட நிர்வாகிகளாகவும் இருக்க விதி உண்டாகும். சினிமா, சங்கீதம், நாடகக் கலைஞர்களாக இருக்க விதி உண்டாகும்.

துலா இராசிக்கு 10-ஆம் இடமான கடக இராசியில் சனியிருந்தால் பால்பண்ணைத் தொழிலும், கடத்தல் தொழிலும் வாய்க்கும். பிறர் பணத்தைக் கொண்டு தொழில் நடத்துவார்கள். மனநல மருத்துவர்களாகவும், தரகர்களாகவும், எருமைகளைப் பராமரிப்பவர்களாகவும் பயிர்த் தொழில் செய்பவர்களாகவும் மீன் பரவர்களாகவும் சலவைத் தொழில் நடத்துபவர்களாகவும் இருப்பார்கள். ஹோட்டல்கள், இரும்பு தொழிற்சாலைகள், இயந்திரசாலைகள், வண்டி வாகனம் பழுது பார்த்தல் ஆகியவை போன்ற தொழில்களும் செய்ய விதி உண்டாகும்.

துலா இராசிக்கு 10-ஆம் இடமான கடக இராசியில் இராகுகேதுக்கள் இருந்தால் வெளிநாடுகளில் போய் வியாபாரம் செய்பவர்களாகவும், மேஜிக் செய்பவர்களாகவும் ஆட்டுப் பண்ணைகளைப் பராமரிப்பவர்களாகவும் இருப்பார்கள். மதுவகைகளின் தயாரிப்பும் விற்பனையும், மீன் கருவாடு மாமிசம் போன்ற தொழிலும் உண்டு. இரசாயனக் கலவைகள், பூச்சிக்கொல்லி மருந்துகள், ஈயம், துத்தநாகம் இரசாயன உரங்கள் விற்பனை, தயாரிக்கும் தொழிற்கூடங்களில் உத்தியோகம் ஆகியன வாய்க்கும். கப்பல்

வியாபாரம் அசைவ உணவு விடுதி, வண்ணக்கலவைகள், பெயண்ட் மற்றும் வார்னிஷ், சிமெண்ட் வியாபாரம் ஆகியவற்றில் ஈடுபடுவர். கால் மிதியடிகள் தரைவிரிப்புகள் போன்ற வியாபாரமும் செய்ய விதி உண்டாகும். பராசக்தி அல்லது பார்வதி தேவி, விநாயகர், துர்க்கை போன்ற தெய்வங்களுக்கு அர்ச்சனையும், சந்திரனுக்கு எந்திர மந்திர பிரீதியும் செய்ய நல்ல பலனுண்டாக விதி உண்டாகும்.

# விருச்சிகம்

விருச்சிக இராசிக்கு 10க்குடையவரான சூரியன், 10ஆம் இடமான சிம்ம இராசியில் ஆட்சி பெற்றிருந்தால், அரசுத்துறையில் அதிகாரமும், அந்தஸ்தும் உள்ள உத்தியோகமும், பதவியும் கிடைக்க விதியுண்டு. சிரசு வைத்தியர்களாகவும் பல் மருத்துவர்களாகவும், பள்ளி, கல்வி நிலையங்கள், கல்லூரிகளில் நிர்வாகிகளாகவும் இருக்க விதி உண்டாகும். கோட்டை, கொத்தளங்களைப் பாதுகாக்கும் காவல்காரர்களாகவும், அதிகாரிகளாகவும் இருக்க விதியுண்டு. கோயில் அர்ச்சகர்கள், ஆலயங்கள் பராமரிப்பு, சிவாலயத் திருப்பணிகள், மடங்கள், ஆசிரமங்கள் ஆகியவற்றின் தலைமைப் பொறுப்பு, தருமஸ்தாபனங்கள், அநாதை இல்லங்கள், அறக்கட்டளை நிறுவனங்கள் ஆகியவற்றின் நிர்வாகப் பொறுப்பு ஆகியவற்றை ஏற்க விதி உண்டாகும். நாட்டு மருந்து வியாபாரமும், மூலிகை மருந்து வியாபாரமும் செய்வர். வழக்கறிஞர்களாகவும் விறகுக் கடைக்காரர்களாகவும், மரவேலை செய்பவர்களாகவும் இருப்பார்கள். மின்சார வாரியம், அரசு ஆட்சித் துறை போன்றவற்றில் உத்தியோகம் செய்பவர்களாகவும் கிராமத் தலைவர் பதவி வகிப்பவர்களாகவும் இருப்பர்.

விருச்சிக இராசிக்கு 10ஆம் இடமான சிம்ம இராசியில் சூரியனுடன் செவ்வாய் இருந்தால், தீயணைப்புத் துறையில் அதிகாரியாகவும் போலீஸ், இராணுவம், போன்றவற்றில் உத்தியோகம் பார்ப்பவராகவும் இருப்பர். மின்வாரியம், செங்கல் சூளை, ஆகியவற்றில் பணி செய்வர். உருக்காலைகள், கிராம அதிகாரிகளாகவும் கசாப்புக் கடைக்காரர்களாகவும் இருப்பர். விண்வெளியில் ராக்கெட், ஏவுகணைகள், விமானங்கள் ஆகியவற்றைச் செலுத்துதல் போன்ற பணியிலும் இருப்பார்கள். ரண அறுவைச் சிகிச்சை மருத்துவர்கள், துப்பாக்கி ஏந்திக் காவல் புரியும் காவலாளிகள், மந்திரவாதிகள், தந்திரவாதிகள், வாகனங்கள் ஓட்டுபவர்கள் ஆகியோராகவும் இருப்பார்கள்.

விருச்சிக இராசிக்கு 10ஆம் இடமான சிம்ம இராசியில் சூரியனுடன் புதன் கூடினால் மொழிபெயர்ப்பாளர்கள், கட்டடக் கலைஞர்கள், அச்சு இயந்திரச் சாலைகளில் பணி செய்பவர்கள், மேடைப் பேச்சாளர்கள், கடிகாரம் ரேடியோ, டி.வி. மிக்ஸி, கிரைண்டர் மைக் ஆகியவற்றைப் பழுது பார்ப்பவர்கள், மற்றும் இயக்குபவர்கள் என பலவாறு இருப்பார்கள். மரவேலைப்பாடு அறிந்த தொழிலாளர்கள், வேதாந்திகள், சித்தாந்திகள், இரத்தினப் பரிசோதகர்கள், அரசுத்துறையில் மந்திரிக்குச் சமமான பதவிகள், வகிப்பர். மூலிகை மருத்துவர்கள், வக்கீல்கள், கல் உடைப்பவர்கள் ஆகியோராகவும் பலர் பணியாற்றுவார்கள்.

விருச்சிக இராசிக்கு 10க்குடையவரான சூரியனுடன் சிம்ம இராசியில் குரு கூடினால், மக்களால் போற்றக் கூடிய தபஸ்வியாகவும், ஆன்மிகச் செல்வர்களாகவும் ஆலயங்கள், மடங்கள், ஆசிரமங்கள் ஆகியவற்றின் தலைவர்களாகவும் இருக்க விதி உண்டாகும். அறக்கட்டளை நிறுவன (தரும ஸ்தாபனங்கள்) தலைவராகவும், கோயில் அர்ச்சகர்களாகவும், சிவாலயத் திருப்பணிகள் செய்பவர்களாகவும் முனிவர்களாகவும், ரிஷிகளாகவும் சந்நியாசிகளாகவும் இருக்க விதி உண்டாகும். அரசுத் துறையில் மந்திரிக்குச் சமமான பதவியும், அதிகார அந்தஸ்து உள்ள உத்தியோகமும் உண்டாகும். ஆச்சாரியார்கள், ஆசிரியர்கள், வேதம் ஓதுவார்கள், தங்கம், பொன் வியாபாரம் செய்வோரிடம் ஆலோசகர்கள் ஆகியோராகவும் விளங்குவார்கள்.

விருச்சிக இராசிக்கு 10ஆம் இடமான சிம்ம இராசியில் சூரியனுடன் சுக்கிரன் சேர்ந்தால் அரசியல் கட்சியின் தலைமையை ஏற்பர். பஞ்சலோகம் விற்பனை செய்வர். சினிமா, சங்கீதம், மின்சாரம் ஆகிய துறைகளில் உத்தியோகம் புரிவர். கோயிலில் இசை இசைப்பவர்கள், ஓதுவார்கள், இரத்தினப் பரிசோதகர், பரத நாட்டிய ஆசிரியர், அரசுத்துறையில் நல்ல அதிகார உத்தியோகத்திலிருப்பவர், கௌரவப் பதவி வகிப்பவர், குடிசைமாற்று வாரியத்தலைவர், கட்டட ஒப்பந்தக்காரர், மட நிர்வாகி, வாசனைத் திரவிய சாலை வைத்திருப்போர், அழகு, ஆபரணப் பொருள்களை, விற்போர், மருத்துவர்கள் எனப் பலவாறு விளங்குவர்.

விருச்சிக இராசிக்கு 10ஆம் இடமான சிம்ம இராசியில் சூரியனுடன் சனி சேர்ந்திருந்தால் நஞ்சை, புஞ்சை விவசாயம் செய்வர். எருமைகளை வைத்து தொழில் நடத்துவார். சாராயம் காய்ச்சி வடிப்போர், மனநல மருத்துவர், மண் தோண்டும் தொழில் செய்பவர்கள், புதை பொருள் ஆராய்ச்சி மையங்களில் வேலை செய்பவர்கள், சுரங்கத் தொழில் புரிபவர்கள், தொழிற்சாலைகளில் ஃபிட்டர், பிளம்பர் போன்ற தொழில் புரிபவர்கள் என்று தொழில்கள் அமைய விதி.

விருச்சிக இராசிக்கு 10ஆம் இடமான சிம்மத்தில் சூரியனுடன், இராகு கேதுக்கள் கூடினால் அரசுத் துறையில் கடை நிலை ஊழியராக இருப்பர். மாமிசம், அழுகின பொருள்கள் வியாபாரம், நாட்டு மருந்துகள், பூச்சிக்கொல்லி மருந்துகள், இரசாயன உரங்கள், எலும்புகள், பழைய கச்சாப் பொருள்கள் ஆகியவற்றை விற்பனை செய்வர். விறகு விற்றல், கீழ்நிலைத் தொழில் ஆகியன செய்ய விதி உண்டாகும். பொது நல ஊழியம் புரிவர். வெளிநாட்டுத் தொடர்புடைய மீன் ஏற்றுமதித் தொழிலிலும் கருவாடு போன்ற தொழிலிலும் ஈடுபடுவர்.

விருச்சிக இராசிக்கு 10ஆம் இடமான அதிபதியான சூரியன், இராசிக்கு 11ஆம் இடமான கன்னியிலிருந்தால், விமானங்கள், ராக்கெட் தளங்கள், டி.வி நிலையங்கள், வானொலி நிலையங்கள், நிபுணத்துவமான தொழில் ஆகியவற்றில் ஈடுபடுவார்கள். கட்டடக் கலைஞர்கள், ஒப்பந்தக்காரர்கள், பொது வைத்தியர், ஆலயங்கள், மடங்கள், ஆசிரமங்கள் போன்றவற்றில் நிருவாகப் பொறுப்பு வகிப்பவர், கணக்கு வேலை பார்ப்பவர்கள், தாந்திரீகர்கள், மரவேலைப்பாடு செய்பவர் என வாழ்வர். வேட்டை, வேதாந்தம், சிற்பத் தொழில் ஜோதிடம், மேடைப் பேச்சு, மின்சாரக் கருவிகள் உற்பத்தி செய்தல் முதலிய தொழில்கள் உண்டாகும்.

விருச்சக இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசிக்கு 12ஆம் இடமான துலாத்தில் நீசம் பெற்றால், அரசாங்கத்தில் கடைநிலை ஊழியராக இருப்பர். மருந்து வியாபாரமும், நாட்டு மூலிகைகள் போன்ற வியாபாரமும் செய்வார்கள். திரைப்படத்துறை, நாடகத்துறை ஆகியவற்றில் லைட்பாய்களாகவும், தளவேலை செய்பவர்களாகவும் இருப்பார்கள். புகைப்படக் கலைகள், தித்திப்பு வகைகள், மின்சார பல்புகள், ஆகியவற்றை செய்வர். கதை, கவிதை, நாட்டிய நாடகம், ஆகியவற்றில் ஈடுபடுவர். இரத்தினங்களைப் பரிசோதிப்பவர்களாகவும், எலக்ட்ரானிக் பொருள்களை விற்பவராகவும் வண்டி, வாகனத்தைப் பழுதுப் பார்ப்பவராகவும் ஓட்டுநர்களாகவும் சொகுசுக் கார்களைப் பராமரிப்பவராகவும் திகழ்வர்.

விருச்சிக இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான சூரியன் இராசியிலே இருந்தால் இராணுவம், போலீஸ், தீயணைப்புத் துறை, செங்கல் சூளை, இரசாயனப் பொருள்கள், கட்டடக் காண்டிராக்ட், சாலை, மற்றும் பொதுப்பணித்துறை ஆகிய துறைகளில் உத்தியோகம் உண்டாகும். ஆடு, மாடுகள் வளர்ப்பார்கள். பண்ணைகள் வைத்துப் பராமரிப்பர். கிராம அதிகாரிகள் மந்திரவாதிகள், துப்பாக்கி ஏந்தித் தொழில் செய்வோர் ஆகியோராய்த் திகழ்வர். ஹோட்டல்கள், இரசாயனப் பொருள்களிலிருந்து

உபயோகப்படும் பொருள்கள், புல் இலைகள், மரவேலைகள், விறகுக் கடை, கியாஸ் ஸ்டவ் அடுப்பு, மண்ணெண்ணெய் அடுப்புகள் உற்பத்தி மற்றும் வியாபாரம் ஆகியன அமையும்.

விருச்சிக இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான சூரியன், இராசிக்கு 2ஆம் இடத்தில் தனுசில் இருந்தால், ஆலயங்கள், ஆசிரமங்கள், மடங்கள், பொதுச்சேவை மையம், சமூக சேவை ஸ்தாபனங்கள், தான தர்மங்கள் செய்யும் நிறுவனங்கள் ஆகியவற்றில் தலைமைப் பதவி அமையும். வட்டிக்கு விட்டுச் சம்பாதிக்கும் லேவா தேவியில் ஈடுபடுவர். நீதி மன்றங்களில் நீதிபதியாக இருப்பர். அல்லது அதற்குச் சமமான பதவிகள் வாய்க்கும். சுவைநீர், குளிர் பானங்கள் ஆகியன தயாரித்து விற்பனை செய்வர்.

விருச்சிக இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான சூரியன், இராசிக்கு 3ஆம் இடமான மகர இராசியிலிருந்தால் அரசுத்துறையில் கடைநிலை ஊழியர், மின்சாரத்துறையில் மின் கம்பங்கள் நடும் வேலை, வயர்மேன், லைன்மேன், மீன்பிடிப்போர், விவசாயி, சிறை அதிகாரிகள், மரவேலை செய்பவர்கள், கொல்லன் பட்டறை வைத்திருப்பவர்கள், இரும்பு, இயந்திரத் தொழிற்கூடங்கள் நடத்துவோர், கடைசல் பட்டறைகள் வைத்திருப்போர், சித்த வைத்தியர், மன நல மருத்துவர், சுரங்கத் தொழிலாளிகள், விவசாயக் கூலிகள் எனப் பலவாறு திகழ்வர்.

விருச்சிக இராசிக்கு 10ஆம் இட அதிபதியான சூரியன், இராசிக்கு 4-ஆம் இடமான கும்பத்திலிருந்தால், அரசுத் துறையில் நல்ல உத்தியோகம் உண்டாகும். விவசாயப் பண்ணை அதிபர்களாகவும் திகழ்வர். தொழிற்சாலைகளிலும் நூல் நுற்பு ஆலைகளிலும் உத்தியோகம் பார்ப்பார்கள். தொழிற்கூடம், பட்டறைகள், எருமை மாட்டுப் பண்ணைகள், சிவாலயப் பணிகள், குடமுழுக்கு, பழுதடைந்த கோயில்களைப் புதுப்பித்தல் கட்டடக் காண்ட்ராக்ட், சிமெண்ட் - இரும்பு வியாபாரங்கள், மோட்டார், மற்றும் வாகனம் அதன் உதிரி பாகங்கள் பழுது பார்த்தல், ஆகிய தொழில்களில் ஈடுபடுவர். இரும்பு பர்னிச்சர்கள் உற்பத்தி, கட்டில், பீரோ போன்ற வீட்டு உபயோகப் பொருள்கள் செய்தல் ஆகிய தொழில்களிலும் ஈடுபடுவர்.

விருச்சிக இராசிக்கு 10க்குடையவரான சூரியன், இராசிக்கு 5ஆம் இடமான மீன இராசியிலிருந்தால், கொடுக்கல், வாங்கல் தொழிலில் ஈடுபடுவர். அரசுத் துறையில் அதிகார அந்தஸ்து உள்ள பதவிகள் வாய்க்கும். வருமானவரி அலுவலகங்கள், மாநில, மாவட்டக் கருவூலங்கள், தனம்புரளும் கேந்திரங்கள் (பேங்க்) ஆகியவற்றில் வேலை கிட்டும். இனிப்புப் பலகாரக் கடைகள், உணவு விடுதிகள், தங்கும் விடுதிகள் ஆகியவற்றை நடத்துவர். ஆலயப் பணி

புரிவர். சேவார்த்திகள், வேதம் ஓதுபவர்கள், பள்ளிக் கல்லூரி ஆசிரியர்கள் ஆகியோராய் விளங்குவர். தலைமைப் பீடங்கள், போன்ற பதவியும் உண்டாம்.

விருச்சிக இராசிக்கு 10க்குடையவரான சூரியன் இராசிக்கு 6ஆம் இடமான மேஷ இராசியில் உச்சம் பெற்றால், மாவட்ட ஆட்சிப் பொறுப்பு மிக்க பதவியும், உத்தியோகமும் உண்டாகும். மந்திரிக்குச் சமமான பதவி உண்டாகும். கோயில்களில் அர்ச்சகர், அறங்காவலர் பதவி, அரசியல் கட்சிகளுக்குத் தலைமை வகிக்கும் பதவி ஆகியன வாய்க்கும். மருத்துவர்கள், மருந்தாளுநர்கள், விறகுக் கடைக்காரர்கள், வக்கீல்கள், மூலிகை மருந்து தயாரித்து விற்பவர்கள், விண்ணியல் ஆராய்ச்சி செய்வோர்கள், கார்களை ஓட்டுபவர்கள், இரத்தினங்களைப் பரிசோதிப்பவர் எனவும் திகழ்வர்.

விருச்சிக இராசிக்கு 10க்குடையவரான சூரியன், இராசிக்கு 7ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால், சுவைமிகு பானங்கள் தயாரிப்பர். ஆடு, மாடுகள் வளர்த்துப் பண்ணை நிர்வாகம் புரிவர். தங்கம், பொன், வெள்ளி, வாசனைத் திரவிய சாலைகள், அழகு ஆபரணப் பொருள்கள் ஆகியன விற்கும் வியாபாரிகளாவர். ராஜ நர்த்தகியாகத் திகழ்வர். பசு வளர்ப்பர். பால் பண்ணைகள் நடத்துவர். இனிப்பு, தித்திப்பு, ஆகிய ஹோட்டல் பண்டங்கள் விற்றலிலும் சினிமா, நாடகம் போன்றவற்றிலும் ஈடுபடுவர். மின்சார விளக்கை நிர்வகிக்கும் வேலை, கூத்தரங்கத்தில் இயந்திரத்தை இயக்கும் வேலை, தொலைக்காட்சி நிலையப்பணி, கட்டடங்களையும் கட்டுதல், கட்டடப் பராமரிப்பு, கால்நடை மருத்துவம் போன்ற தொழில்களையும் செய்ய விதியுண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 10க்குடையவரான சூரியன், இராசிக்கு 8ஆம் இடமான மிதுனத்திலிருந்தால், வானொலி, தொலைக்காட்சி, திரைப்படத்துறை ஆகியவற்றில் தொழில் நுட்பக் கலைஞராய் இருப்பர். ஆகாய விமானங்கள், ராக்கெட் ஏவுகணை செலுத்தல் போன்ற தளங்களில் உத்தியோகம் செய்வர். கதை, காவியம் படைப்பர், எழுத்தாளர்களாகவும், சிற்பிகளாகவும் இருப்பர். வார்ப்பு உருக்கு, பித்தளை, தாமிரம் போன்றவற்றை வார்த்தெடுப்பர். சிலை வடிக்கும் தொழிலில் ஈடுபடுவர். வைத்தியராய் இருப்பர். மருந்து, மின்சாரக் கருவிகள், உபகரணங்கள் போன்றவற்றை உற்பத்தி செய்வர் அல்லது விற்பனை செய்வர். எலக்ட்ரானிக் பொருள்கள், கடிகாரம், ரேடியோ டி.வி. கிரைண்டர் போன்றவற்றைப் பழுதுநீக்கும் தொழிலில் ஈடுபடுவர்.

விருச்சிக இராசிக்கு 10க்குடையவரான சூரியன், இராசிக்கு 9ஆம் இடமான கடகத்திலிருந்தால் சங்கீதம், இசை, நாட்டியம் ஆகியவற்றில்

கலைஞர்களாகத் திகழ்வார்கள். ஹோட்டல்களில் கௌரவ உத்தியோகம் பார்ப்பார்கள். உணவுப் பொருள்கள், நவ தானியங்கள், பழம் காய்கறிகள் போன்ற வியாபாரத்தில் ஈடுபடுவர். கோயில் பூஜைகள், ஆலயப் பராமரிப்பு, தரகுச் சமையல், சலவைத் தொழில் ஆகியவற்றில் ஈடுபடுவர். பள்ளிகள், கல்லூரிகள் ஆகியவற்றை நடத்துவார்கள். பால்பண்ணைகள் நடத்துவதிலும், பால் பதப்படுத்தும் தொழிலிலும் ஈடுபடுவர். நெய் - வெண்ணெய் வியாபாரத்திலும் மருந்து வியாபாரத்திலும் ஈடுபடுவர்.

தொழில்கள் நல்லமுறையில் நடக்கச் சிவனுக்குப் பூஜையும் சூரியனுக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் செய்வதால் நற்பலன்களை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

# தனுசு

தனுசு இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான புதன், இராசிக்கு 10ஆம் இடமான கன்னியில் ஆட்சி உச்சம் பெற்றிருந்தால், குதிரை ஏற்றம், கணக்கு வேலைகளும் அச்சுக்கூட வேலையும் அமையும். கவிதை, கதை, காவியம், எழுதும் எழுத்தாளர்களாகத் திகழ்வர். ஞானிகளாகவும், மொழி பெயர்ப்பாளர்களாகவும், விளங்குவர். வெளியீட்டாளர்கள், கட்டடக் கலைஞர்கள், ஜோதிடர்கள், மேடைப் பேச்சு பேசுபவர்கள், சிலை வடிக்கும் சிற்பிகள், மருத்துவர்கள், சித்த மருத்துவர்கள், நகைச்சுவை எழுத்தாளர்கள், நிருபர்கள், பத்திரிகைத் தொழில் நடத்துபவர்கள் பல மொழிகள் அறிந்தவர்கள், விஷ்ணு கோயிலில் வேலை செய்பவர்கள், இரத்தினங்களைப் பரிசோதிப்பவர்கள் ஆகியோராய்த் திகழ்வர்.

வானொலி, இயந்திரங்கள், மின் சாதனப் பொருட்கள், கடிகார உதிரிப் பாகங்கள், நவீன இயந்திரங்களான கம்ப்யூட்டர், ஜெராக்ஸ் இயந்திரங்கள், தொலைக்காட்சிப் பெட்டிகள், அயர்ன்பாக்ஸ், கிரைண்டர், மிக்ஸி போன்றவற்றை உற்பத்தி செய்பவர்களாகவும் வியாபாரம் செய்பவர்களாகவும் இருப்பார்கள். அரசுத் துறையில் கருவூலங்கள், வட்டாட்சியர் அலுவலகங்கள், மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகங்கள், விற்பனைவரி அலுவலகங்கள், காகிதப் பொருட்கள், எழுது பொருள்கள் விற்பனை செய்யுமிடம், தபால் தந்தி துறைகள், கம்பியில்லாத் தந்தி, கால் குலேட்டர்கள் உற்பத்தி நிலையம், தானியங்கள், பருப்பு வகைகள் ஆகியன விற்பனை செய்யுமிடங்கள் ஆகியவற்றில் பணிபுரிவர். சார்பதிவாளர் அலுவலகத்தில்

பணிபுரிவோர், டைப்பிஸ்டுகள், வேதாந்தம் சித்தாந்தம் பேசுபவர்கள், மதப் பிரசங்கம் சொற்பொழிவு செய்பவர்கள், அலுவலக கிளார்க்குகள், ஆகியோராய்த் தொழில் செய்ய விதிஉண்டாகும்.

தனுசு இராசிக்கு 10க்குடையவரான புதனுடன் கன்னி இராசியில் சூரியன் சேர்ந்தால், மருத்துவர்களாகவும், பள்ளிகள் கல்லூரிகள் நடத்தும் நிருவாகிகளாகவும், வக்கீல்களாகவும் விறகுக் கடை நடத்துபவராகவும் மற்ற எரிபொருள்கள் வியாபாரம் செய்பவராகவும், நாட்டு மூலிகை மருந்துகள் விற்பனை செய்பவராகவும் நூல் விற்பனை செய்பவராகவும், மின் சாதனப் பொருள்கள் விற்பவராகவும், ஹோட்டல்கள் நடத்துபவராகவும் மரவேலை செய்பவர்களாகவும், மந்திரிக்குச் சமமான பதவியில் உள்ள உத்தியோகத்தில் இருப்பவர்களாகவும் பாலியல் நோயைக் குணப்படுத்தும் மருத்துவர்களாகவும், கம்பெனி ஆலோசகர்களாகவும் பொறியியல் வல்லுநர்களாகவும் தாந்திரீகர்களாகவும் வேதாந்திகளாகவும் சிற்பிகளாகவும் திகழ விதியுண்டு. மொழி பெயர்ப்பாளர்கள், புத்தக வெளியீட்டாளர்கள், எலும்பு, பல் வைத்தியம் செய்வோர் மற்றும் வியாபாரிகள் ஆகியோராகவும் விளங்குவர்.

தனுசு இராசிக்கு 10க்குடையவரான புதனுடன் கன்னி இராசியில் செவ்வாய் கூடினால் பயிர்த் தொழில்கள் செங்கற் சூளைகள், சாலைகள், பாலங்கள் அமைக்கும் தொழில், பொதுப்பணித்துறை அலுவல்கள் ஆகியவற்றில் பணியாற்றுவர். காண்ட்ராக்ட் தொழில், அறுவை சிகிச்சை செய்யும் மருத்துவ தொழில், அரசுத் துறையில் ஆட்சிப் பணி, அதிகார அந்தஸ்துள்ள உத்தியோகம், காகிதங்கள் பொம்மைகள் தயாரித்தல், கொத்து வேலை மற்றும் பொற்கொல்லர் போன்ற தொழில்களில் ஈடுபடுவார்கள்.

தனுசு இராசிக்கு 10க்குடையவரான புதனுடன் கன்னி இராசியில் குரு கூடினால் ஆசிரியத் தொழில், கணக்குவேலை, செய்பவர்கள், ஆலயங்கள், மடங்கள், கல்லூரிகள் அவற்றின் மூலம் இலாபங்கள் மற்றும் அவற்றை நிர்வகிக்கும் பொறுப்பான உத்தியோகம் ஆகியவற்றில் பணி புரிவர். அஷ்டமாசித்திகள் அடையும் சாதுக்களாகவும் திகழ்வர். புகையிலை வியாபாரம், மருத்துவத் தொழில், யோகங்கள், யாகங்கள், ஹோமங்கள், புரோகிதம் ஆகிய தொழில்களைச் செய்ய விதி உண்டாகும். பூ வியாபாரம், சந்தனம் அத்தர் போன்ற வியாபாரம், மருந்து வியாபாரம் ஆகியன வாய்க்கும்.

தனுசு இராசிக்கு 10க்குடையவரான புதனுடன் கன்னி இராசியில் சுக்கிரன் சேர்ந்தால் கதை, கவிதை, காவியம், நாடகம், சினிமா, நாட்டியம் ஆகியவற்றில் ஈடுபடுவர். இசைக்கருவிகள் வாசிப்பவர்கள், படம்

வரைபவர்கள், புகைப்படம் எடுப்பவர்கள் எனத் திகழ்வர். ஜெராக்ஸ், எலக்ட்ரானிக்ஸ் பொருள்கள், வீடியோ ஆடியோ ஆகிய துறைகளில் ஈடுபடுவர். நகைச்சுவை எழுத்தாளராகவும், தித்திப்புப் பொருள்கள் விற்பவராகவும், தூதுவர்களாகவும், சிற்பிகளாகவும், கப்பல்களில் வியாபாரம் செய்பவர்களாகவும், பள்ளி ஆசிரியர்களாகவும், நிர்வாகிகளாகவும், கம்பெனி அதிபர்களாகவும் சுற்றுலாத் துறையில் மொழிபெயர்ப்பாளர்களாகவும், கால்நடை மருத்துவர்களாகவும், மரவேலை செய்பவர்களாகவும் விளங்குவர். பர்னிச்சர் பொருள்கள், மின் விசிறி, குளிர் சாதனப் பெட்டி, தொலைக்காட்சிப்பெட்டி போன்ற மின் சாதனப் பொருள்கள், உதிரிப்பாகங்கள் விற்பனை ஆகியவற்றில் ஈடுபட விதி.

தனுசு இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 10ஆம் இடமான கன்னியில் இராகுகேதுக்களுடன் கூடிச் சேர்ந்தால், ஞானிகளாகவும் சாதுக்களாகவும், வித்தை, விநோதங்கள் செய்பவர்களாகவும், நகர சுத்தி தொழிலாளிகளாகவும், பழைய பேப்பர் கிழிந்த துணிகள் ஆகியவற்றை வியாபாரம் செய்பவர்களாகவும் தோல் பதனிடும் தொழில் செய்பவராகவும் இருப்பார்கள். மாமிசம், கருவாடு போன்ற வியாபாரம், சாயம் தயாரித்தல், சாராயம் காய்ச்சி வடித்தல், ரப்பர் பொருள்கள், பிளாஸ்டிக் பாலிதீன் பைகள் தயாரிப்பு, சைக்கிள் டயர், டியூப், தோலால் உற்பத்தி செய்த பொருள்கள் எனப் பல்வேறு தொழில்கள் அமைய விதியுண்டு.

தனுசு இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 11ஆம் இடமான துலாத்தில் இருந்தால் கதை, பாட்டு, நடனம், நாட்டியம் மற்றும் கலை இரசனை, உள்ள தொழிலில் இருக்க விதியாகும். சினிமா, வானொலி, நாடகம் ஆகியவற்றோடு தொடர்புடைய தொழில்களில் ஈடுபடுவர். காகித வியாபாரம், பரிமள வாசனைத் தைலங்கள், திரவியங்கள், நவரத்தினக் கற்கள் ஆகியவற்றை விற்றல், வெள்ளி, வைரம், வியாபாரம் ஆகியன வாய்க்கும். தபால்துறை, தந்தி டெலிபோன்கள், அழகான, சொகுசு வாகனங்கள், வீட்டு உபகரணப் பொருள்களான, மிக்ஸி, கிரைண்டர், குளிர்பதனப் பெட்டிகள், பால் வியாபாரம் போன்ற தொழில்களைச் செய்ய விதியுண்டு.

தனுசு இராசிக்கு 10க்குடையவரான புதன் இராசிக்கு 12 ஆம் இடமான விருச்சிகத்திலிருந்தால் விவசாயம், பயிர்த்தொழில்கள், பண்ணை வைத்து நடத்துதல், ஆகாய விமானம், ராக்கெட் ஏவுகணைத் தளங்களில் பணி வானிலை ஆராய்ச்சி, வான இயல் சாஸ்திரங்கள், சோதிடம் ஆகிய துறைகளில் இருக்க விதி உண்டாகும். அறுவை சிகிச்சை செய்யும் மருத்துவம், சித்த வைத்தியம் ஆகிய தொழில்களில் ஈடுபடுவர். மேடைப்

பேச்சாளர், வேதாந்திகள், சித்தாந்திகள், மதப் பிரசங்கி, கட்டடக் கலைஞர்கள், குழந்தைகள் நல மருத்துவர், கிராம அதிகாரிகள், வில், அம்பு, துப்பாக்கி ஆகியவற்றை உபயோகிப்பவர் எனப் பலவாறு திகழ்வர். கார், ரெயில், ஆகியவற்றை ஓட்டும் தொழிலும் வாய்க்கும்.

தனுசு இராசிக்கு 10க்குடையவரான புதன் இராசியிலே இருந்தால் ஞானிகள், ஆசிரியர்கள், வேதம் ஓதுபவர்கள், அர்ச்சகர்கள் ஆலோசகர்கள், மந்திரிக்குச் சமமான பதவியிலிருப்பவர்கள், அரசியல் கட்சிகளுக்குத் தலைமை வகிப்பவர்கள். தெய்வீகத் திருப்பணிகள் செய்பவர்கள் எனத் திகழ்வர். மடங்கள், ஆலயங்கள், ஆசிரமங்கள் ஆகியவற்றில் உத்தியோகம் கிட்டும். வேதாந்திகளாகவும் இருப்பர். பொன், தங்கம், பித்தளை வியாபாரம் செய்வர். பலமொழிகள் பேசக்கூடியவர்களாகவும், மொழி பெயர்ப்பாளர்களாகவும் விளங்குவர். மின்சாரக் கருவிகளை உற்பத்தி செய்வர். வங்கிகள், கருவூலங்கள், வட்டாட்சியர் அலுவலகங்கள் முதலியவற்றில் உத்தியோகம் செய்ய விதியுண்டாகும்.

தனுசு இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 2ஆம் இடமான மகர இராசியிலிருந்தால் கடல் பிரயாணம், வியாபாரம், இரும்பு, வயற்களம், உழவுத் தொழில், கணக்கு வேலை, சாராயம் போன்ற மது பொருள்கள் விற்பனை, தொழிற்கூடங்கள், தந்தி, இயந்திரங்களைப் பழுதுபார்த்தல், மோட்டார்களின் உதிரிப்பாகங்கள், போதைப் பொருள்கள், குதிரை வண்டிகள், அச்சுத் தொழில், ஆகியவற்றில் ஈடுபடுவர். தோல் வியாதிகளைக் குணப்படுத்தும் மருத்துவர்களாகவும் விஷ்ணு கோயிலில் சேவார்த்திகளாகவும் தொழில் செய்ய விதி உண்டாகும்.

தனுசு இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 3ஆம் இடமான கும்பத்திலிருந்தால், எருமை வளர்த்தல், இரும்பு எஃகுத் தொழில்கள், கடைசல் பட்டறைகள், தொழிற்சாலைகள், தொழிற்பயிற்சிப் பள்ளிகள், மரவேலைப்பாடுகளுடன் கூடிய மேசை நாற்காலிகள் இரும்பு, பீரோ, கட்டில் செய்தல் ஆகியவற்றில் ஈடுபடுவர். கார் ஓட்டுதல், போதை மயக்க வஸ்துப் பொருள்கள் வியாபாரம், வார்னீஷ், எண்ணெய் வியாபாரம் ஆகியவை வாய்க்கும். சுரங்கத் தொழில், புதைபொருள் ஆராய்ச்சி போன்ற தொழில்களில் ஈடுபட விதியுண்டு.

தனுசு இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 4ஆம் இடமான மீன இராசியில் இருந்தால் அரசுக் கஜானாவில் உத்தியோகம் பார்ப்பவர், கணக்கு ஆசிரியர்கள், கவிதைகள் எழுதுவோர், புரோகிதர், யாகங்கங்கள் ஹோமங்கள், சாந்திகள் செய்வோர் எனத் திகழ்வர். நீதித்துறை, நிதி நிறுவனங்கள், சீட்டுக் கம்பெனிகள், ஆயுள் பாதுகாப்பு காப்பீட்டுறுதி

போன்ற நிதி நிறுவனங்கள், சிட் பண்ட்ஸ், வட்டிக்கு விட்டுக் கொடுக்கல் வாங்கல் செய்யும் தொழில், தனம் புரளும் கேந்திரங்கள், ஆகியவற்றில் ஈடுபடுவர். ஆச்சாரிகளாக விளங்குவர். அரசுத் துறையில் அதிகாரமும் அந்தஸ்தும் உள்ள பதவி வகிப்பர். சித்திரப் பூ வேலைப்பாடுகள் தையல் போன்ற தொழிலையும் செய்ய விதி உண்டாகும்.

தனுசு இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 5ஆம் இடமான மேஷத்திலிருந்தால் பயிர்த்தொழிலில் ஈடுபடுவர். ஆகாய விமானம், சுரங்கத் தொழில், ரயில் இன்ஜின், சாலைகள் அமைத்தல், பாலங்கள் கட்டுதல் ஆகியன வாய்க்கும். கிராம அதிகாரிகளாகவும், வேட்டைக்காரர்களாகவும், வியாபாரிகள் சிறப்பாக பருப்பு வியாபாரம் செய்வோராகவும், அறுவைச் சிகிச்சை செய்யும் மருத்துவர்களாகவும், வீடுகட்டும் கொத்தனார்களாகவும், மரம் வெட்டுபவர்களாகவும் தீயணைப்புத் துறையில் உத்தியோகம் பார்ப்பவர்களாகவும் இருப்பார்கள்.

தனுசு இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 6ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால் கதை, பாட்டு, இசை நடனம் போன்ற கலைத் தொழிலில், ஈடுபடுவர். காகிதத் தொழில், தையல், சித்திரப் பூ வேலைப்பாடுகள் உள்ள தொழில், ஜவுளி, பொன், வெள்ளி வியாபாரங்கள், இரத்தினக் கற்கள் வியாபாரம், மின் விசிறிகள், ரேடியோ, டி.வி. பெட்டிகள், கம்யூட்டர்கள் மின் உபகரணங்கள் உற்பத்தி மற்றும் வியாபாரம் ஆகியவற்றில் ஈடுபடுவர். கட்டடக் கலைஞர்கள், ஓவியர்கள், பெயிண்டர்கள், சிற்பிகள் எனவும் இருப்பர். திரைப்படத்துறையில் தொழில் நுட்பக் கலைஞர்கள், நடிகர்களாக இருப்பர். பட்டு, மெத்தை வியாபாரம் செய்வோராகவும் திகழ்வர்.

தனுசு இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 7ஆம் இடமான மிதுனத்தில் ஆட்சி பெற்றால், வானொலி, டி.வி. நடிகராய் விளங்குவர். தபால், தந்தி, கம்பியில்லாத் தந்தி, அரசு கஜானா ஆகியவற்றில் உத்தியோகம் புரிவர். கணக்கு வேலை செய்பவர்கள், விஷ்ணு கோயில் அர்ச்சகர்கள், ஓவியர்கள், தையல் கலைஞர்கள், மருத்துவர்கள், மூலிகை மருந்து வியாபாரிகள், வேதாந்திகள், மரவேலை செய்பவர்கள், கட்டடக் கலைஞர்கள், இரத்தினங்களைப் பரிசோதிப்பவர்கள், மேடைப் பேச்சாளர்கள், வேட்டையாடுபவர்கள், தாந்திரீகர்கள் ஆகியோராய் இருப்பர். அச்சுத் தொழில், காகிதத் தொழில், சிற்பத் தொழில் ஆகிய தொழில்களைச் செய்ய விதி உண்டாகும்.

தனுசு இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 8ஆம் இடமான கடகத்திலிருந்தால் பயிர்த்தொழில், சங்கீதம், இசைக்கருவிகள், நாட்டாண்மை, நீர் மூழ்கிக் கப்பல், ஹோட்டல் முதலியவை தொடர்பான தொழில்கள் வாய்க்கும். முத்துக் குளிப்பவர்கள், கடத்தல் செய்பவர்கள், நெய், வெண்ணெய், பால் ஆகியவற்றின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் எனத் திகழ்வர். பச்சைப்பயறு, தானிய வியாபாரம், பழத்தோட்டங்கள் ஆகியவற்றில் ஈடுபடுவர். குதிரை வண்டிக்காரர்கள், சலவைத் தொழிலாளிகள், தரகர்கள், மீன் விற்பவர்கள், சமையற்காரர்கள், கார், ரெயில், ஓட்டுநர்கள் எனவும் பெயர் பெறுவர்.

தனுசு இராசிக்கு 10க்குடையவரான புதன், இராசிக்கு 9ஆம் இடமான சிம்மத்திலிருந்தால், மொழி பெயர்ப்பாளர்களாகவும், கட்டடக் கலைஞர்களாகவும், தையல் கலைஞர்களாகவும், அச்சு இயந்திரங்கள் இயக்குபவராகவும், சிற்பிகளாகவும் திகழ்வர். மூலிகை மருந்து வியாபாரம், நாட்டு மருந்து வியாபாரம் ஆகியவற்றில் ஈடுபடுவர். ஆலயம், மடங்கள், ஆசிரமங்கள், கல்வி நிலையங்கள் ஆகியவற்றின் நிர்வாகிகளாகவும், தலைவர்களாகவும் திகழ்வர். அரசுத் துறையில் மந்தரிக்குச் சமமான பதவியில் இருக்க விதி உண்டாகும். அரசுக் கருவூலங்களில் உத்தியோகம் உண்டாகும். நூல் உற்பத்தி, எலும்பு மற்றும் பல் வைத்தியம், மின்சாரத் துறை ஆகியவை தொடர்பான தொழில்கள் கிட்டும்.

ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கோ, அல்லது ஸ்ரீரெங்கநாதருக்கோ அர்ச்சனையும், புதனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# மகரம்

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 10ஆம் இடமான துலாத்திலிருந்தால் திரைப்படத்துறை, நாடகம், தொலைக்காட்சி, வானொலி, கதை, காவியம், கவிதை ஆகிய துறைகளில் ஈடுபடுவார்கள். கட்டில்கள், மெத்தைகள், பட்டு, பஞ்சு, ஜவுளி வியாபாரம், வாசனைத் திரவிய சாலைகள், சொகுசுக் கார்கள், கப்பல் வியாபாரம், வெள்ளி வியாபாரம் முதலியன அமையும். ஓவியர்களாகவும், பிரசங்கம் செய்வோர்களாகவும் இருப்பர். சினிமாத் தியேட்டர்கள், எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர், ஜெராக்ஸ், புகைப்பட நிலையம், அதைச் சார்ந்த தொழில்கள், போன்றவற்றில் தொழில் அமையும். [illegible] தந்தி

விற்பனை ஆகியவற்றில் ஈடுபடுவர். சுற்றுலாத்துறை, நாடகங்கள், வண்ணக்கலவைகள், வண்ணம் பூசுதல், தையல் கலை, நடனம், நாட்டியம், பாட்டு, இசைக்கருவிகள் இசைத்தல், அரசுத்துறையில் மந்திரிக்குச் சமமான உத்தியோகம், வேதம் ஓதுதல், யாகங்கள், பூசைகள், ஹோமங்கள் செய்தல், புரோகிதம் போன்ற தொழில்கள் செய்யவும் விதி உண்டாகும்.

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரனுடன் துலாத்தில் சனி உச்சம் பெற்றால் திரைப்படத்துறையில் பாடல்பதிவு, இசைக்கருவிகளை வாசித்தல், கேமரா இயக்கம் ஆகியவற்றில் பணி புரிவர். ஆலைகளிலும் குறிப்பாகச் சர்க்கரை ஆலைகளில் உத்தியோகம் பார்ப்பர். தையல் வேலை செய்வார்கள். கார்கள், சொகுசுக்கார்கள் மற்றும் பிற வாகனங்கள் சம்பந்தப்பட்ட தொழிலும் உண்டாகும். எருமைகள் கொண்ட பால் பண்ணைகள் நடத்துவர். விவசாயம் செய்வர். இரும்பு, எஃகு போன்றவற்றால் ஆன இயந்திரங்கள், மோட்டார்கள், ஆகியவற்றைப் பழுதுபார்ப்பர். சுரங்கத் தொழில்கள், வெளிநாட்டு மதுவகைகள் விற்பனை, அழகு சாதனப் பொருள்கள், மரவேலைகள் ஆகிய தொழில்களில் ஈடுபடுவர். அடிமை உத்தியோகமும் ஆசிரியர் தொழிலும் செய்ய விதியுண்டாகும். எள், பிண்ணாக்கு, எண்ணெய், உளுந்து, போன்ற பொருள்களை வியாபாரம் செய்வர். சிறைத்துறை அதிகாரிகளாய் பணியாற்றுவர்.

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரனுடன் துலா இராசியில் இராகுகேதுக்கள் இருந்தால், தோல் பொருள்கள், காலணிகள், அழகான பைகள் தயாரிப்பு, இடுப்பு அங்கி, வெளிநாட்டுத் தொடர்புள்ள தொழில்கள் ஆகியவற்றில் ஈடுபடுவர். வித்தை விநோதங்கள் செய்வர். சிமெண்ட், வார்னீஷ், பெயிண்ட் ஆகிய பொருள்களை விற்கும் வியாபாரத்தில் ஈடுபடுவர். சாயம் காய்ச்சுதல், இராசயன உரங்கள், பூச்சிக் கொல்லி மருந்துகள், மாமிசம், கருவாடு மீன், ஆங்கில மருந்துகள் ஆகியவற்றை விற்பனை செய்வர்.

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரனுடன் சூரியனிருந்தால் மூலிகை மருந்துகளை விற்பனை செய்வர். மின்சார விளக்கு, அலங்கார விளக்கு, பல வண்ண விளக்குகள், ஆகியவற்றில் ஈடுபடுவர். கோவிலில் பூசை செய்வார்கள். ஆசிரியர்களாகவும் அரசுத் துறையில் அந்தஸ்தும் அதிகாரமும் உள்ள பதவி வகிப்பவராயும் இருப்பர். பெரிய வியாபாரங்களில் ஈடுபடுவர். பள்ளிகள், கல்லூரிகள் ஆகியவற்றின் நிறுவனர்களாய் இருப்பர். அழகு சாதனப் பொருள்கள், சோப்பு, சீப்பு, கண்ணாடி ஆகியவற்றை விற்பனை செய்வர், நுணுக்கங்களை தெரிந்தவர்களாகவும், தொழில் நுட்பக்

கலைஞர்களாகவும் இருப்பர். இரத்தினக் கற்கள் வியாபாரத்திலும் பொது நலத் தொண்டு நிறுவனங்களிலும் அறக்கட்டளைகளிலும் ஈடுபடுவார்கள்; சிலர் கல் உடைப்பவர்களாகவும் சிற்ப சாஸ்திரம் அறிந்தவர்களாகவும் இருப்பர். நூல், ஜவுளி வியாபாரங்கள், சுவை நீர் பானங்கள், குளிர் பானங்கள் போன்ற தொழில் செய்ய விதி உண்டாகும்.

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரனுடன் செவ்வாயிருந்தால் இனிப்புப் பதார்த்தங்களை உற்பத்தி செய்வர். விற்பனையும் செய்வர். பேக்கரி, தேநீர் நிலையங்கள், உணவு விடுதிகள், அசைவ உணவகங்கள் ஆகியன நடத்துவர். வீடு கட்டும் காண்டிராக்டர்களாக விளங்குவர். மரவேலைப்பாடுகள் உள்ள தொழில் செய்வார்கள். செங்கற் சூளை வியாபாரியாகவும் கிராம அதிகாரிகளாகவும் இருப்பர். அரசுத்துறையில் அதிகாரமுள்ள பதவியில் அமர்வர். போக்குவரத்து வாகனங்கள், சொகுசு வாகனங்கள், பளுத்தூக்கும் வாகனங்கள் ஆகியன சம்பந்தப்பட்ட தொழிலில் ஈடுபடுவர். சாலைகள், பாலங்கள், வீடுகள் ஆகியன கட்டும் தொழிலாளிகளாகவும் காண்டிராக்டர்களாகவும் சர்க்கரை ஆலைத் தொழிலில் உள்ளவர்களாகவும் இருக்க விதி உண்டாகும்.

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரனுடன் புதன், துலா இராசியில் இருந்தால் கதை, காவியம், கவிதை, பாட்டுகள் ஆகியன எழுதும் எழுத்தாளர்களாய் இருப்பர். நாட்டியம் ஆடுபவர்கள், இசைக் கலைஞர்கள், கட்டடக் கலைஞர்கள், சிற்பிகள், அச்சகத் தொழிலில் உள்ளோர் ஆகியோராய்த் திகழ்வர். ஸ்கிரீன் பிரிண்டிங், ரேடியோ, டி.வி, கம்ப்யூட்டர், கணக்கு வேலை ஆகியவற்றில் ஈடுபடுவர். மேடைப் பேச்சு, சினிமா, நாடகம், சோதிடம் போன்ற துறையில் ஈடுபடுவர். மரவேலை, சித்திரப் பூ வேலைப்பாடுகள் உள்ள தொழில்கள் அறிந்தவராக இருப்பர். ஓவியர்களாகவும் பெயிண்டர்களாகவும் தட்டச்சு இயந்திரம் சம்பந்தப்பட்டவராகவும், கணக்கு ஆசிரியர்களாகவும் வரைபடம் எழுதுவோராகவும் பொறியியல் துறையில் வல்லுநர்களாகவும் எனத் தொழில்கள் செய்ய விதி உண்டாகும்.

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரனுடன் குரு, துலா இராசியிலிருந்தால் வேதம் ஓதுதல், ஹோமங்கள், யாகங்கள், சாந்திகள், ப்ரீதிகள், புரோகிதம் முதலிய தொழில்களைச் செய்வர். அரசுத்துறையில் மிகவும் அந்தஸ்தும், அதிகாரமும் கௌரவமும் உள்ள பதவியில் இருப்பர். வங்கிகள் நிதி நிறுவனங்கள், நீதி ஸ்தலங்கள் ஆகியவற்றில் பணிபுரிவர். தங்கம், வெள்ளி வியாபாரம், தித்திப்பு உணவுப் பொருட்கள் விற்பனை,

எல்லாவித பரிமள புஷ்பங்கள் வியாபாரம், வாசனைத் திரவிய சாலை, ஆலோசனை வழங்குதல் போன்ற தொழில்களைச் செய்ய விதி உண்டாகும்.

மகர இராசிக்குத் தொழில் சிறக்க ஸ்ரீபார்வதி தேவிக்கோ, ஸ்ரீரங்கநாதருக்கோ அர்ச்சனையும், சுக்கிரனுக்கு யந்திர, மந்திர பிரீதியும் செய்தால் நல்ல பலன் வாய்க்கும்.

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 11ஆம் இடமான விருச்சிக இராசியிலிருந்தால் பத்திரகாளி, துர்க்கை, பராசக்தி போன்ற தெய்வங்களைப் பூசிப்பார்கள். இனிப்புப் பதார்த்தங்களை விற்பனை செய்வர். பேக்கரி, சோப் பாக்டரிகள், சுவைநீர் பானங்கள், விவசாய நிலங்கள், பயிர்த்தொழில்கள், கட்டடக் காண்டிராக்ட், போலீஸ், இராணுவம் போன்ற துறைகளில் ஈடுபடுவர். பொதுபணித் துறையில் கட்டுமாணப் பணிகளில் ஈடுபடுவர். அறுசுவை உணவு விடுதிகள், அசைவ உணவு வகைகள், செங்கல், கற்கள், பொன், வெள்ளி, செம்பு ஆகியன விற்கும் வியாபாரத்தில் இருப்பர். வாகனங்களை ஓட்டுவார்கள். சங்கீத வித்வான்களாய்த் திகழ்வர். கப்பல் வியாபாரங்கள், பால் பசுக்கள் வியாபாரம் செய்வர். தீயணைப்புத் துறையில் பணிபுரிவர். தயிர், வெண்ணெய், நெய் வியாபாரம் ஆகியனவும் செய்ய விதி உண்டாகும்.

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 12ஆம் இடமான தனுசு இராசியிலிருந்தால் வேதம் கற்பவர்கள், ஓதுபவர்கள், சிவ சக்தி வழிபாட்டுத் தலங்களில் பூசிப்பவர்கள், அரசுத்துறையில் கௌரவப் பதவி வகிப்பவர்கள், ஆலோசகர்கள், வழக்கறிஞர்கள் ஆகியோராய் விளங்குவர். நிதி நிறுவனங்கள், சீட்டுக் கம்பெனிகள், சிட் பண்ட்ஸ், நீதித் துறைகள், தனம் புரளும் கேந்திரங்கள் (வங்கி), வருமானவரித் துறை, சுங்க மற்றும் கலால் வரித்துறை, செக் போஸ்ட், மாவட்டக் கருவூலங்கள், ஆலயங்கள், மடங்கள், ஆசிரமங்கள் போன்றவற்றில் தலைமை நிருவாகியாக இருக்க விதி உண்டாகும்.

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசியிலே இருந்தால் புதை பொருள் ஆராய்ச்சி மையங்கள், பழங்கால வரலாற்றுச் சின்னங்கள், கலாச்சாரங்களை அறிந்துகொள்ளும் துறைகளில் பணி அமையும். விவசாயம், பால் பண்ணைகள், இரும்பிலான கட்டில்கள், மேசைகள், பீரோ, மற்றும் பர்னிச்சர் வியாபாரம், சர்க்கரை ஆலைகள், வாசனைத் திரவிய சாலைகள், புகைப்படமெடுத்தல், வயற்கள வேலைகள், வண்டி வாகனங்கள் ஓட்டுதல், சாலைகள் பழுதுபார்த்தல், எண்ணெய் வியாபாரம் ஆகியவற்றில் தொழில் அமைய விதி உண்டாம்.

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 2ஆம் இடமான கும்பத்திலிருந்தால், பால் பண்ணைகள் நடத்துவர். எருமைகள் விருத்தியாகும். இரும்பு எஃகினாலான தொழில்கள், பருத்தி ஆலைகள் இரும்பினாலான வியாபாரங்கள், கிரைண்டர், வாஷிங் மிஷின், தையல் மிஷின்கள், வாகனங்கள், இயந்திரங்களின் உதிரிப்பாகங்கள் விற்பனை, வெள்ளி உலோக வியாபாரம், எவர்சில்வர் வியாபாரம்., சிறைத்துறையில் அதிகார உத்தியோகம், கடைநிலை ஊழியம், காவலர் வேலை போன்றவற்றில் ஈடுபட விதி உண்டாகும்.

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 3ஆம் இடமான மீனத்தில் இருந்தால் சங்கீத வாத்தியம், பாட்டு, நடிப்பு, சினிமா மற்றும் நாடகக் கதை வசனம் முதலியவற்றில் ஈடுபடுவர். வங்கிகள், தனம் புரளும் கேந்திரங்கள், நீதித்துறை, கொடுக்கல் வாங்கல், வட்டிக்கு விடும் லேவாதேவித் தொழில், சிட்பண்ட்ஸ், எல்.ஐ.சி. போன்றவற்றில் தொழில்கள் புரிவர். வருமானவரி, சுங்கவரி மற்றும் தொழில்வரித்துறை ஆகியவற்றில் உத்தியோகம் உண்டாகும். வாசனைத் திரவிய சாலைகள், தித்திப்பு உணவுப் பண்டங்கள் ஆகியவற்றை நடத்துவர். தெய்வீக பிரசங்கமும், பக்திச் சொற்பொழிவும் செய்வர். வாகனம் ஓட்டுவர். பூ வியாபாரம், வண்ண விளக்குகள் விற்றல் போன்ற தொழில்களும் உண்டாகும்.

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 4ஆம் இடமான மேஷத்திலிருந்தால் தங்கச் சுரங்கம், பூமியில் புதைபொருள் ஆகியவற்றைத் தோண்டும் வேலையைச் செய்வார்கள். மேஸ்திரிகளாகவும், கட்டடத் தொழிலாளர்களாகவும், சுண்ணாம்பு வியாபாரம் செய்வோராகவும் விளங்குவர். நாட்டியம், நாடகம் ஆகியவற்றில் பிரியமுண்டாகும். சாலைகள் அமைப்பர்; பாலங்கள் கட்டுவர். ஆடு, மாடுகள் போன்றவற்றைப் பராமரிப்பார்கள். கப்பல் வியாபாரத்திலும் பண்ணைகள் பராமரிப்பிலும் ஈடுபடுவர். அரசுத் துறையில் நல்ல அதிகாரமான உத்தியோகம் உண்டாகும்.

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 5ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால், கதை, கவிதை, நாட்டியம், நடனம் ஆகியவற்றில் ஈடுபடுவர். நாடகம், சினிமா, தொலைக்காட்சி, வானொலி போன்ற துறைகளில் நடிகர்களாகவும், தொழில்நுட்பக் கலைஞர்களாகவும் வேலை செய்ய விதியுண்டு. பால் பண்ணைகள், நடத்துவர். கால்நடைகள் வளர்த்தல், விவசாயம், வாகனங்கள், சொகுசுக் கார்கள், போக்குவரத்து ஆகிய தொழில்களில் ஈடுபடுவர். யாகங்கள், பூசைகள், ஹோமங்கள், சாந்திகள் ஆகியவற்றைச் செய்பவர்களாகவும் இருக்க விதி உண்டாகும்.

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 6ஆம் இடமான மிதுனத்திலிருந்தால் கதை, கட்டுரை, காவியம், கவிதை, கதா காலட்சேபம் போன்றவற்றைத் தொழிலாகக் கொள்வர். கவிஞர்களாகவும், எழுத்தாளர்களாகவும் இருப்பர். சிற்பி, கணக்கு வேலை செய்வோர், மொழி பெயர்ப்பாளர்கள், நிருபர்கள், அச்சகத் தொழில் செய்வோர், வானொலி-டி.வி. நடிகர்கள், காகிதத் தொழிலில் ஈடுபடுவோர் என்றும் ஆகாய விமானம், தபால் துறை, விற்பனை வரித்துறை, வணிக வரித்துறை, போன்ற அரசுத் துறைகளிலும் உத்தியோகம், புரிவர். ஏஜென்ஸி, திரைப்பட விநியோகம், மருத்துவம், கடத்தல் பொருள்கள் விற்பனை செய்தல், வாகனங்கள், கணிப்பொறி இயந்திரங்கள், மின் சாதனப் பொருள்கள், பாலின நோய்களைக் குணப்படுத்தும் மருத்துவம் போன்றவற்றில் தொழில்களைச் செய்ய விதியுண்டு. வரைபடம், ஓவியம் ஆகியவற்றை வரைபவராய்த் திகழ்வர்.

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 7ஆம் இடமான கடகத்திலிருந்தால், பால் பண்ணைகள், சங்கீதம், கோயில் பூஜைகள், கப்பல் வியாபாரம், ஹோட்டல்கள், பொன், வெள்ளி வியாபாரம், தரகு, காய்கறிகள் பழங்கள், விற்றல் ஆகியவற்றில் ஈடுபடுவர். சிறந்த ஞானிகள், தபஸ்விகள், சமையற்காரர்கள், தங்கும் விடுதி நடத்துவோர், மீன்பிடிப்பவர்கள், சலவைத் தொழில் செய்வோர்கள். உபந்நியாசங்கள் செய்வோர்கள், கிராம அதிகாரிகள், அரசுத் துறையில் மதிப்பு மிக்க உத்தியோகம் செய்பவர். பால், வெண்ணெய், தயிர், நெய் போன்ற வியாபாரம் செய்பவர், மனநல மருத்துவர்கள், பொது ஸ்தாபனங்களில் கௌரவ உத்தியோகம் செய்வோர், இசைக் கலைஞர்கள், உப்பு வியாபாரிகள், நவதானிய வியாபாரிகள் போன்றோராய்த் திகழ்வர்.

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 8ஆம் இடமான சிம்ம இராசியில் இருந்தால் சங்கீத வாத்தியங்கள் இசைப்பர். சுவைமிகு பானங்களையும், எரிபொருள்களையும் வியாபாரம் செய்வர். அரசியல் கட்சிகளுக்குத் தலைமை வகிப்பர். அரசுத்துறையில் கௌரவம், அதிகாரம், மதிப்பு மிக்க பதவி வகிப்பர். கண், எலும்பு, பல் ஆகிய பிரிவுகளின் மருத்துவர்கள் நாட்டு மருந்துகள், மூலிகை ஆகியன விற்பனை செய்பவர்கள், வீடுகட்டும் காண்டிராக்டர்கள், கல் உடைப்பவர்கள் ஆகியோராய்த் திகழ்வர். வண்ண வண்ண விளக்குகள், நூல், ஜவுளி போன்ற வியாபாரங்களைச் செய்வர். காகித உற்பத்தி ஆலைகள், டெக்ஸ்டைல் போன்ற தொழில்கள் செய்ய விதி உண்டாகும். பள்ளி நிருவாகிகளாகவும் வக்கீல்களாகவும் விளங்குவர்

மகர இராசிக்கு 10க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 9ஆம் இடமான கன்னி இராசியிலிருந்தால் குதிரை ஏற்றம், தபால் - தந்தித் துறை, கம்பியில்லாத் தந்தி ஆகியவற்றில் ஈடுபடுவர். மொழிபெயர்ப்பாளர்கள், சிற்பிகள், அச்சகத் தொழில் செய்வோர், நகைச்சுவை எழுத்தாளர்கள், வேடர்கள், இரத்தினப் பரிசோதகர்கள், விஷ்ணுகோயில் அர்ச்சகர்கள், மரவேலை செய்பவர்கள், பாலியல் நோயைக் குணப்படுத்தும் மருத்துவர்கள், மின்சார உபகரணங்கள் உற்பத்தி - வியாபாரம் செய்வோர்கள், குழந்தைகள் நலமருத்துவம் படித்தவர்கள் ஆராய்ச்சியாளர்கள், பொதுவியாபாரிகள் ஆகியோராய்த் திகழ்வார்கள். வாசனைத் திரவிய சாலைகள், கட்டில் மெத்தை வியாபாரம், பட்டு, இரத்தினம், கம்பளம், பசு, பால், தயிர், வெண்ணெய், நெய் போன்ற வியாபாரங்கள், கப்பல் வியாபாரம், சித்திரப் பூ வேலைப்பாடுகள், ஸ்கிரீன் பிரிண்டிங். காகிதத் தொழில், போன்றவற்றில் ஈடுபடுவர். ஆகாய விமானம், ஏவுகணை, போன்ற தளங்கள், மற்றும் வானொலி, தொலைக்காட்சி ஆகியவற்றில் பணிபுரிய வாய்ப்புகள் உண்டாகும்.

ஸ்ரீரெங்கநாதருக்கு அர்ச்சனையும் ஆராதனையும், சுக்கிரனுக்கு யந்திர, மந்திர, பிரீதியும் செய்தால், நற்பலனுண்டாகும்.

# கும்பம்

கும்ப இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 10ஆம் இடமான விருச்சிக இராசியில் ஆட்சி பெற்றிருந்தால், எரி பொருள்கள் வியாபாரம், செங்கற் சூளைகள், கட்டட வேலைகள் ஆகியவற்றில் ஈடுபடுவர். போலீஸ் இலாகா, இராணுவத் துறை, தீயணைப்புத் துறை போன்றவற்றில் அதிகாரமுள்ள பதவியில் இருப்பர். சாலைகள், பாலங்கள் போன்ற பொதுப்பணித் துறைத் தொழில்களில் ஈடுபடுவர். ஆடு, மாடுகள் வளர்ப்பர்; வெளி மாநிலங்களுக்குச் சென்று வேலை செய்வர். மந்திரிக்குச் சமமான பதவியில் இருப்பர். கசாப்புக் கடைக்காரர்கள், அறுவைச் சிகிச்சை செய்யும் மருத்துவர்கள், கிராம அதிகாரிகள், கடைசல் பட்டறைப் பணியாளர்கள் பொற்கொல்லர்கள், வில், அம்பு, துப்பாக்கி ஏந்திக் காவல் புரிவோர்கள், வேடர்கள், காளிகோயில் பூசாரிகள், மரம் வெட்டுபவர்கள், கார், ரெயில், வண்டி போன்றவற்றை ஓட்டுபவர்கள், உருக்காலைகள், மற்றும் உலைகள் போன்றவற்றில் வேலை பார்ப்பவர்கள், குயவர்கள் போன்றோராய்த் திகழ விதி உண்டாகும்.

கும்ப இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய், புதனுடன் கூடி விருச்சிகத்திலிருக்கக் கவிதை பாடுதல், கட்டடக் கலை, மேடைப் பேச்சு, வேதாந்தம் சித்தாந்தம், சுரங்கத் தொழில், பொதுப் பணித்துறை, தேசிய நெடுஞ்சாலைத் துறை, குதிரைகள் பராமரிப்பு, தோல் வியாதிகளைக் குணப்படுத்தும் மருத்துவம், ரோடுகள் பராமரித்தல், சிற்பம் செதுக்குதல் ஆகியவற்றில் ஈடுபடுவர். ஆகாய விமானம், ராக்கெட், ஏவுகணைத் தளங்கள் ஆகியவற்றிலும் உத்தியோகம் உண்டாகும். இரயில் இன்ஜின், கொல்லன் பட்டறைகள், கடைசல் பட்டறைகள் போன்றவற்றிலும் தொழில் வாய்க்கும்.

கும்ப இராசிக்கு 10க்குடையவரான செவ்வாயுடன், குரு விருச்சிகத்தில் கூடி இருந்தால் வாரியத் தலைவர் பதவியும், மந்திரிக்குச் சமமான பதவியும், அரசுத் துறையில் அதிகாரமுள்ள உத்தியோகமும் உண்டாகும். வட்டிக்கு விடும் தொழில், பேக்கரி, இனிப்புப் பலகாரங்கள் செய்தல், ரொட்டி, பிஸ்கட் போன்ற வியாபாரங்கள், துவரை, கடலை போன்ற வியாபாரங்கள் செய்வர். மடப்பள்ளிகளில் தலைமைச் சமையற்காரராவர். நீதித்துறையிலும் சிட்பண்டுகளிலும் பணியாற்றுவர். யாகங்கள், ஹோமங்கள், ஆகியன செய்வர். வேதம் ஓதுவர். கூத்தரங்கம், கலையரங்கம், சபாக்கள் போன்றவற்றை நிருவகிக்கும் உத்தியோகத்தில் இருப்பர்.

கும்ப இராசிக்கு 10க்குடையவரான செவ்வாயுடன், சுக்கிரன் கூடி விருச்சிகத்திலிருந்தால் வாகனங்கள், சொகுசுக் கார்கள் இருக்கும். போக்குவரத்துத் தொழிலில் ஈடுபடுவர். சங்கீத கான சபாக்கள் வைத்து நடத்துவர். கூத்தரங்கம் (சினிமா தியேட்டர்) கலையரங்கம், உணவு விடுதிகள், தேநீர்க் கடைகள், எரிபொருள் விற்பனை ஆகியவற்றில் ஈடுபடுவர். பழங்கள், தோட்டங்கள், சர்க்கரை ஆலைகள் ஆகிய தொழில்களில் ஈடுபடுவர். இரயில், பஸ் போன்றவற்றை ஓட்டுவார்கள். மந்திரவாதிகளாகவும் கிராம அதிகாரிகளாகவும் திகழ்வார்கள். மின்சாரத் துறை, பொதுப் பணித்துறை, தொலைக்காட்சி ஆகியவற்றில் பணிபுரிவர். வீடுகட்டும் தொழிலாளி, சாலைகள் - பாலங்கள் கட்டுவோர், காண்ட்ராக்டர் எனத் திகழ்வர். பிளாஸ்டிக், உருக்காலைகள், தொடர்புடைய தொழில் அமையும். செம்பு, வெள்ளி, பொன், தங்கம் போன்ற வியாபாரத்தில் ஈடுபடுவர். அணிகலன்கள் செய்வர். கியாஸ் ஸ்டவ், மண்ணெண்ணெய் ஸ்டவ், மெழுகுவர்த்திகள், விளக்குள், பல்புகள் போன்றவற்றின் வியாபாரமும் செய்ய விதி உண்டாகும்.

கும்ப இராசிக்கு 10க்குடையவரான செவ்வாயுடன் சனி, விருச்சிக இராசியில் கூடினால் கொதிகலன்கள், இரும்பு உருக்காலைகள்,

நிலபுலன்கள், விவசாயம் எருமை விருத்தி, பால் வியாபாரம், இரும்பு, எஃகு வியாபாரங்கள், சர்க்கரை ஆலைகள், கொல்லன் பட்டறை, கடைசல் பட்டறை, வாகனங்களைப் பழுது பார்த்தல் ஆகியவற்றில் ஈடுபடுவர். வாகனம் ஓட்டுபவர்கள், கிராம அதிகாரிகள், அரசுத் துறையில் அதிகாரமுள்ள பதவி வகிப்போர், மந்திர, தந்திரவாதிகள், காவல்காரர் போன்றோராகவும் இருப்பர்.

கும்ப இராசிக்கு 10க்குடையவரான செவ்வாயுடன், இராகுகேதுக்கள் விருச்சிக இராசியில் கூடினால், பாம்பாட்டும் தொழில், இரசாயனத் தொழில்கள், தோல் பதனிடும் தொழில்கள், மந்திரமிடுதல், மாமிசம், மது வகைகளின் வியாபாரம், அசைவ உணவக வியாபாரம், வெளிநாடுகளில் தொழில் செய்தல், புகைப்பட ஸ்டுடியோக்களில் உள்ள இரசாயன வியாபாரம், மீன், கருவாடு, அழுகின பொருள்கள், பழைய பேப்பர் வியாபாரம், சாயம் காய்ச்சும் தொழில் ஆகியவற்றில் ஈடுபடுவர். நகர சுத்தித் தொழிலாளிகளாகவும் பெட்ரோல், டீசல், மற்றும் எண்ணெய்களை விற்பனை செய்வோராகவும் விளங்குவர்.

கும்ப இராசிக்கு 10க்குடையவரான செவ்வாயுடன் சூரியன், விருச்சிக இராசியில் கூடினால் போலீஸ், இராணுவம், தீயணைப்புத்துறை ஆகியவற்றில் உத்தியோகம் புரிவர். மின்சாரத் துறை, பொதுப் பணித்துறையிலும் உத்தியோகம் வாய்க்கும். அமைச்சர்கள், பல உயர் அதிகாரிகள், நிருவாகிகள், சுங்க இலாகவினர், மாவட்ட ஆட்சித் தலைவர்கள், பல துறைகளின் உயரதிகாரிகள், பொது நலத் தொண்டு நிறுவனங்களின் தலைவர்கள், அரசியல் கட்சிகளின் தலைவர், பாதுகாப்பாளர்கள், கண், பல், எலும்பு, வைத்தியர்கள், அறுவை சிகிச்சை நிபுணர்கள், விமான ஓட்டிகள், கப்பல் மாலுமிகள், பொற்கொல்லர்கள், செம்பு, பொன், தாமிர வியாபாரிகள், கசாப்புக் கடைக்காரர்கள், ஆட்டு, மாட்டுப் பண்ணைகள் நடத்துவோர் எனப் பலவாறு இருப்பார்கள்.

கும்ப இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய், இனி எந்தெந்த வீட்டில் இருந்தால் என்னென்ன தொழில் அமையும் என்பதை அறிவோம்.

கும்ப இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான செவ்வாய், இராசிக்கு 11ஆம் இடமான தனுசு இராசியிலிருந்தால், அரசுத்துறையில் உயரதிகாரிகள், ஆலயங்கள், மடங்கள், தர்மசத்திரம் போன்றவற்றின் தலைவர்கள், உள்துறைச் செயலர்கள், அமைச்சர்களின் செயலர்கள், மாவட்ட ஆட்சித் தலைவர்களின் செயலர்கள், சுரங்க அதிகாரிகள், நீதிபதிகள், வங்கிகளின் நிருவாகிகள், பொதுப்பணித்துறை பொறியியல் வல்லுநர்கள், ஹோமங்கள் யாகங்கள்,

சாந்திகள், பூசைகள் செய்பவர்கள் தங்க, பொன் வியாபாரிகள், பூ, மாலை விற்போர், பொற்கொல்லர்கள், விவசாயத் துறை அதிகாரிகள் இந்திய ஆட்சிப் பணி அதிகாரிகள், பொது மருத்துவர்கள் எனப் பணியாற்றுவார்கள்.

கும்ப இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசிக்கு 12ஆம் இடமான மகரத்திலிருந்தால் உருக்காலைகளில் தொழிலாளிகள், தொழிற்கூடங்கள், கடைசல் பட்டறைகள் ஆகியவற்றில் ஃபிட்டர், பிளம்பர்கள் கசாப்புக் கடைக்காரர்கள், வேட்டையாடுபவர்கள், சாலைகளில் தார் ஊற்றும் வேலை செய்பவர்கள், ஆடு, மாடுகள், எருமைகள் போன்ற கால்நடைச் செல்வங்களைப் பராமரிப்பவர். கட்டட வேலை செய்பவர். வில் அம்பு, துப்பாக்கி ஏந்திக் காவல் புரிபவர்கள். விஷச் சிகிச்சை செய்பவர்கள் எனப் பணிபுரிவர். சிமெண்ட், இரும்பு, செங்கற்சூளைகள், பெட்ரோல், டீசல், நல்லெண்ணெய் போன்றவற்றில் வியாபாரங்கள் உண்டாகும். சிறை அதிகாரிகளாய்த் திகழ்வர். மது விற்பனை, மயக்கம் தரும் பொருள்களின் வியாபாரம் போன்ற தொழில்களும் செய்ய விதி உண்டாகும்.

கும்ப இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான செவ்வாய் இராசியிலே இருந்தால் மரவேலைப்பாடுகள் நிறைந்த தொழில் புரிவர். இரும்பு, வார்னீஷ், டீசல், பெட்ரோல் எண்ணெய்க் கிணறுகள், விவசாயத் தொழில்கள், ஆகியவை தொடர்புடைய தொழிலில் இருப்பர். பட்டறை இரும்பினாலான உபகரணங்களான, கட்டில், பீரோ, மேசை, நாற்காலிகள் செய்தல் வியாபாரம், சிமெண்ட், தார், இரசாயனப் பொருள்கள், சாலைகள் அமைத்தல், பாலங்கள் கட்டுதல் போன்ற தொழில்களில் ஈடுபடுவர். உலை ஆலைகள், உருக்கு ஆலைகள், விண்வெளியில் கலங்களைச் செலுத்துதல், மந்திர தந்திரம், மற்றும் கார், ரயில், இன்ஜின் ஓட்டுதல் போன்ற தொழில்களைச் செய்ய விதி உண்டாகும்.

கும்ப இராசிக்கு 10ஆம் இடத்து அதிபதியான செவ்வாய், இராசிக்கு 2ஆம் இடமான மீனத்திலிருந்தால், யாகங்கள், ஹோமங்கள், சாந்திகள், பூசைகள் செய்யும் தொழில் உண்டாகும். வேத பாட சாலைகள் நடத்துவோர், ஓதுவார்கள், கோயில் அர்ச்சகர்கள், கோயில், மடங்கள், ஆசிரமங்களின் நிருவாகிகள் எனத் திகழ்வர். ரொட்டிக் கடை, பொன், தங்கம், வியாபாரம் செய்வர். அரசுத் துறையில் உயரதிகாரிகளாகவும் இருப்பர். உள்ளாட்சித்துறை, மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகங்கள், மாவட்டக் கருவூலகங்கள், வங்கிகள், நிதி நிறுவனங்கள், அறநிலையத் துறை, பேக்கரிகள் ஆகியவற்றில் பணி செய்ய விதி உண்டாகும். நீதிபதிகளாகவும் வக்கீல்களாகவும் இருப்பர்.

கும்ப இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 3ஆம் இடமான மேஷத்திலிருந்தால் அறுவைச் சிகிச்சை மருத்துவம், போலீஸ், இராணுவம், இரசாயனப் பொருள்கள், பொதுப் பணித்துறை, சாலைகள் பராமரிப்பு, சுரங்கத் தொழில், விவசாய நிலங்கள், விவசாயத் தொழில்கள் ஆடு, மாடுகள் பண்ணைகள் பராமரிப்புத் தொழில் ஆகியவற்றில் ஈடுபடுவர். உருக்காலைத் தொழிலாளி, கசாப்புக் கடைக்காரர்கள், பொற்கொல்லர்கள், மரம் வெட்டும் தொழிலாளிகள், இரத்த தானம் செய்பவர்கள், விஷ சிகிச்சை செய்பவர்கள், கிராம அதிகாரிகள், மந்திரவாதிகள், வண்டி, கார், ரயில் ஆகியவற்றை ஓட்டுபவர்கள், கட்டடக் கலைஞர்கள், பாம்பாட்டிகள் போன்றோராய் இருக்க விதி உண்டாகும்.

கும்ப இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய் இராசிக்கு 4ஆம் இடத்தில் ரிஷப இராசியிலிருந்தால் இனிப்புப் பலகாரங்களை விற்பனை செய்வர். திரைப்படத் துறை, நாடகம், கவிதை, நாட்டியங்கள், எரிபொருள்கள் விற்பனை, திரைப்பட அரங்குகள், கவி இயற்றுதல், பேக்கரித் தொழில்கள், தேநீர்க் கடைகள், சைவ, அசைவ உணவு விடுதிகள், பால் பண்ணைகள், ஆடு மாடு பராமரிப்பு, வாசனைத் தைலங்கள் காய்ச்சி வடித்தல், அரிசி ஆலைகள், வீடு கட்டுதல், சோப்புத் தொழில், ஓவியம் வரைதல், வண்ணம் பூசுதல், மருத்துவம், ஆங்கில மருந்துகள், டானிக்குகள் ஆகியவற்றைத் தயாரித்தல், காளி, பராசக்தி, துர்க்கை போன்ற தெய்வங்களை அர்ச்சனை செய்தல் ஆகிய தொழில்களில் ஈடுபடுவர்.

கும்ப இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 5ஆம் இடமான மிதுனத்திலிருந்தால், மரவேலைப்பாடுகள் செய்வர். மின்சார பல்புகள், உபகரணங்கள் ஆகியவற்றைச் செய்து விற்பனை செய்வர். அச்சகத் தொழில், காகித ஆலைகள் ஆகியவற்றில் பணிபுரிவர். சிற்பிகள், ஜோதிடர்கள், கணக்கு வேலை செய்பவர்கள், மேடைப் பேச்சாளர்கள், வேட்டையாடுபவர்கள், தூதுவர்கள், மருத்துவர்கள், தபால், தந்தி, கம்பியில்லாத் தந்தி, ரேடியோ, டி.வி. ஆகியவற்றில் பணி புரிவர். டெலிபோன், திரையரங்கு, ஆகாய விமானம், ராக்கெட் ஏவுகணைத் தளம் ஆகியவற்றில் பணிபுரிவர். வட்டாட்சியர் அலுவலகங்களிலும் மற்ற துறைகளிலும் எழுத்தர், தட்டச்சாளர், சுருக்கெழுத்தாளர், கணக்கர் போன்ற உத்தியோகங்களும் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 6ஆம் இடமான கடக இராசியில் இருந்தால் பயிர்த்தொழில்கள், படகு விடுதல், கப்பல்கள், ஹோட்டல் தொழில்கள், பொன், தங்க வியாபாரம், பால், வெண்ணெய், நெய்

வியாபாரம், உணவுப் பண்டக சாலைகள், நவதானியக் கிடங்குகள், பழங்கள், நிலங்கள், மனைகள் விற்பனை வைத்தியம் ஆகியவற்றில் ஈடுபடுவர். உணவு பரிமாறுபவர்கள், தரகர்கள், சலவைத் தொழிலாளிகள், உப்பு வியாபாரிகள், முத்துக்குளிப்பவர்கள், கோவில் சேவார்த்திகள் ஆகியோராகவும் கிராம அதிகாரிகளாகவும் விளங்குவர்.

கும்ப இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 7ஆம் இடமான சிம்ம இராசியிலிருந்தால் அரசியல், நிறுவனத் தலைமைப் பதவி வாய்க்கும். அறுவைச் சிகிச்சை மருத்துவம், பள்ளி, கல்வி நிலையங்கள், அறக்கட்டளைகள், கல்லூரிகள், தர்ம ஸ்தானபங்களின் நிர்வாகங்கள் முதலியவற்றில் பொறுப்புள்ள அதிகார அந்தஸ்துள்ள உத்தியோகமும் பதவியும் வாய்க்கும். நாட்டு மருந்து வியாபாரத்தில் ஈடுபடுவர். அரசுத்துறையில் அதிகாரமுள்ள பதவி வகிப்பர். போலீஸ், இராணுவம், தீயணைப்புத் துறை ஆகியவற்றில் பணி அமையும். பூசைகள், ஹோமங்கள், சாந்திகள் போன்றவை செய்வர். சாலைகள் அமைப்பர். பயிர்த்தொழிலில் ஈடுபடுவர். கல் உடைப்பர். ஆகாய விமானங்கள், விண்வெளிக் கலன்கள் ஆகியவற்றில் பணிபுரிவர். கிராமத்தில் அதிகாரமுள்ள பதவியில் இருக்க விதி உண்டாம்.

கும்ப இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 8ஆம் இடமான கன்னியிலிருந்தால், வான சாஸ்திர, நிபுணர்களாகவும், வானியல் ஆராய்ச்சி மையங்களில் பணிபுரிபவராயும், சோதிடர்களாகவும் இருப்பர். ஆகாய விமானத் தளங்கள் விண்வெளிக்கலங்கள், முதலியவற்றில் பணிபுரிவர். கட்டடக் கலைஞர்கள், சிற்பிகள், கவிஞர்கள், அச்சுத் தொழில் செய்வோர், பயிர்த்தொழில் செய்வோர்கள், அர்ச்சகர்கள், புரோகிதர்கள் பாலியல் நோய் மற்றும் குழந்தை மருத்துவம் தெரிந்தவர்கள், மின்சாரக் கருவிகள் உற்பத்தி செய்பவர்கள், மேடைப் பேச்சாளர்கள் ஆகியோராய் இருப்பர். மந்திரிக்குச் சமமான பதவியும், அந்தஸ்தும், கௌரவமும் மிக்க உத்தியோகம் உண்டாகும். வேதாந்திகளாகவும் சித்தாந்திகளாகவும் வேட்டையாடுபவர்களாகவும் இருப்பர். மரவேலைப்பாடுகள், பூவேலைப்பாடுகள் உள்ள தொழில்களும் அமையும்.

கும்ப இராசிக்கு 10க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 9ஆம் இடமான துலாத்திலிருந்தால், கட்டடம் கட்டும் தொழில், ஹோட்டல்கள், பொதுப்பணித்துறை, சாலைகள் அமைத்தல், ஆடு, மாடுகள் வளர்ப்பு, பண்ணைகள், வண்டி, இரயில், கார் ஆகியன ஓட்டுதல், சங்கீதம், நாட்டியம், வாசனைத் திரவிய சாலைகள், தேநீர்க் கடைகள், பேக்கரிகள், இனிப்புப்

பண்டங்கள் உற்பத்தி மற்றும் விற்பனை, மின்சார பல்புகள், கியாஸ் ஸ்டவ் அடுப்புகள், சிற்பத் தொழில், எலெட்க்ரானிக்ஸ் பொருள்கள் ஆகியவற்றில் ஈடுபடுவர். மந்திரவாதிகள், கவிஞர்கள், பொற்கொல்லர்கள், கொத்தனார்கள், கூலித்தொழிலாளிகள், வெள்ளி, செம்பு போன்ற வியாபாரமும் செய்பவர். இரத்தினப் பரிசோதகர், கப்பல் தொழில் செய்பவர், ஓவியர்கள், வண்ணம் பூசுபவர். டி.வி. சினிமா, தியேட்டர்கள் வைத்து நடத்துபவர் ஆகியோராய்த் திகழ்வர்.

ஸ்ரீசுப்ரமணியர்க்கு அர்ச்சனையும், ஆராதனையும், செவ்வாய்க்கு யந்திர, மந்திர, பூசைகளும் செய்தால் நற்பலன்கள் அடைய விதியுண்டாகும்.

# மீனம்

மீன இராசிக்கு 10க்குடையவரான குரு, இராசிக்கு 10ஆம் இடமான தனுசில் ஆட்சி பெற்றிருந்தால் ஞான மார்க்கங்களில் ஈடுபடுவர். தெய்வீக வழிபாடுகள் நிறைந்த தொழில் செய்வார்கள். ஆசிரமங்கள், மடங்கள், ஆலயங்கள், பள்ளி ஆகியவற்றை நிருவகிப்பார்கள். தலைமை ஆசிரியர்களாகவும், கோயில் குருக்களாகவும் தர்ம ஸ்தானபங்கள் முதலியவற்றில் தலைமை பொறுப்பும் அதிகாரமும் அந்தஸ்துமுள்ள பதவி வகிப்பவராகவும் பொதுச் சேவை மையங்களில் பணி செய்பவராகவும் பிறருக்கு உபதேசம் செய்பவராகவும், பிரசங்கிகளாகவும், மதப் பிரச்சாரம் செய்பவர்களுக்கெல்லாம் தலைமை ஏற்பவராகவும் அதிகார அந்தஸ்துள்ள பதவி வகிப்பவராகவும் இருப்பர். வியாபாரம், புஷ்பராகம், வைடூரியம் போன்ற கற்களை விற்றல் முதலிய தொழில்களைச் செய்ய விதி உண்டாகும். விவசாயம், வருமான வரி அலுவலகங்கள், நீதித்துறை, நிதிநிறுவனங்கள் போன்றவற்றில் பணிபுரிவர். கொடுக்கல் வாங்கல் நல்ல பலனைத் தரும். கிராமத் தலைவர் பதவி வாய்க்கும். சுரங்கத் துறை, தனம் புரளும் கேந்திரங்களில் பணி கிட்டும். யோகாப்பியாசங்கள், அஷ்டமாசித்திகள் போன்றவை ஏற்பட விதியுண்டு.

மீன இராசிக்கு 10க்குடையவரான குரு, இராசிக்கு 10ஆம் இடமான தனுசில் சுக்கிரனுடன் கூடினால், வீடு கட்டுவர். வேத பாடசாலைகள் நடத்துவர். ஹோமங்கள், சாந்திகள், யாகங்கள், பூசைகள் ஆகியன செய்வர். இனிப்புப் பலகாரப் பண்டங்களை விற்பனை செய்வர். மாலை வியாபாரம் செய்வர். வாசனைத் திரவிய சாலைகள் நடத்துவர். சினிமாத் துறையில்

ஈடுபடுவர். ஆசிரியர்களாகவும் மதபோதகர்களாகவும், ரிஷிகளாகவும், சாதுக்களாகவும், மடத் தலைவர்களாகவும், அரசுத்துறையில் உயர் அதிகாரிகளாகவும், எழுத்தாளர்களாகவும், கவிஞர்களாகவும் மூலிகை, மருந்து வியாபாரிகளாகவும், தங்கம், பொன், வெள்ளி, வியாபாரிகளாகவும், மந்திரிக்குச் சமமான பதவிகள் வகிக்கக் கூடியவர்களாகவும், நீதித்துறை, நிதி நிறுவனங்கள், தரும ஸ்தாபன டிரஸ்டுகள் போன்றவற்றை நிருவகிக்கக்கூடியவர்களாகவும், அரசு வங்கிகள், சீட்டுக் கம்பெனிகள் போன்றவற்றில் உத்தியோகம் பார்ப்பவராகவும் இருக்க வாய்ப்புகள் உண்டாகும்.

மீன இராசிக்கு 10க்குடையவரான குருவுடன் சனி தனுசில் கூடிச் சேர்ந்தால், சிவாலயத் திருப்பணியில் ஈடுபடுவர். தங்கச் சுரங்கத்தில் பணிபுரிவர். விவசாயத் தொழிலில் ஈடுபடுவர். பண்ணைகள் வைத்து நிர்வகிக்கும் பொறுப்பும் உண்டாகும். மர வேலைகள் செய்வர். அரசுத் துறையில் தொல் பொருள் ஆய்வுத் துறையில் உத்தியோகம் பார்ப்பர். வங்கிகள், வருமான வரி அலுவலகங்கள், சுங்க வரி, கலால் வரி, போன்ற அலுவலகங்களில் அட்டெண்டர் உத்தியோகம் பார்ப்பர். நீதித்துறை, நிதி நிறுவனம் ஆகியவற்றில் சிப்பந்திகளாகவும், கடை நிலை ஊழியர்களாகவும், மற்ற துறைகளில் ஆவணக் காப்பாளர்களாகவும், இருப்பர். ஆயுதக்கிடங்கு ஆலைகளில் பணி புரிவர். தொழிற்சாலைகளிலும், தொழிற்பயிற்சிக் கூடங்களிலும் அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்யும் அதிகாரிகளாகவும் இருக்க விதி உண்டாகும்.

மீன இராசிக்கு 10க்குடையவரான குருவுடன் இராகு கேதுக்கள் தனுசில் கூடிச் சேர்ந்தால், அரசுத் துறையில் கடைநிலை ஊழியர்களாக இருப்பர். மருந்து வியாபாரம் செய்வர். மாமிசம், அழுகிய பொருள்கள், கருவாடு, மீன் போன்ற வியாபாரம் செய்வர். தொழுநோய் பராமரிப்புத் துறை, சுகாதார நிலையங்கள், போன்றவற்றில் பணிபுரிவர். வெளிநாடு மற்றும் வெளிமாநிலங்களில் சென்று உத்தியோகம் பார்க்கும் நிலை வாய்க்கும். சிறைச்சாலைகளில் பணிபுரிவர். கழிவுப் பொருள்களை வெளியேற்றும் வேலை வாய்க்கும். பூச்சி மருந்துகள், இரசாயன மருந்துகள், கலவைகள், மது, சாயம் போன்றவற்றின் தொழில்களில் ஈடுபடுவர்.

மீன இராசிக்கு 10க்குடையவரான குருவுடன் சூரியன் சேர்ந்து தனுசு இராசியிலிருந்தால் ஆத்ம ஞானிகள், ஆசிரமவாசிகள், திருப்பணி வேலைகள் செய்பவர்கள், சிவாலயங்களில் பணிபுரிபவர் எனத் திகழ்வர். அரசுத்துறையில் அதிகாரமுள்ள உத்தியோகமும், அரசியல் கட்சித்

தலைமைப் பதவியும், மின்சாரத் துறையில் பணியும் உண்டாகும். நாட்டு மருந்து வியாபாரம் மற்றும் மூலிகைகள், நூல் உற்பத்தி போன்ற தொழிலிலும், வைத்தியத் தொழிலிலும் ஈடுபடுவர். தரும ஸ்தாபனங்களை நடத்துபவர்களாகவும், கோயில்களில் பணிபுரியும் அதிகாரிகளாகவும் இருப்பார்கள். அமைச்சர்கள், கவர்னர்கள், அரசத்துறை உயர் அதிகாரிகள், ஆகியோராகவும் திகழ்வர்.

மீன இராசிக்கு 10க்குடையவருடன் 9க்குடையவரான செவ்வாய் கூடிச் சேர்ந்தால், அரசத்துறையில் அதிகாரம், அந்தஸ்து, கௌரவமுள்ள பதவிகள் வகிப்பர். போலீஸ், இராணுவம், தீயணைப்புத் துறை, போன்ற துறைகளில் தலைமைப் பதவி கிட்டும். அரசியல் கட்சிகளில் தலைமைப் பதவி வகிப்பர். விமானப்படை, கடற்படை போன்றவற்றின் தளபதியாகும் யோகமும் உண்டாகும். போலீஸ் துறையில் தலைமை, அதிகாரம், அந்தஸ்து உள்ள பதவிகளான ஐ.ஜி. கமிஷனர், இயக்குநர், ஐ.பி.எஸ் அதிகாரிகள், மாவட்ட ஆட்சித் தலைவர்கள், உள்துறைச் செயலர், சுரங்க அதிகாரிகள், கிராம அதிகாரிகள், பாராளுமன்ற சட்டமன்ற உறுப்பினர்கள், மந்திரிகள் ஆகியன உண்டாக விதியுண்டு.

மீன இராசிக்கு 10க்குடையவருடன் (குரு) புதன் கூடித் தனுசு இராசியில் சேர்ந்தால், குதிரை ஏற்றம் தெரிந்தவர்கள், மொழிபெயர்ப்பாளர்கள், வழக்கறிஞர்கள், நீதிபதிகள், கட்டடக் கலைஞர்கள், மேடைப் பேச்சாளர்கள், வேதாந்திகள், சித்தாந்திகள், பல மொழிகள் அறிந்த வழிகாட்டித் தொழில் செய்பவர்கள், எழுத்தாளர்கள், காவியம், சரித்திரம், புராணம் முதலியவற்றை எடுத்துக் கூறும் ஆசிரியர், மரவேலைப்பாடுகள் செய்யும் சிற்பிகள், தாந்திரீகர்கள், இரத்தினங்களைப் பரிசோதிப்பவர்கள், ஞானிகள், பல உயர்ந்த உத்தியோகம் புரிவர் எனத் திகழ விதி உண்டாகும். சித்திரப் பூ வேலைப்பாடுகள் அறிந்தவர்கள், ஓவியர்கள், நாட்டியக் கலைஞர்கள், எழுத்தர், ஜோதிடர்கள், காகித வியாபாரம் செய்பவர், பயிர்த் தொழில் செய்வோர், குழந்தை நல மருத்துவர் எனவும் திகழ்வர்.

மீன இராசிக்கு 10க்குடையவரான குரு, இராசிக்கு 11ஆம் இடமான மகரத்திலிருந்தால், காவல் தெய்வங்கள், அய்யனார் போன்ற தெய்வங்களை அர்ச்சிக்கும் தொழில், சிவன் ஆலயத்திருப்பணிகள், சிவ சம்பத்துகளை நிர்வகிக்கும் பொறுப்பு ஆகியன வாய்க்கும். விவசாயங்கள், எருமை மாட்டுப் பண்ணைகள் நிர்வாகம், சிறைச்சாலைகளில் உத்தியோகமும் ஆகியன உண்டாகும். தரும ஸ்தாபனங்கள், அனாதை இல்லங்கள், குருடர், செவிடர், ஊமைப் பள்ளிகளை வைத்து நடத்துதல், அவர்களுக்காகத் தொண்டு

செய்தல் ஆகியன ஏற்படும். போதைப் பொருள்கள், எண்ணெய், தைலங்கள் ஆகியவற்றை விற்பனை செய்வர். கூலித் தொழில் செய்வார்கள். தானிய வியாபாரமும் உண்டாகும். ஞான மார்க்க உபதேசம் செய்யவும் விதியுண்டு.

மீன இராசிக்கு 10க்குடையவரான குரு, இராசிக்கு 12ஆம் இடமான கும்பத்திலிருந்தால், மந்திர, தந்திரவாதிகளாகவும், பைரவர், காவல் தெய்வங்கள் கோயில் பூசாரிகளாகவும், ஆசிரமங்கள், மடங்கள், கோயில்கள், சிவாலயத் திருப்பணிகள் செய்பவராகவும் தார்ச் சாலைகள் அமைப்பவர்களாகவும் கிணறு வெட்டுபவர்களாகவும், ஆழ்கிணறு தோண்டுபவராகவும், ஜெட் பம்புகள், மோட்டார்கள், ஆயில் இன்ஜின்கள் அமைப்பவராகவும், மோட்டார் வாகனங்கள், டீசல், பெட்ரோல் ஆயில்கள், மண்ணெண்ணெய் ஆகியவற்றை விற்பவராகவும் இருப்பர். வயற்களத்தில் கூலித்தொழில் செய்பவர் களாகவும் விவசாயப் பண்ணைகள் வைத்து நடத்துபவர்களாகவும் கடை நிலை ஊழியர்களாகவும் இருக்க விதி உண்டாகும்.

மீன இராசிக்கு 10க்குடையவரான குரு, இராசியிலே ஆட்சி பெற்றிருந்தால் ஞானிகளாகவும் சாதுக்களாகவும், வேதம் ஓதுபவர்களாகவும் வேதப்பாட சாலை நடத்துபவராகவும் ஆச்சாரியத்துவம் பெற்றவராகவும் உபதேசம் செய்பவராகவும் அரசுத்துறையில் உயர் அதிகாரிகளாகவும் குடும்பத்தை நிர்வகிக்கும் பொறுப்புள்ளவராகவும் ஆலயம், மனை, மடம், ஆசிரமங்கள், அனாதை இல்லங்கள், அறக்கட்டளை போன்ற நிறுவனங்களுக்குத் தலைமைப் பொறுப்பினராகவும் நிருவாகியாகவும் இருக்க விதியுண்டு. மந்திரிக்குச் சமமான பதவி, வகிப்பர். அரசியல் ஆலோசகர்களாய் இருப்பர். தங்கம், பொன், வெள்ளி வியாபாரத்தில் ஈடுபடுவர். சங்கீதம், பயிர்த்தொழில்கள், காய்கறிகள், பழத்தோட்டங்கள் அமைத்தல் ஆகிய தொழில்களில் ஈடுபடுவர். மிகப் பெரிய பெயர்பெற்ற தபஸ்விகளாகவும், கோவிலில் பணிபுரிபவர்களாகவும், உணவு விடுதி நடத்துபவர்களாகவும் இருக்க விதி உண்டாகும்.

மீன இராசிக்கு 10க்குடையவரான குரு இராசிக்கு 2ஆம் இடமான மேஷத்தில் இருந்தால், பயிர்த்தொழில், விவசாயம், பூமிகள், விற்பனை ஆகியவற்றில் ஈடுபடுவர். தங்கச் சுரங்கத்தில் வேலை செய்வர். தங்கம், பொன் வியாபாரிகளாகவும் இரசாயனப் பொருள்கள் விற்பவராகவும் இருப்பார்கள். போலீஸ், இராணுவம், ஆட்சிப் பணித்துறை போன்ற துறைகளில் உத்தியோகமும் புரிவர். முப்படை தளபதிகளாய் இருப்பர். உருக்காலைப் பணி, ரோடுகள் அமைத்தல், பாலங்கள் கட்டுதல், அறுவைச்

சிகிச்சை செய்தல், மாமிச வியாபாரம் ஆகியவற்றில் ஈடுபடுவர். கிராமத் தலைவராகவும், துப்பாக்கி ஏந்திக் காவல் செய்யும் வீரர்களாகவும் மந்திரிப் பிரதானிகளாகவும், இரயில், கார் ஓட்டுநர்களாகவும் இருக்க விதி உண்டாகும்.

மீன இராசிக்கு 10-க்குடைவரான குரு இராசிக்கு 3ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால் சங்கீத வாத்தியமிசைப்பவர், இசைக்கலைஞர்கள், கவிஞர்கள், நாட்டியம், நடனம் நாடகம், திரைப்படத் துறையைச் சேர்ந்தவர்கள், மலர் விற்கும் வியாபாரிகள் ஆகியோராய்த் திகழ்வர். பால் பண்ணைகள், கால்நடை பராமரிப்பு, அழகு சாதனப் பொருள்கள் விற்றல், அலங்கார ஊர்தி அமைத்தல், தங்கம், பொன், வெள்ளி வியாபாரம் ஆகியவற்றில் ஈடுபடுவர். பொற்கொல்லர்கள், யாத்திரை செய்பவர்கள், சுற்றுலாத்துறை ஓவியர்கள், உணவு விடுதிகள் நடத்துபவர், தித்திப்புப் பலகார விற்பனை நிலையம் நடத்துபவர், இரத்தினப் பரிசோதகர், மத போதகர்கள், வாசனைப் பொருள்கள் விற்பனையாளர் எனத் திகழ்வர்.

மீன இராசிக்கு 10க்குடையவரான குரு இராசிக்கு 4ஆம் இடமான மிதுனத்திலிருந்தால் அரசுக் கஜானாவில் உத்தியோகம் பார்ப்பர். கணக்கு ஆசிரியர்கள், மொழி பெயர்ப்பாளர்கள், கவிகள், அச்சக வேலை செய்பவர்கள், சிற்பிகள், வேதாந்திகள், புராண வரலாற்று ஆசிரியர்கள், நகைச்சுவை எழுத்தாளர்கள், மரவேலை செய்பவர்கள், இரத்தினப் பரிசோதகர்கள், இயந்திரங்களையும் மின் சாதனப் பொருள்களையும் விற்பவர் எனத் திகழ்வர். மருத்துவர்கள், தாந்திரீகர்கள், பொது வியாபாரிகள், வேட்டையாடுபவர்கள், மரவேலை செய்பவர்கள் போன்றவராய்த் திகழ விதி உண்டாகும்.

மீன இராசிக்கு 10க்குடையவரான குரு, இராசிக்கு 5ஆம் இடமான கடகத்திலிருந்தால், ஞான மார்க்க உபதேசம் செய்வர். ஆச்சாரியத்துவம் வாய்க்கும். விவசாயத் தொழில் செய்வர். பள்ளி, கல்வி, ஆலயம் ஆகியவற்றை நிருவகிப்பவராகவும், உணவுப் பொருள்களை விற்பவராகவும் நெய், வெண்ணெய், பால் ஆகியவற்றை விற்பனை செய்பவர்களாகவும், காய்கறிகள், பழத்தோட்டங்கள், மற்றும் பண்ணைகளை நிருவகிப்பவராகவும் பொது நிறுவனத் தொண்டு செய்பவராகவும், கமிஷன் மண்டியில் பணிபுரிபவராகவும் அரசுத் துறையில் உயரதிகாரியாகவும், குதிரை வண்டிக்காரர்களாகவும் நவதானிய வியாபாரியாகவும் உப்பு வியாபாரியாகவும் புஷ்பக வியாபாரியாகவும் இருப்பர்.

மீன இராசிக்கு 10க்குடையவரான குரு, இராசிக்கு 6ஆம் இடமான சிம்மத்திலிருந்தால், நாட்டு மருந்து வியாபாரிகள், பள்ளி, கல்லூரி

நிருவாகிகள், கோயிலில் பூஜை செய்பவர்கள், கண், பல், எலும்பு வைத்தியர்கள், அரசுத் துறையில் உயர் அதிகாரிகள், நூல், துணிகள் வியாபாரம் செய்பவர், மின்சார நிறுவனங்களில் வேலை செய்வோர்கள், வழக்கறிஞர்கள், நீதிபதிகள், நீதித்துறையில் அலுவல் செய்பவர். தலைவர்கள், பொது சேவை மையங்களில் உத்தியோகம் புரிவர் என விளங்குவர். ஆத்ம ஞானிகள், ஆன்மிகவாதிகள், மடத்து நிர்வாகிகள் ஆகியோராகவும் இருக்க விதியுண்டு.

மீன இராசிக்கு 10க்குடையவரான குரு இராசிக்கு 7ஆம் இடமான கன்னியிலிருந்தால், வெளிநாட்டுத் தூதுவர்கள், புரோகிதர்கள், கணக்கர்கள், கார், ரயில் ஓட்டுபவர்கள், கவிஞர்கள், மொழி பெயர்ப்பாளர்கள், சிற்பிகள், ஜோதிடர்கள், வானிலை ஆராய்ச்சி மையத்தில் பணி செய்பவர்கள், விமானத் தளங்களில் பணிபுரிபவர்கள், எழுத்தாளர்கள், கட்டுரை ஆசிரியர்கள், மருத்துவர்கள், மரவேலைச் சிற்பங்கள் செய்பவர்கள், எழுது பொருள்கள் வியாபாரம் செய்பவர், இரத்தினப் பரிசோதகர், வேதாந்திகள், விற்பனை வரி அலுவலகங்களில் பணிபுரிபவர்கள், தேசியமயமாக்கப்பட்ட அரசு வங்கிகளில் உத்தியோகம் செய்பவர்கள், தாந்திரீகர்கள் எனத் திகழ்வர்.

மீன இராசிக்கு 10க்குடையவரான குரு, இராசிக்கு 8ஆம் இடமான துலா இராசியிலிருந்தால், மலர்கள், மாலைகள், அணிகலன்கள் ஆகியவற்றை விற்பனை செய்வர். பரத நாட்டியம், சங்கீதம், பாட்டு, திரைப்படத்துறை, நாடகத்துறை, தொலைக்காட்சி ஆகியவற்றில் ஈடுபாடுண்டாகும். வீடியோ, ஆடியோ, எலக்ட்ரானிக்ஸ் பொருள்கள், தங்கம், பொன், வெள்ளி வியாபாரம், வாசனைத் தைலங்கள், அழகு சாதனப் பொருள்கள், நீதித்துறை, சீட்டுக்கம்பெனி நிர்வாகம் மற்றும் அரசுத்துறை உத்தியோகம், இனிப்புப் பலகாரங்களின் உற்பத்தி மற்றும் விற்பனை ஆகியவற்றில் ஈடுபடுவர்.

மீன இராசிக்கு 10க்குடையவரான குரு, இராசிக்கு 9ஆம் இடமான விருச்சிகத்திலிருந்தால் விவசாயத் தொழிலில் பண்ணை அதிபர்களாகவும் கைத்தொழில் செய்வோராகவும் இருப்பர். சாலைகள் பராமரிப்பு, இரசாயனப் பொருள்கள் விற்பனை, அரசு ஆட்சிப் பணி உத்தியோகம் ஆகியவற்றில் ஈடுபடுவர். பல உயர் அதிகாரிகளாய் இருப்பர். ஆடு, மாடுகள் பண்ணைகள் பராமரித்தலும் பொது மராமத்து வேலைகளும் வாய்க்கும். அறுவைச் சிகிச்சை மருத்துவராகவும் ஆலயங்கள், மடங்கள், தர்ம ஸ்தாபனங்கள், சிட்பண்ட்ஸ், நீதி ஸ்தலங்கள் போன்றவற்றில் உத்தியோகம் செய்ய விதி உண்டாகும். உணவு விடுதிகள், யாகங்கள், ஹோமங்கள் பூசைகள் ஆகியன நடத்துவர். பராசக்தி கோயில் அர்ச்சகர்கள், மரவேலைச் சிற்பிகள், தாந்திரிகர்கள்,

பூசாரிகள், கிராம அதிகாரிகள், வீடு கட்டும் கொத்தனார்கள், கூலியாள் போன்றவராயும் இருப்பர்.

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு அர்ச்சனையும் ஆராதனையும் செய்யவேண்டும். பின் குருவுக்கு எந்திர மந்திரப் பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் அடையலாம்.

# பதினொன்றாம் பாவம்

## மேஷம்

மேஷ இராசிக்கு 11க்குடையவரான சனி இராசிக்குப் 11ஆம் இடமான கும்பத்தில் ஆட்சி பெற்றிருந்தால் மூத்த சகோதரர்கள் நல்ல ஆயுளுடனும் ஆரோக்கியத்துடனுமிருப்பார்கள். செய்தொழில்களின் மூலம் நல்ல இலாபம் உண்டாகும். சனி திசையில் திடீர் ஆதாயங்கள் ஏற்படக் கூடும். விவசாய நிலங்கள் மூலம் நன்மையான பலன்களை அடைய விதி உண்டாகும் இளைய தாரம் கட்டும் யோகம் ஏற்பட வாய்ப்புண்டாகும்.

மேஷ இராசிக்கு 11க்குடையவரான சனியுடன் இராகுகேதுக்கள் 11ல் கூடினால், அழுகின பொருட்கள், சாராயம், மது, மாமிசம் போன்ற தொழில்களால் அபரிமிதமான இலாபங்களை எதிர்பார்க்கலாம். அதனால் பெண்கள் சேர்க்கையும் உண்டாகும். தானதருமங்கள் செய்பவராகவும் இருப்பீர்கள்.

மேஷ இராசிக்கு 11க்குடையவரான சனியுடன் சூரியன் கூடிச் சேர்ந்து 11ஆம் இடத்திலிருந்தால் நல்ல தீர்க்கமான ஆயுள் உண்டு. நல்ல இலாபம் உண்டாகும். புத்திர சந்தானங்களால் மகிழ்ச்சியுண்டாகும். சொந்தபந்தங்கள், பூர்வ புண்ணியங்களினால் நல்ல இலாபமும் உண்டாகும். அரசாங்கத்தில் நல்ல உத்தியோகமும் பதவியும் வாய்க்கும்.

மேஷ இராசிக்கு 11க்குடையவரான சனியுடன் செவ்வாய் கூடி, கும்ப இராசியிலிருந்தால் மூத்த சகோதரர்கள் சில காலம் நட்புடனும், சில காலம் மனஸ்தாபங்களுடனும் இருப்பார்கள். நேர்மையற்ற வழியில் பணம் தேடிப்

பிழைப்பவர்களாய் இருப்பார்கள். விதவை ஸ்திரீகளை மணமுடிக்க முயல்வார்கள்.

மேஷ இராசிக்கு 11க்குடையவரான சனியுடன் புதன் கூடி, கும்பத்திலிருந்தால் இலாபங்களை எதிர்பார்க்க முடியாது. மூத்த சகோதரர்கள் வியாதியுடனிருப்பார்கள். இளைய சகோதரர்களால் நன்மையும் இலாபமும் உண்டாகும். கடன்கள் அதிகமாகிக் கஷ்டமாயிருக்க விதியாகும்.

மேஷ இராசிக்கு 11க்குடையவரான சனியுடன் குரு கூடி, கும்ப இராசியிலிருந்தால் தெய்வீக வழிபாடுகள் நிறைந்திருக்கும். ஓரளவு இலாபங்கள் உண்டாகும். மூத்த சகோதரர்களால் கஷ்டமுண்டாகும். தேவாலயத் தரிசனமும், தரும காரியச் செலவுகளும் உண்டாகும்.

மேஷ இராசிக்கு 11க்குடையவரான சனியுடன் சுக்கிரன், கும்ப இராசியில் கூடினால் நல்ல செல்வமும், பெண்களினால் சுகமும் உண்டாகும். புத்திர பாக்கியம் ஏற்படும். மகிழ்ச்சியான வாழ்க்கை அமையும். கொடுக்கல் வாங்கல் தொழிலால் நல்ல இலாபம் உண்டாகும். மூத்த சகோதரர்களின் ஆதரவு உண்டாகும்.

மேஷ இராசிக்கு 11க்குடையவரான சனி 12ஆம் வீட்டிலிருந்தால் இலாபங்கள் கைக்கு வந்தவுடனேயே விரயமேற்படும் நிலை உருவாகலாம். கடன் தொல்லைகளும் நித்திரைக் குறைவும் உண்டாகும். அமைதியிழந்து தவிக்க விதியுண்டு. வியாதி, எதிரி ஆகியவற்றால் கஷ்டமுண்டாகும்.

மேஷ இராசிக்கு 11க்குடைய சனி மேஷ இராசியிலிருந்தால் மூத்த சகோதரர்கள் சௌகரியங்களுடனிருப்பார்கள். எந்தத் தொழிலில் ஈடுபட்டாலும் நல்ல இலாபங்களைப் பெறுவார்கள். குடும்பத்தில் செல்வமும் செல்வாக்கும் உண்டாகும். ஆயினும் மூத்த சகோதரருக்குக் கண்டமுண்டு.

மேஷ இராசிக்கு 11க்குடையவரான சனி 2ஆம் இடமான ரிஷப இராசியில் நிற்பதால் கொடுக்கல், வாங்கல் வாக்குச் சாதுரியத்தினால் நல்ல லாபமுண்டாகும். மூத்த சகோதரரால் நல்ல நன்மையும், ஆதரவும் உண்டு. செல்வாக்கு, கௌரவமான பதவிகள் ஆகியன உண்டாகும்.

மேஷ இராசிக்கு 11க்குடையவரான சனி இராசிக்கு 3ஆம் இடமான மிதுனத்திலிருந்தால், மூத்த சகோதரர்களும் இளைய சகோதரர்களும் நல்ல அன்புடனும், ஆதரவுடனும் இருப்பார்கள், தொழில் மூலம் இலாபங்கள். ஆதாயங்கள் ஆகியன உண்டாக விதியுண்டு.

மேஷ இராசிக்கு 11க்குடையவரான சனி, இராசிக்கு 4ஆம் இடமான கடகத்திலிருந்தால், தாய் ஆதரவும், தாய் வழியினர் ஆதரவும், மூத்த சகோதரத்தினால் ஆதரவும் உண்டு. வாகனம், வீடு, மனை ஆகியவைகளால் நல்ல இலாபங்கள் உண்டாம். பெண்களினால் நற்சுகமுண்டு.

மேஷ இராசிக்கு 11க்குடையவரான சனி, இராசிக்கு 5ஆம் இடமான சிம்மத்திலிருந்தால் நல்ல இலாபங்கள் உண்டு. புத்திரர்களாலும், மூத்த சகோதரத்தினாலும் நன்மையுண்டு. செய்தொழிலில் ஆதாயமுண்டாக விதியுண்டு.

மேஷ இராசிக்கு 11க்குடையவரான சனி, இராசிக்கு 6ஆம் இடமான கன்னியில் நிற்பதால், மூத்த சகோதரரே எதிரியாகும் சூழ்நிலை உருவாகலாம். கடன் அதிகமாகும். வருகிற இலாபமெல்லாம் கடனுக்காகவே கொடுக்க நேரிடும். மூத்த சகோதரருக்கு வியாதியுண்டு.

மேஷ இராசிக்கு 11க்குடைய சனி இராசிக்கு 7ஆம் இடமான துலாத்திலிருந்தால் மூத்த சகோதரர் அன்புடனும் ஆதரவுடனும் இருப்பார். அவரால் நன்மையுண்டு, மனைவியால், செல்வமும், செல்வாக்கும், இலாபங்களும் உண்டாகும். செய்தொழிலில் ஆதாயம் உண்டாக விதி.

மேஷ இராசிக்கு 11க்குடையவரான சனி, இராசிக்கு 8ஆம் இடமான விருச்சிகத்திலிருந்தால், மூத்த சகோதரருக்குக் கண்டமுண்டாகும். இலாபங்களை எதிர்பார்க்க முடியாது. செய்தொழிலில் விரயமும் கஷ்டமும் ஏற்பட விதியாகும்.

மேஷ இராசிக்கு 11க்குடைய சனி, இராசிக்கு 9ஆம் இடமான தனுசில் இருந்தால் தகப்பனாரின் தொழிலைச் செய்து பெரிய இலாபங்களை அடைய விதியாகும். செய்தொழிலில் ஆதாயம் உண்டாகும். மூத்த சகோதரர் நல்ல சௌகரியங்களுடனிருப்பார். குடும்பத்தில் செல்வம், வண்டி, வாகனங்கள் வந்து சேரும்.

மேஷ இராசிக்கு 11க்குடைய சனி, இராசிக்கு 10ஆம் இடமான மகரத்தில் இருந்தால் மூத்த சகோதரர் கௌரவப் பதவியில் இருப்பார். நல்ல இலாபங்களை அடைய விதியுண்டு. அரசுத்துறை உத்தியோகம், கௌரவப் பதவி, தொழிலால் ஆதாயம், மற்றும் இலாபங்களை அடைய விதி ஆகியன உண்டாகும்.

ஸ்ரீவிநாயகப் பெருமானுக்கு அர்ச்சனையும் சனிக்கு எந்திர, மந்திர, பிரீதிகளும் செய்தால் நற்பலன்களை அடையலாம்.

# ரிஷபம்

ரிஷப இராசிக்கு 11க்குடையவரான குரு மீனத்தில் ஆட்சிபெற்றால் செய்தொழிலினால் மத்திமமான இலாபங்கள் உண்டு. மூத்த சகோதரர்கள் நல்ல சௌகரியங்களுடன் இருப்பார்கள். அவர்களின் அன்பும், ஆதரவும் உண்டாகும். செய்தொழிலினால் ஆதாயம், செல்வாக்கு, குடும்பத்தில் தெய்வீக வழிபாடுகள் ஆகியன உண்டாகும். நல்ல பிரசித்தி பெற்றவராகவும், பணம் சேருபவராகவும் இருக்க விதி உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 11க்குடையவரான குருவுடன், சுக்கிரன் கூடி மீனத்திலிருந்தால் மூத்த சகோதரர்களின் அன்பும் ஆதரவும் இவர்களுக்கு உண்டாகும். அவர்களால் நல்ல இலாபங்கள் உண்டாக விதியுண்டு. தொழில் மூலம் நல்ல இலாபங்களை அடைய விதி உன்டாகும். மூத்த சகோதரர்களுக்கு வியாதி உண்டாகும். கடன்கள் அதிகமாக விதியுண்டு.

ரிஷப இராசிக்கு 11க்குடையவரான குருவுடன் சனி மீனத்தில் கூடினால் மூத்த சகோதரர்கள் நல்ல சௌகரியங்களுடன் இருப்பார்கள். தகப்பனார்க்குச் செய்தொழிலில் நஷ்டமேற்படும். தெய்வீக வழிபாடுகள், ஆலயப் பிரவேசம் ஆகியன உண்டாகும். திடீர் யோகம் ஏற்பட வாய்ப்பு உண்டாகும். குடும்பம் நல்லபடியாக இருக்கும்.

ரிஷப இராசிக்கு 11க்குடையவரான குருவுடன் இராகுகேதுக்கள் மீன இராசியில் கூடினால் மூத்த சகோதரர் நல்லபடியாக இருக்கமாட்டார். போதைப் பொருளுக்கு அடிமையாக நேரும். செய்தொழிலில் இலாபங்களும் ஆதாயங்களும் உண்டாகும். இரக்க குணம் உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 11க்குடையவரான குருவுடன் சூரியன் மீனத்தில் கூடினால் மூத்த சகோதரருக்கு ஆயுள் விருத்தியுண்டு. தாயாருக்குக் கண்டமுண்டாகும். செய்தொழிலில் நல்ல இலாபமும், வீடு, மனை, வாகனங்கள் மூலம் ஆதாயங்களும் கிடைக்க விதி உண்டாகும். நல்ல இலாபமும் சௌகரியமும் கிடைக்க விதி உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 11க்குடையவரான குருவுடன் செவ்வாய் சேர்ந்தால் மூத்த சகோதரத்தால் நன்மையும், பிள்ளைகளால் மகிழ்ச்சியும் உண்டாக விதியுண்டு. செய்தொழிலில் ஆதாயம் உண்டு. மனைவியால் நல்ல செல்வாக்கும் புகழும் உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 11க்குடையவரான குருவுடன் புதன் சேர்ந்து மீனத்தில் கூடினால் பிள்ளைகளால் மகிழ்ச்சியும், மனநிறைவும் உண்டாகும். பூர்வ புண்ணியச் சொத்துகளினால் நல்ல இலாபமும் உண்டாகும். அரசுத் துறையில் உயர் பதவிகள் அனுபவிக்க விதி உண்டாகும். கொடுக்கல் வாங்கல் மூலம் நல்ல வசதி வாய்ப்புண்டு.

ரிஷப இராசிக்கு 11க்குடையவரான குரு, 12ஆம் இடமான மேஷத்திலிருந்தால் வரக்கூடிய இலாபங்கள் எல்லாம் விரயமாகும் நிலை ஏற்படும். கடன் தொல்லைகள் அதிகமாகும், மனதில் நிம்மதி இல்லாத ஒரு நிலை ஏற்பட விதி உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 11க்குடையவரான குரு, இராசியிலே இருந்தால், மூத்த சகோதரர்கள் நல்ல ஆயுள், ஆரோக்கியத்துடனும், சௌகரியங்களுடனும் இருப்பார்கள். செய்கின்ற தொழிலில் நல்ல இலாபத்தைப் பெற விதி உண்டாகும். செல்வமும் செல்வாக்கும் பெற விதியுண்டு.

ரிஷப இராசிக்கு 11க்குடையவரான குரு, இராசிக்கு 2ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால் மூத்த சகோதரரால் குடும்பத்தில் நன்மையான பலன்களை அடைய முடியும். செய்தொழிலில் நல்ல வருமானத்தையும் இலாபங்களையும் அடைய விதி உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 11க்குடையவரான குரு, இராசிக்கு 3ஆம் இடமான கடகத்தில் இருந்தால் மூத்த சகோதரர்கள் நல்ல அந்தஸ்துடன் இருப்பார்கள். இளைய சகோதரர்களின் ஆதரவும் உண்டாகும். செய்தொழிலில் இலாபங்களை அடைய முடியாது. திடீர்ப் பண வரவும் உண்டு.

ரிஷப இராசிக்கு 11க்குடையவரான குரு, இராசிக்கு 4ஆம் இடமான சிம்மத்திலிருந்தால் தாய்வழி ஆதரவும் உண்டாகும். வீடு, மனை, வாகனம், நிலபுலன் ஆகியவற்றில் நல்ல வருமானமும், ஆதாயங்களும், இலாபமும் உண்டாகும். திடீர் ஆதாயங்கள் உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 11க்குடையவரான குரு, இராசிக்கு 5 ஆம் இடமான கன்னியில் இருந்தால். மூத்த சகோதரர்களால் பூர்வ புண்ணிய நில புலன்களாலும், வருமானங்களும் ஆதாயங்கள், மற்றும் இலாபங்களும் உண்டாகும். அரசு வகையில் இலாபங்களும் ஆதரவும் உண்டாகும். செல்வாக்கும், செல்வமும் உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 11க்குடையவரான குரு, இராசிக்கு 6 ஆம் இடமான துலாத்திலிருந்தால் மூத்த சகோதரர்கள் வியாதியஸ்தராக இருப்பார்கள்.

இலாபங்கள் அதிகமாக வராது. கடன்கள் அதிகமாகும். கடன்களால் தொல்லைகள் உண்டாகும். ஆதாயங்கள், திடீர்த் தனப்பிராப்தி உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 11க்குடையவரான குரு, இராசிக்கு 7ஆம் இடமான விருச்சிக இராசியிலிருந்தால் மனைவியின் மூலம் நல்ல பொருள் வரவும், செல்வமும், செல்வாக்கும் உண்டாகும். புத்திரபாக்கியம் ஏற்படும். வண்டி வாகனங்களும் அரசாங்கத்தில் நல்ல பதவியும், உத்தியோகமும் உண்டாகும். பால் பாக்கியமும், உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 11க்குடையவரான குரு இராசிக்கு 8ஆம் இடமான தனுசில் இருந்தால் தொழிலில் நஷ்டம் ஏற்படும். இலாபங்களை எதிர்பார்க்க முடியாது. மூத்த சகோதரருக்குக் கண்டம் ஏற்படும். மனைவியால் குடும்பத்தில் கஷ்டமும், துன்பமும் ஏற்படும்.

ரிஷப இராசிக்கு 11க்குடையவரான குரு இராசிக்கு 9ஆம் இடமான மகரத்தில் இருந்தால் தகப்பனார் செய்யும் தொழிலைச் செய்து அதிகமான இலாபம் பெறும் யோகமும் உண்டாகும். பிதுர் பாக்கியச் சொத்துகளான நிலங்களால் நல்ல ஆதாயம் உண்டாகும். மாடு கன்றுகள், வண்டி வாகனங்கள், பால் பாக்கியம் போன்றவை சேரும்.

ரிஷப இராசிக்கு 11 க்குடையவரான குரு இராசிக்கு 10ஆம் இடமான கும்ப இராசியிலிருந்தால் அரசுத் துறையில் நல்ல அந்தஸ்தான உத்தியோகம் உண்டாகும். தெய்வீக வழிபாடுகள் நிறைந்திருக்கும். உத்தியோகம் மூலம் நல்ல இலாபங்களைப் பெற விதி உண்டாகும். திடீர்ப் பண வரவுகள் உண்டாகும்.

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு அர்ச்சனையும், குருவுக்கு யந்திர மந்திர, பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# மிதுனம்

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 11ஆம் இடமான மேஷத்திலிருந்தால் மூத்த சகோதரர் நல்ல சௌகரியங்களுடன் இருப்பார். செய்தொழிலில் நல்ல இலாபங்கள் உண்டாகும். சகோதரர்களின் ஆதரவும், அன்பும் கிடைக்கும். அந்தஸ்தும், செல்வாக்கும் உண்டாகும். தெய்வீக வழிபாடுகள் நிறைந்திருக்கும்.

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாயுடன் புதன் சேர்ந்து மேஷத்தில் கூடினால் நல்ல இலாபங்கள் உண்டாம். மூத்த சகோதரர்களின் அன்பும் ஆதரவும் உண்டாகும். நீண்ட ஆயுள் உள்ளவராக இருப்பார்கள். பூமி, வியாபாரம் போன்றவற்றால் நல்ல இலாபங்கள் உண்டாகும். திடீர்ப் பண வரவும், ஆதாயங்களும் உண்டாகும்.

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாயுடன் குரு சேர்ந்து மேஷத்தில் கூடினால் மனைவியால் சொத்து சுகங்களும் செல்வாக்கும் உண்டாகும். புத்திர பாக்கியம் உண்டாகும். செய்தொழிலால் நல்ல இலாபங்களும் ஆதாயங்களும் உண்டாகும்.

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாயுடன் சுக்கிரன் சேர்ந்து மேஷத்தில் கூடினால் குடும்பம் அமைதியாகவும், ஆனந்தமயமாகவும் இருக்கும். புத்திர சந்தானங்களும், பெரியவர்களின் ஆசியும் பூர்வபுண்ணிய இலாபமும் உண்டாகும். தெய்வ பக்தியும், ஞானமார்க்கமும் கிட்டும். பூர்வ புண்ணியங்கள் சில நாளில் விரயமாகும் நிலை வரலாம்.

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாயுடன் சனி சேர்ந்து மேஷத்தில் கூடினால், மூத்த சகோதரருக்குக் கண்டமும் கஷ்டமும் உண்டாகும். நேர்மையற்ற வழிகளில் பணத்தைச் சம்பாதிக்கும் நிலை உண்டாகும். இலாபம், ஆதாயம் போன்றவை கிடைக்க விதி உண்டாகும்.

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாயுடன் இராகு கேதுக்கள் சேர்ந்து மேஷத்தில் கூடினால், நல்ல அபரிமிதமான இலாபங்கள் உண்டாகும். செய்தொழிலில் விசேஷ ஆதாயத்தை எதிர்பார்க்கலாம். அந்த திசா புத்தி காலங்களில் நல்ல ஆதாயத்தை எதிர்பார்க்கலாம். ஞானமார்க்கங்கள் கிட்டும். மூத்த சகோதரர்கள் நல்லபடியாக இருப்பார்கள்.

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாயுடன் சூரியன் சேர்ந்து மேஷத்தில் கூடினால் மூத்த சகோதரர்களும், இளைய சகோதரர்களும் அன்புடனும், ஆதரவுடனும் இருப்பார்கள். பிள்ளைகளால் நல்ல இலாபம் உண்டாகும். பூர்வ புண்ணியச் சொத்துகளினால் ஆதாயம் அடைய விதி உண்டாகும்.

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாய் இராசிக்கு 12ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால் ஜாதகர், சாகசங்கள் செய்வார். அதன் மூலம் இலாபமுண்டாகும். கடன்களால் தொல்லையும் அவதியும் உண்டாகும். இலாபமெல்லாம் விரயமாகும் சூழ்நிலையும் உருவாகும்.

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாய் மிதுன இராசியிலே இருந்தால், பேச்சில் வன்மையும், சாதுரியமும் உண்டாகும். செல்வத்துடனும் சௌக்கியத்துடனும் இருக்க விதி உண்டாகும். மூத்த சகோதரர் நல்ல ஆயுளுடன் இருப்பார்.

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாய் கடக இராசியில் 2ஆம் இடத்தில் இருந்தால், அதிகாரமும், கௌரவமும் உள்ள பதவிகளில் இருப்பார்கள். குடும்பம் நல்லபடியாக இருக்கும். நல்ல வருமானமும் உண்டாகும். கல்வியில் நல்ல தேர்ச்சி உண்டாகும். இலாபங்களும் கிட்ட விதி உண்டாகும்.

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாய் சிம்ம இராசியில் 3ஆம் இடத்திலிருந்தால், சகோதரர்களின் அன்பும், ஆதரவும் உண்டாகும். சுக, சௌகரியங்கள் உண்டாகும். அவர்களால் இலாபமும் உண்டாக விதியுண்டு. கௌரவமும், அந்தஸ்தும் உயர விதியுண்டு.

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாய் 4ஆம் இடத்தில் கன்னியில் இருந்தால், குடும்பத்தில் சுக சௌக்கியம் நிறைந்திருக்கும். தாய், வீடு, மனை, வாகனம் போன்றவற்றினால், நல்ல ஆதாயமும், பொருள் வரவும் உண்டாகும். விவசாய நிலபுலன்களில் நல்ல வருமானங்களும் ஆதாயமும் உண்டாக விதியாகும்.

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாய் இராசிக்கு 5ஆம் இடத்தில் துலா இராசியிலிருந்தால், பூர்வ புண்ணியச் சொத்துகளினால் இலாபமும், ஆதாயமும் உண்டாகும். பிள்ளைகளால் நல்ல கீர்த்தி உண்டாகும். அரசாங்கத்தில் கௌரவ மிக்க பதவி உண்டாகும்.

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 6ஆம் இடத்தில் விருச்சிகத்தில் இருந்தால் பூர்வ புண்ணியச் சொத்துகளினால் வில்லங்க, விவகாரம் ஏற்பட விதியாகும். கடனுக்காகக் கஷ்டப்பட்டுக் கையேந்தி நிற்கும் நிலை உருவாகலாம். மூத்த சகோதரருடன் மனஸ்தாபம் உண்டாகும்.

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 7ஆம் இடத்தில் இருந்தால் (தனுசில்) மனைவியின் வருகையால் நல்ல பொருள் வரவும் செல்வமும், செல்வாக்கும், அசையாச் சொத்துகளும் வாய்க்கும். அரசாங்கத்தில் அதிகாரப் பதவி உண்டாகும். பால் பாக்கியம், வண்டி, வாகனங்கள் ஆகியன உண்டாக விதியாகும்.

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 8ஆம் இடத்தில் இருந்தால் பல தொழில்கள் செய்ய மனம் ஈடுபடும். தையல் தைக்கும் தொழிலும், ரெடிமேட் வியாபாரமும் செய்ய விதி உண்டாகும். மூத்த சகோதரருக்குக் கண்டமுண்டாகும். தொழிலில் இலாபங்கள் உண்டாகும்.

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாய் இராசிக்கு 9ஆம் இடமான கும்பத்திலிருந்தால், புத்திரர்களால் குடும்பம் நல்ல முறையில் இருக்கும். பிதுர்பாக்கியச் சொத்துகளான பூமி, வாகனம் ஆகியவற்றால் இலாபமும், ஆதாயமும் உண்டாகும்.

மிதுன இராசிக்கு 11க்குடையவரான செவ்வாய் இராசிக்கு 10ஆம் இடமான மீனத்திலிருந்தால், அதிகாரம், கௌரவமுள்ள உத்தியோகம் காரணமாக நல்ல இலாபமும், ஆதாயமும் உண்டாகும். குடும்பத்தில் நிம்மதியும், சுக சௌகரியங்களும் நிறைந்து இருக்கும்.

ஸ்ரீ சுப்பிரமணியர்க்கு அர்ச்சனையும் ஆராதனையும், செவ்வாய்க்கு யந்திர, மந்திர பிரீதியும் செய்தால் நற்பலன்கள் உண்டாக விதி உண்டாகும்.

# கடகம்

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 11ஆம் இடமான ரிஷபத்தில் ஆட்சி பெற்றால், மூத்த சகோதரர்கள் அன்புடனும் ஆதரவுடனும் இருப்பார்கள். செய்தொழில்கள் மூலம் நல்ல இலாபங்கள் உண்டாகும். இலாபாதிபதி திசையில் திடீர்ப் பண வரவு உண்டாகும்.

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரனுடன் சனி கூடி ரிஷபத்தில் இருந்தால் வரும் மனைவியால் நல்ல இலாபங்களும், ஆதாயமும் , நல்ல அந்தஸ்தும் உண்டாகும். புத்திர பாக்கியம் உண்டாகும். மூத்த சகோதரருக்குக் கண்டமுண்டாம்.

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரனுடன் இராகுகேதுக்கள் கூடினால் செய்தொழிலில் நல்ல இலாபங்களும், அந்நியர் மூலம் ஆதாயங்களும் கிடைக்கும். தனது திசா புத்திகளில் இராகு நன்மைகளையும், கேது இலாபங்களையும் தடை செய்யும் நிலை உருவாகலாம்.

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரனுடன் சூரியன், ரிஷபத்தில் கூடினால், திடீர்ப் பணவரவு உண்டாம். வருகின்ற இலாபங்கள் அனைத்தும் குடும்ப நன்மைக்கே செலவிடுவர். தனது பேச்சினால் நல்ல ஆதாயம் உண்டாகும். கொடுக்கல் வாங்கல் தொழில் மூலம் அதிக இலாபம் பெற விதி உண்டாகும்.

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரனுடன் செவ்வாய் சேர்ந்து ரிஷபத்திலிருந்தால், புத்திரரால் நல்ல இலாபமும், பூர்வ புண்ணியச் சொத்துகளால் ஆதாயமும் அடைய விதியாகும். ஆனால், மூத்த சகோதரர்களால் கஷ்டத்தையும் துன்பத்தையும் அனுபவிக்க நேரிடும்.

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரனுடன் புதன் சேர்ந்து ரிஷபத்திலிருந்தால், தனது சகோதரர்கள் மூலம் இலாபத்தை அடைய விதியுண்டு. கடன்களால் தொல்லைகள் உண்டாகும். வருகின்ற இலாபங்கள், கடனை அடைக்கவே சரியாகிவிடும் நிலை உருவாகலாம்.

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரனுடன் குரு சேர்ந்து ரிஷபத்திலிருந்தால் இலாபங்களை எதிர்பார்க்க முடியாது. மூத்த சகோதரர்களுக்கு வியாதியால் துன்பம் வரும். கடன்கள் உண்டாகும். தகப்பனார் சொத்துகளை அனுபவிக்க முடியாத நிலை உருவாகலாம். ஆன்மிக நாட்டம் உண்டாகும்.

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 12ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால், இலாபங்கள் அனைத்துமே விரயமாகும் சூழ்நிலை உருவாகலாம். பூர்வ புண்ணியச் சொத்துகளையும் அனுபவிக்க முடியாமல் போகலாம். கடன்களால் தொல்லையும் உண்டாம். மனம் அமைதியில்லாமல் தூக்கம் கெட்டு, வியாதிகள் உண்டாக விதியாகும்.

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரன் கடக இராசியிலே இருந்தால் மூத்த சகோதரர் நல்ல சுக சௌகரியங்களுடன் வாழ விதி உண்டாகும். செய்தொழில் மூலமும் கௌரவமான உத்தியோகத்தின் மூலம், நல்ல இலாபமம் ஆதாயமும் உண்டாகும்.

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரன், சிம்ம இராசியிலிருந்தால், குடும்பம் நல்ல சுக சௌக்கியங்களுடனும், இருக்க விதி உண்டாகும். லேவா தேவி தொழில்கள் மூலம் நல்ல இலாபமும், ஆதாயமும் உண்டாகும். ஆனால் கண் நோய் உண்டாக விதியாகும்.

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 3ஆம் இடமான கன்னி இராசியில் இருந்தால் இளைய சகோதரர்களும் மூத்த சகோதரர்களும் நல்லபடியாகவும், குடும்பத்தில் ஒற்றுமையுடனும் இருக்க விதி உண்டாகும். கௌரவப் பதவிகள் உண்டாகும். அடிமை வர்க்கங்கள் உண்டாகும்.

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 4ஆம் இடமான துலாத்தில் ஆட்சி பெற்றிருந்தால் தாய் வழி ஆதரவும், வீடு, மனை வாகனம், போன்வற்றால் நல்ல இலாபமும், விவசாய நிலபுலன்களால் ஆதாயம் போன்றவை உண்டாகும். கல்வியில் பட்டமுண்டாகும்.

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 5ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால் பூர்வ புண்ணியச் சொத்துகள் மூலம் இலாபமும், புத்திரர்கள் மூலம் ஆதாயமும் கிடைக்க விதி உண்டாகும். மூத்த சகோதரர் நல்ல ஆயுளுடன் இருக்க விதி உண்டாகும்.

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 6ஆம் இடமான தனுசில் இருந்தால் மூத்த சகோதரர் மனஸ்தாபத்துடன் இருப்பார். இலாபங்களை எதிர்பார்க்க முடியாத நிலை உருவாகலாம். கடன்கள் அதிகமாக இருக்கும்.

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 7ஆம் இடமான மகரத்திலிருந்தால், வரக்கூடிய மனைவியால் பொன், பொருள் வரவும் உண்டாகும். இலாபங்கள் பெருகும். சாஸ்திரம், வழிபாடு பொதுப்பணி ஆகியவை உண்டாகும். பால் பாக்கியமும் உண்டாகும்.

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 8ஆம் இடமான கும்பத்திலிருந்தால் பூர்வ புண்ணியங்களை அனுபவிக்க முடியாத நிலையிலிருப்பார்கள். மூத்த சகோதரருக்குக் கண்டமுண்டாகும் நிலை வர விதியுண்டு. மனது சஞ்சலங்கள் நிறைந்தும், நிம்மதியில்லாமல் இருக்கவும் விதி உண்டாகும்.

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 9ஆம் இடமான மீனத்திலிருந்தால், பூர்வ புண்ணியச் சொத்துகள் மூலம் நல்ல இலாபமும் ஆதாயமும் உண்டாகும். புத்திரர்களால் குடும்பத்திற்கு நன்மையும், தந்தையின் வழியில் நல்ல ஆதாயங்களும், பிதுர் பாக்கியங்களை அனுபவிக்கவும் விதி உண்டாகும்.

கடக இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 10ஆம் இடமான மேஷத்திலிருந்தால் பூர்வ புண்ணியச் சொத்துகள் மூலம் நல்ல ஆதாயமும்,

திடீர்த் தன பிராப்தியும், செய்தொழில் மூலம் இலாபமும், கௌரவமும் ஏற்படும். அந்தஸ்து உள்ள உத்தியோகத்தின் மூலம் நல்ல ஆதாயங்களும் உண்டாகும்.

ஸ்ரீரெங்கநாதருக்கோ பார்வதிதேவி, பராசக்தி போன்ற சக்திகளுக்கோ அர்ச்சனையும் ஆராதனையும், சுக்கிரனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நல்ல பலனுண்டாகும்.

# சிம்மம்

சிம்ம இராசிக்கு 11க்குடையவரான புதன் 11ஆம் இடமான மிதுனத்தில் ஆட்சி பெற்றால், மூத்த சகோதரர்கள் நல்ல ஆயுளுடனும் சௌக்கியத்துடனும் அந்தஸ்துடனும் இருப்பார்கள். அவர்கள் நல்ல அன்புடனும், ஆதரவுடனும் இருக்க விதி உண்டாகும். செய்தொழில்களில் இலாபம் மத்திமமான நிலையில் இருக்கும். குடும்பத்தில் சௌக்கியமும், நிம்மதியும் இருக்கும். தெய்வ பக்தியும் தனச்சேர்க்கையும் உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 11க்குடைய புதனுடன் குரு சேர்ந்து மிதுனத்தில் கூடினால் பூர்வ புண்ணியங்களால் இலாபமும், தாய்மாமன் வகையில் நல் ஆதரவும், புத்திரர்களால் நன்மையான பலனும் உண்டாக விதி உண்டாகும். மூத்த சகோதரரும் அன்புடன் இருக்க விதி உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 11க்குடைய புதனுடன் சுக்கிரன் சேர்ந்து மிதுனத்தில் இருந்தால் கௌரவ உத்தியோகமும், அந்தஸ்தும் அதிகாரப் பதவிகள் மூலம் நல்ல ஆதாயமும் இலாபங்களும் உண்டாக விதியுண்டு. மூத்த, இளைய சகோதரர்கள் நல்ல ஆதரவுடன் இருப்பர். ஆனால், மூத்த சகோதரர் சிரமத்துடன் இருக்க விதி உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 11க்குடைய புதனுடன் சனி சேர்ந்து மிதுனத்தில் கூடினால் கடன்கள் அதிகமாகிக் கஷ்டத்தையும், துன்பத்தையும் தொல்லைகளையும் அனுபவிக்க விதியாகும். வரக்கூடிய மனைவியால் பொன், பொருள் வரவும் இலாபமும் உண்டாகும். செய்தொழிலில் ஆதாயம் உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 11க்குடைய புதனுடன் இராகுகேதுக்கள் சேர்ந்து மிதுனத்தில் கூடினால் செய்தொழிலில் இலாபமும், ஆதாயமும் உண்டாகும். திடீர்த் தனப்பிராப்தியும், மூத்த சகோதரருக்குப் பீடையும் உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 11க்குடைய புதனுடன் சூரியன், மிதுனத்திலிருந்தால் செய்தொழில் விருத்தியும், அபரிமிதமான இலாபங்களும் சகோதர ஒற்றுமைகளும் குடும்பத்தில் சுக, சௌக்கியங்களும் உண்டாகும். அந்தஸ்தும் கௌரவமும், அதிகாரமுமுள்ள உத்தியோகத்தின் மூலம், ஆதாயம் அடைய விதி உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 11க்குடைய புதனுடன் செவ்வாய் சேர்ந்து கூடி மிதுனத்திலிருந்தால், தாய், தந்தை வழியில் ஆதரவும், சகோதரர் ஆதரவும் உண்டாகும். வீடு, மனை, கட்டடங்கள், வாகனங்கள் ஆகியவற்றின் மூலம் ஆதாயம் உண்டாக விதி உண்டு. கல்வியில் நல்ல தேர்ச்சி உண்டாகும். பிதுர் பாக்கியச் சொத்துகள் அனுபவிக்க விதி உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 11க்குடைய புதன், இராசிக்கு 12ஆம் இடமான கடகத்திலிருந்தால் வரக்கூடிய இலாபங்கள் அனைத்துமே விரயமாகும். நிலை உண்டாகும். கடன்கள் அதிகமாகும். போஜன வசதிகளும் உண்டாகும். நித்திரை கெடும் நிலையை உருவாக்கும்.

சிம்ம இராசிக்கு 11க்குடைய புதன், இராசியிலே இருந்தால், கைவினைப் பொருட்கள் மூலம் தொழில் ஆதாயம் உண்டாகும். வாக்கு வன்மை உண்டாகும். ஜோதிடம் மூலம் இலாபமும் நன்மையும் உண்டாம்.

சிம்ம இராசிக்கு 11ஆம் இடத்துக்குடையவரான புதன், இராசிக்கு 2ஆம் இடமான கன்னியில் இருந்தால் கொடுக்கல் வாங்கல், தவணை முறை ஆகியவை மூலம் அதிக இலாபமும், ஆதாயமும் ஏற்பட விதியுண்டாகும். குடும்பத்தில் நல்ல சகோதர ஒற்றுமையும், சுக சௌக்கியமும் உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 11ஆம் இடத்துக்குடையவரான புதன், இராசிக்கு 3ஆம் இடமான துலாத்திலிருந்தால் இளைய சகோதரர்களும் மூத்த சகோதரர்களும் அன்புடனும், ஆதரவுடனும் இருப்பார்கள். செய்தொழிலில் இலாபங்கள் உண்டாகும். திடீர்ப் பணவரவுகள் மூலம் செல்வராக விதி உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 11ஆம் இடத்து அதிபதி புதன், இராசிக்கு 4ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால் தாய் ஆதரவு உண்டாகும். நல்ல சௌக்கியத்துடன் இருப்பார்கள். வீடு, மனை, தோட்டங்கள் ஆகியவற்றின் மூலம் நல்ல இலாபமும் ஆதாயமும் உண்டாகும் விதியுண்டு. கல்வி உண்டு.

சிம்ம இராசிக்கு 11ஆம் இடத்து அதிபதி புதன், இராசிக்கு 5ஆம் இடமான தனுசில் இருந்தால், பூர்வ புண்ணியச் சொத்துகள் மூலம் இலாபமும், ஆதாயமும் உண்டாகும். புத்திரர்களால் நன்மையும் உண்டாகும்.

பெரியோர்களின் ஆசியும் நட்பும் கிடைக்க விதியுண்டு. குடும்பம் நல்ல சௌகரியத்துடன் இருக்க விதி உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 11ஆம் இடத்து அதிபதி புதன் இராசிக்கு 6ஆம் இடமான மகரத்தில் இருந்தால் மூத்த சகோதரர் மனஸ்தாபத்துடன் இருப்பார். வில்லங்கம் விவகாரம், கடன் போன்றவை இருக்கும். கடனுக்காக இலாபங்களை இழக்க வேண்டிய நிலை உருவாகும். ஆதாயங்களை எதிர்பார்க்க முடியாத நிலையும் உருவாகும்.

சிம்ம இராசிக்கு 11க்குடையவரான புதன் இராசிக்கு 7ஆம் இடமான கும்பத்தில் இருந்தால் வரும் மனைவியால் பொன், பொருள், செல்வங்கள் உண்டாகும். செல்வாக்கும் சேரும். கௌரவமும், அந்தஸ்தும் கிடைக்க விதி உண்டாகும். பால் பாக்கியம் சேரும். இலாபங்கள் சேரும். புத்திர பாக்கியம் உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 11க்குடைய புதன் இராசிக்கு 8ஆம் இடமான மீன இராசியிலிருந்தால், மூத்த சகோதரருக்கு கண்டமுண்டாக விதியுண்டு. மன நிம்மதியில்லாமலிருப்பார்கள். பலவிதத் தொழில்களில் ஈடுபட்டு நஷ்டம் அடைய விதி உண்டாகும். இலாபங்களை எதிர்பார்க்க முடியாதபடி நிலைமை உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 11க்குடைய புதன் இராசிக்கு 9ஆம் இடமான மேஷத்தில் இருந்தால் பிதுர் பாக்கியச் சொத்துகளின் மூலம் நல்ல ஆதாயங்களையும், இலாபங்களையும் அடைய விதி உண்டாகும். தெய்வ பக்தியுடனிருப்பார்கள். கௌரவப் பதவி, அரசாங்க உத்தியோகம் போன்றவை மூலம் இலாபங்களை அடைய விதி உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 11க்குடைய புதன், இராசிக்கு 10ஆம் இடமான ரிஷபத்தில் இருந்தால் அரசு உத்தியோகம் மூலமும், செய்தொழில் மூலமும் நல்ல இலாபங்களையும், ஆதாயங்களையும் பெற விதி உண்டாகும். நல்ல வளமையுடனும், சுகத்துடனும் வாழ்க்கையில் நிம்மதியுடனும் இருக்க விதியுண்டாகும்.

ஸ்ரீமகாவிஷ்ணுவிற்கு அர்ச்சனையும் புதனுக்கு யந்திர, மந்திர, ப்ரீதியும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# கன்னி

கன்னி இராசிக்கு 11க்குடையவரான சந்திரன் இராசியிலே இருந்தால் மத்திமமான இலாபங்களை எதிர்பார்க்கமுடியாது. பிற்காலத்தில் இலாபம் கிடைக்க விதி. மூத்த சகோதரர்கள் நல்ல சௌகரியத்துடன் இருப்பார்கள். குடும்பத்தில் நல்ல ஒற்றுமையுடன் இருப்பார்கள். வாழ்வின் பிற்பகுதியில் ஆதாயங்களை அடைய விதி உண்டாம்.

கன்னி இராசிக்கு 11க்குடையவரான சந்திரனுடன் இராசியிலே செவ்வாய் இருந்தால், இளைய சகோதரர்களுடன் மனஸ்தாபம் உண்டாகும். இலாபங்கள் என்று எதையும் எதிர்பார்க்க முடியாத நிலை உண்டாகும். கெட்ட வழிகளில் பணத்தைச் சம்பாதிக்க நினைப்பார்கள்.

கன்னி இராசிக்கு 11க்குடைய சந்திரனுடன் புதன் இராசியிலே கூடினால் மூத்த சகோதரர்கள் நல்ல சௌகரியத்துடன் இருப்பார்கள். வீடு, மனை, வாகனங்கள் போன்றவற்றால் நல்ல இலாபம் உண்டாகும். குடும்பம் நல்ல சுகத்துடனும் சௌகரியத்துடனும் இருக்கும். சுகபோஜனங்களுடனும் நல்ல பாக்கியத்துடனும் இருப்பார்கள். தொழில் வழியில் இலாபமுண்டாகும்.

கன்னி இராசிக்கு 11க்குடைய சந்திரனுடன் குரு, இராசியிலே கூடினால் தாய் நல்ல சௌகரியத்துடன் இருப்பார்கள். வாகனங்கள், மனைகள் போன்றவற்றால் நல்ல இலாபமும், மனைவியின் மூலம் நல்ல பொருள் வரவும் உண்டாகும். குடும்பம் நல்ல சௌகரியத்துடன் இருக்கும்.

கன்னி இராசிக்கு 11க்குடைய சந்திரனுடன் சுக்கிரன் இராசியிலே கூடினால் லேவாதேவி மூலம் நல்ல பொருள் வரவும், இலாபங்களும், ஆதாயமும் உண்டாகும். பிதுர் பாக்கியச் சொத்துகள் மூலம் இலாபமும், வரவும் உண்டாக விதியுண்டு.

கன்னி இராசிக்கு 11க்குடைய சந்திரனுடன் சனி கூடினால் பூர்வ புண்ணியச் சொத்துகள் மூலம் நல்ல ஆதாயமும், இலாபமும் கிடைக்க விதி உண்டாகும். தாய் மாமன் வழியில் நல்ல ஆதரவும் உண்டாகும். மூத்த சகோதரர் நல்ல நிலையில் இருக்க விதி உண்டாகும்.

கன்னி இராசிக்கு 11க்குடைய சந்திரனுடன் இராகுகேதுக்கள் கூடினால் புத்திரரால் நல்ல இலாபங்களும், செய்தொழிலும் உண்டாகும்.

கன்னி இராசியில் 11க்குடைய சந்திரனுடன் சூரியன் கூடினால், வரக்கூடிய இலாபங்கள் அனைத்துமே விரயமாக நேரிடும். ஆதாயங்களை அவ்வளவாக எதிர்பார்க்கமுடியாது. மூத்த சகோதரரும் அவ்வளவு ஆதரவுடன் இருக்கமாட்டார் என விதியுண்டு.

கன்னி இராசிக்கு 11ஆம் இடமான கடக இராசியில் சூரியனிருந்தால் இலாபம், ஆதாயங்கள் ஆகியன விரயமாகும் சூழ்நிலை உருவாகும். ஆனால் துக்கம் இல்லை என விதியுண்டாகும்.

கன்னி இராசிக்கு 11ஆம் இடமான கடக இராசியில் செவ்வாயிருந்தால், பண வருமானம், மற்றும் தொழில் இலாபம் உண்டாகும். புதன் இருந்தால், செய் தொழிலில் லாபமும் பணவரவும் மிகுதியாக இருக்கும். தொழில் பெருகும்.

கன்னி இராசிக்கு 11ஆம் இடமான கடக இராசியில் குரு உச்சமானால் செய்தொழிலில் இலாபமும், வீடு, சொத்து, நிலபுலன்கள், வண்டி வாகனங்களால் இலாபமும் ஏற்பட விதியுண்டு.

கன்னி இராசிக்கு 11ஆம் இடமான கடக இராசியில் சுக்கிரனிருந்தால் நல்ல பண வருமானமும், செய்தொழில் விருத்தியும் உண்டாகும்.

கன்னி இராசிக்கு 11ஆம் இடமான கடக இராசியில் சனி இருந்தால் செய் தொழிலில் ஆதாயங்களும், பிள்ளைகளால் இலாபங்களும் உண்டாகும். வழக்கும் வில்லங்கமும் இருந்து பின் விலக விதியாகும்.

கன்னி இராசிக்கு 11ஆம் இடமான கடக இராசியில் இராகுகேதுக்கள் இருந்தால் பண வருமானமும், தொழில் இலாபமும், ஆதாயங்களும் உண்டாகும். இலாபத்தில் பாதி விரயமாக விதியுண்டாகும்.

ஸ்ரீபார்வதிதேவி அல்லது கணபதிக்கு அர்ச்சனையும், சந்திரனுக்கு யந்திர, மந்திர பிரீதியும் செய்தால் நன்மையான பலன்களை அடையலாம்.

# துலாம்

துலா இராசிக்கு 11க்குடையவரான சூரியன் சிம்ம இராசியில் ஆட்சி பெற்றிருந்தால், அதிக இலாபங்களை எதிர்பார்க்க முடியாது. ஆனால், செய்தொழிலில் ஆதாயங்கள் சம பங்கு உண்டெனினும் பிற்காலத்தில் பண வருமானம் உண்டு. அந்தஸ்து, கௌவரமான உத்தியோகம் ஆகியவற்றின்

மூலம் நல்ல இலாபங்களும், மூத்த சகோதரர்களின் ஆதரவும் உண்டாகும். பெண்களினால் நற்சுகமும் உண்டாகும்.

துலா இராசிக்கு 11க்குடையவரான சூரியனுடன் செவ்வாய் கூடினால், மனைவியால் நல்ல பொன் பொருள் வரவுகள் உண்டாகும். அதன் மூலம் இலாபங்களும், செய்தொழிலில் ஆதாயங்களும் உண்டாகும்.

துலா இராசிக்கு 11க்குடையவரான சூரியனுடன் புதன் கூடினால் இலாபங்கள் எல்லாம் வியரமாகும் நிலை உருவாகும். சந்தையின் மூலம் இலாபங்கள் உண்டாக விதி. மூத்த சகோதரரால் விரயம் உண்டாகும்.

துலா இராசிக்கு 11க்குடையவரான சூரியனுடன் குரு சேர்ந்தால் செய் தொழிலால் இலாபங்கள் மத்திமமாய் உண்டெனினும், ஆதாயங்கள், லாபங்கள் எல்லாமே விரயமாகும் நிலை உண்டாகும். செய்தொழில் போட்டி, பொறாமை உண்டாகும். வருகின்ற இலாபங்கள், மருத்துவ சிகிச்சைக்கே செலவிட நேரிடும் எனவும் விதியுண்டு.

துலா இராசிக்கு 11க்குடையவரான சூரியனுடன் சுக்கிரன் சேர்ந்தால் செய் தொழிலால் நல்ல இலாபமும், நற்பெயரும், ஆதாயங்களும் உண்டாகும். மூத்த சகோதரர் ஆதரவும் உண்டாகும். நீண்ட ஆயுளும் உண்டாக விதி. மறைமுகமான வழியில் இலாபத்தை அடைய விதியாகும்.

துலா இராசிக்கு 11க்குடையவரான சூரியனுடன் சனி சேர்ந்து சிம்ம இராசியிலிருந்தால் வீடு, மனை, சொத்து ஆகியவற்றால் நல்ல இலாபங்கள் உண்டாகும். புத்திரர்களால் ஆதாயமும், கௌரவப் பதவிகளும், உத்தியோக இலாபம் உண்டாகும்.

துலா இராசிக்கு 11க்குடையவரான சூரியனுடன் இராகுகேதுக்கள் சிம்மத்தில் கூடினால், செய்தொழிலில் நஷ்டமும் கஷ்டங்களும் உண்டாகும். இலாபங்களை அடையத் தடை ஏற்படும்.

துலா இராசிக்கு 11க்குடையவர் சூரியன், இராசிக்கு 12ஆம் இடமான கன்னியில் இருந்தால், வருகின்ற ஆதாயங்கள், இலாபங்கள் எல்லாமே விரயமாகும். கடன்களால் கஷ்டமும், தொல்லைகளும் உண்டாகும். மூத்த சகோதரர் ஆதரவு இல்லை என விதி உண்டாகும்.

துலா இராசிக்கு 11க்குடையவர் சூரியன், இராசியிலே இருந்தால் மூத்த சகோதரருக்குக் கண்டமுண்டு. செய்தொழிலில் இலாபங்களும், ஆதாயங்களும், அவ்வளவாக எளிதில் கிடைக்க முடியாத அளவிற்கு விதி உண்டு. பிற்பாதியில் பலனுண்டாகும்.

துலா இராசிக்கு 11க்குடையவர் சூரியன், இராசிக்கு 2ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால் கொடுக்கல் வாங்கல் தொழில் மூலம் நல்ல இலாபங்களும், ஆதாயங்களும் கிடைக்க விதியுண்டு.

துலா இராசிக்கு 11க்குடையவர் சூரியன், இராசிக்கு 3ஆம் இடமான தனுசில் இருந்தால் இளைய சகோதரருக்குச் சுகமான வாழ்வுண்டு. அவரது ஆதரவும் உண்டாகும். வாழ்வில் இலாபங்களும் ஆதாயங்களும் உண்டாகும்.

துலா இராசிக்கு 11க்குடையவர், சூரியன் இராசிக்கு 4ஆம் இடமான மகரத்தில் இருந்தால் செல்வம், செல்வாக்கு, வீடு நிலபுலன்களால் இலாபம் மற்றும் தாயாரின் ஆதரவும் உண்டாகும்.

துலா இராசிக்கு 11க்குடையவர் சூரியன் இராசிக்கு 5ஆம் இடமான கும்பத்தில் இருந்தால் செல்வாக்கும் செல்வமும் அரசு ஆதரவும் கௌரவ, பெரிய உத்தியோக இலாபமும், பெரியோர்களின் ஆதரவும் உண்டாகும். பிள்ளைகளினால் இலாபமும் உண்டாக விதியுண்டு.

துலா இராசிக்கு 11க்குடைவர் சூரியன், இராசிக்கு 6ஆம் இடமான மீனத்தில் இருந்தால் ஆதாயங்கள், இலாபங்கள் ஆகியவற்றில் மத்திம பலனுண்டு. கடன்களாலும் வியாதியாலும் கஷ்டமுண்டு.

துலா இராசிக்கு 11க்குடையவர் சூரியன் இராசிக்கு 7ஆம் இடமான மேஷத்தில் இருந்தால் மனைவியால் நற்சுகமும், பொன், பொருள் வரவுகளும் உண்டாகும். இளைய தார யோகமுண்டாகும்.

துலா இராசிக்கு 11க்குடையவர் சூரியன், இராசிக்கு 8ஆம் இடமான ரிஷபத்தில் இருந்தால், ஆயுள் விருத்தியும், மூத்த சகோதரருக்குக் கண்டமும் உண்டாகும். இலாபங்களில் மத்திம பலனுண்டு.

துலா இராசிக்கு 11க்குடையவரான சூரியன், இராசிக்கு 9ஆம் இடமான மிதுனத்திலிருந்தால் தந்தை தொழிலைச் செய்ய விதியுண்டு. அதன் மூலம் நல்ல இலாபங்கள் உண்டாம்.

துலா இரர்சிக்கு 11க்குடையவரான சூரியன் 10ஆம் இடமான கடகத்தில் இருந்தால் தெய்வீக வழிபாடுகள், கௌரவமும் அந்தஸ்துமுள்ள பெரிய உத்தியோகம் ஆகியன உண்டாகும். அதன் மூலம் தெய்வ வழிபாடு உண்டாகும்.

துலா இராசிக்கு 11க்குடையவரான சூரியனுக்கு யந்திர, மந்திர, பிரீதிகள் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# விருச்சிகம்

விருச்சிக இராசிக்கு 11க்குடையவரான புதன், கன்னி இராசியிலே ஆட்சி உச்சம் பெற்றால் செய்தொழிலில் நல்ல ஆதாயங்களும், வரவுகளும் உண்டாகும். இலாபங்களும் சௌக்கியங்களும் நிறைந்திருக்கும். மூத்த சகோதரர் நல்ல சுக, சௌகரியங்களுடன் இருப்பார். பின்யோகம் உண்டாகும். மூத்த சகோதரரின் ஆதரவும் நன்மையும் உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 11க்குடைய புதனுடன் குரு சேர்ந்து கன்னியில் கூடினால் கொடுக்கல் வாங்கல், மூலமும், வட்டிக்கு விடும் தொழில் மூலமும் அதிக இலாபங்களும், ஆதாயமும் உண்டாகும். புத்திர இலாபமும் உண்டாக விதியுண்டு.

விருச்சிக இராசிக்கு 11க்குடைய புதனுடன் சுக்கிரன் சேர்ந்து கன்னியில் கூடினால், வரும் மனைவி மூலம் இலாபங்களும், பொன், பொருள் வரவுகளும் உண்டாகும். செய்கின்ற தொழிலில் இலாபங்களும், ஆதாயங்களும் உண்டாக விதியுண்டு.

விருச்சிக இராசிக்கு 11க்குடையவரான புதனுடன் சனி சேர்ந்து கன்னியில் கூடினால், இளைய சகோதரத்தால் நன்மையும், வீடு, நிலபுலன்களால் நல்ல இலாபங்களும், கிடைக்கும். தாயின் ஆதரவும் உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 11க்குடைய புதனுடன் இராகுகேதுக்கள் சேர்ந்து கன்னியில் கூடினால், தொழில் மூலம் இலாபங்கள் பெற்றாலும், உடனே அவை விரயமாகும் சூழ்நிலை உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 11க்குடைய புதனுடன் சூரியன் சேர்ந்து கன்னியில் கூடினால், செய்கின்ற தொழிலில் நல்ல இலாபங்களும், தொழிலில் விருத்தியும், ஆதாயங்களும் உண்டு. மூத்த சகோதரரால் ஆதரவு இராத நிலை உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 11க்குடைய புதனுடன் செவ்வாய், சேர்ந்து கன்னியில் கூடினால் மூத்த சகோதரர் ஆதரவு உண்டாகும். செய் தொழிலில் நல்ல இலாபங்கள் உண்டாகும். ஆதாயங்கள் உண்டாகும். ஆனாலும், கஷ்ட நஷ்டமும் உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 11க்குடைய புதன் இராசிக்கு 12ஆம் இடமான துலாத்திலிருந்தால் இலாபங்கள், ஆதாயங்கள் ஆகியன எல்லாமே விரயமாகும். மூத்த சகோதரரின் ஆதரவு இராது. நஷ்டமும், கஷ்டமுமே ஏற்படும்.

விருச்சிக இராசிக்கு 11க்குடைய புதன் இராசியிலே இருந்தால் செல்வமும், செல்வாக்கும் உண்டாகும். செய்கின்ற தொழிலில் இலாபத்தை அடைவார்கள். மூத்த சகோதரர்கள் நல்ல சுகத்துடன் இருக்க விதி உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 11க்குடைய புதன் இராசிக்கு 2ஆம் இடமான தனுசில் இருந்தால் குடும்பத்தில் நல்ல ஒற்றுமை, செல்வம், செல்வாக்கு கௌரவம், அந்தஸ்து ஆகியன உண்டாகும். செய்தொழில் உத்தியோகம் மூலம் இலாபம் அடைய விதியுண்டு.

விருச்சிக இராசிக்கு 11க்குடைய புதன், இராசிக்கு 3ஆம் இடமான மகரத்தில் இருந்தால், இளைய சகோதரர் மூலம் இலாபமடைய விதியுண்டாகும். மூத்த சகோதரர்களின் அன்பும், ஆதரவும் உண்டாகும். செய்தொழிலில் இலாபங்களும் உண்டாக விதியுண்டு.

விருச்சிக இராசிக்கு 11க்குடைய புதன், இராசிக்கு 4ஆம் இடமான கும்பத்தில் இருந்தால், தாய்வழி ஆதரவும், நிலபுலன்களால் ஆதாயங்களும் செய்தொழிலால் நல்ல இலாபமும் உண்டாக விதியாகும்.

விருச்சிக இராசிக்கு 11க்குடைய புதன் இராசிக்கு 5ஆம் இடமான மீனத்தில் நீசம் பெற்றால் புத்திரர்களால் கஷ்டமும், மற்றவர்களின் விரோதமும், செய்தொழிலில் நஷ்டமும் உண்டாக விதியுண்டு.

விருச்சிக இராசிக்கு 11க்குடைய புதன், இராசிக்கு 6ஆம் இடமான மேஷத்தில் இருந்தால், தொழில் மூலம் கிடைக்கக்கூடிய இலாபங்கள் எல்லாம் கடன்களுக்காகச் செலவிட விதியுண்டாகும். வியாதியால் கஷ்டமுண்டு.

விருச்சிக இராசிக்கு 11க்குடைய புதன், இராசிக்கு 7ஆம் இடமான ரிஷபத்தில் இருந்தால், வரக்கூடிய மனைவி மூலம், அந்தஸ்து, செல்வாக்கு ஆகியன உயரக் கூடிய சூழ்நிலை உருவாகும். தொழில் மூலம் இலாபங்களும் உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 11க்குடைய புதன், இராசிக்கு 8ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால், மூத்த சகோதரர் அவ்வளவு நல்லபடியாக இருக்க மாட்டார். நஷ்டமும், கஷ்டமும் உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 11க்குடைய புதன் இராசிக்கு 9ஆம் இடமான கடகத்தில் இருந்தால், தந்தையார் செய்துவந்த தொழில் மூலம் நல்ல இலாபங்கள் கிடைக்க விதி உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 11க்குடைய புதன் இராசிக்கு 10ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால் அதிகாரமும், அந்தஸ்தும் உள்ள உத்தியோகத்தின் மூலம் இலாபங்கள் உண்டாகும். குடும்பத்தில் சுக சௌகரியங்கள் நிறைந்து இருக்கும்.

ஸ்ரீமகாவிஷ்ணுவிற்கு அர்ச்சனையும், ஆராதனையும், புதனுக்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# தனுசு

தனுசு இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 11ஆம் இடமான துலாத்தில் இருந்தால் இலாபங்கள், ஆதாயங்கள் ஆகியன உண்டாகும் தொழில் விருத்தி, அந்தஸ்து, அதிகாரம் ஆகியன உள்ள பதவிகள் மூலம் நன்மையான இலாபப் பலன்கள் உண்டாகும். மூத்த சகோதரர் நல்ல செல்வாக்குடனும், சுகத்துடனும் இருப்பார்கள். பின்பாதியில் அந்த இலாப பலன்கள் உண்டாகும்.

தனுசு இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரனுடன் சனி சேர்ந்து துலாத்தில் கூடினால் கொடுக்கல் வாங்கல் தொழில் மூலமும், வட்டிக்கு விடுதல் தவணை முறைத் தொழில் மூலமும் நல்ல இலாபம் உண்டாகும். இளைய சகோதரர்களின் ஆதரவும் உண்டாகும்.

தனுசு இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரனுடன் இராகு கேதுகள் கூடினால் தொழில் முறை இலாபங்களும், அழுகிய பொருட்கள், மாமிச பொருள்கள் ஆகியவற்றின் மூலம் அதிக இலாபமும் பெற விதியுண்டாகும். இரசாயனம், தோல் பொருள்கள் போன்றவற்றின் மூலம் மத்திம இலாபப் பலன்களை எதிர்பார்க்கலாம்.

தனுசு இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரனுடன் சூரியன் சேர்ந்தால் தந்தை வழியில் நல்ல ஆதாயமும், பிதுர்பாக்கியச் சொத்துகள் மூலம் இலாபங்களும் உண்டாகும். ஆனால், தந்தைக்குக் கண்டமுண்டு.

தனுசு இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரனுடன் செவ்வாய் சேர்ந்தால் புத்திரரால் இலாபமும், தாய்மாமன் வழியில் ஆதரவும், குலதெய்வத்தின் அனுக்கிரகமும் உண்டாகும். குடும்பம் நல்ல சௌகரியங்களுடனும் பெரியோர் ஆசியுடனும் விளங்கும்.

தனுசு இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரனுடன் புதன் கூடிச் சேர்ந்தால் வரும் மனைவியால் நல்ல பொன் பொருள் வரவு உண்டாகும். அந்தஸ்து, அதிகாரமுள்ள பதவியின் மூலம் நல்ல ஆதாயம் கிடைக்கவும் விதி உண்டாகும்.

தனுசு இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரனுடன் குரு துலாத்தில் கூடிச் சேர்ந்தால் நல்ல இலாபங்களும், தாய்வழியில் ஆதரவும், வீடு, நிலபுலன்களால் நல்ல நன்மையும் உண்டாகும். புகழ், கீர்த்தி, நற்சுகம் ஆகியன அடையவும் விதி உண்டாகும்.

தனுசு இராசிக்கு 11க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 12ஆம் இடமான விருச்சிக இராசியிலிருந்தால் செய்தொழில் விரயம், கால விரயம் பொருள் விரயம் ஆகியன ஏற்பட விதியுண்டாகும்.

தனுசு இராசிக்கு 11க்குடைய சுக்கிரன், இராசியிலே இருந்தால் அந்தஸ்து, அதிகாரம் உள்ள பதவிகளால் ஆதாயமும், அதிகார உத்தியோகத்தினால் இலாபங்களும் உண்டாகும். தெய்வபக்தியும், சுக சௌக்கியங்களும் குடும்பத்தில் இருக்க விதி உண்டாகும்.

தனுசு இராசிக்கு 11க்குடைய சுக்கிரன், இராசிக்கு 2ஆம் இடமான மகரத்தில் இருந்தால் வாக்குச் சாதுரியம், புத்தி ஆகியவற்றினால் நல்ல இலாபங்களும் உத்தியோகம், தொழில், பதவிகள் ஆகியவற்றின் மூலம் ஆதாயங்களும் கிடைக்க விதியுண்டாகும். குடும்பம் ஒற்றுமையுடனிருக்க விதியுண்டு.

தனுசு இராசிக்கு 11க்குடைய சுக்கிரன், இராசிக்கு 3ஆம் இடமான கும்பத்தில் இருந்தால் சகோதரர்களின் மூலம் நல்ல இலாபங்களும், ஆதாயங்களும் கிடைக்க விதியுண்டு. நற்பெயர், கீர்த்தி, புகழ் போன்றவையும் உண்டாகும்.

தனுசு இராசிக்கு 11க்குடைய சுக்கிரன், இராசிக்கு 4ஆம் இடமான மீனத்தில் இருந்தால் தாய்வழியில் ஆதரவும், வீடு மனை, வாசல், நிலபுலன்கள் போன்றவை மூலம் நல்ல இலாபங்களும் கிடைக்க விதியுண்டு. உயர்ந்த அந்தஸ்தும் கௌரவமும், அதிகாரம் உள்ள பதவியும் உண்டாகும்.

தனுசு இராசிக்கு 11க்குடைய சுக்கிரன், இராசிக்கு 5ஆம் இடமான மேஷத்தில் இருந்தால் பிள்ளைகளால் ஆதரவும், நற்பெயரும் உண்டாகும். பதவி, உத்தியோகம், செய்தொழில் ஆகியவற்றின் மூலம் நல்ல பலன் உண்டு.

தனுசு இராசிக்கு 11க்குடைய சுக்கிரன் இராசிக்கு 6ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால் நற்பலன்கள் உண்டாகாது. இலாபங்கள் அதிகமாகக் கிடைக்காது. வியாதியால் கஷ்டமும், பணச் செலவும் உண்டாகுமென்பது விதி.

தனுசு இராசிக்கு 11க்குடைய சுக்கிரன், இராசிக்கு 7ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால், வரும் மனைவியால் பொன், பொருள்கள் கிடைக்க விதி உண்டாகும். கௌரவம் மற்றும் உத்தியோகம் மூலம் நல்ல இலாபங்களும் கிடைக்க விதியுண்டு. தெய்விக வழிபாடு, தொழில் விருத்தி, செய்தொழில் ஆதாயம் ஆகியன உண்டாகும்.

தனுசு இராசிக்கு 11க்குடைய சுக்கிரன், இராசிக்கு 8ஆம் இடமான கடகத்தில் இருந்தால், செய்தொழிலில் கஷ்ட, நஷ்டம் உண்டாகும். கண்டங்களும் விபத்துக்களும் வியாதிகளால் துன்பமும் வாழ்வில் உண்டாகும்.

தனுசு இராசிக்கு 11க்குடைய சுக்கிரன், இராசிக்கு 9ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால், தந்தைவழித் தொழிலைச் செய்து மிகப்பெரும் தொழில் அதிபராக விதியுண்டு.

தனுசு இராசிக்கு 11க்குடைய சுக்கிரன், இராசிக்கு 10ஆம் இடமான கன்னி இராசியில் நீசமானால், செய்தொழிலால் நஷ்டபலன்கள்தான் கிடைக்க விதி உண்டு. உத்தியோகம், கீர்த்தி, புகழ் ஆகியவை மறையக் கூடிய சூழ்நிலை உண்டாகும்.

ஸ்ரீரெங்க நாதருக்கு அர்ச்சனையும், பூஜையும் சுக்கிரனுக்கு யந்திர, மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# மகரம்

மகர இராசிக்கு 11க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 11ஆம் இடமான விருச்சிகத்திலிருந்தால் செவ்வாய் ஆட்சி பெற்ற காரணத்தால் இலாபங்கள்

சம பங்கு கிடைக்க விதியுண்டாகும். செய்தொழில் மூலம் நல்ல இலாபங்களும், ஆதாயங்களும் கிடைக்கக்கூடும். மூத்த சகோதரர்கள் நல்ல சுகசௌகரியங்களுடன் இருப்பார்கள். பிற்காலத்தில் திடீர்ப் பணவரவுகள், (ரேஸ், லாட்டரி) பெற விதி உண்டாகும்.

மகர இராசிக்கு 11க்குடையவரான செவ்வாயுடன் விருச்சிக இராசியில் புதன் கூடியிருந்தால், வரும் இலாபமெல்லாம் கடனுக்கும் மருத்துவ செலவிற்கும் போய்ச் சேரும். தந்தையின் மூலமும், பிதுர்பாக்கியத்தின் மூலமும் ஆதாயம் கிடைக்க விதியுண்டாகும்.

மகர இராசிக்கு 11க்குடையவரான செவ்வாயுடன் விருச்சிக இராசியில் குரு கூடினால், இளைய, மூத்த சகோதரர்கள் மூலம் நன்மையான பலனும், ஆதாயமும் உண்டாகும். பிற்காலத்தில், தொழில் மூலம் கிடைக்கும் இலாபங்கள் விரயமாகும் சூழ்நிலை உருவாக விதியுண்டு.

மகர இராசிக்கு 11க்குடையவரான செவ்வாயுடன் விருச்சிக இராசியில் சுக்கிரன் கூடினால், புத்திர இலாபம் உண்டு. கௌரவ, அந்தஸ்துள்ள பதவியின் மூலமும் அரசு அதிகார மிக்க பதவிகள் மூலமும் ஆதாயங்களும் அடைய விதியுண்டாகும்.

மகர இராசிக்கு 11க்குடையவரான செவ்வாயுடன் விருச்சிக இராசியில் சனி கூடினால் தொழில் மூலம் அதிக இலாபமும், வாக்கு, புந்தி ஆகியவற்றால் நல்ல ஆதாயமும் கிடைக்க விதி உண்டாகும்.

மகர இராசிக்கு 11க்குடையவரான செவ்வாயுடன் விருச்சிகத்தில் இராகுகேதுக்கள் கூடினால் பிள்ளைகள் மூலம் நன்மையான இலாப பலன்களையும், தோல், சாயம், மது, மாமிசம் போன்றவை தொடர்பான தொழில்களால் அபரிமிதமான இலாபங்களையும் பெற விதியுண்டாகும்.

மகர இராசிக்கு 11க்குடையவரான செவ்வாயுடன் விருச்சிகத்தில் சூரியன் கூடினால், மூத்த சகோதரருக்கு கண்டம் நேரும். இலாபங்களை எதிர்பார்க்க முடியாது. கஷ்ட நஷ்டமும் ஏற்படும்.

மகர இராசிக்கு 11க்குடைய செவ்வாய், இராசிக்கு 12ஆம் இடமான தனுசில் இருந்தால் மூத்த சகோதரரால் ஆதரவு கிடைக்க விதி இல்லை. வருகின்ற இலாபமெல்லாம் விரயமாகும் நிலை உண்டாகும். கஷ்டமும், நஷ்டமும் குடும்பத்தில் உண்டாகும். மன நிம்மதி இல்லாத நிலையும் உண்டாகும்.

மகர இராசிக்கு 11க்குடைய செவ்வாய், இராசியிலேயே இருந்தால் மூத்த சகோதரர் நல்ல சௌகரியங்களுடன் வாழ்வார். தொழில் விருத்திகளும், செய்கின்ற தொழிலால் பாராட்டுதலும், நன்மதிப்பும் உண்டாகும். கௌரவமான, அந்தஸ்துள்ள, அதிகாரமுள்ள பதவியும் மற்றும் உத்தியோகம் மூலம், இலாபங்களும், ஆதாயங்களும் உண்டாகும்.

மகர இராசிக்கு 11க்குடைய செவ்வாய், இராசிக்கு 2ஆம் இடமான கும்பத்தில் இருந்தால் குடும்பத்தில் தெய்வ பக்தியும் சௌகரியங்களும் நிறைந்திருக்கும். புத்தி சாதுரிய பேச்சுகளால் இலாபங்களையும் ஆதாயங்களையும் அடைய விதி உண்டாகும்.

மகர இராசிக்கு 11க்குடைய செவ்வாய், இராசிக்கு 3ஆம் இடமான மீனத்தில் இருந்தால், சகோதரர்களால் நல்ல நன்மையான பலன்களும் செய்தொழில், உத்தியோகம் மூலம் இலாபத்தையும் ஆதாயங்களையும் பெற விதி உண்டாகும்.

மகர இராசிக்கு 11க்குடைய செவ்வாய், இராசிக்கு 4ஆம் இடமான மேஷத்தில் ஆட்சி பெற்றிருந்தால், தாய்வழி ஆதரவையும் வீடு, விவசாயம், வாகனம் போன்றவை மூலமும், உத்தியோகம் மூலமும் நன்மையான பலன்களையும் இலாபத்தையும் அடைய முடியும்.

மகர இராசிக்கு 11க்குடைய செவ்வாய், இராசிக்கு 5ஆம் இடமான ரிஷபத்தில் இருந்தால் மாமன் வழியில் ஆதரவும், அரவணைப்பும் உண்டாகும். பிள்ளைகளால் நல்ல இலாபங்களும், தெய்வங்களின் அருளும் உண்டாகும்.

மகர இராசிக்கு 11க்குடைய செவ்வாய், இராசிக்கு 6ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால், வருகின்ற இலாபமெல்லாம் வியாதிக்காகவும், கடன் அடைக்கவும் செலவாகும். இவற்றால் இலாபங்களை அதிகமாக எதிர்பார்க்க முடியாத நிலை உண்டாகலாம்.

மகர இராசிக்கு 11க்குடைய செவ்வாய், இராசிக்கு 7ஆம் இடமான கடகத்தில் இருந்தால், செய்தொழிலில் வரக்கூடிய இலாபங்கள் அனைத்துமே மனைவியால் வீண் செலவிற்காகவும், வியாதிகளுக்காகவும் செலவழிக்க விதி உண்டாகும்.

மகர இராசிக்கு 11க்குடைய செவ்வாய், இராசிக்கு 8ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால், மூத்த சகோதரருக்கு ஆயுள் நிலையில் இடருண்டாகும். குடும்பத்தில் கஷ்ட, நஷ்டமும் உண்டாகலாம். இலாப நிலையை மறைமுக வழியில் தேட முயல்வார்கள்.

மகர இராசிக்கு 11க்குடைய செவ்வாய், இராசிக்கு 9ஆம் இடமான கன்னியில் இருந்தால் தந்தையின் மூலமும், பிதுர்பாக்கியச் சொத்துகளின் மூலமும் நல்ல இலாபங்களும், ஆதாயங்களும் உண்டாகும், திடீர்ப் பணவரவுகள் உண்டாகலாம்.

மகர இராசியில் 11க்குடைய செவ்வாய், இராசிக்கு 10ஆம் இடமான துலாத்தில் இருந்தால் கௌரவமான பதவிகள், அதிகார அந்தஸ்துள்ள உத்தியோகம் ஆகியவற்றின் மூலம் நல்ல இலாபங்களையும், ஆதாயங்களையும் பெற விதியுண்டு. நற்பெயர், நற்கீர்த்தி போன்றவற்றால் நல்ல ஆதாயத்தை அடையலாம் என்று சந்திர நாடி கூறுகிறது.

ஸ்ரீ சுப்ரமணியர்க்கு அர்ச்சனையும் ஆராதனையும், செவ்வாய்க்கு யந்திர, மந்திரப் பிரீதியும் செய்ய நற்பலன்கள் உண்டாகும்.

# கும்பம்

கும்ப இராசிக்கு 11க்குடையவரான குருவுடன் இராசிக்கு 11ஆம் இடமான தனுசில் ஆட்சி பெற்றால், மூத்த சகோதரர் நல்ல சுகத்துடன் இருப்பார். அவர் மூலம் நன்மையான இலாப பலனுண்டாகும். திடீர்ப் பணவரவும் உண்டாகும். செய்தொழில் மூலம் ஆதாயம் அடைய விதி உண்டாகும்.

கும்ப இராசிக்கு 11க்குடையவரான குரு, இராசிக்கு 11ஆம் இடமான தனுசில் சுக்கிரனுடன் சேர்ந்திருந்தால் வீடு, நிலபுலன்களின் மூலம் இலாபமும், அந்தஸ்து, கௌரவம் ஆகியன கொண்ட தொழில்கள் மூலம் ஆதாயமும், தாய் தந்தையர் அன்பும், ஆதரவும், திடீர்ப் பணவரவும் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 11க்குடையவரான குரு இராசிக்கு 11ஆம் இடமான தனுசில் சனியுடன் கூடினால் உத்தியோகம் மூலம் இலாபமும், தொழில் விருத்தியும், ஆதாயமும் உண்டாகும். பின் விரயமும் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 11க்குடையவரான குரு, இராசிக்கு 11ஆம் இடமான தனுசில் இராகுகேதுக்களுடன் கூடினால், தொழில் இலாபங்களும், ஆதாயங்களும் மட்டுப்படும். தன் திசா காலத்தில் திடீர் சம்பத்தையும் பணவரவையும் கொடுக்க விதியுண்டாகும்.

கும்ப இராசிக்கு 11க்குடையவரான குரு, இராசிக்கு 11ஆம் இடமான தனுசில் சூரியன் கூடினால் வரக்கூடிய மனைவியால் நல்ல பொன், பொருள் வரவும், தொழில், உத்தியோக ஆதாயங்களும் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 11க்குடையவரான குரு, இராசிக்கு 11ஆம் இடமான தனுசில் செவ்வாயுடன் கூடினால் தொழில் விருத்தியும், தொழில் இலாபமும், இளைய சகோதரத்தால் நன்மையும் உண்டாகும். திடீர் தனசம்பத்தும் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 11க்குடையவரான குரு, இராசிக்கு 11ஆம் இடமான தனுசில் புதனுடன் கூடினால், வருகின்ற இலாபங்களை மருத்துவச் செலவிற்காகவும் கடனடைக்கவும் செலவிட விதியுண்டாகும். செய்தொழில் ஆதாயங்கள் கிடைக்க விதி இல்லையாம்.

கும்ப இராசிக்கு 11க்குடைய குரு, இராசிக்கு 12ஆம் இடமான மகரத்தில் நீசம் பெற்றால், குடும்பத்தில் ஒற்றுமைக் குறைவு உண்டாகும். இலாபங்களை எதிர்பார்க்க முடியாது. மூத்த சகோதரர் அற்ப ஆயுளுடனும், வியாதிகளுடனும் இருக்க விதியாகும்.

கும்ப இராசிக்கு 11க்குடைய குரு இராசியிலே இருந்தால், நற்பெயர், நற்கீர்த்தி, புகழ், சேவக விருத்தி ஆகியவற்றையும் இளைய சகோதரர்கள் மூலம் நன்மையான பலன்களையும் பெற விதி உண்டாகும். தொழிலில் இலாபங்கள் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 11க்குடைய குரு, இராசிக்கு 2ஆம் இடமான மீனத்தில் இருந்தால் வாக்கு சாதுரியம், புத்திசாலித்தனமான பேச்சு ஆகியவற்றால் நன்மையான பலன்களைப் பெற விதி உண்டாகும். மூத்த சகோதரர் குடும்பத்தை நிர்வகிப்பர்.

கும்ப இராசிக்கு 11க்குடைய குரு, இராசிக்கு 3ஆம் இடமான மேஷத்திலிருந்தால் சகோதரர்கள் மூலம் ஒற்றுமையும், ஆதாயங்களும் உண்டாகுமென்பது விதியாகும். தொழில், பதவி, வேலையாள், பட்டம் போன்றவற்றால் இலாபங்கள் கிடைக்க விதியுண்டாகும்.

கும்ப இராசிக்கு 11க்குடைய குரு, இராசிக்கு 4ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால் தாயினால் நன்மையும், வீடு, வாகனம், சொத்து, நிலபுலன்கள் போன்றவற்றால் இலாபமும், ஆதாயமும் உண்டாகும். உத்தியோகம், பதவி ஆகியவற்றால் நல்ல இலாபம் கிடைக்க விதி உண்டாகும்.

கும்ப இராசிக்கு 11க்குடைய குரு, இராசிக்கு 5ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால் பிள்ளைகளால் இலாபமும், குலதெய்வ அனுக்கிரகமும், திடீர்த் தன வரவும், உண்டாக விதியாகும்.

கும்ப இராசிக்கு 11க்குடைய குரு இராசிக்கு 6ஆம் இடமான கடகத்தில் இருந்தால் வரக்கூடிய இலாபமெல்லாம் கடன் அடைக்கவும், வியாதிகளுக்காகவும் செலவிடக் கூடும். பெண்களினால் நற்சுகமும் அத்துடன் தொல்லைகளும், துன்பங்களும் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 11க்குடைய குரு இராசிக்கு 7ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால் வரக்கூடிய மனைவியால் பொன் பொருள் பூஷணாதிகளால் நல்ல இலாபமும் ஆதாயமும் உண்டாகும். உத்தியோகம், தொழில் போன்றவற்றின் மூலம் இலாபமும், ஆதாயமும் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 11க்குடைய குரு, இராசிக்கு 8ஆம் இடமான கன்னியில் இருந்தால், கடன்களால் தொல்லையும், கஷ்ட நஷ்டமும் உண்டாகும். மூத்த சகோதரருக்குக் கண்டமுண்டாகும்.

கும்ப இராசிக்கு 11க்குடைய குரு, இராசிக்கு 9ஆம் இடமான துலாத்தில் இருந்தால், பிதுர் பாக்கியச் சொத்துகளின் மூலம் நன்மையான பலன்களும், ஆதாயங்களும் உண்டாகும். தந்தை வழி ஆதரவும் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 11க்குடைய குரு, இராசிக்கு 10ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால் கௌரவமும் அந்தஸ்தும் அதிகாரம் உள்ள உத்தியோகத்தின் மூலம் இலாபங்களும், தொழில் ஆதாயங்களும் உண்டாகும். அமைதியான குடும்பம் அமையும்.

ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு அர்ச்சனையும், ஆராதனையும், குருவுக்குப் யந்திர, மந்திரப், பிரீதியும் செய்ய நன்மையான பலனுண்டாகும்.

# மீனம்

மீன இராசிக்கு 11க்குடையவரான சனி இராசிக்கு 11ஆம் இடமான மகர இராசியில் இருந்தால் மூத்த சகோதரர்கள் நல்ல சுகசௌகரியங்களுடன் இருப்பார்கள். அவர்களின் ஆதரவு உண்டு. தொழில்கள் மூலம் இலாபங்களும், ஆதாயங்களும் உண்டாகும். திடீர்ப் பணவரவும் உண்டாகும்.

மீன இராசிக்கு 11க்குடையவரான சனியுடன் மகரத்தில் இராகுகேதுக்கள் கூடினால் பிள்ளைகளால் நல்ல இலாபமும், செய்தொழிலில் ஆதாயங்களும் உண்டாகும். திடீர்த் தனவரவும் உண்டாக விதியுண்டு.

மீன இராசிக்கு 11க்குடையவரான சனியுடன் மகரத்தில் சூரியன் கூடினால் உத்தியோகம், தொழில் போன்றவற்றில் வில்லங்க விவகாரமும் இலாபத்தை அடையவிடாமல் தடுக்கின்ற நிலைகளும் உண்டாகும்.

மீன இராசிக்கு 11க்குடையவரான சனியுடன் மகரத்தில் செவ்வாய் சேர்ந்தால் கொடுக்கல் வாங்கல் தொழில் மூலமும், வாக்குச் சாதுர்யத்தினாலும் இலாபங்களும், ஆதாயங்களும் உண்டாகும். பிதுர்பாக்கிய இலாபங்களும் உண்டாம்.

மீன இராசிக்கு 11க்குடையவரான சனியுடன் மகரத்தில் புதன் சேர்ந்தால் தாய்வழி ஆதரவும் நிலபுலன்களால் இலாபமும், வரும் மனைவியால் பொன், பொருள் வரவும், ஆதாயங்களும் உண்டாகும்.

மீன இராசிக்கு 11க்குடையவரான சனியுடன் மகரத்தில் குரு சேர்ந்தால் கௌரவமும், அந்தஸ்தும் உள்ள பதவிகள் மூலம், இலாபங்களும், ஆதாயங்களும் கிடைக்க விதி உண்டாகும்.

மீன இராசிக்கு 11க்குடையவரான சனியுடன் மகரத்தில் சுக்கிரன் சேர்ந்து கூடினால், மூத்த சகோதரருக்குக் கண்டமுண்டாகும். செய்தொழிலில் நஷ்டமும் மறைமுகத் தொழில் வழியில் இலாபமும் உண்டாக விதி உண்டாகும்.

மீன இராசிக்கு 11க்குடையவரான சனி இராசிக்கு 12ஆம் இடமான கும்பத்திலிருந்தால் வருகின்ற இலாபங்கள், ஆதாயங்கள் எல்லாம் சுப விரயமாகும் நிலை உண்டாகும். கஷ்டங்களும், துன்பங்களும் உண்டாக விதியுண்டு.

மீன இராசிக்கு 11க்குடையவரான சனி இராசியிலே இருந்தால் எந்தத் தொழில் செய்பவராக இருந்தாலும் நல்ல இலாபங்களை அடைபவராகத் திகழ்வார்கள். மூத்த சகோதரர்கள் நல்ல சுகமாக இருக்க விதியாகும்.

மீன இராசிக்கு 11க்குடையவரான சனி இராசிக்கு 2ஆம் இடமான மேஷத்தில் இருந்தால் அதிகமான இலாபத்தை எதிர்பார்க்க முடியாது. மூத்த சகோதரருக்கு ஆரோக்கியம் கெடும்.

மீன இராசிக்கு 11க்குடையவரான சனி இராசிக்கு 3ஆம் இடமான ரிஷபத்தில் இருந்தால் சகோதரர்கள் மூலம் ஆதாயங்களும், நன்மைகளும், ஆதரவும், இலாபங்களும் உண்டாகும்.

மீன இராசிக்கு 11க்குடையவரான சனி இராசிக்கு 4ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால் தாய்வழியில் சுகமும் அவர்கள் மூலம் இலாபமும், வீடு, மனை, சொத்து, நிலபுலன்கள் ஆகியவை மூலம் இலாபங்களும், விவசாய நன்மைகளும், வண்டி, வாகனம் மற்றும் உத்தியோக இலாபங்களும் உண்டாக விதியுண்டு.

மீன இராசிக்கு 11க்குடையவரான சனி இராசிக்கு 5ஆம் இடமான கடகத்தில் இருந்தால் பிள்ளைகள் மூலம் இலாபங்களும், குலதெய்வ அருளும், திடீர்ச் சம்பத்தும் பண வரவுகளும் உண்டாகும். மந்திரத்தின் மூலம் நல்ல பலன்களையும் அடைய விதி உண்டாகும்.

மீன இராசிக்கு 11க்குடையவரான சனி இராசிக்கு 6ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால் வரக் கூடிய இலாபங்கள் நோய்க்காகவும், கடனுக்காகவும் செலவு செய்ய நேரும். கஷ்டமும் நஷ்டமும் உண்டாக விதியுண்டு.

மீன இராசிக்கு 11க்குடையவரான சனி இராசிக்கு 7ஆம் இடமான கன்னியிலிருந்தால் வரும் மனைவியால் பொன், பொருள் வரவும், ஆடையாபரணச் சேர்க்கையும் உண்டு. கௌரவம், அந்தஸ்து, செல்வாக்கு மற்றும் செல்வமும் உண்டாகும் என்பது விதியாகும்.

மீன இராசிக்கு 11க்குடைய சனி இராசிக்கு 8ஆம் இடமான துலாத்தில் உச்சம் பெற்றிருந்தால் மறைமுகமான வழிகளில் தொழில் செய்து அதிக இலாபங்களை ஈட்டுவார்கள் என்பது விதி. மூத்த சகோதரருக்கு ஆரோக்கியம் கெடும்.

மீன இராசிக்கு 11க்குடைய சனி இராசிக்கு 9 ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால் பிதுர்பாக்கியச் சொத்துக்களின் மூலம் இலாபங்களும், ஆதாயங்களும் உண்டாகும். திடீர்ப் பணவரவுகளும் உண்டாக விதி உண்டாகும்.

மீன இராசிக்கு 11க்குடைய சனி இராசிக்கு 10ஆம் இடமான தனுசில் இருந்தால், கௌரவம், அந்தஸ்து, மதிப்புமிக்க பதவிகள் ஆகியவற்றின் மூலமும், அதிகாரமுள்ள உத்தியோகத்தின் மூலமும் இலாபங்களையும் ஆதாயங்களையும் அடைய விதி உண்டாகும்.

ஸ்ரீ விநாயகருக்கு அர்ச்சனையும் ஆராதனையும், ஸ்ரீ சனீஸ்வர பகவானுக்கு யந்திர மந்திர, பிரதீகளும் செய்தால் நன்மையான பலன்களை அடையலாம்.

# பன்னிரெண்டாம் பாவம்

## மேஷம்

மேஷ இராசிக்கு 12க்குடையவரான குரு, இராசிக்கு 12ஆம் இடமான மீனத்தில் ஆட்சி பெற்றால், நல்ல போஜன சுகமிருக்கும் என்பது விதி. சிவயோகம் பெற்றவராகவும் தான தர்மச் செலவுகள் செய்பவர்களாகவும், வியாதியஸ்தர்களாகவும், பூமி, பொருள், தந்தை ஆகியவற்றை இழந்து அலைந்து திரிபவர்களாகவும், புத்திர சம்பத்துள்ளவர்களாகவும் தனம் தேடும் யோகமும், சதா நித்திரையில் இருப்பவர்களாகவும் இருக்க விதி உண்டாம்.

மேஷ இராசிக்கு 12க்குடையவரான குருவுடன் சுக்கிரன் சேர்ந்து மீனத்திலிருந்தால், பெண்களினால் அதிக போக சுகம் அடைந்து, மனம் வெறுத்து, ஆன்மிக நாட்டம் பெற்று வீட்டை விட்டு வெளியேற விதியுண்டு. பணம் பாழாக விதியுண்டாகும்.

மேஷ இராசிக்கு 12க்குடையவரான குருவுடன் சனி சேர்ந்து மீனத்திலிருந்தால் தந்தையையும், பூமியையும் இழந்து அலைந்து திரிவர். பரதேசியாக வாழ்வார்கள். தாய்க்கு நன்மை செய்யாத துவேஷி.

மேஷ இராசிக்கு 12க்குடையவரான குருவுடன் இராகு கேதுக்கள் சேர்ந்து மீனத்தில் கூடினால், பெண்போகத்தினால் அதிகச் செலவும், நீரால் கண்டமும் ஞானமும், மோஷப் பிராப்தியும் உண்டாகும்.

மேஷ இராசிக்கு 12க்குடையவரான குருவுடன் சூரியன் சேர்ந்து மீனத்தில் கூடினால் தந்தையை இழந்து திரிவர். பரதேசியாவர். புத்திர தோஷம் உண்டாகும். சிவயோகப் பிராப்தியும் உண்டாகும். பொருள் விரயமும், கஷ்ட நஷ்டமும் உண்டாகும்.

மேஷ இராசிக்கு 12க்குடையவரான குருவுடன் செவ்வாய் சேர்ந்து மீன இராசியில் கூடினால் எவ்வளவு வருமானம் வந்தாலும், செலவு செய்வார்கள். உணவு, ஆடை இல்லாமல் அலைவார்கள். ஊர் சுற்றும் குணமும், மன அமைதியில்லாத நிலையும் உண்டாகும்.

மேஷ இராசிக்கு 12க்குடையவரான குருவுடன் புதன் சேர்ந்து மீனத்தில் கூடினால், இளைய சகோதரரை இழந்து திரிவார்கள். கடன் தொல்லைகளாலும், குடும்ப கஷ்டத்தை நினைத்தும் பரதேசியாக கெடுவார்கள். சத்துருக்களால் அதிகப் பணச் செலவும் உண்டாகும்.

மேஷ இராசிக்கு 12க்குடைய குரு, மேஷ இராசியிலே இருந்தால் அதிகமான பணச் செலவும், நித்திரை சுகமும் போஜன சுகமும் உண்டாக விதியுண்டு. புத்திர சம்பத்தும், சிவயோகமும், உண்டாக விதியுண்டு. பூமி, பொருள், உத்தியோகம் போன்றவற்றை இழக்க விதி உண்டாகும்.

மேஷ இராசிக்கு 12க்குடைய குரு இராசிக்கு 2ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால் வெட்டிப்பேச்சு பேசுபவராகவும், கல்வியறிவு அற்றவராகவும், குடும்பத்தில் அதிகமான செலவுகளைச் செய்பவராகவும் இருப்பார்கள். கண்பார்வை இழக்கும் அல்லது மங்கும் நிலை உண்டாகலாம்.

மேஷ இராசிக்கு 12க்குடைய குரு இராசிக்கு 3ஆம் இடமான மிதுனத்திலிருந்தால் தன் முன்னோர்கள் தகப்பனார்கள் தேடிவைத்த சொத்துகளை இழக்க விதி உண்டாகும். இளைய சகோதரர்களால் விரயமேற்படும்.

மேஷ இராசிக்கு 12க்குடைய குரு, இராசிக்கு 4 ஆம் இடமான கடகத்திலிருந்தால் போஜன சுகமும், சயன சுகமும், பெண்களால் சுகமும் அதிகமாகும். இதற்காகக் காடு, கழனி, வீடு, மனை, வாகனங்கள் முதலியவற்றை விரயமாக்க விதியுண்டாகும்.

மேஷ இராசிக்கு 12க்குடைய குரு, இராசிக்கு 5ஆம் இடமான சிம்மத்திலிருந்தால் சிவசம்பத்தைப் பெறவும், சந்நியாசிகள், பரதேசிகளாகவும், மடங்களின் தலைவராகவும் இருப்பார்கள். சுகம் அற்றவர்களாகவும் இருக்க விதி உண்டாகும்.

மேஷ இராசிக்கு 12க்குடைய குரு, இராசிக்கு 6ஆம் இடமான கன்னியில் இருந்தால் வியாதியால் கஷ்டமும், கடன்களும் அதிகமாகும், கடனை அடைக்கவே சிரமம் ஏற்படும்.

மேஷ இராசிக்கு 12க்குடைய குரு, இராசிக்கு 7ஆம் இடமான துலாத்தில் இருந்தால் பெண் சுகத்திற்காகப் பணங்களையும், செல்வங்களையும் அதிகமாகச் செலவு செய்பவர்களாக இருப்பார்கள் என விதியுண்டு.

மேஷ இராசிக்கு 12க்குடைய குரு, இராசிக்கு 8ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால் உடல் நலம் பாதிக்கப்படும், அதனால்

மருத்துவச்செலவுகளும், மன அமைதியில்லாமையால் பண விரயமும் ஏற்படக்கூடும்.

மேஷ இராசிக்கு 12க்குடைய குரு, இராசிக்கு 9ஆம் இடமான தனுசில் இருந்தால் தகப்பனார் தேடிவைத்த செல்வங்கள் எல்லாம் விரயமாகும் நிலையும். கடன்களுக்காகப் பிதுர் பாக்கியங்கள் அழியும் நிலையும் நேரிடலாம், சிவயோகம் உண்டாம். தந்தையையிழந்து தவிக்கும் நிலை உண்டாகும்.

மேஷ இராசிக்கு 12க்குடைய குரு, இராசிக்கு 10ஆம் இடமான மகரத்தில் நீசம் பெற்றால், தொழில், உத்தியோகம், பதவி ஆகியவற்றை இழந்து ஊர்சுற்றித் திரிவர்; தொழிலைச் செய்ய முடியாத நிலை உண்டாகும்.

மேஷ இராசிக்கு 12க்குடைய குரு, இராசிக்கு 11ஆம் இடமான கும்பத்தில் இருந்தால் மூத்த சகோதரர் வகையில் அதிகமாக பணம் செலவு செய்ய நேரிடும். கோயில் தரிசனம், வழிபாடுகள் முதலியவற்றாலும் தானதரும காரியங்களாலும் விரயம் உண்டாகும்.

ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்குப் பிரீதியும், அர்ச்சனையும். குருவுக்கு யந்திர, மந்திர, பிரிதீகளும் செய்தால் நல்ல பலன்களை அடையலாம்.

# ரிஷபம்

ரிஷப இராசிக்கு 12க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 12ஆம் இடமான மேஷத்தில் இருந்தால் பூமியையும், பொருளையும், சகோதரரையும் இழந்து தவிப்பர். சிவயோக சம்பத்துகளையும், அடைவர். தாய்க்கு நன்மை செய்யாதவர்களாகவும் இருக்க விதி உண்டாகும். செல்வங்கள் விரயமாகும். உணவுக்காகவும், ஆடம்பரத்துக்காகவும் செலவேற்பட விதியாகும்.

ரிஷப இராசிக்கு 12க்குடையவரான செவ்வாயுடன், புதன் சேர்ந்து ரிஷபத்திலிருந்தால், தனவரவும், அதன் மூலம் அதிகமான செலவுகளும் குடும்பத்தில் நிம்மதியில்லாமையும், புத்திரர்களால் மன அமைதியும், பூர்வ புண்ணியம் கெடவும் விதியாகும்.

ரிஷப இராசிக்கு 12க்குடையவரான செவ்வாயுடன் குரு சேர்ந்து ரிஷபத்தில் கூடினால், செல்வத்தைக் கெட்ட வழிகளில் செலவு செய்பவராகவும், முறையற்ற செயல்கள் செய்து அவதிப்படுபவராகவும் புத்திர சோகத்தை உடையவராகவும் இருக்க விதி உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 12க்குடையவரான செவ்வாயுடன் சுக்கிரன் சேர்ந்து ரிஷபத்திலிருந்தால் திறமையில்லாதவராக இருப்பார். அகால வேளையில் உண்ணவும், தூக்கமில்லாமல் இருக்கவும், வியாதியால் பணவிரயமாகவும் நேரும்.

ரிஷப இராசிக்கு 12க்குடையவரான செவ்வாயுடன் சனி சேர்ந்து ரிஷபத்திலிருந்தால், சுகங்களுக்காகப் பணத்தை விரயம் செய்பவர்களாகவும் காம சுகங்கள் நிறைந்தவர்களாகவும், இருப்பார்கள். அவற்றின் மூலம் பண விரயம் ஏற்பட விதியாகும். தொழில் முடக்கமும், பிதுர்பாக்கிய அழிவும் ஏற்படும்.

ரிஷப இராசிக்கு 12க்குடையவரான செவ்வாயுடன் இராகுகேதுக்கள் சேர்ந்து ரிஷபத்திலிருந்தால் பொருள்கள் அழிவும், பணச் செலவுகளும், மோக்ஷ பிராப்தியும் உண்டாகும். வீண் செலவுகளும், வியாதிகளால் கஷ்டமும் உண்டாகும். சயன சுகமுண்டாகும்.

ரிஷப இராசிக்கு 12க்குடையவரான செவ்வாயுடன் சூரியன் சேர்ந்து ரிஷபத்தில் கூடினால், வீடு, மனை, வாகனங்கள், சொத்து, சுகங்கள் ஆகியவற்றில் விரயமும் உண்டாகும். தாயை இழந்தவராகவும் இருக்க விதி உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 12க்குடைய செவ்வாய் ரிஷப இராசியிலே இருந்தால் நிறைய செலவுகள் செய்வர். வேளைக்கு உணவும், தூக்கமும், சுகமும் உண்டாகும். கவலைகளையும், பிரச்சினைகளையும் அலட்சியம் செய்பவர்களாக இருப்பார்கள்.

ரிஷப இராசிக்கு 12க்குடைய செவ்வாய் 2ஆம் இடமான மிதுன இராசியில் இருந்தால், வீண் பேச்சுப் பேசுபவராகவும், அதிகப் பணத்தை குடும்பத்தில் செலவு செய்பவராகவும் இருக்க விதியுண்டு. குடும்பத்தில் இவர் பேச்சு எடுபடாத நிலையும் இருக்கும்.

ரிஷப இராசிக்கு 12க்குடைய செவ்வாய் 3ஆம் இடமான கடக இராசியில் இருந்தால் பட்டம், பதவி, புகழ் ஆகியவற்றை இழந்து திரிவர். சிவயோக சம்பத்தைப் பெறுவர். இளைய சகோதரர்களால் பொருள் விரயம் உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 12க்குடைய செவ்வாய் 4ஆம் இடமான சிம்ம இராசியில் இருந்தால் தாயை இழந்து தவிப்பவராகவும், அவருக்குப் பூமி, காணி, வீடு, சொத்து, வண்டி, வாகனங்கள் ஆகியவற்றை விரயம் செய்யும் நிலை உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 12க்குடைய செவ்வாய் 5ஆம் இடமான கன்னி இராசியில் இருந்தால் புத்திரர்களை இழப்பவர்களாகவும், சிவயோகம் அடைபவர்களாகவும் சந்நியாசி, பரதேசிகளாகவும், திருப்பணிகள் செய்பவர்களாகவும் இருப்பர். செல்வமும், செல்வாக்கும் உண்டாக விதி உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 12க்குடைய செவ்வாய் 6ஆம் இடமான துலாத்திலிருந்தால் வியாதியால் கஷ்ட நஷ்டமும் பணச்செலவுகளும் ஏற்படும். துன்பம் நேரிடும். வீண் செலவுகளால் பணம் விரயமாகலாம்.

ரிஷப இராசிக்கு 12க்குடைய செவ்வாய் 7ஆம் இடமான விருச்சிகத்திலிருந்தால் சிற்றின்ப சுகத்திற்காக அதிக பணத்தையும், பொருளையும் செலவு செய்பவர். பணம் விரயமாகலாம். பெண்களின் மேல் இச்சை கொண்டவர்.

ரிஷப இராசிக்கு 12க்குடைய செவ்வாய் 8ஆம் இடமான தனுசிலிருந்தால் வில்லங்கம், விவகாரம், கண்டம் போன்றவற்றாலும் உடல் நலமில்லாமலும் பண விரயம் உண்டாகும்.

ரிஷப இராசிக்கு 12க்குடைய செவ்வாய் 9ஆம் இடமான மகர இராசியிலிந்தால் பிதுர்பாக்கியச் சொத்துக்களுக்குச் சேதமும் மூத்த சகோதரரால் செலவுகளும், கஷ்டநஷ்டங்களும் உண்டாகும். தந்தையாரைக் கவனிக்க மாட்டார்கள்.

ரிஷப இராசிக்கு 12க்குடைய செவ்வாய் இராசிக்கு 10ஆம் இடமான கும்பத்தில் இருந்தால் செய்தொழிலில் முடக்கம் ஏற்படும். தொழிலில் சிரத்தை இன்றி இருக்க விதியுண்டு.

ஸ்ரீசுப்ரமணியசுவாமிக்கு அர்ச்சனையும், ஆராதனையும், செவ்வாய்க்கு யந்திர, மந்திர, பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# மிதுனம்

மிதுன இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 12ஆம் இடமான ரிஷபத்தில் ஆட்சி பெற்றால், உடல் நலமில்லாமலிருக்கும். அதிகமாகச் செலவுகள் செய்வார். சிற்றின்பச் சுகங்களுக்காகப் பணத்தையும், பொருள்களையும் விரயம் செய்வர். புத்திரரால் நஷ்டமுண்டாக விதியுண்டு.

மிதுன இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரனுடன் சனி ரிஷபத்தில் கூடினால் தகாத, முறையற்ற வழிகளில் வீண்செலவு செய்து செல்வத்தை இழந்து தவிப்பர். பிதுர் பாக்கியங்களை இழந்து அலைந்து கொண்டிருப்பர். சிவயோகத்தைப் பெறுவர்..

மிதுன இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரனுடன் இராகுகேதுக்கள் ரிஷபத்தில் கூடினால் சிற்றின்பப் பிரியர்களாய் இருப்பர். பெண்களின் சுகத்திற்காக அதிகப் பணம் செலவு செய்து வருந்திப் பின்பு ஞானம் பெற விதியுண்டாகும். மோட்சப்பிராப்தியும் உண்டாகும்.

மிதுன இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரனுடன் சூரியன் கூடினால் இளைய சகோதரர்களால் பொன், பொருள் விரயமாகும் நிலை உண்டாம். பதவி, புகழ் ஆகியவற்றை இழந்து பரிதவிக்க விதியுண்டாகும்.

மிதுன இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரனுடன் செவ்வாய் ரிஷபத்தில் கூடினால், வியாதியால் பண விரயமும், சகோதரரால் பொன், பொருள் உண்டாகும்.

மிதுன இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரனுடன் புதன் ரிஷபத்தில் கூடினால் அதிகச் செலவாளியாகவும், தூக்கம் மன அமைதி ஆகியன இல்லாமல் அலைந்துகொண்டிருப்பவர்களாகவும் இருப்பர். உத்தியோகம், தொழில் ஆகியன இல்லாமல் இருக்க விதி உண்டாகும்.

மிதுன இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரனுடன் குரு ரிஷபத்தில் கூடினால் வரும் மனைவியால் பொன், பொருள் விரயமும், நித்திரை சுகமும் உண்டாகும். கடன்களால் சொத்துக்களை விரயமாக்கும் நிலை உண்டாக விதியுண்டு.

மிதுன இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன் இராசியிலே இருந்தால் அதிகம் பொருள்களும் தனங்களும் விரயமாகும். உணவும், நித்திரை சுகமும் இருக்க விதி உண்டாம். ஆடம்பரச் செலவுகள் செய்து வாழ்க்கை வசதிகளை அமைத்துக் கொள்பவர்களாக இருக்க விதியுண்டாகும்.

மிதுன இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 2ஆம் இடமான கடகத்தில் இருந்தால், குடும்பத்தில் பணச் செலவுகள் அதிகம் உண்டாகும். நிம்மதி இராது. வாக்குவன்மை இராது. தொழில் செய்ய பிரியமில்லாமல் இருக்கவிதி உண்டாகும்.

மிதுன இராசிக்கு 12க்குடைய சுக்கிரன் இராசிக்கு 3ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால், முன்னோர்கள் தேடிவைத்த பொன், பொருள்கள்

ஆகியன விரயமாகும். சகோதரர்மூலம் சொத்துகள் விரயமாகும் நிலை உண்டாகும்.

மிதுன இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 4ஆம் இடமான கன்னியில் இருந்தால், குடும்பத்தில் அதிகமான செலவுகளைச் செய்வர். பெண்களால் நற்சுகமும், போஜன சுகமும் உண்டாகும். சொத்து, வீடு, மனை, வாகனங்கள் ஆகியவற்றால் நஷ்டமும் உண்டாக விதியுண்டு.

மிதுன இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 5ஆம் இடமான துலாத்தில் இருந்தால் புத்திர சோகமுண்டாகும். ஆலயத் தரிசனங்கள், திருப்பணிகள் ஆகியன செய்ய விதி உண்டாகும். பிள்ளைகளால் செலவுகள் உண்டாக விதியாகும்.

மிதுன இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 6ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால், வியாதிகளால் அதிகமான பணச் செலவுகளும், கடன்களால் கஷ்டங்களும் உண்டாகும்.

மிதுன இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 7ஆம் இடமான தனுசில் இருந்தால் பெண்களால் நற்சுகமும், அதிகமான,பணம், பொன், பொருள் விரயமும் உண்டாக விதியுண்டு. காமஇச்சை அதிகமாக உள்ளவர்களாக இருப்பார்கள்.

மிதுன இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 8ஆம் இடமான மகரத்தில் இருந்தால், வீண் வம்பு, வழக்குகள் முதலியவற்றால் செலவுகளும் பணவிரயமும் உண்டாகுமென விதியுண்டு. உடலில் நோய் நொடிகளால், பணச் செலவு உண்டாகும்.

மிதுன இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 9ஆம் இடமான கும்பத்தில் இருந்தால், கடனுக்காகவும், வழக்குக்காகவும் செலவும் விரயமும் ஏற்படும். பிதுர்பாக்கிய விரயங்களும் உண்டாகும்.

மிதுன இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 10ஆம் இடமான மீனத்தில் இருந்தால் தொழிலில் வருமானமில்லாமலும், நஷ்டம் உண்டாகியும், தொழிலைக் கைவிடவேண்டியும் வரும்.

மிதுன இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 11ஆம் இடமான மேஷத்தில் இருந்தால், புத்திரர்களால் வருமானம் உண்டாகும். மூத்த சகோதரர்களால் கஷ்டமும், நஷ்டமும் உண்டாகும்.

ஸ்ரீ ரெங்கநாதருக்கு அர்ச்சனையும் ஆராதனையும், சுக்கிரபகவானுக்கு யந்திர மந்திர பிரீதிகளும் செய்தால் நல்ல பலன்கள் உண்டாகும்.

# கடகம்

கடக இராசிக்கு 12க்குடைய புதன், இராசிக்கு 12ஆம் இடமான மிதுனத்தில் ஆட்சி பெற்றால், சுகபோஜனங்களுக்காகவும், சுக இன்பங்களுக்காகவும், பணம் அதிகமாகச் செலவு செய்பவர்களாய் இருப்பார்கள். நல்ல நித்திரை உண்டாகும். ஆனால், உடல் வியாதிகளுடன் கஷ்டப்படுவார்கள்.

கடக இராசிக்கு 12க்குடைய புதனுடன் குரு, மிதுன இராசியில் கூடினால் பெரும்பாலும், பொருளையழித்துக் கடன்களை அடைக்கும் நிலை தொடர்ந்து உண்டாகும். வியாதிகளால் கஷ்டமும், துன்பங்களும் உண்டாக விதியுண்டு.

கடக இராசிக்கு 12க்குடைய புதனுடன் சுக்கிரன் மிதுன இராசியில் கூடினால் புத்திரரால் விரயமும், மூத்த சகோதரர்களால் பொருள் இழப்பும் உண்டாகும். தெய்வத் திருப்பணிகள், பொது நிருவாகச் செலவுகள் ஆகியன உண்டாக விதி உண்டாகும்.

கடக இராசிக்கு 12க்குடைய புதனுடன் சனி, மிதுன இராசியில் கூடினால் பிதுர்பாக்கியச் சொத்துகள் விரயமாகும் நிலை உண்டாகலாம். தந்தையையும் பூமியையும் இழந்து தவிப்பவர்களாகவும் இருக்க விதி உண்டாகும்.

கடக இராசிக்கு 12க்குடைய புதனுடன் இராகுகேதுக்கள் மிதுனத்தில் கூடினால் பூமி, பொன், பொருள் ஆகிய விரயமும்,தண்டச் செலவுகளும் மோசுஷபிராப்தியும் உண்டாக விதியுண்டு.

கடக இராசிக்கு 12க்குடைய புதனுடன் சூரியன் கூடினால், வாக்கிற்கு மதிப்பிருக்காது. அனாவசியப் பேச்சுகளால் தம் மதிப்பை இழப்பர். ஞானநூலுக்கு ஆசிரியராக இருந்தாலும் பிற்காலத்தில் வாக்கு ஊனமும், நேத்திர ஊனமும் உண்டாகலாம்.

கடக இராசிக்கு 12க்குடைய புதனுடன் செவ்வாய் கூடினால், புத்திரர்களால் தோஷமும், விரயமுமுண்டாகும். திருப்பணிகளுக்காகச் செலவு செய்பவர்களாகவும் இருக்க விதி உண்டாகும்.

கடக இராசிக்கு 12க்குடைய புதன் இராசிக்கு 12ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால், சுக போஜனங்களுக்காகவும், சுக இன்பங்களுக்காகவும், பணம்

அதிகமாகச் செலவிடுவார்கள். நல்ல நித்திரை உண்டாகும். ஆனால், உடல் வியாதிகளுடன் கஷ்டப்பட விதியுண்டு.

கடக இராசிக்கு 12க்குடைய புதன், இராசியிலே இருந்தால், அதிகமாக செலவு செய்பவராகவும், உணவு, நித்திரை சுகம் உடையவராகவும் தொழில் செய்ய மனமின்றி பூமி, பொருள் முதலியவற்றை இழப்பவராகவும் வாழ விதியுண்டாகும்.

கடக இராசிக்கு 12க்குடைய புதன் இராசிக்கு 2ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால் குடும்பத்தில் நிம்மதி இருக்காது. தன் பேச்சிற்கு மதிப்பு இல்லாத நிலை உருவாக விதியுண்டு. வீணான பேச்சுக்கள் பேசும் குணமுடையவராக இருப்பார்கள்.

கடக இராசிக்கு 12க்குடைய புதன் , இராசிக்கு 3ஆம் இடமான கன்னியில் இருந்தால், இளைய சகோதரர்கள் சுகமான வாழ்க்கை வாழ்வார்கள். அவர்களால் விரயங்கள் ஏற்பட விதியுண்டாகும். பட்டம், பதவி, புகழ் ஆகியவைகளைப் பணச் செலவு செய்து பெறுவார்கள்.

கடக இராசிக்கு 12க்குடைய புதன், இராசிக்கு 4ஆம் இடமான துலாத்தில் இருந்தால், தாயை இழந்து தவிக்கும் நிலை வருமாம். பொன், பொருள், பூமி, வாகனம், சொத்து, சுகம் ஆகியவற்றால் வீண் விரயங்கள் உண்டாக விதியுண்டு. அதிகம் குடும்பத்தில் பணம் செலவாக விதி உண்டாகும்.

கடக இராசிக்கு 12க்குடைய புதன் இராசிக்கு 5ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால் புத்திர தோஷமும், ஹானியும் உண்டாக விதியுண்டு. பிள்ளைகளாலும், மற்றவர்களாலும் அதிகமாகப் பணம் விரயமாக விதியுண்டாகும்.

கடக இராசிக்கு 12க்குடைய புதன் இராசிக்கு 6ஆம் இடமான தனுசில் இருந்தால், கடன்களாலும், வியாதிகளாலும் அதிகமான பணம் விரயமாகும் சூழ்நிலை உருவாக விதி உண்டாகும்.

கடக இராசிக்கு 12க்குடையவரான புதன் இராசிக்கு 7ஆம் இடமான மகரத்தில் இருந்தால், பெண்களால் கனதனச் செலவுகளும் தங்கம், பொன் வியாபாரங்களால் நஷ்டமும், பெண்களின்மேல் இச்சையும் உண்டாகும்.

கடக இராசிக்கு 12க்குடையவரான புதன் இராசிக்கு 8ஆம் இடமான கும்பத்திலிருந்தால் வழக்குகளுக்காகவும், உடல் வியாதிகளுக்காகவும் கண்டங்களுக்காகவும், விபத்துகளுக்காகவும் அதிகப் பண செலவு செய்ய விதியுண்டாகும்.

கடக இராசிக்கு 12க்குடையவரான புதன் இராசிக்கு 9ஆம் இடமான மீனத்தில் இருந்தால், பிதுர்பாக்கியங்கள் விரயமாகும். தந்தைக்கு நன்மை செய்யமாட்டார்கள்.

கடக இராசிக்கு 12க்குடையவரான புதன் இராசிக்கு 10ஆம் இடமான மேஷத்திலிருந்தால் உத்தியோகம், பதவி, தொழில் ஆகியவற்றை இழந்து தவிப்பர். பொன், பொருள், பணம் ஆகியன விரயமாகும்.

கடக இராசிக்கு 12க்குடையவரான புதன் இராசிக்கு 11ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால் மூத்த சகோதரரால் பொன், பொருள் விரயமாகும். தொழிலைவிட்டு அலைபவர்களாகவும். மனம் வெறுத்து திரிபவர்களாகவும் பரத்தையர்களுக்குப் பொருளழித்து, வீண் செலவு செய்பவர்களாகவும் இருப்பார்கள்.

ஸ்ரீ மகாவிஷ்ணுவிற்கு அர்ச்சனையும், ஆராதனையும், புதனுக்கு யந்திர மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# சிம்மம்

சிம்ம இராசிக்கு 12க்குடைய சந்திரன் இராசியிலே இருந்தால் அதிகமான ஆடம்பரப் பொருள்கள்மேல் பிரியம் வைத்துச் செலவு செய்பவராகவும், வாழ்க்கை, வசதிகளைக் கடன் வாங்கி அனுபவிப்பவராகவும் இருக்க விதி உண்டாகும். நல்ல போஜனங்களையும் நித்திரை சுகங்களையும் அனுபவிப்பவராக இருக்க வசதி உண்டாகும்.

சிம்ம இராசிக்கு பன்னிரண்டாமிடமான கடகத்தில் செவ்வாய் இருந்தால் தாய், மகனை விட்டுப் பிரிய நேரிடும். வீடு, மனை, விவசாய நிலபுலன்கள், வண்டி வாகனங்கள் ஆகியவற்றால் கஷ்டமும், நஷ்டமும் உண்டாகலாம். சுகம் கெட்டு, நித்திரை கெட்டு அலைந்து திரிபவராக இருக்க விதியுண்டாகும்.

சிம்ம இராசிக்கு 12ஆம் இடமான கடகத்தில் புதன் கூடினால் மூத்த சகோதரர் நோய்வாய்ப்பட நேரிடும். இலாபங்களையும், ஆதாயங்களையும் எதிர்பார்க்க முடியாது. தொட்ட காரியமெல்லாம் நட்டமாகும் நிலை உண்டாகும். அதிகப் பணம் விரயமாகும் சூழ்நிலை உருவாகும்.

சிம்ம இராசிக்கு 12ஆம் இடமான கடகத்தில் குரு இருந்தால் பெண்களின் சுகத்திற்காக அதிகப் பணம் விரயமாகும் நிலை உண்டாகும். அதன்பின் வருத்தமுற்று அலைபவராகவும், யாவரையும் மனம்வெறுக்கப் பேசுபவர்களாகவும் இருப்பார்கள். பூர்வ புண்ணியங்கள், சுகங்கள் ஆகியன விரயமாகும் நிலை உண்டாகும். ஆனால், புத்திர சம்பத்துண்டாகும்.

சிம்ம இராசிக்கு 12ஆம் இடமான கடகத்தில் சுக்கிரன் இருந்தால் பரத்தையர்களின் மீது இச்சைகொள்வர். பெண்களின் சுகபோகத்திற்கு அதிகமாகப் பணம் செலவிடுவர். பூமி, பொருள் ஆகியவற்றை இழந்து அலைந்து திரிவர். தொழிலில்லாதிருப்பர். சகோதரர்மேல் வெறுப்பும் ஏற்பட விதி உண்டாகும்.

சிம்ம இராசிக்கு 12ஆம் இடமான கடகத்தில் சனி இருந்தால், பொன், மண் ஆகியவற்றை இழந்து தவிக்கும் நிலையும், தனம் விரயமாகும் நிலையும் உண்டாகும். சிவயோகச் சம்பத்து கிடைக்க விதியுண்டு. தாய்க்கு நன்மை செய்யமாட்டார்கள். பரதேசியாய் பரிதவிக்கும் நிலை உண்டாகும். வியாதிகள் அதிகமாகிக் கஷ்ட, நஷ்டமும் உண்டாக விதியுண்டு.

சிம்ம இராசிக்கு 12ஆம் இடமான கடக இராசியில் இராகுகேதுக்கள் கூடினால் தர்ம ஸ்தாபனம் நடத்துவர். பொருள்களையும் தலைவனையும் இழந்து தவிப்பார்கள். காசுபணம் விரயமாகும். சுகத்திற்கும் நித்திரைக்கும் கெடுதலுண்டாகும்; மோக்ஷம் உண்டாகும். சிலருக்கு வெளிநாடு செல்லும் யோகமும் உண்டாக விதியுண்டு.

சிம்ம இராசிக்கு 12க்குடைய கடக இராசியில் சூரியன் கூடினால், திறமையற்றவர்களாய் இருப்பர். சுகம் கெட்டு, நித்திரை கெட்டு, அலைந்து திரிவர். அரசாங்கத் தண்டனை கிட்டும். நிம்மதி இழந்து பரிதவிப்பர். உணவுக்கும் கவலை உண்டாகும் நிலை வரும். பணம் விரயங்கள் அதிகமாக ஏற்படும்.

ஸ்ரீ பார்வதி, பராசக்தி, கணபதி ஆகியவர்களுக்கு அர்ச்சனையும், ஆராதனையும், சந்திரனுக்கு யந்திர மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# கன்னி

கன்னி இராசிக்கு 12க்குடைய சூரியன் சிம்ம இராசியில் ஆட்சி பெற்றால், தந்தை வழிச் சொத்துக்கள் மற்றும் பூர்வபுண்ணியங்கள், பொன், பொருள்கள் ஆகியன விரயமாகும் சூழ்நிலை உண்டாகும். நல்ல உணவும் தூக்கமும்

உண்டாகும். நோய், நொடிகளால் அவஸ்தையுண்டாகும். தானதருமச் செலவுகள் அதிகமுண்டாகும்.

கன்னி இராசிக்கு 12க்குடைய சூரியனுடன், சிம்ம இராசியில் சந்திரனும், செவ்வாயும் கூடினால் வீடு, மனை, வண்டி, வாகனங்கள், நிலபுலன்கள் ஆகியவற்றால் நிறைய பணச் செலவுகளும், நிலபுலன்கள் விரயமும் ஏற்பட விதியுண்டு. சுகக் கெடுதியுண்டாகும். பிதுர்பாக்கியச் சொத்துக்கள், பாக்கியங்கள் ஆகியன விரயமாகும். கண்டங்களும், விபத்துகளும் அதற்காக பணவிரயமும் உண்டாகும்.

கன்னி இராசிக்கு 12க்குடைய சூரியனுடன், புதன் சிம்ம இராசியில் சேர்ந்தால், வீண்பேச்சு பேசுபவர்களாகவும், நித்திரை சுகம் உள்ளவர்களாகவும் இருப்பார்கள். பணம் அதிகம் விரயமாகும் நிலையுண்டாகும். கடன்தொல்லைகளால் பொன், பொருள் விரயம் ஏற்படும்.

கன்னி இராசிக்கு 12க்குடைய சூரியனுடன், சிம்ம இராசியில் குரு சேர்ந்தால் வீடு, மனை, வாகனம், தாய் ஆகியவற்றை இழந்து தவிப்பர். நித்திரை, போஜனசுகம் ஆகியன அற்றவர்களாக இருப்பர். மனைவியை விட்டுப் பிரிய விதியுண்டு.

கன்னி இராசிக்கு 12க்குடைய சூரியனுடன், சிம்ம இராசியில் சுக்கிரன் சேர்ந்தால் வாக்கில் சுத்தம் இராது. பிதுர் பாக்கியச் சொத்தில் விரயம் ஏற்பட விதியுண்டாகும். தானதருமச் செலவுகளும் உண்டாகும்.

கன்னி இராசிக்கு 12க்குடைய சூரியனுடன், சிம்ம இராசியில் சனி கூடினால் பூர்வ புண்ணியச் சொத்துகள் அழியும். வழக்குகளால் காசு பணம் விரயமும் ஏற்பட விதியாகும்.

கன்னி இராசிக்கு 12க்குடைய சூரியனுடன், சிம்ம இராசியில் இராகுகேதுக்கள் கூடினால், பூமி, பொருள் நஷ்டமும், வியாபாரத் தொழில், உத்தியோக நஷ்டமும், அதன் மூலம் காசு பணவிரயமும் உண்டாக விதியுண்டு.

கன்னி இராசிக்கு 12க்குடையவரான சூரியன் 12ஆம் இடமான சிம்ம இராசியில் ஆட்சி பெற்றிருந்தால் பிதுர் தேடி வைத்த சொத்துக்களும் மற்றும் பூர்வ புண்ணியங்களும் பொன், பொருள்களும் விரயமாகும் நிலை உண்டாகும். நல்ல உணவும் தூக்கமும் உண்டாகும். நோய் நொடிகளால் அவஸ்தையும் உண்டாகும். தானதருமச் செலவுகளும் அதிகம் உண்டாகும்.

கன்னி இராசிக்கு 12க்குடையவரான சூரியன் இராசியிலே இருந்தால் நித்திரை, உணவு, சுகங்கள் ஆகியன உள்ளவராக இருப்பர். சுகங்களுக்கு அதிகப் பணம் செலவிட நேரிடும்.

கன்னி இராசிக்கு 12க்குடையவரான சூரியன் இராசிக்கு 2ஆம் இடமான துலாத்தில் இருந்தால் வாக்கு வன்மை குறைந்து போகும். குடும்பத்தில் நிம்மதி, ஒற்றுமை ஆகியன இராது. கல்வி, தடைப்படும்.

கன்னி இராசிக்கு 12க்குடையவரான சூரியன் இராசிக்கு 3ஆம் இடமான விருச்சிகத்திலிருந்தால் இளைய சகோதரர்கள் உங்களுடன் ஒற்றுமையுடன் இருக்க மாட்டார்கள். அவர்களால் செலவுகள் ஏற்பட விதியுண்டாம்.

கன்னி இராசிக்கு 12க்குடையவரான சூரியன் இராசிக்கு 4ஆம் இடமான தனுசில் இருந்தால் வீடு, நிலபுலன்கள் சொத்துகள் ஆகியன விரயமாகின்ற நிலையுண்டாகும். தெய்வநிந்தனை, பெரியோர்களைத் துவேஷிக்கும் நிலை ஆகியனவும் இருக்க விதி உண்டாம்.

கன்னி இராசிக்கு 12க்குடையவரான சூரியன் இராசிக்கு 5ஆம் இடமான மகரத்தில் இருந்தால், பூர்விகச் சொத்துகள் கிட்டும். தாய்மாமன் ஆதரவு அற்றவர்களாக இருக்க விதி உண்டாகும். குலதெய்வ அருள் கிடைக்காத நிலையுண்டாகும்.

கன்னி இராசிக்கு 12க்குடையவரான சூரியன் இராசிக்கு 6ஆம் இடமான கும்பத்திலிருந்தால் வியாதி, வழக்குகள், வியாஜ்ஜியங்கள் ஆகியவற்றுக்காகவும், ஏவல், பில்லி, சூன்ய நிவர்த்தி ஆகியவற்றிற்காகவும் பணம் விரயமாகும் நிலை உண்டாகும்.

கன்னி இராசிக்கு 12க்குடையவரான சூரியன் இராசிக்கு 7ஆம் இடமான மீனத்தில் இருந்தால் மனைவியால் பொன், பொருளுக்குச் சேதமும், பணவீக்கமும் உண்டாகும். பெண்களின் மேல் இச்சை உண்டாகும்.

கன்னி இராசிக்கு 12க்குடையவரான சூரியன் இராசிக்கு 8ஆம் இடமான மேஷத்தில் இருந்தால், உடலில் ஏற்படும் நோய் நொடிகளுக்கும், கண்டங்களுக்கும் விபத்துக்களுக்கும் பணம் விரயமாகும் நிலை உண்டாகும்.

கன்னி இராசிக்கு 12க்குடையவரான சூரியன் இராசிக்கு 9ஆம் இடமான ரிஷபத்தில் இருந்தால், பூமியையும் பொருளையும், தந்தையையும் இழந்து அலைந்து திரிவர். தானதர்மச் செலவு செய்வர். தலைவனை இழந்து திரிய விதி உண்டாகும்.

கன்னி இராசிக்கு 12க்குடையவரான சூரியன் இராசிக்கு 10ஆம் இடமான மிதுனத்திலிருந்தால் தொழிலிலும், பொன், பொருளிலும் நஷ்டங்கள் ஏற்படும். தொழிலைவிட்டு விட நேருதலும், கவலையால் மனத் துன்பங்களும் இருக்க விதி உண்டாகும்.

கன்னி இராசிக்கு 12க்குடையவரான சூரியன் இராசிக்கு 11ஆம் இடமான கடகத்திலிருந்தால் மூத்த சகோதரர்களால் அதிகச் செலவும், நஷ்டமும் உண்டாகும். தானதருமச் செலவுகளும், பண விரயமும் உண்டாக விதியுண்டு.

ஸ்ரீ சிவபூஜையும், சூரியனுக்கு யந்திர மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# துலாம்

துலா இராசிக்கு 12க்குடையவரான புதன் இராசிக்கு 12ஆம் இடமான கன்னியில் ஆட்சி உச்சம் பெற்றிருப்பதால், உடலில் நோய் நொடிகள் ஏற்படும். அதிகமாகச் செலவுகள் செய்வர். நல்ல போஜனமும், நித்திரை சுகமும் அவற்றின்மூலம் அதிகமான பொன், பொருள் விரயமும் பணச் செலவுகளும் உண்டாகும்.

துலா இராசிக்கு 12க்குடையவரான புதன் கன்னியில் குருவுடன் கூடினால் இளைய சகோதரர்கள் நோய் நொடிகளுடன் வாழவிதியுண்டாகும். பட்டம், பதவி, புகழ், ஏவலாள்கள் ஆகியவற்றை இழந்து தவிக்க நேரிடும். வியாதிகள், வம்பு, வழக்கு ஆகியவற்றால் பணம் அதிகமாக விரயமாகும் நிலை உண்டாகும்.

துலா இராசிக்கு 12க்குடையவரான புதனுடன் கன்னியில் சுக்கிரன் கூடினால் அதிகமாகப் பணம் செலவு செய்வர். நோய்களாலும், கண்டங்களாலும் விபத்துகளாலும் பணம் விரயமாக விதியுண்டாகும்.

துலா இராசிக்கு 12க்குடையவரான புதனுடன் கன்னியில் சனி கூடினால் வீடு, மனை, வாகனங்கள், பூர்வபுண்ணியச் சொத்துகள் ஆகியன யாவும் விரயமாகும். தாயை இழந்து தவிக்க விதி உண்டாகும்.

துலா இராசிக்கு 12க்குடையவரான புதனுடன் கன்னியில் இராகுகேதுக்கள் கூடினால் பூமி, பொருள் ஆகியவற்றால் நஷ்டமும் சயன சுகமும், போஜன

சுகமும் உண்டாகும். மோக்ஷப்ராப்தி அடைய விதி உண்டாகும். வெளிநாடு போகும் விதி உண்டாகும்.

துலா இராசிக்கு 12க்குடையவரான புதனுடன் கன்னியில் சூரியன் கூடினால், மூத்த சகோதரர்கள் மூலம் பணச்செலவுகள் அதிகம் உண்டாகும். தானதர்மச் செலவுகளால், பணம் விரயமாகும் நிலை உண்டாகும்.

துலா இராசிக்கு 12க்குடையவரான புதனுடன் கன்னியில் செவ்வாய் கூடினால் வாக்கிற்கு மதிப்பு இராது. குடும்பத்தில் ஒற்றுமை இராது. நிம்மதி இராது. மனைவியின் மூலம் பொன், பொருள், விரயமாகும் நிலை உண்டாகும்.

துலா இராசிக்கு 12க்குடையவரான புதன் துலா இராசியிலே இருந்தால் குடும்பத்தில் அதிகமாகப் பணம் செலவாகும். உடல் வியாதிகளுடன் கஷ்டப்படும் நிலை உண்டாகும். நல்ல நித்திரை உண்டாகும். சிரமமின்றி வாழ்க்கையை அனுபவிக்கும் நிலை உண்டாகும்.

துலா இராசிக்கு 12க்குடையவரான புதன், இராசிக்கு 2ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால், குடும்பத்தில் ஒற்றுமையும், நிம்மதியும் இரா. கல்வியில் தடை உண்டாகும். வீண் பேச்சுப் பேசுபவர்களாக இருக்க விதி உண்டாகும்.

துலா இராசிக்கு 12க்குடையவரான புதன், இராசிக்கு 3ஆம் இடமான தனுசில் இருந்தால் பட்டம், பதவி, புகழ், இளைய சகோதரர் ஆகியவற்றை இழந்து தவிக்க நேரிடும். பணம் விரயமாகும் நிலை உண்டாகும்.

துலா இராசிக்கு 12க்குடையவரான புதன், இராசிக்கு 4ஆம் இடமான மகரத்தில் இருந்தால் தாய், வீடு, மனை, வாகனங்கள், கல்வி, விவசாயம் ஆகியவற்றின் மூலம் விரயமும், சுக விரயமும் உண்டாகும். குடும்பத்தில் செலவுகள் அதிகமாகும்.

துலா இராசிக்கு 12க்குடையவரான புதன் இராசிக்கு 5ஆம் இடமான கும்பத்தில் இருந்தால் பிள்ளைகளால் விரயமும் பொருள் நஷ்டமும் ஏற்படும். பூர்வ புண்ணியங்கள் விரயமாகும் நிலை உண்டாகும்.

துலா இராசிக்கு 12க்குடையவரான புதன், இராசிக்கு 6ஆம் இடமான மீனத்தில் இருந்தால் வியாதியால் கஷ்டமும், நஷ்டமும், வில்லங்க விவகாரங்களினால் பணச்செலவும், பணவிரயமும் உண்டாகும்.

துலா இராசிக்கு 12க்குடையவரான புதன், இராசிக்கு 7ஆம் இடமான மேஷத்தில் இருந்தால் பெண்களின் மூலம் அதிகப் பணச் செலவும், பொன், பொருள் விரயமும் உண்டாகும்.

துலா இராசிக்கு 12க்குடையவரான புதன், இராசிக்கு 8ஆம் இடமான ரிஷபத்தில் இருந்தால் கண்டங்கள், விபத்துகள் மூலமும், வியாதிகள் மூலமும் பணச்செலவுகள் உண்டாகும்.

துலா இராசிக்கு 12க்குடையவரான புதன், இராசிக்கு 9ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால் தந்தையார் சேர்த்துவைத்த பாக்கியங்கள் பாதியாவது, விரயமாகும் நிலை உண்டாகும். தானதர்மச் செலவு உண்டாகும்.

துலா இராசிக்கு 12க்குடையவரான புதன், இராசிக்கு 10ஆம் இடமான கடகத்தில் இருந்தால் தொழில் முடக்கமும், வேலையில்லாமல் சுற்றித் திரியும் நிலையும் உண்டாகும். வருமானமின்றித் தவிக்கவும் விதி உண்டாகும்.

துலா இராசிக்கு 12க்குடையவரான புதன், இராசிக்கு 11ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால் மூத்த சகோதரர்களால், விரயங்கள் ஏற்படும். வியாதியால் மூத்த சகோதரர் கஷ்டப்பட நேரிடும். தானதர்மச் செலவுகளும், பெண்களினால் செலவுகளும் உண்டாகும்.

ஸ்ரீ மகாவிஷ்ணுவிற்கு அர்ச்சனையும், ஆராதனையும், புதனுக்கு யந்திர மந்திர ப்ரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# விருச்சிகம்

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 12ஆம் இடமான துலாத்தில் ஆட்சி பெற்றிருந்தால் பூமி, பொருள் போன்றவற்றை இழந்து தவிக்கும் நிலை உண்டாகும். அதிகப்பணம் விரயமாகும் சூழ்நிலை ஏற்படும். பரதேசியாய் அலைந்து திரிபவர்களாகவும் இருக்க விதியுண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரனுடன் (12இல்) துலாத்தில் சனி கூடினால் இளைய சகோதரர், தாய், வீடு, மனை, வண்டி, வாகனங்கள் ஆகியவற்றால் அதிகப் பொருள் செலவும் உண்டாகும். கல்வி தடைப்படும் நிலை உண்டாகலாம்.

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரனுடன் இராகுகேதுக்கள் துலாத்தில் கூடினால் மயக்க வஸ்துகளுக்கு அடிமையாகிப் பணம்

செலவழிப்பார்கள். வியாதிகளுக்காகவும் பணச் செலவு உண்டாகும். ஆனால், ஞானங்களும், மோக்ஷப் பிராப்தியும் உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரனுடன் சூரியன் கூடினால் தொழில் முடக்கம் ஏற்படும். எந்தத் தொழில் செய்தாலும் அதில் நட்டமேற்படும் நிலையுண்டாகும். நேத்திர ரோகத்தினாலும், இருதய நோயினாலும் பணம் விரயமேற்படும்.

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரனுடன் செவ்வாய் கூடினால் தகாத வழிகளில் அதிகச் செலவு செய்வர். வியாதிகளுக்காகவும் வழக்குகளுக்காகவும் பில்லி, சூன்ய நிவர்த்திக்காகவும், அதிகப் பணம், செலவு செய்ய விதி உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரனுடன் புதன் கூடினால், கண்டங்களும், விபத்துகளும் உண்டாகி, அவற்றின் மூலம் பணம் விரயமாகும் நிலை உண்டாகும். மூத்த சகோதரிகளாலும் பணம் செலவாக விதி உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரனுடன் குரு கூடினால் வீண்பேச்சு பேசுபவராகவும், அதிகம் பேசாதவராயும், இருப்பார். பூர்விக சொத்துகள் பிள்ளைகளால் விரயமாகும் நிலை உண்டாகும். தெய்வபக்தியற்றவராகவும், சில நேரத்தில் தெய்வ பக்தி உள்ளவர்போலும் இருப்பர்.

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன் இராசியிலே இருந்தால் அந்நிய தேசத்தில் வாசம் செய்யக் கூடியவராகவும் கலைகளில் பிரியம் கொண்டவர்களாகவும், அதிகப் பணம் செலவு செய்து கலாரசனைகளை வளர்த்துக் கொள்பவர்களாகவும் இருப்பர். வாகட வித்தைகள் முதலியவற்றில் சம்பாதித்த பொருள் யாவும் உடனே விரயமாகும் நிலை உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 2ஆம் இடமான தனுசில் இருந்தால் நேத்திர சோகத்தினாலும், குடும்பத்தினாலும் அதிகச் செலவாகும் நிலையுண்டாகும். ஜோதிட வித்தையும், அதன்மூலம் அதிகம் பணவிரயநிலையுண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 3ஆம் இடமான மகரத்திலிருந்தால், சகோதரன் மூலம் பணச் செலவும் உண்டாகும். ஆபரணங்கள், பொன், பொருள் ஆகிய அனைத்தும், விரயமாகும்

நிலையுண்டாகும். செலவழித்தே பட்டம், பதவி, புகழ் ஆகியவற்றை அடையும்நிலை உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 4ஆம் இடமான கும்பத்திலிருந்தால் பூமி, பொருள், தாய் ஆகியவற்றை இழந்து தவிப்பார்கள். வண்டி, வாகனங்கள் ஆகியன விரயமாகும். சுகமும், நித்திரையும் உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 5ஆம் இடமான மீனத்திலிருப்பதால் பிள்ளைகளால் விரயமுண்டாகும். பூர்விகச் சொத்துக்களை இழக்கவும் நேரிடலாம். தாய்மாமன்கள் வகை ஆதரவு இராது.

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன் இராசிக்கு 6ஆம் இடமான மேஷத்திலிருந்தால், கடன்களால் கஷ்டநஷ்டம் வியாதி, வில்லங்கம், வழக்குகளால் அதிகப் பணம் விரயம் ஆகியன உண்டாக விதியுண்டு.

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 7ஆம் இடமான ரிஷபத்திலிருந்தால் பெண் போகத்தினாலும், மனைவியினாலும், திருமணம் முடிக்கப் பெறுவதினாலும் அதிகப் பணம் செலவு செய்ய நேரிடும்.

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 8ஆம் இடமான மிதுனத்திலிருப்பதால் நோய் நொடிகளால் அவதிகளும், விபத்தில் அதிகப் பணம் விரயமாகலும் உண்டாகலாம்.

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 9ஆம் இடமான கடகத்தில் இருந்தால் பூமி, பொன், பொருள், பிதுர் பாக்கியங்கள் ஆகியவற்றை இழந்து தவிப்பர். தானதருமங்களால் அதிகமான பணச் செலவு உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 10ஆம் இடமான சிம்மத்திலிருப்பதால், தொழில் நஷ்டம் உண்டாகும். தொழிலை விட்டுவிட்டு மனநிம்மதியில்லாமல் அலைவர். வீண் செலவுகளும், கஷ்டமும், நஷ்டமும் உண்டாகும். சொத்துகள் விரயமாகும் சூழ்நிலை உண்டாகும்.

விருச்சிக இராசிக்கு 12க்குடையவரான சுக்கிரன், இராசிக்கு 11ஆம் இடமான கன்னியில் இருப்பதால் தானதர்மச் செலவுகள் செய்வதில் பணவிரயமாகும். மூத்த சகோதரருக்கு வியாதியால் கஷ்டநஷ்டம் உண்டாகும்.

ஸ்ரீ ரெங்கநாதருக்கு அர்ச்சனையும், ஆராதனையும், சுக்ரனுக்கு யந்திர மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# தனுசு

தனுசு இராசிக்கு 12க்குடையவரான செவ்வாய், இராசிக்கு 12ஆம் இடமான விருச்சிகத்திலிருந்தால், பொன், பொருள், பூமி ஆகியவற்றை இழந்தவர்களாயும், நித்திரை சுகங்கள், போஜன சுகங்கள் ஆகியவற்றைக் கொண்டவர்களாகவும், கடன்கள் அதிகமாகி கஷ்டங்களால் அவதிப்படுபவர்களாகவும் இருக்க விதியுண்டு.

தனுசு இராசிக்கு 12க்குடைய செவ்வாயுடன் புதன் கூடியிருந்தால் பெண்களின் சுகத்திற்காகவும், பெண் போகத்திற்காகவும் அதிகமாகச் செலவு செய்ய விதியுண்டாகும். தொழிலின்றி இருக்கும் நிலையும், உத்தியோகமில்லாமல் அலைந்து திரியும் நிலையும் உண்டாகும்.

தனுசு இராசிக்கு 12க்குடைய செவ்வாயுடன் குரு கூடி விருச்சிகத்திலிருந்தால் அதிகமாகச் செலவுகள் செய்பவராகவும், அகாலநேர உணவு உண்பவராகவும், அகால நித்திரை செய்பவராகவும் இருப்பார்கள். பூமி, வீடு, மனை, வண்டி, வாகனங்கள் போன்றவற்றால் விரயமாகும் நிலை உண்டாகும்.

தனுசு இராசிக்கு 12க்குடைய செவ்வாயுடன் சுக்கிரன் கூடி விருச்சிகத்தில் இருந்தால் வியாதிகளாலும், கடன்களாலும், திருப்பணிகளாலும், பிள்ளைகளாலும் செலவு செய்ய நேரும்.

தனுசு இராசிக்கு 12க்குடைய செவ்வாயுடன் சனி கூடி விருச்சிகத்தில் இருந்தால் வீண் பேச்சுக்களாலும் தன் செய்கைகளினாலும் தன் மதிப்பை இழக்கும் நிலையுண்டாகும். இளைய சகோதரர்களால் பண விரயமும் உண்டாகும்.

தனுசு இராசிக்கு 12க்குடைய செவ்வாயுடன் இராகுகேதுக்கள் விருச்சிகத்தில் கூடினால் பெண்களாலும், கடன்களாலும், வியாதிகளாலும் கஷ்டங்களும் நஷ்டங்களும் ஏற்படும். மோசஷங்களும் உண்டாகும்.

தனுசு இராசிக்கு 12க்குடைய செவ்வாயுடன் சூரியன் கூடி விருச்சிகத்தில் இருந்தால் பிதுர்பாக்கியங்களும், பிதுராஜ்ஜிதச் சொத்துக்களும், கிட்டும்.

பொன், பொருள்கள், தந்தை ஆகியவற்றை இழந்து தவிப்பவராகவும் இருக்க விதி உண்டாகும்.

தனுசு இராசிக்கு 12க்குடைய செவ்வாய் தனுசு இராசியில் இருந்தால், அதிகம் செலவு செய்பவராகவும், திறமையற்றவராகவும் இருக்க நேரும். சுகம் கெட்டு, தூக்கம் கெட்டு, நிம்மதியற்றவராகவும், சதா அலைபவராகவும், குடும்பத்தில் நிலையில்லாதவராகவும் இருக்க விதி உண்டாகும்.

தனுசு இராசிக்கு 12க்குடைய செவ்வாய் , இராசிக்கு 2ஆம் இடமான மகரத்தில் இருந்தால், சொத்து சுகம் இழந்து தவிக்கும் நிலை ஏற்படும். வீண் பேச்சும், கல்வி பயிலத் தடையும், குடும்பத்தில் ஒற்றுமையில்லாமையால் கஷ்டமும், பணவிரயமும் ஏற்படும்.

தனுசு இராசிக்கு 12க்குடைய செவ்வாய், இராசிக்கு 3ஆம் இடமான கும்பத்தில் இருந்தால், பட்டம், பதவி, புகழ் போன்றவற்றை அதிகமாகப் பணம் செலவழித்து அடைவர். அதனால், பணம் விரயம் ஏற்படும். இளைய சகோதரரால் கஷ்ட நஷ்டம் உண்டாகும்.

தனுசு இராசிக்கு 12க்குடைய செவ்வாய், இராசிக்கு 4ஆம் இடமான மீனத்தில் இருந்தால், தாயாரைப் பிரிந்து வாழும் நிலையும், வீடு, மனை, வாகனங்கள், கல்வி, விவசாயம் போன்றவற்றால் விரயமும் உண்டாகும் என்பது விதி.

தனுசு இராசிக்கு 12க்குடைய செவ்வாய், இராசிக்கு 5ஆம் இடமான மேஷத்தில் இருந்தால், பிள்ளைகளால் பணச் செலவுண்டாகும். பூர்வபுண்ணியச் சொத்துகள் விரயமாகும். கோயில்கள், ஆலயங்கள், மடங்கள் போன்றவற்றிற்கு திருப்பணிகளும் தானதர்மங்களும் செய்ய விதி உண்டாகும்.

தனுசு இராசிக்கு 12க்குடைய செவ்வாய், இராசிக்கு 6ஆம் இடமான ரிஷபத்தில் இருந்தால், வியாதியாலும், கடன்களாலும், ஏவல்களும் சூனியத்தாலும் வழக்குகளாலும் பணம் செலவழிக்க விதியுண்டாகும். பணம் வருமானம் அதிகமிராது.

தனுசு இராசிக்கு 12க்குடைய செவ்வாய், இராசிக்கு 7ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால், பெண்களின் மேல் இச்சையும் மோகமும், உண்டாகும். பெண்களின் சுகபோகத்திற்காகவும் செலவு செய்ய விதியுண்டாகும்.

தனுசு இராசிக்கு 12க்குடைய செவ்வாய், இராசிக்கு 8ஆம் இடமான கடகத்தில் இருந்தால், மனக்கவலையையும், கண்டங்களையும் அனுபவிக்க விதி உண்டாகும். எந்தத் தொழில் செய்தாலும் இலாபம் இருக்காது. கண்டங்களுக்கும் விபத்துக்களுக்கும் செலவாகும் நிலை உண்டாகும்.

தனுசு இராசிக்கு 12க்குடைய செவ்வாய், இராசிக்கு 9ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால், கடன்களுக்காகப் பிதுர் பாக்கியச் சொத்துகளை இழக்க வேண்டிய நிலை உண்டாகும்.

தனுசு இராசிக்கு 12க்குடைய செவ்வாய் இராசிக்கு 10ஆம் இடமான கன்னியில் இருந்தால், தொழில் நசிந்து போகும் நிலை உண்டாகும். பொருள் நஷ்டமும், கஷ்டமும் ஏற்பட்டு வருமானம் இன்றித் தவிக்கும் நிலையும் தோன்றும்.

தனுசு இராசிக்கு 12க்குடைய செவ்வாய் இராசிக்கு 11ஆம் இடமான துலாத்தில் இருந்தால், மூத்த சகோதரரால் செலவுகளும், கஷ்டங்களும், நஷ்டங்களும் உண்டாக விதி. தானதருமச் செலவுகள் அதிகமுண்டாகும். பெண்களால் பொருள் விரயமாக விதியுண்டு.

ஸ்ரீ சுப்பிரமணியர்க்கு அர்ச்சனையும், ஆராதனையும், செவ்வாய்க்கு, யந்திர மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# மகரம்

மகர இராசிக்கு 12க்குடையவரான குரு இராசிக்கு 12ஆம் இடமான தனுசு இராசியில் இருந்தால் வாழ்க்கையைச் சிரமமின்றி அனுபவிப்பவராக இருப்பார். ஆடம்பரமான வாழ்க்கை வசதிகளை அனுபவிப்பார். அதிகம் செலவு செய்பவராகவும் இருக்க விதி உண்டாகும். பெண்களினால் அதிகம் பண விரயமும் உண்டாகும். கடன்களால் அவதியும், தொல்லையும் உண்டாகும். வெளிநாடு சென்றுவர விதி உண்டாகும்.

மகர இராசிக்கு 12க்குடைய குருவுடன் சுக்கிரன் கூடி தனுசில் இருந்தால் புத்திர சந்தான தோஷமும், ஆரோக்கியக் கெடுதலும், மருத்துவச் செலவுகளும் உண்டாகலாம். மனநிம்மதி கெடும். பணவிரயமும் பொன், பொருள், நஷ்டங்களும் உண்டாக விதி உண்டாகும். பூர்வ புண்ணிய விரயமும் உண்டாகும். அனாவசியச் செலவுகளும், கஷ்டங்களும், தொழில் முடக்கமும் ஏற்படக்கூடும்.

மகர இராசிக்கு 12க்குடைய குருவுடன் சனி கூடி தனுசில் இருந்தால் அதிகமான செலவுகளும், கஷ்டங்களும் உன்டாகலாம். பணம் விரயமாகும். குடும்பம் ஒற்றுமையில்லாமல் இருக்கும். கஷ்ட, நஷ்டங்கள் உண்டாகும். நேத்திர ரோகத்தினால் கஷ்டங்களும் உண்டாகும்.

மகர இராசிக்கு 12க்குடைய குருவுடன் இராகுகேதுக்கள் கூடி தனுசில் இருந்தால் பிள்ளைகளால் கஷ்டங்கள் உண்டாகும். பூர்வச் சொத்துகள் விரயமாகும். பூமி, பொருள் ஆகியவற்றை இழப்பர். மோட்சப் பிராப்தி அடைய யோகம் உன்டாகும்.

மகர இராசிக்கு 12க்குடைய குருவுடன் சூரியன் கூடி தனுசில் இருந்தால், அந்தந்த திசா புத்திகளில் கண்டங்களையும், விபத்துக்களையும், வியாதிகளால் கஷ்டங்களையும் ஏற்படுத்தும்.

மகர இராசிக்கு 12க்குடைய குருவுடன் செவ்வாய் கூடி தனுசில் இருந்தால், இளைய சகோதரர்களால் பணச் செலவுண்டாகும். பொன், பொருள் விரயமாகும். பட்டம், பதவி, புகழ் ஆகியவற்றைப் பணம் செலவழித்தே பெறவேண்டிய சூழ்நிலை உண்டாகும்.

மகர இராசிக்கு 12க்குடைய குருவுடன் புதன் கூடி தனுசில் இருந்தால் வியாதிகளாலும், கடன்கள், வழக்குகள், வில்லங்கம், ஏவல், பில்லி, சூன்யம் போன்றவற்றினாலும் பணம் விரயமாகும். பிதுர்பாக்கியச் சொத்துக்கள், பாக்கியங்கள் போன்றவையும் விரயமாகும் நிலை உண்டாகும்.

மகர இராசிக்கு 12க்குடைய குரு, இராசியிலே இருந்தால் பொன், பொருள், பூமி ஆகியன விரயமாகும். குடும்பத்தில் தவக் கஷ்டமும், தொழிலின்றி, வருவாயின்றித் தவிக்கும் நிலையும், தெய்வங்களை நிந்திக்கும் குணமும் உண்டாக விதியுண்டு. மகர இராசிக்கு 12க்குடைய குரு, இராசிக்கு 2ஆம் இடமான கும்பத்தில் இருந்தால், வீண்பேச்சில் பிரியம் அதிகம் கொண்டவராக இருப்பர். குடும்பம் வருவாயின்றிக் கஷ்டப்படவும் விதி உண்டாகும். சதா வேலையில்லாமல் அலைபவர்களாகவும் இருக்க விதி உண்டாம்.

மகர இராசிக்கு 12க்குடைய குரு, இராசிக்கு 3ஆம் இடமான மீனத்தில் இருந்தால் பட்டம், பதவி, புகழ், ஆளடிமை ஆகியவற்றை இழத்தலும் அவற்றைப் பெறுவது கடும் முயற்சியின் பேரில் கைகூடும் நிலையுமுண்டு. அதிகம் செலவு செய்பவராகவும் இருக்க விதி உண்டாம்.

மகர இராசிக்கு 12க்குடைய குரு, இராசிக்கு 4ஆம் இடமான மேஷத்தில் இருந்தால் தாய், வீடு, மனை, வாகனம் போன்றவற்றை இழந்து தவிக்கும் நிலை உண்டாகும். கல்வி பயில முடியாதபடி தடை ஏற்படும். விவசாய நிலங்களில் நஷ்டத்தைத் தரும் நிலை உண்டாகும்.

மகர இராசிக்கு 12க்குடைய குரு, இராசிக்கு 5ஆம் இடமான ரிஷபத்தில் இருந்தால், புத்திர சந்தானத்திற்கு இடரும், பூர்வ புண்ணியச் சொத்துகளுக்குச் சேதமும் உண்டாகும். பெரியோர்களின் வெறுப்புக்கும், மனக்கசப்புக்கும் ஆளாக நேரிடும். கோயில் திருப்பணிக்கான செலவுகளும் உண்டாகும்.

மகர இராசிக்கு 12க்குடைய குரு இராசிக்கு 6ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால், வியாதியாலும், கடன்களாலும் கஷ்ட நஷ்டமும் பொன், பொருள், பூமி ஆகியவற்றால் விரயமாகும் நிலையும் உண்டாகும்.

மகர இராசிக்கு 12க்குடைய குரு, இராசிக்கு 7ஆம் இடமான கடகத்தில் இருந்தால், மனைவியால் அதிகமான பணச்செலவும், பரத்தையராலும், பெண்களாலும், பொன், வெள்ளி, பொருள் ஆகியவற்றின் இழப்பும் உண்டாக விதியுண்டு.

மகர இராசிக்கு 12க்குடைய குரு இராசிக்கு, 8ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால், வியாதியால், பணவிரயமும், கஷ்டங்களும் உண்டாக விதியாகும்.

மகர இராசிக்கு 12க்குடைய குரு, இராசிக்கு 9ஆம் இடமான கன்னியில் இருந்தால், பிதுர் பாக்கியங்களில் விரயமுண்டாகும். பூமி, பொன், பொருள் தந்தை ஆகியவற்றை இழந்து தவிப்பார்கள். தானதருமச் செலவுகளினால் அதிகப் பணம் விரயமாகும்.

மகர இராசிக்கு 12க்குடைய குரு, இராசிக்கு 10ஆம் இடமான துலாத்தில் இருந்தால் செய்தொழிலால் ஆதாயமில்லாமல் பணவிரயமும் அதிகச் செலவுகளும், கஷ்டங்களும் உண்டாக விதி. வருவாயின்றித் தவிக்கும் நிலையும், தொழில் நின்றுபோகுதலும் நிகழும்.

மகர இராசிக்கு 12க்குடைய குரு, இராசிக்கு 11ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால், மூத்த சகோதரர்களாலும் கோயில் திருப்பணிகளாலும், தானதருமங்களினாலும், பணவிரயம் ஏற்பட விதியுண்டாம். காலவிரயம், பொருள் விரயம் ஆகியன உண்டாம்.

ஸ்ரீ தட்சிணாமூர்த்திக்கு அர்ச்சனையும், ஆராதனையும், புதனுக்கு யந்திர மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# கும்பம்

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனி, இராசிக்கு 12ஆம் இடமான மகரத்தில் ஆட்சி பெற்றால், அதிகப் பணம் விரயமாகுதலும் தமது, புகழ் மறைதலும் உண்டாகும். பரதேசியாய் அலைபவர்களாய் இருப்பர். பொன், பொருள், பூமி ஆகியவற்றை இழந்து தவிக்கும் நிலை உண்டாகும்.

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனியுடன் இராகுகேதுக்கள் மகரத்தில் கூடினால், பரதேசியாய்த் திரிவார்கள். தலைவனை இழந்து தவிப்பார்கள். பூமி, பொருள், ஆகியவற்றால் நஷ்டம் உண்டாக விதியுண்டு.

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனியுடன் சூரியன் சேர்ந்து (மகரத்தில்) கூடினால் மனைவியால் அதிகமான பணச் செலவும், பெண்களால், பொன், பொருள் விரயமாகுதலும், தங்கம், பொன் வியாபாரம் போன்றவை நஷ்டமாதலும் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனியுடன் செவ்வாய் சேர்ந்து மகரத்தில் கூடினால் இளைய சகோதரர், பட்டம், பதவி, புகழ் ஆகியவற்றை இழக்கவேண்டிய விதி உண்டாகும். தொழிலில் கஷ்டநஷ்டமும், அதன்மூலம் பணவிரயமும் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனியுடன் புதன் சேர்ந்து மகரத்தில் கூடினால், புத்திர சந்தானத் தடையும், பூர்விகச் சொத்துகள் இழப்பும், கண்டங்கள் மற்றும் வியாதிகளால் பணச் செலவும் உண்டாக விதியுண்டு.

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனியுடன் குரு சேர்ந்து மகரத்தில் கூடினால், வாக்கினால் மதிப்பை இழப்பார்கள். கண்ரோகமும், குடும்பத்தில் ஒற்றுமையின்மையும், மூத்த சகோதரர்களால் கஷ்டநஷ்டமும், பொன் பொருள் விரயமும் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனியுடன் சுக்கிரன் சேர்ந்து கூடினால், தாய், வீடு, மனை, வாகனங்கள் ஆகியவற்றில் இழப்புகளும் விவசாய நஷ்டங்களும், கஷ்டங்களும் உண்டாகும். பிதுர் பாக்கியவகையில் நஷ்டங்களும் விரயங்களும், தந்தையை இழந்து தவிக்கும் நிலையும் உண்டாக விதியுண்டு.

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனி, இராசியிலே இருந்தால், பொன், பொருள், பூமி, தந்தை, தலைவன் ஆகியவற்றை இழந்து தவிக்கும் நிலை உண்டாகும். தனம் அதிகமாய் இருந்தாலும் செலவாகும் நிலை உண்டாகும். சிவயோக சம்பத்துகள் கிடைக்க விதி உண்டாகும்.

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனி, இராசிக்கு 2ஆம் இடமான மீனத்தில் இருந்தால் பணவிரயங்களும், பணச் செலவுகளும், குடும்பத்தில், கஷ்டங்களும், ஒற்றுமையின்மையும் உண்டாகும். வீண் பேச்சுகள் பேசுபவராகவும் இருக்க விதி உண்டாகும்.

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனி, இராசிக்கு 3ஆம் இடமான மேஷத்தில் இருந்தால் இளைய சகோதரர்கள் வியாதிகளால் கஷ்டப்பட நேரிடும். பட்டம், பதவி, புகழ் ஆகியவற்றை இழக்கவேண்டிய சூழ்நிலை ஏற்படக்கூடும்.

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனி, இராசிக்கு 4ஆம் இடமான ரிஷபத்தில் இருந்தால் வீடு, மனை, வாகனங்கள், விவசாயங்கள் போன்றவற்றால் பணவிரயம், ஏற்பட விதியுண்டு. கல்வி, தடைப்படும். விவசாயத்தினால் கஷ்டநஷ்டம் உண்டாகலாம். பால் பாக்கியம் குறைந்துபோகும்.

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனி, இராசிக்கு 5ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால் புத்திர சந்தான விருத்திக்குத் தடையுண்டாகும். பூர்வ புண்ணியச் சொத்துகள் அழிய நேரும். ஆலயத் திருப்பணி வேலைகளாலும் பிள்ளைகளாலும் செலவுகள் அதிகமுண்டாம்.

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனி, இராசிக்கு 6ஆம் இடமான கடகத்தில் இருந்தால் வியாதிகளாலும், வழக்குகளாலும், கடன்களாலும் பணச் செலவு உண்டாகும்.

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனி, இராசிக்கு 7ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால் மனைவியால் பொன், பொருள் முதலியவற்றுக்குச் சேதமும், மனைவிக்கு வியாதியால் கஷ்டமும் இருக்கும். பெண்களுக்காக அதிக பணச்செலவும் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனி, இராசிக்கு 8ஆம் இடமான கன்னியில் இருந்தால் வியாதிகளாலும், வழக்குகளாலும் பணச் செலவுகள் உண்டாகும். பொன், பொருள், பூமி ஆகியவற்றால் விரயமாகும் நிலை உண்டாகும்.

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனி, இராசிக்கு 9ஆம் இடமான துலாத்தில் இருந்தால், தந்தையை இழந்து தவிக்கும் நிலை உண்டாகும். தானதருமச் செலவுகளும், பாக்கிய விரயங்களும் உண்டாக விதி உண்டாகும்.

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனி, இராசிக்கு 10ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால் தொழிலின்றி இருக்கும் நிலையும், செய்தொழில் நஷ்டமும், உத்தியோகம் பதவி ஆகியவற்றை இழந்து தவிக்கும் நிலையும் உண்டாகும்.

கும்ப இராசிக்கு 12க்குடையவரான சனி, இராசிக்கு 11ஆம் இடமான தனுசில் இருந்தால் மூத்த சகோதரர்களால் பணச் செலவுகளும், பொன், பொருள் விரயமும் உண்டாகும். தானதருமச் செலவுகளும் உண்டாகும்.

ஸ்ரீ விநாயகருக்கு அர்ச்சனையும், ஆராதனையும், புதனுக்கு யந்திர மந்திர பிரீதிகளும் செய்தால் நற்பலன்கள் உண்டாகும்.

# மீனம்

மீன இராசிக்கு 12க்குடைய சனி இராசிக்கு 12ஆம் இடமான கும்பத்தில் இருந்தால் சிவயோக சம்பத்தை அடைபவர்களாகவும் அதிகமாகச் செலவு செய்பவர்களாகவும், பூமி, பொன், பொருள் ஆகியவற்றை இழப்பவர்களாகவும் இருக்க விதியுண்டாகும். உடல் நலமில்லாமல் இருக்கவும், நல்ல போஜனம், நித்திரை சுகம் ஆகியன உடையவராகவும் இருப்பார்கள்.

மீன இராசிக்கு 12க்குடைய சனியுடன் இராகுகேதுக்கள் மீன இராசியில் கூடினால் குடும்பத்தில் அதிகமான செலவுகளும், பொன், பொருள் விரயமும், வெளிநாடு சென்று வருதலும் உண்டாகும். மோட்ச பிராப்தி அடைதலும் உண்டாக விதி உண்டாகும்.

மீன இராசிக்கு 12க்குடைய சனியுடன் சூரியன் மீன இராசியில் இருந்தால் வியாதிகளுக்காகவும், கடன்களுக்காகவும், சூன்ய நிவர்த்திக்காகவும் அதிகப் பணம் செலவு செய்ய விதி உண்டாகும்.

மீன இராசிக்கு 12க்குடைய சனியுடன் செவ்வாய் மீன இராசியிலிருந்தால், இவர் பேச்சுக்குக் குடும்பத்தில் யாரும் மதிப்புக் கொடுக்காத நிலை

உண்டாகும். கல்விக்குத் தடை உண்டாகும். வீண் பேச்சுகளும் அதிகமான செலவுகளும் உண்டாகும்.

மீன இராசிக்கு 12க்குடைய சனியுடன் புதன் கூடி மீனத்திலிருந்தால் தாயாரைப் பிரியும் நிலையுண்டாகும். வீடு, மனை போன்றவற்றில் விரயமாகும். விவசாய நஷ்டங்களும், கால்நடைகள் சேதமும் உண்டாகும்.

மீன இராசிக்கு 12க்குடைய சனியுடன் குரு மீனத்தில் கூடினால் தொழிலில் நஷ்டமும், முடக்கமும், அதிகமான கஷ்டங்களும் ஏற்பட விதியுண்டாகும். அவசியமற்ற செலவுகளும், போஜன சுகமும், சயன சுகமும் உண்டாகும்.

மீன இராசிக்கு 12க்குடைய சனியுடன், சுக்கிரன் சேர்ந்து மீனத்தில் கூடினால் இளைய சகோதரரால் பொன், பொருள், மற்றும் பணச் செலவுகளும் உண்டாக விதி உண்டாகும். பட்டம், பதவி, புகழ் போன்றவற்றால் விரயம் ஏற்படும்.

மீன இராசிக்கு 12க்குடைய சனி, இராசியிலே இருந்தால் நித்திரை சுகத்தையும், போஜன சுகத்தையும் அனுபவிப்பவராக இருப்பார்கள். ஆடம்பரச் செலவுகள் அதிகமாக செலவழிக்கும் பழக்கம் உள்ளவர்களாகவும், மயக்க வஸ்துக்கள் போன்றவற்றில் அதிகச் செலவு செய்பவர்களாகவும் இருப்பார்கள்.

மீன இராசிக்கு 12க்குடைய சனி, இராசிக்கு 2ஆம் இடமான மேஷத்தில் இருந்தால் அதிகமான தனங்கள் விரயமாகும் நிலை உண்டாகும். வீண் பேச்சுகள் பேசுபவர்களாகவும் இருப்பார்கள். வேலை இல்லாமல் சுற்றித் திரியும் நிலை உண்டாகும்.

மீன இராசிக்கு 12க்குடைய சனி, இராசிக்கு 3ஆம் இடமான ரிஷபத்தில் இருந்தால் பட்டம் பதவி, புகழ் போன்றவற்றைப் பெறுவதற்காகவும், தைரியம் வீரியம், ஆளடிமை காரணமாகவும் அதிகமான செலவு செய்ய விதி உண்டாகும். இளைய சகோதரரால் விரயமுண்டாம்.

மீன இராசிக்கு 12-க்குடைய சனி, இராசிக்கு 4ஆம் இடமான மிதுனத்தில் இருந்தால் தாய் அதிகமான துன்பங்களுடனும், வியாதிகளுடனும் இருக்க விதி. வீடு, மனை, வாகனங்கள், கால் நடைகள் ஆகியவற்றில் விரயம் ஏற்படும். விவசாய நிலங்களினால் கஷ்டநஷ்டங்கள் ஏற்படலாம். கல்வி, தடைப்படக்கூடும்.

மீன இராசிக்கு 12க்குடைய சனி, இராசிக்கு 5ஆம் இடமான கடகத்தில் இருந்தால் புத்திர சந்தானதோஷமும், பூர்வ புண்ணியச் சொத்துக்களுக்கு

சேதமும் உண்டாகும். புத்திரர்களாலும், மற்றவர்களாலும் அதிகப் பணம் செலவாக விதியுண்டாகும்.

மீன இராசிக்கு 12க்குடைய சனி, இராசிக்கு 6ஆம் இடமான சிம்மத்தில் இருந்தால் வியாதிகளாலும், வழக்குகளாலும், வில்லங்கங்களினாலும் கடன்களாலும், எதிரிகளாலும், அதிகமான பணச் செலவு உண்டாகும். பொன், பொருள், பூமி ஆகியன விரயமாகும்.

மீன இராசிக்கு 12க்குடைய சனி, இராசிக்கு 7ஆம் இடமான கன்னியில் இருந்தால் மனைவியாலும் மற்ற பெண்களினாலும் பொன் பொருளுக்குச் சேதமும், அதிகப் பணச் செலவும் பொன், வெள்ளி வியாபாரத்தில் நஷ்டங்களும் விரயமும் உண்டாக விதியுண்டு.

மீன இராசிக்கு 12க்குடைய சனி, இராசிக்கு 8ஆம் இடமான துலாத்தில் இருந்தால் வியாதிகளினாலும், சிறு சிறு விபத்துகளினாலும் பணம் அதிகம் செலவழிய விதியுண்டாகும்.

மீன இராசிக்கு 12க்குடைய சனி, இராசிக்கு 9ஆம் இடமான விருச்சிகத்தில் இருந்தால், பெரியோர்கள் தேடிவைத்த சொத்து சுகங்கள் விரயமாகும் நிலையும் பாக்கிய விரயங்களும் நிகழும். மடங்கள், ஆலயங்கள் திருப்பணி, அனாதை இல்லங்கள், ஆசிரமங்கள், ஆலயங்கள் திருப்பணி, அனாதை இல்லங்கள், ஆசிரமங்கள், தரும நிறுவனங்கள் முதலியவற்றுக்கு நிதி உதவி செய்வதன் மூலமும் பணவிரயமும் ஏற்பட விதி உண்டாம்.

மீன இராசிக்கு 12க்குடைய சனி, இராசிக்கு 10ஆம் இடமான தனுசில் இருந்தால் வேலையில்லாமலும் வருவாய் இன்றியும் அல்லல்பட விதி உண்டாம். செய்தொழிலில் முடக்கம் நேரும். கடன்கள் அதிகமாகி, பணச்செலவு கூடும். அசையாச் சொத்துகள் விரயமாகும் நிலையும் உண்டாகும்.

மீன இராசிக்கு 12க்குடைய சனி, 11ஆம் இடமான மகரத்தில் இருந்தால் மூத்த சகோதரரால் மத்திம பலனுண்டு. அவரால் பொன், பொருள் விரயமாகலாம். தெய்வ தரிசனங்கள், தான தருமங்கள், இளைய தாரம் போன்றவற்றால் பணம் விரயமாக விதியுண்டாகும்.

ஸ்ரீ விநாயகப் பெருமானுக்கு அர்ச்சனையும் ஆராதனையும் சனீஸ்வரருக்கு எந்திர மந்திர பிரீதிகளும் செய்தால் நன்மையான பலன்கள் ஏற்படும்.

முற்றும்

# விற்பனையாகும் இதர நூல்கள்!

இசையும் அவற்றினால் ஏற்படும் பலன்களும் ---------------- 39.00
இசைப் பிரியர்களுக்கு அன்னமாச்சாரியாரின்
அரிய பாடல்கள் ---------------------------- 30.00
பக்தகோடிகளுக்கான கோஷ்டி கானங்கள் ---------------- 14.00
கர்நாடக இசையில் கமக ஸ்வரங்களைப்
பாடுவது எப்படி? ---------------------- 52.00
The art of Vocalization ---------------------------------- 20.00
தபேலாவில் எளிய நடைகள் ---------------------------- 12.00
இசையுடன் பாட பாரதிதாசனின் இனிய பாடல்கள் ----------- 25.00

## இசைக் கலைஞர் - Musician

உலகப் புகழ்பெற்ற பாப் பாடகர்கள் ------------------------ 21.50
தென்னிந்திய இசைக் கலைஞர்கள் ------------------------ 15.00
இசைஞானி இளையராஜா ----------------------------
சங்கீத சாகரம் யேசுதாஸ் ---------------------------- 15.00
ஏழிசை நாயகன் யேசுதாஸ் ---------------------------- 41.00
Yesudas the king of Melodies ---------------------------- 38.00

## இசைக் கருவி - Musical Instrument

ஹார்மோனியம் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் -------------- 45.00
கீபோர்டு வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் ------------------ 28.00
கிடார் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் -------------------- 58.00
வயலின் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் ------------------- 45.00
புல்லாங்குழல் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் ---------------- 45.00
(தமிழக அரசின் 5,000 ரூபாய் பரிசு பெற்ற நூல்)
வீணை வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் -------------------- 48.00
மிருதங்கம் மற்றும் கஞ்சிரா
வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் -------------------- 80.00
கடம் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் -------------------- 18.00
தவில் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் -------------------- 19.00
தபேலா வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் ------------------ 30.00
மாண்டலின் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் ----------------- 25.00
ஜலதரங்கம் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் ----------------- 39.00
நாகஸ்வரம் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் ----------------- 16.00

# விற்பனையாகும் இதர நூல்கள்!

கிளாரினெட் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் ---------------- 48.00

## ☞ மதம் - Religion ☜

கிறிஸ்தவ மதம் காட்டும் நன்னெறிகள் -------------------- 29.00
மதமும் மன அமைதியும் ------------------------------ 19.50
புத்தபிரானின் வாழ்வும் வாக்கும் ------------------------ 15.00
இரு சமூகங்கள் இரு கண்கள் -------------------------- 30.00
உலக சமய ஒற்றுமைக்கு வழிகாட்டி -------------------- 77.00
மதங்களை மீறிய புனிதமான சிந்தனைகள் ---------------- 32.00
வல்லமை தாராயோ? ---------------------------------- 20.00
நித்திய ஜீவன் ------------------------------------------

## ☞ இந்து மதம் - Hinduism ☜

ஓர் இந்து தெரிந்துகொள்ள வேண்டிய உண்மைகள் ------------ 48.00
இந்துமத வேதங்களுக்கு எளிமை விளக்கங்கள் -------------- 33.00
இந்துமத விரதங்களும் அவற்றின் பலன்களும் -------------- 18.00
இந்து மதம் கூறும் பாவச்செயல்களும், பரிகாரங்களும் ---------- 14.00
ஈடு இணையற்ற இந்து மதம் ---------------------------- 30.00
விரதவிளக்கச் சிந்தாமணி ------------------------------ 69.00
ஜெர்மனியில் இந்து சமயம் ---------------------------- 23.00

## ☞ வேத சாஸ்திரம் - Theology ☜

பகவத் கீதை, திருக்குர்ஆன், புனித பைபிள்
என்ன சொல்கின்றன? ------------------------ 27.00
புத்த, ஜைனக் கதைகள் ------------------------------ 7.00
பைபிள் கதைகள் ---------------------------------- 9.50

## ☞ தத்துவம் - Philosophy ☜

தமிழ்வாணன் தத்துவங்கள் ---------------------------- 27.00
தமிழ் இலக்கியத்தில் தத்துவங்கள் ---------------------- 12.50
இன்பங்களும் துன்பங்களும் -------------------------- 10.50
நாளைக்கே சாகத் தயாரா? ---------------------------- 12.00
பிறந்த பயனைப் பெற வேண்டாமா? -------------------- 16.50
தத்துவக் கதைகள் ---------------------------------- 18.00
போதிஞான தத்துவக் கதைகள் ------------------------ 21.00

# விற்பனையாகும் இதர நூல்கள்!

அறிந்துகொள்ள வேண்டிய சில வாழ்க்கைத் தத்துவங்கள் ---------- 24.00
அரிஸ்டாட்டில் வாழ்வும் வாக்கும் ------------------------------ 27.00
இனம் மதம் மொழி கடந்த பேருண்மைகள் ---------------- 35.00
தத்துவக் குளத்தில் உவமை அன்னங்கள் ------------------- 25.00
வள்ளலார் சொல்லும் வாழ்க்கைத் தத்துவங்கள் -------------- 27.00
தத்துவ முத்துக்களும் சமுதாய வித்துக்களும் ---------------
ஏழாவது அறிவு ------------------------------------------ 30.00

## தத்துவ ஞானி - Philosopher

பட்டினத்தாரின் வாழ்வும் வாக்கும் ------------------------- 11.00
பட்டினத்தார் சொல்லும் பயனுள்ள தத்துவங்களும் ------------- 11.00
ஸ்ரீ ராமகிருஷ்ணரின் வாழ்வும் வாக்கும் -------------------- 16.00
விவேகானந்தரின் வாழ்வும் வாக்கும் ------------------------ 15.00
விவேகானந்தரின் வாழ்வில் சுவையான நிகழ்ச்சிகள் ------------ 17.00
திருவள்ளுவரும், திருமூலரும் சந்திக்கும் சிறப்பு ------------- 30.00
மகான்களின் கருத்துக்களும் வாழ்வில்
வெற்றிபெறும் முறைகளும் --------------------------- 38.00

## நம்பிக்கை - Common Belief

மலையாள மாந்திரீக சாஸ்திரம் ----------------------------- 26.00
ஹிப்னாடிஸம் (மெஸ்மரிசம்) ------------------------------ 30.00
கனவுகளுக்குப் பலன் -------------------------------------- 49.00
கனவுகள் பற்றிய சுவையான ஆய்வுகள் -------------------- 48.00
சகுனங்களும் அவற்றின் பலன்களும் ---------------------- 19.00
கண் திருஷ்டிகளும் பரிகாரங்களும் ------------------------ 26.00
மனோசக்தியும் மந்திர சக்தியும் --------------------------- 15.00
தெய்வீக யந்திரங்களும் மந்திர சக்தியும் ------------------- 24.00
வண்ணங்களும் எண்ணங்களும் ---------------------------- 36.00

## சாமுத்திரிகம் - Physiognomy

சாமுத்திரிகா இலட்சணம் --------------------------------- 28.00
மச்சங்களும் அவற்றின் பலன்களும் ----------------------- 19.00
சங்கப் பாடல்களில் அங்க இலக்கணம் ---------------------- 21.00

## மறுபிறவி - Reincornation

ஒரு முடிவில்லாத பயணம் -------------------------------- 39.00

